# 21 வேங்கடேச சாஸ்திரி



வேதகால ரிஷிகள் முதல் பகவான் வரையிலான சிறந்த குருமார்கள், தாங்கள் இருந்த இயல்பான இருப்பு நிலையிலேயே நாமும் இருக்கும் பொருட்டே, தங்களது உபதேசங்களை விட்டுச் சென்றிருக்கிறார்கள். உண்மை என்னவெனில், அந்த உபதேசங்களைக் கேட்பவர்களோ, படிப்பவர்களோ, 'தான்' ஆக, ஆத்மாவாகத் தங்கள் இருப்பை உணர வேண்டும் - ஏதாவது செய்து மாற்றம் செய்து கொள்வதால் நிகழ்வது அன்று.

'நான் யார்?' என்பதில் அடங்கியுள்ள முக்கிய உபதேசம் ஆசைகள் அற்ற அல்லது பற்றற்ற நிலையாகும். இது ஞானத்திலிருந்து வேறுபட்டதன்று. மனதை வெளிமுகமாகப் பொருட்களின் மீது திருப்பாமலிருப்பதே ஆசை இன்மை. ஞானம் என்றால் பொருட்களையே காணாதிருப்பது. வேறு விதமாகக் கூறினால் ஆத்மாவைத் தவிர - தன்னைத் தவிர - அந்நியத்தை நாடாதிருப்பது பற்றின்மை அல்லது ஆசையின்மை; ஆத்மாவை விடாதிருத்தலே ஞானம்.

எளிமையும் பணிவும் நிறைந்தவரும், பகவானின் மீது ஆழ்ந்த பக்தியுடையவருமான, 'சாஸ்திரி மாமா' என்று எங்களால் அன்புடன் அழைக்கப்பட்ட வேங்கடேச சாஸ்திரி அவர்களிடம் இரு குணங்கள் இயல்பாகவும், வியப்பூட்டும் வகையிலிருந்தன. ஒன்று பூரண வைராக்யம். மற்றொன்று ஜவலிக்கும் ஞானம். (சாஸ்திரம் என்றால் மறை நூல்கள்; சாஸ்திரி என்றால் வேதங்களை நன்கு கற்றுணர்ந்தவர் என்று பொருள்). அவர் உலகத்தில் வாழ்ந்து கொண்டிருந்தாரே தவிர, உலகியல் அவரைத் தொடவில்லை. ஞானத்தில் தோய்ந்து நின்ற அவர், கர்மத்திற்கும் ஞானத்திற்குமிடையே முரண்பாடு எதுவுமில்லை என்பதற்கு அவர் ஒரு உதாரணம்.

சாஸ்திரி மாமா பகவானின் தூரத்து உறவினர். அவரது சிறு வயதிலே, தாயாரின் மறைவுக்குப் பின், அவரது தந்தை மறுமணம் செய்து கொண்டார். அவருடைய மாற்றாந்தாய், அவரைக் கொடுமையாக நடத்தித் துன்புறுத்திய போதும், அவள் இழைத்த துன்பங்களை மௌனமாகப் பொறுத்துக்கொண்டார். அவருடைய மூன்றாவது வயதில், அவருடைய கையை முறுக்கிச் சமையல் அறையில் அடுப்பில் நுழைத்தாள் மாற்றாந்தாய். அவரது விரல்கள் கருகி, நிரந்தரமாக உருமாறின: அப்போதும், அந்தக் குரூரமான செயலின் விளைவை எவ்விதக் குறையும் கூறாது தாங்கிக் கொண்டார். சாஸ்திரியின் தந்தை, தன்னால் மனைவியின் போக்கை மாற்றமுடியாத நிலையில், தன் மகன் எங்காவது சந்தோஷமாக இருக்கட்டும் என எண்ணி, அவரைக் கேரளத்திலுள்ள கொச்சியில், மாணவர்கள் விடுதியுள்ள ஒரு ஆயுர்வேதப் பள்ளியில் சேர்த்தார். அங்கு ஜோதிடமும் கற்றுத்தரப்பட்டது. சிறந்த ஜோதிடராகவும், ஆயுர்வேத மருத்துவராகவும் விளங்கிய பள்ளியின் ஆலோசகர், கொச்சி அரச குடும்பத்தின் தலைவராகவும் இருந்தது வேங்கடசனுக்கு மிக நல்லதாக போயிற்று.

சாஸ்திரி மாமா, அசாதாரண புத்திக்கூர்மையுள்ளவர். சாதாரணமாகக் கற்றுத் தேர்ச்சி பெறப் பதினைந்து ஆண்டுகளுக்கு மேலும் தேவைப்படும் ஆயிரக்கணக்கான ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்களை அவர் ஒரே வருடத்தில் கற்றுக்கொண்டார். சிறுவனின் மேதா விலாசத்தைக் கண்டு வியந்த ஆசிரியர்

- பள்ளி ஆலோசகர் - தனது நேரடிக் கண்காணிப்பிலேயே சிறுவனைப் பயிற்றுவிக்கத் தீர்மானித்துத் தன்னுடன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றுவிட்டார். சிறுவனிடம், "நீ படிக்க வேண்டியது சாதாரண ஜோதிடம் அன்று. உனக்கு அதன் தலைசிறந்த பகுதியான 'ப்ரச்னம்' என்பதைக் கற்றுத்தரப் போகிறேன்" என்று அவர் கூறினார். 'ப்ரச்னம்' என்பதன் சாதாரணப் பொருள் 'கேள்வி' அல்லது 'வினா' என்பதாகும். சாதாரணமான ஜோதிடத்தின்படி, ஒரு குழந்தை பிறக்கும்போது, அந்தச் சமயத்தில் உள்ள க்ரஹ நிலைகளை அடிப்படையாகக் கொண்டு, குழந்தையின் ஜாதகம் கணிக்கப்படும். குழந்தையின் வாழ்க்கை முழுவதையுமே கணக்கிலெடுத்து, ஜாதகத்தில் இந்த க்ரஹ நிலைகளின் அடிப்படையிலேயே புத்திபூர்வமான விளக்கங்கள் தரப்பட்டு, அக்குழந்தையின் எதிர்காலம் எவ்வாறிருக்கும் என்று கூறப்படும். ஆனால் ப்ரச்னத்தில் தேர்ச்சி பெற்ற ஒருவருக்கு ஜாதகத்தின் உதவி தேவையில்லை. பதிலாகச் சில கணக்கிடும் முறைகளைப் பயன்படுத்தி, பிறப்பின் வரைபடத்தை மனதிலேயே வரைந்து கொள்கிறார். இதற்கு அவருக்குத் தேவைப்படுபவை - கேள்வி கேட்கப்படும் நேரம், கேட்பவரின் பெயர், அவர் நோக்கி இருக்கும் திசை, அவர் எங்கிருந்து வருகிறார் என்னும் விபரம், அவரது தாய், தந்தையரின் பெயர், கேள்வியின் முதல் எழுத்து, முதல் வார்த்தை போன்றவையே. இவற்றைப் பெற்ற பின் அவர் தனது உள்ளுணர்வின் ஞானத்தில் ஆழ்ந்து பதிலுக்காகக் காத்திருப்பார். கணித்து கூற வேண்டிய விஷயங்கள் தாமாகவே இதயத்தினின்று உள்ளுணர்வாக வெளிப்படுவதால் அவை துல்லியமாக இருக்கும் என்பதைக் கூறத் தேவையில்லை.

சாஸ்திரி மாமா அவரது படிப்பை முடித்தபோது, இந்துக்களின் வழக்கப்படி, கல்வியை ஆசிரியரிடம் தானமாகப் பெற்றதற்கு குரு தக்ஷிணை வழங்க வேண்டியிருந்தது. குரு, தன் சீடனைப் பற்றிப் பெருமிதம் கொண்டார் எனினும், அவன் பரம ஏழை என்பதால் குருதக்ஷிணையாகக் கொடுப்பதற்கு அவனிடம் எதுவுமில்லை என்பதையும் அறிந்திருந்தார். அவர் தன் சீடனிடம், "நான் உன்னிடம் குரு தக்ஷிணை கேட்கப் போகிறேன்" என்று கூறியபோது, "குருநாதா! தாங்கள் விரும்புவதை என்னிடம் கேளுங்கள்" என சாஸ்திரி மாமா பதிலிறுத்தார். குரு உடனே சிவபெருமானின் இரண்டாவது மகனும், ஞானம், மௌனம், பூரண வைராக்யம் இவற்றிற்குக்



ஸ்கந்தாச்ரமத்தில் ஸ்ரீ பகவான் (சாஸ்திரி மாமா முதன் முதலில் பகவானைப் பார்த்த இடம்)

தேவதையான ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் படம் ஒன்றைக் கொடுத்து. "இவரை நீ வழிபட்டால், உன் வாழ்நாள் முழுவதும் அவர் உனக்கு வழிகாட்டியாக விளங்குவார். இந்த குரு தக்ஷிணையே எனக்கு வேண்டும்" எனக் கூறினார். குருவிடம் பெற்ற பரிசை, அவரது ஆசீர்வாதமாக ஏற்றுக்கொண்ட சாஸ்திரி மாமா, தனது கிராமத்திற்குத் திரும்பினார். அவர் கூறிய ஜோதிடம் என்றுமே பொய்த்ததில்லை என்பதால், பெயரோடும் புகழோடும் மிகவும் மதிக்கப்பட்ட ஜோதிடராக வாழ்ந்தார்.

ஒருநாள், அவருடைய மாமாக்களில் ஒருவர், பகவான் ரமண மஹர்ஷியின் படம் ஒன்றை அவருக்காக எடுத்து வந்தார். சாஸ்திரி மாமா, அதை மிகவும் பக்தியுடன் பூஜை அறையில் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் படத்திற்கு அருகே வைத்தார். ஒருநாள் காலை, அவர் தியானம் செய்து கொண்டிருந்த சமயத்தில் கண்ணைத் திறந்து பார்த்த போது பகவானுடைய படம் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியாகவும், ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியின் படம் பகவானாகவும் மாறுவதைக் கண்டார். அது கனவா அல்லது தெய்வீகக் காட்சியா என உறுதி செய்யமுடியாமல், கிட்டத்தட்ட அரை மணி நேரம் உற்று நோக்கிய வண்ணமிருந்தார். மனித உருவில் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி தன்னை வாழ்நாள் முழுவதும் வழிநடத்த வேண்டுமெனத் தனது குருநாதன் விரும்பியிருப்பாரோ? என்ற எண்ணம் அவர் மனதில் உதித்தது.

அதனால் 1917-ல், பகவானைக் காண ஸ்கந்தாச்ரமத்திற்கு வந்தார். அவர் வந்த உடனேயே அழகம்மாள், அவர் தனது உறவினர் என அடையாளம் கண்டுகொண்டார். "ஆம், அது சுப்புவின் மகன் தான்" எனப் பகவானும் உறவை உறுதி செய்தார். அநேகமாகப் பகவானைப் பார்ப்பதற்கு முன்னால், அவரது பக்தர்கள் பலருக்கு, அவர் பெயர் தெரிந்திருக்குமே தவிர, அவரது ஆன்மீக நிலை குறித்து தெரிந்திருக்காது. அதனால் அவருடைய மகிமையைப் பற்றிய முன் அபிப்பிராயம் எதுவும் இல்லாதவர்களாக இருந்தனர். இருந்தபோதும், அவர்களது முதல் சந்திப்பிலேயே பகவானுடைய பெருமையை உணர்ந்து கொண்டனர். எல்லோரையும் போன்று சாஸ்திரி மாமாவும், துறவு, ஞானம், மௌனம், இவற்றிற்கு அதிபதியான தனது இஷ்ட தெய்வமும் குருவும் அவரே என்று பகவான் வாய் திறந்து ஒரு வார்த்தை கூடக் கூறாத நிலையிலேயே, அடையாளம் கண்டு கொண்டார்.

தான் பயின்ற ஜோதிட சாஸ்திரத்தின் ஒரு அங்கமான 'ப்ரச்னம்' என்பது மிக நிறைவான விஞ்ஞானம் என்பதை சாஸ்திரி மாமா பூரணமாக நம்பினார். தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அவர் மிகவும் பணிவோடு, ஆனால் முழு நம்பிக்கையோடு பகவானிடம், "பகவானே! சாஸ்திரங்கள் அனைத்திலும் சிறந்ததும், துல்லியமானதும் ஜோதிட சாஸ்திரம்தானே?" என வினவினார். பகவான் அவரைச் சிறிது நேரம் கூர்ந்து நோக்கிய பின்னர் மெதுவாக, "ஆத்மாவைப் பற்றிய அறிவு, மற்றெல்லா அறிவுகளுக்கும் மேலானது" என்று திட்டவட்டமாகப் பதிலிறுத்தார். அந்தக் கால கட்டத்தில் சாஸ்திரி மாமா, தொழில் ரீதியாக மிக உயர்ந்த நிலையில் இருந்தார். வருங்காலம் பற்றிய அவரது ஒவ்வொரு கணிப்புக்கும் தாராளமான ஸன்மானமும் பெற்று வந்ததால், செல்வச் செழிப்போடு வாழ்ந்ததுடன், நிறைய சொத்துக்களையும் சேர்த்திருந்தார். பகவானின் திட்டவட்டமான பதில், அவரது மனதில் துறவு மனப்பான்மையின் விதையை இட்டது. மாறிக்கொண்டே இருக்கும் இவ்வுலக வாழ்க்கை பயனற்றது என்று கருதிய அவர், தன் குருவுடன் வாழத் தீர்மானித்தார்.

வீட்டில் பெரியவர்கள் யாராவது இருந்தால் அவர்களிடம் அறிவுரைகளைக் கேட்க வேண்டுமென்பது இந்துக்களின் ஸம்பிரதாயம். அதன்படி சாஸ்திரி மாமா, பகவானின் அன்னையை அணுகி, "நான் துறவு மேற்கொண்டு, பகவானுடனேயே தங்க விரும்புகிறேன்" என்று கூறினார். "நீ

அவ்வாறு எப்படிச் செய்ய முடியும்? நீ சிறுவனாக இருந்தபோதே, உனக்கென ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்துவிட்டோம். அவள் உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறாள். நீ அதற்கு மதிப்புக்கொடுத்து, பொறுப்பைத் தட்டிக்கழிக்காமல், அவளை மணம் செய்து கொள்ள வேண்டும். அதைவிட்டு, நீ எப்படி இங்கு வந்து தங்க முடியும்?" என அன்னை அழகம்மாள் உரக்கக் கூறினார். சாஸ்திரி மாமா பகவானைத் திரும்பிப் பார்த்தபோது, 'அன்னை கூறுவது சரியே' என்று பொருள்படும்படி பகவான் புன்னகை பூத்தார். வேறு வழியின்றி சாஸ்திரி மாமா கிராமத்திற்குச் சென்று, 'சாலா' என்றழைக்கப்பட்ட, 'விசாலாக்ஷி' என்ற அந்தப் பெண்ணை மணந்துகொண்டு, சந்தோஷமாகப் பல ஆண்டுகள் வாழ்ந்தார். சிறந்த ஜோதிடர் என்ற பெயரும் பெற்றிருந்தார்.

ப்ரச்னத்தில் சாஸ்திரி மாமாவுக்கு இருந்த தேர்ச்சியை விளக்குவதாக உள்ளது கீழே தரப்பட்டுள்ள உதாரணம். திருமணத்திற்குப் பிறகு அவர், பெரும்பான்மையான தனது நேரத்தைப் பூஜை அறையிலேயே கழித்தார். ஒரு முறை, "நாகப்ப செட்டியார் வந்திருக்கிறார்" என்று விருந்தினரின் வரவை சாலா அவரிடம் அறிவித்தார். சாஸ்திரி மாமா, இருந்த இடத்திலிருந்தபடியே, "அவர் வைர மோதிரத்தைத் தொலைத்துவிட்டார். அதை அவரது பணியாள் திருடிவிட்டதாகச் சந்தேகப்படுகிறார். இவ்வாறு, யாரையும் அவர் சந்தேகப்பட வேண்டாமெனச் சொல். செட்டியார், முற்றத்தில் துணிகளைத் துவைக்கும் போது விரலிலிருந்து நழுவி விழுந்த மோதிரம், இப்போது கிணற்றருகே உள்ள வாழை மரத்தின் அடியில் உள்ளது" என்று நடந்த விஷயத்தை உள்ளவாறே கூறினார். அவரது ஜோதிடம் அத்துணை துல்லியமாக இருந்ததால், குற்றவாளிகளைத் தேடிக் கண்டுபிடிக்கப் போலீஸாரும் கூட அவரது உதவியை நாடி வருவார்கள் என்பதில் அதிசயம் ஏதுமில்லை.

சில ஆண்டுகளுக்குப் பின் அவருக்கு ஒரு மகன் பிறந்தான். அவனுடைய ஜாதகத்தைக் கணித்த போது, அவனின் ஆயுள் குறைவு, இருபது ஆண்டுகள் கூட வாழமாட்டான் என்பதை உணர்ந்து மிகுந்த அதிர்ச்சிக்கு உள்ளானார். அந்த ஜாதகத்தின் மூலம், தனக்கு மீண்டும் புத்ர பாக்கியம் இல்லை என்பதை அறிந்திருந்த போதும், மனைவியிடம் அதை அவர் தெரிவிக்கவில்லை. ஆனாலும், துயரத்தின் பளுவால் மனம் புழுங்கிய அவர், ரமணாச்ரமம் சென்று பகவானைத் தஞ்சமடைய முற்பட்டார்.

பகவான் மலை ஏறிக்கொண்டிருந்தபோது, அவரைப் பின் தொடர்ந்து, தனது மகனுடைய ஜாதகம் குறித்தும், அது வெளிப்படுத்திய பயங்கரமான கணிப்புகளையும் அவரிடம் தெரிவித்தார். சிறிது தூரம் நடந்த பின்பு பகவான் சாஸ்திரி மாமாவைத் திரும்பிப் பார்த்து, "நீ கேரளத்தின் தென்கோடியில் இருந்திருக்கிறாய். நிறைய பலாப்பழங்களைப் பார்த்திருப்பாய்" என்றார். வெப்ப மண்டலத்தில் காணப்படும் பலாமரத்தின் தனித்தன்மை என்னவென்றால், கிளைகளிலிருந்து பழம் தொங்காமல், அடிமரத்திலேயே காய்த்துப் பழுக்கும். முதன் முதலாகக் காய்க்க ஆரம்பிக்கும்போது, பல பிஞ்சுகள் வெளிவந்தாலும், சிலவற்றைத் தவிர, மற்ற பிஞ்சுகள் கருகி உதிர்ந்து போகும். சில பிஞ்சுகளே முழுமையாக வளர்ந்து பழமாகும். பகவான் மேலும் தொடர்ந்து, "நல்ல ஆரோக்யத்துடன் பெரிதாக வளரக்கூடிய ஒரு பழத்திற்கு இடம் தரும் பொருட்டு, மற்ற பிஞ்சுகள் - அதைச் சுற்றியுள்ள ஐம்பது அறுபது பிஞ்சுகள் கூட - உதிர்ந்து போகும்" எனக் கூறினார்.

பகவான் தன் புதல்வனைக் காப்பாற்றப் போவதில்லை என்பதை சாஸ்திரி மாமா, உடனே உணர்ந்து கொண்டார். பகவானை வணங்கி, மீண்டும் கிராமத்திற்குத் திரும்பினார். கிளம்பும் முன் பகவானது கால்களைப் பிடித்துக்கொண்டு, "எனக்குப் புகலிடம் ஏது? தைரியத்தைத் தாருங்கள்"

என்று கதறி அழுதார். அப்போது பகவான், தான் விரூபாக்ஷ குகையில் எழுதிய `ஹ்ருதய குஹர மத்யே' என்ற பாடலைக் கூறினார். "இதய குகையின் மத்தியில், தன்னந்தனியே, `நான்', `நான்' என ஆத்மா பிரகாசிக்கிறது. ஆத்ம விசாரத்தாலோ, அல்லது மனம், பிராணன் இவற்றை அடக்குவதாலோ இதயத்துள் ஆழ்ந்து மூழ்கி ஆத்மாவில் நிலைத்து நில்" எனப் பகவான் கூறியதைக் கேட்ட சாஸ்திரி மாமா, ஒன்றை ஒன்று சார்ந்து நிற்கும் ஆத்ம விசாரம், முழுமையான சரணாகதி ஆகிய இரண்டு வழிகளே தனக்கு உள்ளது என்பதை முழுமையாக நம்பி ஏற்றுக்கொண்டார். ஆத்ம விசாரம் செய்வதற்குப் பூரண சரணாகதியும், பூரண சரணாகதி செய்வதற்கு ஆத்ம விசாரமும் இன்றியமையாதவை.

திரும்பி வந்தபின் தனது மனைவியையும் மகனையும் அழைத்து, "நான் என் குருவோடு வாழ்வது என்ற முடிவுக்கு வந்துள்ளேன். உங்களைக் கஷ்டத்தில் ஆழ்த்த மாட்டேன். நீங்கள் இருவரும் சௌக்யமாக வாழத் தேவையான அளவு பணம் சம்பாதித்த பிறகே நான் செல்வேன். எனது உறுதியான தீர்மானம் இது," என்று கூறினார் சாஸ்திரி மாமா. படிப்பறிவற்ற, சூதுவாதறியாத கிராமத்துப் பெண்ணாக இருந்தபோதும், புத்திசாலித்தனமான பதிலைத் தந்தாள் சாலா. "அனைத்தையும் துறந்து, நீங்கள் வேறு ஒரு இடத்துக்குச் செல்கிறீர்கள் என்றால், அந்த இடம் இப்போதிருப்பதைவிட நன்றாக இருக்கவேண்டும். உங்களுடன் என்னையும் அழைத்துச் செல்லாமல், என்னை ஏன் தரக் குறைவான இந்த இடத்தில் விட்டுச் செல்ல எண்ணுகிறீர்கள்?," என அவள் கூறியபோது, ஆச்சரியமடைந்த சாஸ்திரி மாமா "நமது மகனை யார் பார்த்துக் கொள்வார்கள்? நீ அவனுடன் இருந்து அவனை வளர்க்க ஆசைப்படுவாய் என எண்ணினேன்," என்று மறுமொழி பகர்ந்தார். "எனது இளைய சகோதரனிடம் அவனை ஒப்படைத்துவிட்டு, நானும் உங்களுடன் வந்துவிடுகிறேன்," என்று அவரது மனைவி பதிலளித்தார். இந்துக் குடும்பங்களில் இம்மாதிரியான பொறுப்பை உறவினர்கள் மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டு உதவி செய்வார்களே அன்றிச் சுமையாகக் கருத மாட்டார்கள்.

சாஸ்திரி மாமா தன் மனைவியிடம், "நான் அங்கு ஒரு பிக்ஷைக்காரனாகத் தான் செல்கிறேன். எனது ஜோதிடத் தொழிலைத் தொடர்ந்து செய்து பணம் சம்பாதிக்கப் போவதில்லை. ஆசைகள் ஏதுமின்றி, பற்றுக்களை அறவே ஒழித்து ஞானத்தை அடைவதற்காக, என் குருவோடு வாழ்வதற்குச் செல்கிறேன். அவருடைய ஆணை எதுவானாலும் அதன்படி செய்வேன். எங்கு சாப்பிடுவேன்? எங்கு தங்குவேன்? என்பது கூட எனக்குத் தெரியாது," என்று கூறி அவளை எச்சரித்தார். "நீங்கள் அனுபவிக்கப்போவது துன்பமோ, சுகமோ, வெற்றியோ, தோல்வியோ, ஸாதனையோ அல்லது வீழ்ச்சியோ எதுவானாலும் அதை உங்களுடன் பகிர்ந்து கொள்ளவே விரும்புகிறேன்" என்று சற்றும் உறுதி தளராமல் சாலா வற்புறுத்தினார். இந்து சமுதாய நீதிப்படி, இந்தப் பங்கைக் கணவனிடமிருந்து மனைவி உரிமையோடு கேட்டுப்பெற முடியும். சாஸ்திரி மாமாவின் மனைவி, எத்தகைய கடினமான வாழ்க்கையாக இருந்தாலும் ஏற்கத் தயாராக இருந்ததால், அவரால் மனைவியின் வேண்டுகோளை மறுக்க இயலவில்லை.

சாஸ்திரி மாமாவும், அவர் மனைவியும் ரமணாச்ரமம் வந்து சேர்ந்தனர். அந்த நாட்களில் ஆச்ரமத்தில் பெண்கள் தங்கமுடியாதென்பதால், பகவானது தம்பியும் ஆச்ரம நிர்வாகியுமான சின்ன ஸ்வாமி, "நீங்கள் மாத்ருபூதேச்வரர் கோயிலில் பூஜை செய்யுங்கள். உங்கள் மனைவி, என் மகன் வெங்குட்டுவின் குடும்பத்தோடு ஊருக்குள் தங்கட்டும். அங்கு பகவானுடைய தங்கையோடும், வெங்குட்டுவின் மனைவியோடும் இருந்துகொண்டு சேவை செய்யட்டும். நீங்கள் இங்கு தொண்டு

செய்யுங்கள்," என்று சாஸ்திரி மாமாவிடம் கூறினார். இந்த விஷயத்தைச் சாஸ்திரி மாமா பகவானிடம் கூறியபோது, அவர் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பின் மாமாவின் பக்கம் திரும்பி, "வந்த வேலையைப் பாரும்" என்று கூறினார். பகவான் என்ன சொல்கிறார் என்பதை சாஸ்திரி மாமாவும் புரிந்து கொண்டார். அவர் வந்த வேலை, சாப்பாட்டிற்காகப் பூஜை செய்வது அன்று. அனைத்தையும் துறந்து, ஆசைகளின்றி, ஞானம் பெறவே அவர் வந்துள்ளார் - உண்மையில் ஆசையின்மையும் ஞானமும் ஒன்றேதான்.

தன் மனைவியையும் அழைத்துக்கொண்டு மலை அடிவாரத்தில், தொலைவிலிருந்த அடி - அண்ணாமலை என்ற கிராமத்தில் தங்கினார். தினம், காலையில் மலையைச் சுற்றி நடந்து ஆச்ரமம் வந்து, நாள் முழுவதும் பகவானுடனேயே கழிப்பார்கள். ஆச்ரமத்தில் உண்ணவேண்டும் என்ற எண்ணம்கூட அவர்களுக்கு இருக்காது. மாலையில், கிரிவலத்தைப் பூர்த்தி செய்து தாங்கள் தங்குமிடத்திற்குத் திரும்புவார்கள். இந்த எளிய தம்பதிகளை கிராம மக்கள் கவனித்தனர். சமைப்பதற்குப் பாத்திரங்களோ, அரிசியோ, பருப்போ அவர்களிடம் இல்லாததை உணர்ந்தபோது, அவர்களிடம் இரக்கம் கொண்டு, வாழைப்பழம், பட்டாணிக்கடலை மற்றும் சில கிழங்கு வகைகளைக் கொண்டு வந்து கொடுத்து, உண்ணும்படி கேட்டுக்கொள்வார்கள். பக்தியோடிருந்த அந்த ஏழைத் தம்பதியர் வாழ்வதற்குக் கிராம மக்கள், பல ஆண்டுகள் இவ்வாறு உதவி செய்தனர்.

பகவானுடைய ஸாந்நித்தியத்திலேயே ஒவ்வொரு வினாடியும் இருந்ததால் சாஸ்திரி மாமாவும் சாலாவும் மிக்க எளிமையோடும் கண்டிப்போடும் கூடிய தவ வாழ்க்கையில் நிலைத்து நின்றனர். சாஸ்திரி தம்பதியர் தம் முன் கிராமத்து மக்கள் கருணையோடு எதை வைக்கிறார்களோ அதை உண்டு வாழ்ந்து வந்தனர். ஆச்ரமத்தில் சுவையான உணவு வகைகள் அளிக்கப்பட்டாலும் அவர்களுக்கு அவற்றின் மீது நாட்டம் ஏற்படவில்லை. அரிசி, கோதுமை, பருப்பு வகைகள் போன்ற இந்திய உணவின் ருசியையே அவர்கள் மறந்துவிட்டனர். அவ்வாறிருந்தும் சந்தோஷமாக வாழ்ந்தார்கள்.

காவ்யகண்ட முனியோ, ஜகதீச சாஸ்திரியோ இல்லாத சமயங்களில், பகவானுக்கு வேதங்களில் விளக்கங்கள் ஏதாவது தேவைப்பட்டால் சாஸ்திரி மாமாவின் உதவியை நாடுவார். கவிதைகள் இயற்றும் திறமை பெற்றிருந்த சாஸ்திரி மாமா ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்களின் வடிவிலேயே பதில்களை அளிப்பார். ஒருநாள் பகவான், "நீங்கள் இவ்வளவு அழகாகப் பதில் கூறுகிறீர்களே, சாலாவுக்கு இந்தக் கவிதைகளின் பொருள் விளங்குமா?," என வினவினார். "பகவானே! அவள் அதிகம் படிக்காத கிராமத்துப் பெண். நான் இதையெல்லாம் அவளுடன் பகிர்ந்து கொள்ளாததால் அவளுக்குத் தெரியாது," என்று சாஸ்திரி மாமா கூறினார். பகவான் அத்துடன் நிறுத்தாமல், "இல்லை. உங்களுடைய அளவிற்கு அவளை நீங்கள் உயர்த்தவேண்டும். அவளுக்குத் தமிழ் தெரியுமல்லவா?," என்றார். 'ஆம்' என்று மாமா பதிலிறுத்தபோது, "எனக்காக ஸம்ஸ்க்ருதத்தில் நீங்கள் எழுதுவதையெல்லாம் எளிய தமிழில் மொழிபெயர்த்துக் கற்றுக் கொடுத்தால் அவளால் புரிந்துகொள்ள முடியும்," என்று பகவான் பதிலளித்தார்.

பகவானுடைய உபதேசங்களை அடிப்படையாகக் கொண்டு சாஸ்திரி மாமா நிறைய பாடல்களை எழுதியுள்ளார் என்பது எனக்குச் சிறு வயதிலேயே தெரியும். ஏனெனில், எனது தாய் சிறு வயதிலேயே எனக்காக அவற்றைப் பாடுவார். எளிய நடையில் இருக்கும்; ஆனால் அப்பாடல்கள் அழகாக இருக்கும் 'கற்கண்டு வாங்கிடுவீர், குருபர கற்கண்டு வாங்கிடுவீர்' என்ற பாடல் எனக்கு மிகவும் பிடித்த ஒன்று. (இப்பாடலின் உட்கருத்து குருவின் புனிதப் பாதங்களிலிருந்து வெளிப்படும்

ஞானமாகிய இந்தக் கற்கண்டை தாராளமாகப் பெற்று மகிழுங்கள். அவரது பாதங்களில் சரணடைவதால் இந்த அமுதம் உங்களுக்கு எப்போதும் கிட்டும்.) குழந்தைகளாகிய எங்களுக்கு கற்கண்டு மிகவும் பிடிக்கும் என்பதால் இந்தப் பாடலை நாங்கள் மிகவும் விரும்பினோம்.

சாஸ்திரி மாமாவினுடைய மகன் பாலு தனது பெற்றோர்களுடன் தங்குவதற்காக சில வருடங்களுக்கு ஒரு முறை திருவண்ணாமலைக்கு வருவது வழக்கம். இந்தக் காலகட்டத்தில் சாஸ்திரி மாமா தனது மனைவிக்கு பற்றின்றி வாழக் கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்தார் என்றாலும், தங்களது மகன் இருபது வயதிற்குள் இறந்துவிடுவான் என்னும் விஷயத்தை அவளிடம் தெரிவிக்கவில்லை. இந்தப் பையன் என்னையும் எனது அண்ணாவையும் விட சிறிது மூத்தவன். ஒருமுறை அவன் வந்திருந்தபோது சாஸ்திரி மாமா, சாலா மாமி, எனது பெற்றோர், எனது அண்ணன் சுந்தரம், தம்பி மணி, பகவானுடைய தங்கை, பாலு இவர்களுடன் நானும் சேர்ந்து ஒரு புகைப்படம் எடுத்துக்கொண்டோம். இந்தப் புகைப்படம் ஆச்ரம ஆவண அறையில் இப்போதும் உள்ளது.

பகவானின் உடல்நலம் குன்றிய சமயத்தில் சாஸ்திரி மாமா சில பண்டிதர்களோடு சேர்ந்து ம்ருத்யுஞ்ஜய ஜபம் என்ற சிறப்பு ஜபத்தைச் செய்தார். ம்ருத்யு என்றால் மரணம், ஜயம் என்றால் வெற்றி. எனவே இதன் பொருள் மரணத்தை வெற்றி கொள்வது என்பதாகும். இந்த மந்திரத்தைப் பல ஆயிரம் முறைகள் ஜபிப்பதால், யாருக்கு இளம் வயதில் மரணம் என்று ஜாதகம் கூறுகிறதோ அவரை அந்த ஆபத்திலிருந்து காப்பாற்ற முடியும் என்பது இந்து சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது. பகவான் பக்தர்களுடைய விருப்பங்களுக்கு ஒப்புதலோ எதிர்ப்போ தெரிவிக்காமல் அவர்களோடு ஒத்துழைக்க மட்டும் செய்வார். வேதபாடசாலையில் கும்பத்தில் வைக்கப்பட்ட தண்ணீரில் வருணனை ஆவாஹனம் செய்து இந்த ஜபம் செய்யப்பட்டது. ஜபத்தின் சக்தி வாய்ந்த அதிர்வுகளால் கும்பத்தில் உள்ள தீர்த்தத்திற்குச் சக்தி ஊட்டப்படுகிறது. அந்தத் தண்ணீர் பின்னர் நோயாளிகளுக்குக் கொடுக்கப்படுகிறது.

மஹர்ஷியுடன் நடந்த ஸம்பாஷணைகளை பதிவு செய்தவர், ஞானியான பகவான் அந்தத் தண்ணீரை ஏன் குடிக்கிறார்? என்று ஆச்சரியப்பட்டார். பகவான் அவரைப் பார்த்தார். பின் சூரியனைப் பார்த்துவிட்டுத் தனது வலது மார்பைச் சுட்டிக்காட்டி, தைத்திரீய உபநிஷத மந்த்ரமான "ஸ யஸ்சாயம் புருஷே யஸ்சாஸாவாதித்யே ஸ ஏக: ॥ என்று கூறினார். இதன் பொருள்: என்னிடம் எந்த சக்தி உள்ளதோ அதுவும், சூரியனிடம் உள்ள சக்தியும் ஒன்றே என்பதாகும். பகவான் இவ்வாறு கூறியதும், அந்த ஜபம் அவருக்கு அவசியம் என்று தோன்றாதபோதும் தனது பக்தர்களுக்கு மன நிம்மதியும், தங்கள் குருவுக்கு சேவை செய்த திருப்தியும் அவர்களுக்கு கிடைக்கட்டும் என்று எண்ணி அவர்களோடு ஒத்துழைத்தார் என்பதை சாஸ்திரி மாமா புரிந்துகொண்டார். பகவானுடைய இறுதிக்காலம் வரை அவரோடு தங்கியிருந்த சாஸ்திரி மாமாவுக்கு அவ்வப்போது ஆத்ம தரிசனம் கிட்டியிருந்தது. ஏற்கனவே சிறந்த தவ வாழ்க்கை வாழ்ந்தவரும், முழுமையாகப் பற்றுக்களை நீக்கியவருமான மாமாவுக்குப் பூரண ஞானம் ஒன்று மட்டுமே தேவைப்பட்டது. பகவான் அவரது அருட்பார்வையால் அவரை ஆசீர்வதித்தபோது அதுவும் அவருக்குக் கைக்கூடிற்று.

சாஸ்திரி மாமாவுடனும், குறிப்பாக சாலா மாமியுடனும் நெருங்கிப்பழகும் பேறு எனக்குக் கிட்டியது. சாலா மாமி என்னிடம் மிகவும் அன்பாக இருப்பார். எனது பெற்றோர்கள் நான் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்தவோ, வற்புறுத்தவோகூட இல்லை என்றாலும் எனது எல்லா உறவினர்களும் நான் மணம் புரிந்துகொள்ளாதது குறித்து கவலையுற்றனர்



(இடமிருந்து வலம்) நாகலஷ்மி, TNV, அத்தை (குழந்தை மணியுடன்) , பிச்சு ஐயர் (குழந்தை கணேசனுடன்)
(முன் வரிசை) சுந்தரம், பாலு (பின் வரிசை) சாலா மாமி, சாஸ்திரி மாமா

ஆனால் சாலா மாமி என்னை ஒருநாள் உட்கார வைத்து, "நீ திருமணம் செய்துகொண்டு என்ன லாபத்தை அடையப்போகிறாய்? இந்த ஒரு உடம்பே சுமையாக உள்ளது. அவ்வாறிருக்கும்போது இன்னும் ஒரு உடம்பைப் பெறுவதால் என்ன பயன்? அத்துடன் அந்த உடம்பு உனக்கு சந்தோஷத்தைக் கொடுக்கும் என்று கூறுவது தவறான வாதம். சந்தோஷமோ, ஆனந்தமோ உடம்பைப் பகவானுக்கு அர்ப்பணிப்பதால் நமக்குள்ளிருந்து வரக்கூடியது. உறக்கத்தில் உடம்பைப் பற்றிய உணர்வு இல்லாததால் நீ மிகவும் சந்தோஷமாக இருக்கிறாய். அவ்வாறிருக்கும்போது ஆனந்தத்தைத் தரப்போகிறது என்று எண்ணி இன்னும் ஒரு உடம்பையும் கவனித்துக்கொள்ள ஏன் நீ விரும்புகிறாய்?" என்ற சாலா மாமியின் புத்திசாலித்தனமான உபதேசம் என்னை என் நிலையில் நிறுத்தியது. ஸத்ஸங்கத்தினால் ஏற்படும் பயன் இதுவே.

தூரத்துக் கிராமம் ஒன்றில் படித்து வந்த சாஸ்திரி மாமாவின் மகன், பகவானின் மறைவுக்குப் பின் பள்ளிப் படிப்பை முடித்தான். அவனை ஆச்ரமத்திற்கு அழைத்துவந்து விடுமாறு எனது தாத்தா, சின்னஸ்வாமி கூறினார். அவனுக்கு ஊருக்குள் மாவட்ட அலுவலகத்தில் வேலையும் கிடைத்தது. சில நாட்களுக்குப் பிறகு தன் பெற்றோரைத் தன்னுடனேயே பாலு வைத்துக்கொள்ள விரும்பியதால், சாஸ்திரி மாமாவையும் சாலா மாமியையும் அவ்வாறே செய்யுமாறு சின்னஸ்வாமி கேட்டுக்கொண்டார் தனது மகன் என்று, எந்த நேரத்தில் மரணத்தைத் தழுவுவான் என்பதையும்,

அதற்கு இன்னும் சில மாதங்களே உள்ளன என்பதையும் சாஸ்திரி மாமா நன்கு அறிந்திருந்தார். குறிப்பிட்ட அந்த நாளுக்கு மூன்று தினங்கள் முன் பாலு கடும் காய்ச்சலால் படுத்த படுக்கையில் விழுந்தான். ஜாதகத்தின்படி குறிப்பிட்ட நேரத்தில் இறந்தும் போனான்.

பின்னர் இத்துயரமான சம்பவம் குறித்து சாஸ்திரி மாமா என்னிடம், "இந்தப் பேரிழப்பைச் சாலா தாங்கமாட்டாள் என எண்ணி சீக்கிரமே நிகழப்போகும் பாலுவின் மரணம் பற்றி நான் அவளிடம் கூறவேயில்லை. நான் எண்ணியதற்கு மாறாக மிகுந்த விவேகத்துடன் தனது மகனின் மரணத்தை அவள் ஏற்றுக்கொண்டாள். என்னைவிட அவள் விவேகி. அவள் ஒரு சொட்டுக் கண்ணீர்கூடச் சிந்தவில்லை. பதிலாக என்னைச் சமாதானம் செய்யும் வகையாக, 'அவன் மீண்டும் அருணாசலத்திடம் சென்றுவிட்டான். அவன் இங்கு வந்து உடலை உகுத்து அருணாசலத்துடன் ஐக்கியமானது நாம் செய்த பெரும் பாக்கியம்' என்று கூறினாள்" என்றார்.

மகனின் மறைவுக்குப் பின்னர் ஆச்ரமத்திற்கு முன்னர் சிறிய குடில் ஒன்றில் அவர்கள் வாழ்ந்தனர். "நீங்கள் ஆச்ரமத்தில் பூஜை செய்வதற்கு எனக்கு உதவி செய்யக் கூடாதா?" என்று என் தந்தை வெங்குட்டு கேட்டுக் கொண்டார். உயர்ந்த ஞான நிலையில் விளங்கிய சாஸ்திரி மாமாவும் ஆச்ரமத்தில் பூஜை செய்ய ஒப்புக் கொண்டார். இவ்வாறுதான் அவர் எனக்கு அறிமுகம் ஆனார். எக்காரணத்தினாலோ அவருக்கு என்னிடம் ஆழ்ந்த ஈர்ப்பு உண்டாயிற்று. நான் ஆச்ரமத்திற்கு வந்த கணம் முதலே என்மீது அதிக கவனம் செலுத்தினார். "எங்களுக்கு, பகவானே கடவுள். உண்மையே அவர் உருவம். உண்மையே அவர் பெயர்" என்று அவர் என்னிடம் கூறியபோது, "நீங்கள் சொல்வதன் பொருள் என்ன?" என்று கேட்டேன். "பகவானை நீ யாரென்று புரிந்து கொண்டாயா? அவர் அறிவுண்மை நிஷ்டன் - தன்னை உண்மையாக உணர்ந்த ஒருவர். ஆத்மவித்தாவான் - இதயத்தில், "நான் இருக்கிறேன்" என்னும் உணர்வாக நிலைத்து நிற்பவன்; அறிவால் புலன் செற்றான் - அதாவது ஆத்ம ஞானத்தால் ஐம்புலன்களையும் ஏற்கனவே வென்றவன்" என்று சாஸ்திரி மாமா கூறியபோது, "நான் உங்களுக்கு என்ன செய்யவேண்டும்? எப்படி உங்களுக்குத் தொண்டு செய்ய முடியும்?" என்று வினவினேன். "பகவானைப் போற்றி வணங்கி, அவரது பெயரையும் புகழையும் பரப்பு.

ஆத்மானந்தத்தையும் ஆத்மஞானத்தையும் மற்றவர்களும் அறிந்து கொள்ளும் வண்ணம் பகவானுடைய உபதேசங்களை அவர்களோடு பகிர்ந்துகொள்" என்று கூறியவர் மேலும் தொடர்ந்து, "அவரை எவ்வாறு போற்றுவது? - அறிவங்கியாவன் - அவரே அறிவங்கி. பகவானை ஞானாக்னியாகப் போற்ற வேண்டும். அவரை யார் என்று உனக்குத் தெரியுமா? அவர் ஞானச்சுடர். 'ரமணர் என்றால் தேகமோ, தனி நபரோ அன்று', அவர் சுத்த ஞானம். அவரே அறிவான் குலிசத்தான். குலிசத்தான் என்றால் எதிரியின் அஞ்ஞானத்தை நாசம் செய்யக் கூடிய மிகவும் சக்தி வாய்ந்த வஜ்ராயுதத்தைப் போன்றவன். நமது பகவான் எல்லாவிதமான அஞ்ஞானங்களையும் அழிக்கக்கூடிய சக்தி வாய்ந்த


சாஸ்திரி மாமா, கணேசன், சாலா மாமி

வஜ்ராயுதமாவார்: அவர் காலம் தேசம் இவற்றிற்கு அப்பாற்பட்ட 'காலகாலன்'; சாவினை வென்ற மாவீரன் - என்பதை உலகத்தவருக்குக் கூறு." என்று சாஸ்திரி மாமா கூறினார்.

மாமாவின் மேற்கூறிய இந்த வார்த்தைகளை 'உள்ளது நாற்பது அனுபந்தம்' என்ற நூலில் பகவான் எழுதியுள்ளார் (பாடல் 28).

அறிவுண்மை நிட்டனாம் ஆன்மவித்தாவான்
அறிவால் புலன்செற்றான் ஆர்தான் - அறிவங்கி
யாவன் அறிவாம் குலிசத்தான் கால காலனவன்
சாவினை மாய் வீரனெனச் சாற்று

சாஸ்திரி மாமா எப்பொழுதும் பகவானைப் பற்றிப் பேசி, நான் அவருடைய ஸாந்நித்யத்தை உணருமாறு செய்தார். இதற்கிடையில் அவர், கிட்டு, அப்பிச்சி, ஆகிய இரண்டு இளம் அர்ச்சகர்களுக்கும் உதவி செய்யும் பணியை ஏற்றுக்கொண்டிருந்தார். அவர்கள் தேவையான பொருட்களை எடுத்துவரும்படி அவரிடம் சொல்வார்கள். மாமாவும் அவர்களுக்குக் குற்றேவல் செய்வார். அந்த இளம் அர்ச்சகர்கள் சாஸ்திரி மாமாவின் உயர்ந்த ஆன்மீக நிலையை உணரவில்லை. குறை ஏதும் கூறாமல் தன்னைவிடச் சிறியவர்களான அந்த இளம் அர்ச்சகர்களுக்கு அவர் பணிவிடை செய்ததை பார்த்தபோது, நான் மிகவும் மன வேதனையுற்றேன்.

ஏற்கனவே கூறப்பட்ட நாகப்ப செட்டியார் பற்றிய சம்பவம் சாஸ்திரி மாமா என்னிடம் கூறியதுதான். அது உண்மையில் நடந்ததுதான் என்று முற்றிலும் நம்பியபோதும், அத்தகைய அற்புதங்களை நான் நேரில் உணரவேண்டும் என்று எண்ணினேன். பல அற்புதங்களை சாஸ்திரி மாமா நிகழ்த்தியுள்ளார். எனது மூளையோ, அல்லது புரிந்துகொள்ளும் சக்தியோ அவற்றிற்குப்பின் இருந்த நியாயத்தை உணர்ந்துகொள்ள முடியாதபோதும், அத்தகைய நிகழ்ச்சிகள் என் கண் முன்னே நிகழ்ந்தபோது, நான் மெய்சிலிர்த்துப் போனேன்.

எடித் டெரி (Edith Deri) என்ற பிரெஞ்சு நாட்டுப் பெண்மணி பாரீஸ் நகரில் உலகளாவிய பிரெஞ்சு வங்கியில் முக்கிய கணக்கராக இருந்தார். ஒவ்வொரு ஆண்டும், வருடாந்திர விடுமுறையாக அவருக்குக் கிடைக்கும் மூன்று அல்லது நான்கு வாரங்களை ஆச்ரமத்தில் தியானத்தில் கழிப்பதற்காக வருவார். வங்கியில் தனது வேலையை முடித்துக்கொண்டு, நேராக பாரீஸ் விமான நிலையம் சென்று, விமானம் மூலம் மும்பை வந்து, ரயிலைப் பிடித்து நேராக திருவண்ணாமலைக்கு வந்து சேர்வார். ஆச்ரமத்தில் தனது பெரும்பாலான நேரத்தை கழிக்க விரும்பி, திரும்பிச் செல்லும் பயணத்தை மிகவும் கவனமாக ஏற்பாடு செய்து கொள்வார். பகவானுடைய ஆச்ரமத்தில் தங்கும் ஒவ்வொரு நிமிடமும் அவருக்கு அத்துணை புனிதமானதாக இருந்தது.

1970-ம் ஆண்டு, வங்கி வேலையிலிருந்து அவர் ஓய்வு பெறவேண்டிய அந்த வருடத்தில், எனக்கும் ஆச்ரமத்திலிருந்த மற்றுள்ளவர்களுக்கும் அன்பளிப்புக்களை வாங்கியிருந்தார். அதனால், அவர் வழக்கமாக எடுத்துவரும் ஒரு பெட்டியுடன் அன்பளிப்புக்களடங்கிய இன்னொரு பையையும் அந்த முறை அவர் எடுத்து வந்தார். ஆச்ரமத்திற்கு வரவேண்டிய குறிப்பட்ட தினத்தில் அவர் வந்து சேரவில்லை. இம்மாதிரி இதுவரை நடந்ததில்லையென்பதால், நான் மிகவும் ஆச்சரியப்பட்டேன். ஒருநாள், பகவானுடைய ஸமாதி மந்திரத்தில் பால் அபிஷேகத்தைப் பார்த்தவாறு நான் நின்று கொண்டிருந்தபோது, பின்னிருந்து என் தோள்களின் மீது வைக்கப்பட்ட இரு கைகளும் எனது பிரெஞ்சு அன்னை எடித் டெரியினுடையது என்பதை உணர்ந்தேன். "நான் அன்பளிப்புக்கள்

கொண்ட பையை தொலைத்துவிட்டேன். எனது தாமதத்திற்கு அதுவே காரணம்'' என்று என் காதுகளில் அவர் கிசுகிசுத்தார். மந்திரங்களை ஓதிக்கொண்டிருந்த சாஸ்திரி மாமாவை நோக்கி ஏதோ ஒன்று என்னை நகர வைத்தது. அவருக்கு மிக அருகில் நான் சென்றபோது, அவர் தானாகவே என்னைத் திரும்பிப் பார்த்து, "ஒன்றும் தொலைந்து போகவில்லை. அவளுக்கு அது திரும்பக் கிடைத்துவிடும்" என்று கூறினார்.



**பகவான் ஸமாதி கோயிலில் சாஸ்திரி மாமா (வலது பக்க ஓரத்தில்)**

பூஜைக்குப் பிறகு, எடித் டெரியை நான் சாஸ்திரி மாமாவுக்கு அறிமுகம் செய்து வைத்தேன். "நான் சாதாரணமாக Air France விமானத்திலேயே பிரயாணம் செய்வேன். இந்த ஆண்டு நான் ஓய்வு பெறப் போவதால், சற்று மலிவான குவைத் ஏர்லைன்ஸ் விமானத்தில் ஏறினேன். மும்பையை வந்தடைந்தபோது, அன்பளிப்புகள் அடங்கிய பையைக் காணவில்லையென்பதை அறிந்தேன். அடுத்த விமானத்தில் அது வந்துசேர்ந்துவிடுமென்று, விமான நிலைய அதிகாரிகள் எனக்கு உறுதி அளித்தனர். அதனால், ஒரு நாள் காத்திருந்தேன். ஆனால், எவ்வளவு தேடியும், அவர்களால், காணாமற்போன எனது பையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. எப்படியாவது அதைக்கண்டு பிடித்து ஆச்ரம முகவரிக்கு அனுப்பிவிடுகிறோம் என்று அதிகாரிகள் உறுதியளித்தனர்'' என்று விபரங்களை அவர் தெரிவித்தார். சாஸ்திரி மாமா ப்ரச்னத்தில் தனக்குள்ள திறமையை உபயோகித்து, "அவளுடைய பை திருடப்படவும் இல்லை; காணாமலும் போகவில்லை. அவள் அதைத் திரும்பவும் பெறுவாள்" என்று உறுதிபடக் கூறினார்.

சில தினங்களுக்குப் பிறகு, விமான அலுவலகத்திலிருந்து வந்த கடிதத்தில், அவரது பை எங்கிருக்கிறது என்பதைக் கண்டுபிடிக்க முடியாததற்கு மன்னிப்புக் கோரியும், அவர் பையிலிருந்த பொருட்கள் பற்றியும், அவற்றின் விலை பற்றியும் விபரங்கள் தந்தால், அதை ஈடு செய்வதாகவும்

எழுதப்பட்டிருந்தது. சாஸ்திரி மாமாவின் ஜோதிடம் பொய்த்துவிட்டதாக அவள் ஏமாற்றமடைந்தாள். மறுநாள், நாங்கள் அவரைப் பார்த்த போது, அவளுடைய உணர்ச்சிகளை வெளிப்படையாகக் கொட்டிவிட்டாள். சாஸ்திரி மாமாவும் அதிர்ந்துபோய், "என்ன? ஜோதிடத்தில் அவளுக்கு சந்தேகமா? ஒரு பெரிய அறையில், கவனிப்பாரற்று அவளுடைய பை கிடப்பதை என் கண் முன் நான் காண்கிறேன்" என்று கூறினார்.

ஆச்ரமத்திலிருந்து பிரெஞ்சு நாட்டிற்குக் கிளம்பிய ஒரு வாரத்தில், எடித் டெரியிடமிருந்து வந்த கடிதத்தில் அவர் சாஸ்திரி மாமாவை மிகவும் வியந்து பாராட்டியிருந்தார். "ஜோதிடம் கூறும் உங்கள் மஹான் நிஜமாகவே மிகவும் பெரியவர். அவர் கூறியது நூற்றுக்கு நூறு உண்மை. விமானம் புறப்பட அதிக நேரமிருந்ததால், குவைத் விமான நிலையத்தில், பிரயாணிகளின் மூட்டை முடிச்சுக்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்த ஒரு பெரிய அறைக்குள் நுழைய நேர்ந்தது. அங்கு நான் பார்த்தது என்ன தெரியுமா? என்னுடைய காணாமல் போன பை நுழைவாயில் அருகில் தரையில் கிடந்தது. பெயர் எழுதிய சீட்டு எதுவும் இருக்கவில்லை. என்னுடையதைத் தவிர மற்றவற்றிலெல்லாம் சீட்டுக்கள் இருந்ததால் அவை அனைத்தும் வரிசையாக அலமாரியில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. நான் இவ்விஷயத்தை அலுவலகத்தில் கூறியபோது, தங்கள் கவனக் குறைவுக்காக வருத்தம் தெரிவித்தார்கள். ஆனாலும் என்னுடைய பையை அலமாரியில் மீண்டும் மீண்டும் தேடியபோதும், கீழே கிடந்த எனது பையைக் கவனிக்காமல் விட்டுவிட்டதாக விளக்கம் கூறினார்கள். உங்கள் எல்லோருக்கும் ஒரு நல்ல செய்தி. ஆச்ரமத்துத் தொண்டர்களுக்கு எனது அன்பளிப்புகளைக் கொடுப்பதற்காகவே, நான் மீண்டும் அடுத்த மாதம் அங்கு வருகிறேன்" என்று எழுதியிருந்தார்.

ஒருமுறை நான், வாழ்ந்துகொண்டிருக்கும் மஹான் ஒருவர் நிகழ்த்திய அற்புதங்களைப் பற்றிப் படித்துக் கொண்டிருந்தேன். அப்போதுதான், முதன் முதலாக சாஸ்திரி மாமாவின் அறிவுரையைப் பெற்றேன். இரவு முழுவதும், அந்தப் புத்தகத்தை கீழே வைக்கவோ, உறங்கவோ என்னால் முடியவில்லை. இந்த மஹானை சந்தித்தே ஆக வேண்டுமென்றும், அற்புதங்களை நிகழ்த்தும் சக்தி எனக்கும் இருக்கவேண்டும் என்றும் விரும்பினேன்.

அன்று பூஜை முடிந்தபின், பழைய அலுவலகத்தின் முன், முப்பது அடி தள்ளி நான் நின்று கொண்டிருந்தபோது, "கணேசா! நில்! அங்கேயே இரு!" என்று சாஸ்திரி மாமா திடீரென்று குரல் கொடுத்தார். நான் அவர் கூறியபடியே செய்தேன். "எந்தவிதமான எண்ணங்களையும் வைத்துக்கொள்ள வேண்டாமென்று நான் கட்டளை இடுகிறேன்" என்று அதிகாரமாகச் சொன்னார். அதன்பிறகு, ஒரு கொத்துத் திராட்சைப் பழங்களை என் கண் முன் நீட்டி, "இந்தக் கொத்தில், எத்தனை திராட்சைகள் உள்ளன என்று இப்போது என்னிடம் கூறு!" என்றார். "பதின்மூன்று" என்று நான் பதிலிறுத்தபோது, "இங்கு வா! எண்ணிப்பார்!" என்று மீண்டும் அதிகார தோரணையில் கூறினார். நான் ஊகித்தது சரியாகவே இருந்தது. "பதின்மூன்று என்று எவ்வாறு கூறினாய்?" என்று அவர் மறுவினா எழுப்பியபோது, எனக்குத் தெரியாது என்று குழப்பத்தோடு கூறினேன். "அப்படிச் சொல்லாதே. அவ்வாறு சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம் என்று பார்க்காதே. பதின்மூன்று திராட்சைகள் உள்ளன என்று எப்படி நினைத்தாய்?" என்று அழுத்தமாகக் கேட்டார். இம்முறை, நான் மௌனம் சாதித்தேன். அவர், "எண்ணங்கள் எதுவுமில்லாமல் இரு என்று நான் உன்னிடம் கூறினேன் அல்லவா? அப்படியிருக்கும்போது, 15, 10, 11 என்று ஏன் கூறவில்லை. எவ்வாறு சரியாகப் பதின்மூன்று என்று கூறினாய்? நீ எண்ணங்களற்று இருந்தபோது, நான் அந்த எண்ணை உன்

மனதில் பதித்தேன். திராட்சைகளை ஏற்கனவே நான் எண்ணியிருந்தேன். அற்புதம் என்பது சக்தி வாய்ந்த ஒரு மனம், பலவீனமான ஒரு மனதினுள் புகுவதுதான். அற்புதங்கள் காரணமாக ஒருபோதும் தடம் மாறிச் சென்றுவிடாதே" என்று சொன்னபோது நான் திகைத்துப் போனேன். நான் படித்துக்கொண்டிருந்த புத்தகத்தைப் பற்றி அவரிடம் பேசியதேயில்லை. ஆதாரமில்லாமல் நான் இதைச் சொல்லவில்லையென்று கூறிய சாஸ்திரி மாமா, 'உள்ளது நாற்பது'லிருந்து பகவானுடைய கீழ்க்கண்ட பாடலை எடுத்தியம்பினார்:-

"சித்தமாய் உள்பொருளைத் தேர்ந்திருத்தல் சித்தி பிற
சித்தியெலாஞ் சொப்பனமார் சித்திகளே - நித்திரைவிட்டு
ஓர்ந்தால் அவை மெய்யோ உண்மைநிலை நின்று பொய்ம்மை
தீர்ந்தார் தியங்குவரோ தேர்ந்திரு நீ" (பாடல் 35)

(எங்கும் எப்போதும் சித்தமாய் விளங்கிக் கொண்டிருக்கும் உள்ள பொருளான ஆத்மாவை அறிந்து, அந்த உண்மை நிலையில் இருத்தலே சிறந்த பூரண ஸித்தியாகும். மற்ற அணிமா முதலான அஷ்டமா ஸித்திகளெல்லாம் கனவில் தோன்றி அனுபவிக்கும் ஸித்திகளுக்கு ஒப்பானவையே ஆகும். தூக்கத்திலிருந்து விழித்தபின் சிந்தித்துப் பார்த்தால், அந்தச் சொப்பனத்தில் கண்ட ஸித்திகள் உண்மையாகுமோ? ஆவதில்லையே! அதுபோல, தனது உண்மையான ஆத்ம ஸ்வரூபானுபவ நிலையில் நிலைபெற்று, பொய்யாகிய அஞ்ஞான தூக்கத்திலிருந்து மீண்டவராகிய ஜீவன் முக்தர் இந்த ஸித்திகளைக் கண்டு உண்மையெனக் கருதி மயங்கிடுவரோ? நீயே அறிந்துகொள்!) இந்தப் பாடலின் மூலம் ஸித்திகள் அல்லது அற்புதங்கள் மீது எனக்கிருந்த நாட்டத்தை ஒரேயடியாக, என்றென்றுமாக சாஸ்திரி மாமா நீக்கிவிட்டார்.

நான் பழகியவர்களுள், சாஸ்திரி மாமா மிகவும் ஆழமானவர்; ஆனால், மிக எளிமையானவர். வேதங்களில், மெய்ப்பொருள் அணுவை விடச் சிறியது என்றும், அண்டங்கள் அனைத்தையும் விடப் பெரியது என்றும் கூறப்பட்டுள்ளது. இது சாஸ்திரி மாமாவுக்குத்தான் நன்கு பொருந்தும். நான் தற்பொழுது வசிக்கும் 'ஆனந்த ரமணா' என்ற இல்லத்தை அவர்தான் தேர்ந்தெடுத்தார். இந்த வீடு விலைக்கு வந்தபோது, அனுராதா அதை வாங்கிக் கொள்ளட்டும் என்று நான் அவரிடம் கூறினேன். அந்த சமயத்தில் கண்பார்வையை முற்றும் இழந்திருந்த அவர், சட்டென்று, 'இல்லை. நீதான் அதை சொந்தமாக்கிக் கொள்ளவேண்டும்' என்று கூறித் தொடர்ந்து, 'அந்த நிலத்திற்கு என்னை அழைத்துச் செல்' என்று கூறினார். அந்த நிலத்தின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் கூட அவரை நான் அழைத்துச் சென்றேன். ஒரு இடத்தில் அவர் நின்றுகொண்டு, அந்த இடத்தை விவரிக்கச் சொன்னார். இங்கு இரண்டு மரங்கள் உள்ளன. ஒன்று அரசமரம், மற்றொன்று வேப்பமரம் என்று கூறி மேலும், நான் தொடர்வதற்கு முன்னால் குறுக்கிட்டு, "ஆம்! பகவான் கணேசர் இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். அரசமரம் தந்தையின் தன்மையைக் குறிக்கும். வேப்பமரம் தாயின் தன்மையைக் குறிக்கும். கணேசர், சிவபெருமான் - பார்வதி இவர்களின் மகன். இந்த இரண்டு மரங்களுக்கிடையில் பிள்ளையாருக்கு ஒரு கோயில் எழுப்பு. விநாயகரே இந்த இடத்தை தேர்ந்தெடுத்திருப்பதால், அவருக்கு ஸமர்த்த விநாயகர் - மங்களத்தைப் பொழிபவர் - என்ற பெயரை நான் சூட்டுகிறேன்" என்று சாஸ்திரி மாமா கூறினார். அவர் கூறியபடியே, 'ஆனந்த ரமணா' என்ற அந்த இல்லத்தை ஒரு நண்பரின் உதவியோடு வாங்கி, மாமா குறிப்பிட்ட இடத்தில் விநாயகருக்கு ஒரு சிறு கோயிலையும் எழுப்பினேன்.

கிருஹப்ரவேசத்தன்று, ஸமர்த்த விநாயகருடைய பூஜை உட்பட எல்லாச் சடங்குகளையும் அவரே வழிநடத்தினார். அவரை வணங்கி ஆசீர்வதிக்குமாறு நான் கூறியபோது மிகவும் கருணையோடு, "உன்னைச் சுற்றியுள்ள உலகம், உன்மீது அக்கறை கொள்ளாமல் புறக்கணிக்கும். ஆனால், கவலைப்படாதே! ஸமர்த்த விநாயகர் உன்னைக் காப்பாற்றி வழி நடத்துவார். இன்று விசேஷமான கணேச மந்திரத்தை நான் உனக்கு உபதேசிக்கிறேன். அதை உரக்க ஓதுவதோ, எழுதுவதோ கூடாது. உள்முகமாக இதயத்தில் அதை ஜபித்துவா! உலகைப் பற்றிக் கவலைப்படாதே. அகமுகமாகி எப்பொழுதும் இதயத்தில், ஜபத்தில் மூழ்கியிரு. பகவானுடைய ஆசீர்வாதம் உனக்கு எப்பொழுதும் உள்ளது" என்று சாஸ்திரி மாமா ஆசி வழங்கினார்.

கடைசிக் காலத்தில், கட்டிலிலிருந்து விழுந்ததால் சாஸ்திரி மாமாவுக்கு இடுப்பெலும்பில் முறிவு ஏற்பட்டது. பல பக்தர்களை அவர்களது இறுதி நாட்களில் கவனித்துக் கொண்டு, அவர்களுக்கு ஹோமியோபதி மருந்துகளை அளித்து வந்த ஹ்யூகோ மேயர், சாஸ்திரி மாமாவைப் பரிசோதித்து, 'அவருக்கு மிகவும் வயதாகிவிட்டதால் அறுவை சிகிச்சை செய்ய முடியாது' என்று கூறிவிட்டார். 'உடம்பின் மீது ஏன் கவனம் செலுத்தனும்? எப்படியானாலும் அது போகப் போகிறது. அது வலியின் மூலம் அந்த நிலைக்குப் போனாலும் போகட்டுமே. 'நான் உடம்பா' என்று சாஸ்திரி மாமா கூறியபோது, "மாமா! கால் ரொம்ப வலிக்கிறதா?" என்று நான் கேட்டேன். தாங்க முடியாத வேதனையை அனுபவித்தபோதும், சிரித்துக் கொண்டே, "காலை எதற்குப் பார்க்கிறாய்? முக்காலைப் பார். ஆனந்தமாய் இருக்கிறேன்" என்று பதிலிறுத்தார். தமிழில் 'கால்' என்றால் உடல் உறுப்பான கால் என்றும், நான்கில் ஒரு பங்கு என்றும் பொருள்படும். முக்கால் என்றால் நான்கில் மூன்று பங்கு என்று அர்த்தம். கால் என்ற பதத்தை சிலேடையாக உபயோகித்து, "பின்னமான தேஹத்தில் ஏன் கவனத்தைச் செலுத்துகிறாய்? பூரணமான ஆத்மாவில் உன் கவனத்தைச் செலுத்து. நான் பூரண சாந்தியோடும்ஆனந்தத்தோடும் இருக்கிறேன்" என்று சாஸ்திரி மாமா கூறினார். உடல் வலியால் துன்புற்றபோதிலும், அவர் இடைவிடாத பரவச நிலையிலேயே இருந்தார்.



ஹ்யூகோ மேயர் உதவியுடன் பழைய ஹாலுக்குள் நுழையும் சாஸ்திரி மாமா

அவரது இறுதி நாள் நெருங்கிவிட்டது என்பதை என் உள்ளுணர்வு உணர்த்தியது. அந்த அபூர்வமான மஹானின் ஆசிகளைப் பெறுவதற்காக, எனது தோழியான அனுராதாவையும் என்னுடன் அழைத்துச் சென்றேன். அவருடைய புனித பாதங்களைப் பிடித்துக்கொண்டு "என்னை ஆசீர்வதியுங்கள் மாமா!" என்று வேண்டினேன். அவர் பணிவோடு, "பகவானால் மட்டுமே ஆசீர்வதிக்க முடியும்!" என்று கூறியபோது, "இல்லை, விடமாட்டேன்.

நீங்கள் உங்கள் கையை எங்கள் தலைமேல் வைத்து ஆசி வழங்கத்தான் வேண்டும்!" என்றேன். கடைசியில் அதற்கு அவர் இசைந்தார். அவருக்கு நாங்கள் ஏதாவது செய்யமுடியுமா? என்று கேட்டபோது, "பகவானுடைய அருணாசல பஞ்சரத்னத்தைப் பாடுமாறு அனுராதாவிடம் கூறு" என்று பதிலளித்தார். நானும் அனுராதாவும், பகவானுடைய அந்த கம்பீரமான ஸ்துதியைப் பாடியபொழுது சாஸ்திரி மாமா அவரது உள்ளங்கைகளைக் கோர்த்து மார்பின் மீது வைத்துக் கொண்டார். ஆனந்தப் பரவசத்தில் கண்களின் ஓரங்களிலிருந்து தாரை தாரையாக கண்ணீர் பெருகியது. விரைவிலேயே முழு உணர்வோடு சாஸ்திரி மாமா ஆத்மாவில் கலந்தார்.





ரமணாச்ரமம் தபால் நிலையம் முன்னால் கடிதங்களை படிக்கும் பகவான்

# 22 ராஜா அய்யர்



ராஜா அய்யர், "போஸ்ட் மாஸ்டர்" என்றே அழைக்கப்பட்டார். கபடமற்றவராகவும், ஆழ்ந்த மதப்பற்றுடையவராகவும் இருந்த அவர், பஜனை பாடல்கள் மற்றும் பக்தி பாடல்கள் பாடுவதில் ஈடுபாடு உள்ளவர். 1911-ல், பகவான் விரூபாக்ஷ குகையில் இருந்தபோது அவரைக் காண வந்தார். இயல்பாகவே, நாடோடி போல் இருந்த அவர் கால்போன போக்கில் செல்வார். பகவானைப் பார்க்க வந்த போதெல்லாம் பகவானுடனோ அல்லது திருவண்ணாமலையில் வசித்து வந்த தனது அத்தையுடனோ தங்குவார். 1911-க்கு முன்பே பகவானின் பெருமையைப் பற்றி அவரது அத்தை அறிந்திருந்தார். இனிப்புப் பண்டங்களைத் தயார் செய்து, விரூபாக்ஷ குகையில் இருந்த பகவானுக்கு அர்ப்பணம் செய்வது அவரது அத்தையின் வழக்கமாக இருந்தது.

ராஜா அய்யர் அத்தையுடன் இருக்கும் போது, "நான் இனிப்புகளைப் பகவானுக்கு எடுத்துச் செல்கிறேன்" என்பார். அதனால் அத்தையும், ராஜா அய்யர் மூலம் பகவானுக்கு இனிப்புகளை அனுப்புவாள். ராஜா அய்யர் முதன்முதலாக பகவானைச் சந்தித்து இனிப்புகளை ஸமர்ப்பணம் செய்த போது, பகவானின் ஆன்மீக உபதேசங்களைப் பற்றி அவருக்கு எதுவும் தெரியாது. ஆனாலும் அங்கு அவருக்குக் கிடைத்த அனுபவத்தை அவர் பெரிதும் மதித்தார். "விரூபாக்ஷ குகையில், மாலை வேளைகளில் நிலவிய அமைதி மனதுக்கு மிகவும் பிடித்திருந்தது. அந்தப் புனித மலையில் இருந்து வீசும் மணம் மிகுந்த காற்றும், பகவானிடம் இருந்து வெளிப்பட்ட சாந்தமும் வர்ணிக்க முடியாதவையாகும். அந்த இயற்கை அழகில் நான் நனைந்து மகிழ்வேன். அதோடு மட்டுமல்லாமல், பகவானுக்கு எது ஸமர்ப்பணம் செய்யப்பட்டாலும் அது அனைவருக்கும் பகிர்ந்து அளிக்கப்படும்." என்று கூறினார்.

ராஜா அய்யர் நாடோடியாக இருந்தபடியால், அவருக்குச் சில நேரங்களில் போதுமான உணவு கிடைக்காது. அதனால், சாப்பிடுவதில் விருப்பம் உள்ளவர் ராஜா அய்யர் என்பதை உணர்ந்திருந்த பகவான், அவருக்கென சில உணவுப் பண்டங்களை எடுத்து வைத்திருப்பார். விரூபாக்ஷ குகைக்கோ, ஸ்கந்தாச்ரமத்திற்கோ எப்போது சென்றாலும் ராஜா அய்யருக்குச் சாப்பிட ஏதாவது கிடைக்கும். ராஜா அய்யர், "நான் இனிப்பு சாப்பிடுவதற்காகவே பகவானைப் பார்க்கச் செல்வேன் என்பதை வெட்கப்படாமல் ஒத்துக் கொள்கிறேன்" என்று கூறுவார்.

ஒரு நாள் ராஜா அய்யர் ஸ்கந்தாச்ரமத்திற்குச் சென்று கொண்டிருந்த போது, பகவானுக்கு உணவு எடுத்துச் செல்லும் எச்சம்மாளைச் சந்தித்தார். அதே நேரத்தில், ஸ்கந்தாச்ரமத்திலிருந்து ஒரு பக்தர்கள் கூட்டம் மிகவும் ஏமாற்றத்துடன் இறங்கி வந்து கொண்டிருந்தது. அவர்கள் முகத்தோற்றத்தில் இருந்த ஏமாற்றத்தைக் கவனித்த எச்சம்மாள், "என்ன ஆச்சு?" என்று கேட்டார். அதற்கு அந்த பக்தர்கள் கூட்டம், "நாங்கள் ரமண மஹர்ஷியைப் பார்ப்பதற்காகச் சென்றோம். ஆனால் அவரை அங்கு பார்க்க முடியவில்லை" என்றனர். எச்சம்மாள் ஆச்சர்யத்துடன், "என்ன? உங்களால் அவரைப் பார்க்க முடியலையா?" என்றார். "ஆம், முடியவில்லை" என்று அவர்கள் பதிலிறுத்தனர். பிறகு அவர்களிடம், "அங்கு யாரும் இல்லையா?" என்று எச்சம்மாள் கேட்ட போது அதற்கு அந்த பக்தர்கள் குழு, "அங்கு ஒரேயொரு மனிதர் தான் இருந்தார். அவர் சில கற்களை வரிசைப்படுத்தி, சுவரைச் சரி

செய்து கொண்டிருந்தார். அவரைத் தவிர அங்கு வேறு ஒருவரும் இல்லை." என்று கூறினர். எச்சம்மாள் அவர்களிடம் "பகவான் எங்கே என்று அவரிடம் கேட்டேளா?" என்றார். "ஆம். பகவான் மலைமேல் ஏறிச் சென்றுள்ளார் என்று அவர் கூறினார்." என்று அவர்கள் பதில் அளித்தனர். குழம்பிய நிலையில், எச்சம்மாளும், ராஜா அய்யரும், "அந்த மனிதர் பார்ப்பதற்கு எப்படி இருந்தார்?" என்று விசாரித்தனர். அதற்கு அவர்கள்," அவர் ஒரு கௌபீனம் கட்டியிருந்தார். தலையில் ஒரு துணியைச் சுற்றி இருந்தார்" என்றனர். அதற்கு எச்சம்மாளும், ராஜா அய்யரும் "அவர் பார்ப்பதற்கு, எப்படி இருந்தார்?" என்று கேட்டனர். அதற்கு அவர்கள் "அவர் பார்ப்பதற்கு மிகவும் நன்றாக இருந்தார்" என்று பதிலிறுத்தவுடன், ராஜா அய்யரும், எச்சம்மாளும், அவர் பகவானேதான் என்று புரிந்து கொண்டு, அந்த பக்தர்களிடம், "வாருங்கள், நாங்கள் பகவானிடம் உங்களை அழைத்துச் செல்கிறோம்" என்றனர். அவர்கள் ஸ்கந்தாச்ரமத்தை அடைவதற்குள் பகவான் தான் செய்து கொண்டிருந்த வேலையை முடித்துவிட்டுத் தன்னுடைய வழக்கமான இடத்திற்குத் திரும்பியிருந்தார்.

ஸ்கந்தாச்ரமத்தில் நுழைந்த பக்தர்கள் கூட்டம், மிகவும் சாந்தமாக அமர்ந்திருந்த பகவானைப் பார்த்தவுடன், "நாங்கள் பார்த்தது இவரை அன்று அவர் வேறு யாரோ." என்று கூறினர். இதைக் கேட்டதும் பகவான் வாய்விட்டுச் சிரித்தார். எச்சம்மாள், ராஜா அய்யரின் முன்னிலையில், "பகவான்! நீங்கள் ஏன் 'பகவான் மலைமேல் ஏறிப் போயிருக்கார்' என்றீர்கள்? அவர்களுக்கு ரொம்ப ஏமாற்றம், பாவம்" என்று குறைப்பட்டார். அதற்கு பகவான் எச்சம்மாளிடம், "'நான் தான் பகவான்', என்ற விளம்பர அட்டையை என் நெற்றியில் வைத்துக் கொள்ளணுமென்கிறாயா?" என்றார். இதன் முக்கிய ஸாரம் என்னவென்றால் 'தன் நெற்றியில் 'நான் தான் பகவான்' என்ற விளம்பர அட்டையை வைத்துக் கொள்ளணுமென்கிறாயா?' என்றதன் மூலம், 'தான் பகவான்' என்பதைப் பகவான் ஒத்துக் கொண்டுள்ளார்! ராஜா அய்யர் இந்த நிகழ்வை எனக்கு விவரித்துக் கூறிய போது மிகவும் வேடிக்கையாகவும், உண்மை வெளிப்படுத்தப்பட்டதாகவும் தோன்றியது.

1927-ம் ஆண்டு, ராஜா அய்யர் ஊர் ஊராகச் செல்கையில் ரெட்டிப்பாளையம் என்ற சிறிய நகருக்குச் சென்றார். இந்தக்கால கட்டத்தில் பகவான் மலைமேலிருந்து, தற்போதைய ரமணாச்ரமம் வந்து ஐந்தாண்டுகளாகி விட்டன. மின்சார வசதி இல்லாத அந்தக் காலத்தில், பகவானுடைய பக்தர் ஒருவர் 'பங்கா' என்கிற ஒரு காற்றாடியை ஏற்பாடு செய்திருந்தார். வீட்டின் மேற்கூரை உட்புறத்திலிருந்து தொங்கும் கனமில்லாத ஒரு மரப்பலகையுடன் ஒரு நீளத் துணி இணைக்கப்பட்டிருக்கும் அந்தக் காற்றாடியுடன் ஒரு நீளமான கயிறும் இணைக்கப்பட்டிருக்கும். அந்த நீளமான கயிற்றை இழுத்தால், அந்தத் துணி குளிர்ந்தகாற்றைச் சுழலச்செய்யும். ஒரு நாள் இரவு, பகவான் ராஜா அய்யரின் கனவில் தோன்றினார். பகவான் அந்த 'பங்கா' வின் அடியில் ஹாலில் அமர்ந்திருந்தார். ராஜா அய்யர் ஹாலுக்குள் நுழைந்தவுடன் பகவான், "வா, இந்த பங்காவை இழு" என்றார். ராஜா அய்யர், தனது கனவில் பங்காவை இழுக்கவும், பகவான் குளிர்ந்த காற்றின் இனிமையை அனுபவித்தார். இந்த கனவு வந்த சில நாட்களுக்குப் பிறகு ராஜா அய்யர், திருவண்ணாமலைக்குச் சென்றார். அவர் பகவான் இருந்த பழைய ஹாலுக்குள் நுழைந்தவுடன், தான் கனவில் பார்த்த 'பங்கா' இருப்பதைக் கண்டார். அவர் பகவான் முன் வீழ்ந்து வணங்கிய பின், பகவான், "ராஜா, போய் அந்தப் 'பங்கா'வை இழு" என்று கூறினார். ராஜா அய்யரும், பகவான் கூறியவாறே செய்தார். ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு, பகவான் அவரைக் கூப்பிட்டு, "ராஜா இது போதும்" என்றார். ராஜா அய்யர், ஒரு பெரிய பொறுப்பு இருப்பதை உணர்ந்து, தான் தொண்டு செய்ய வேண்டும் என்று பகவான் விரும்புவதைப் புரிந்து கொண்டார். இதற்கு முன்பு பகவான் யாரையும் 'பங்கா'வை இழுக்கவோ, நிறுத்தவோ கேட்டதில்லை. யாரையும், எதையும்

செய்யுமாறு பகவான் ஒரு போதும் கூறியதில்லை. இந்நிகழ்வை பகவானுக்கு சேவை செய்ய வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துவதாக ராஜா அய்யர் கருதினார். பிறகு ரமணாச்ரமத்திற்கு வந்து நிரந்தரமாகத் தங்கினார்.

தற்போதைய ரமணாச்ரமத்தில் ராஜா அய்யர் தங்க ஆரம்பித்த போது, நகரத்திற்கு வந்து பஜனைப் பாடல்கள் பாடுமாறு அடிக்கடி அழைக்கப்பட்டார். வெவ்வேறு தெய்வங்கள் குறித்து பஜனை பாடல்கள் பாடுவதற்கு வெவ்வேறு வழிமுறைகள் இருக்கின்றன. உதாரணமாக, ஸ்ரீராமநவமி, ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி போன்ற சிறப்பு நாட்களில் இரவு முழுவதும் பஜனைகள் நடைபெறும். சில சமயங்களில் குத்து விளக்கை ஏற்றி அறையின் நடுவில் வைப்பர். பஜனை பாடல்கள் பாடும் போது மக்கள் அந்த விளக்கைச் சுற்றி வலம் வருவர். ஒருமுறை, ஸ்ரீ ராமநவமியை முன்னிட்டு நடைபெறவிருந்த பஜனை உற்சவத்தில் கலந்து கொள்ளுமாறு ராஜா அய்யர் அழைக்கப்பட்டார்.

இவ்விஷயத்தைப் பகவானிடம் தெரிவிக்க வந்த ராஜா அய்யர், "பகவான்! அவர்கள் எனக்கு அழைத்திருக்கிறார்கள். நான் அங்கே போக வேண்டியிருக்கும்" என்று கூறினார். சாதாரணமாக, அனுமதி அளிக்கும் வகையில் பகவான் தன் தலையை அசைப்பார்; ஆனால் அன்றைய தினம் அவ்வாறு செய்யவில்லை. அதே சமயத்தில் ஆச்ரமத்தின் ஸர்வாதிகாரியான சின்னஸ்வாமி அந்தக் கூடத்திற்கு வந்து பகவானிடம், "பக்தர் ஒருவர், அவரது கிராமத்தில் கொண்டாடப்படுவது போன்றே ஸ்ரீ ராமநவமி, ரமணாச்ரமத்திலும் கொண்டாட வேண்டும் என்று வேண்டிக்கொண்டு அதற்கான பணமும் அனுப்பியிருக்கார்" என்று கூறினார். பகவான் ராஜா அய்யரை நோக்கி, "பார்த்தாயா! இந்த முறை இங்கேயே இருந்து உனது பஜனைகளைச் செய்," என்று கூறினார். ராஜா அய்யர் பகவானின் வார்த்தைகளை ஏற்றுக் கொண்டு ஸ்ரீ ராமநவமியன்று ரமணாச்ரமத்திலேயே பஜனை பாடல்கள் பாடினார். பஜனை நிகழ்ச்சி, அன்று இரவு ஆறு அல்லது ஏழு மணி நேரம் நடைபெற்றது. ராஜா அய்யர் பஜனைகள் பாடும் போது அடிக்கடி பரவசநிலையை அடைந்தார். பகவானும், தனக்கே உரித்தான வழியில் பஜனையில் மகிழ்ச்சி அடைந்தார். பகவான் பஜனைப் பாடல்களைப் பாடிக் கொண்டும், ஆடிக்கொண்டும், அந்த நிகழ்ச்சியில் பங்கேற்கவில்லை; ஆனால் "பைத்தியம், அவர்கள் எல்லாம் 'சித்தப்பிரமை' பிடித்த நிலையில் உள்ளனர்" என்று கூறி விட்டுத் தொடர்ந்து "எல்லோரும் இதே போன்று 'சித்தப்பிரமை' பிடித்த நிலையில் இருந்தால் எவ்வளவு நன்றாகயிருக்கும்" எனப் பொருள் படும்படி சொன்னார். ராஜா அய்யர் பாடிக் கொண்டே ஆடுவதை காணும் அதிருஷ்டம் எனக்கும் கிடைத்தது - அது ஆனந்தமாக இருந்தது.

ஒரு நாள் ஆச்ரமத்தின் ஸர்வாதிகாரியான சின்னஸ்வாமி, ராஜா அய்யரிடம் "நீ ஏதாவது வகையில் சேவை செய்யாமல், இந்த ஆச்ரமத்தில் தங்குவதோ, சாப்பிடுவதோ கூடாது" என்று கூறினார். ராஜா அய்யர் பகவானிடம் சென்று, "பகவான், சின்னஸ்வாமி என்ன சொல்கிறார் என்று கேளுங்கள்!" என்றார். பகவான் அதற்கு, "ராஜா, நீ ஏன் காலை வேளைக்கு இட்லி பண்ணக் கூடாது?" என்று யோசனை கூறினார். இன்று செய்யப்படுவது போன்றே அன்றும் ஆச்ரமத்தில் காலை நேரத்தில் இட்லி பண்ணுவார்கள். ராஜா அய்யர், "பகவானே! எனக்கு இட்லி பண்ணத் தெரியாதே," என்றார். பகவான், "நான் உனக்குக் சொல்லித் தரேன்" என்றார்.

இட்லி தயார் செய்வது என்பது அவ்வளவு எளிதான செயல் அன்று. அதற்கு முன் நிறைய வேலைகள் செய்ய வேண்டும். அரிசியையும், உளுந்தையும் முந்தைய தினம் மாலை வேளையிலேயே ஊற வைத்து அரைத்து வைக்க வேண்டும். அக்காலத்தில் அரைப்பதற்கு இயந்திர வசதி இல்லாததால், கல்லுரலிலேயே கையால் அரைத்துத் தயார் செய்ய வேண்டும். அன்று மாலையிலேயே பகவான்

ராஜாவை அழைத்து அவருக்குக் கற்றுத் தந்தார். (ராஜா அய்யருக்குக் கற்றுத் தருவதற்காக அவருடன் அமர்ந்து பல தினங்கள் அரிசியையும், உளுந்தையும் பகவானே அரைத்துக் காட்ட வேண்டியிருந்தது.) அடுத்த நாள் காலை ராஜா அய்யர் பதற்றத்துடன் பகவானிடம், "பகவானே, எனக்கு ஆவியிலிட்டு எப்படி இட்லி தயாரிப்பது என்று தெரியாது." என்று நடுக்கத்துடன் கூறினார். பகவான், தானாகவே முன்வந்து, "நான் வந்து உனக்கு உதவுகின்றேன் ராஜா" என்றார். பகவான் அதை எப்படி தயாரிப்பது என்று செய்தும் காட்டினார். ஆனால், அதற்கு அடுத்த நாளோ, ராஜா அய்யர் தனியாகத் தயாரித்த இட்லிகள் அனைத்தும் உதிர்ந்து போனதால் பதற்றத்துடன் ஹாலுக்கு ஓடி வந்து, "பகவானே! நான் தயார் செய்த அனைத்து இட்லிகளும் உதிர்ந்து போய் விட்டன. எனக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. மிகவும் நடுக்கமாக உள்ளது." என்று முறையிட்டார். பகவான் அவரிடம், "இட்லி தயாரிப்பதற்கு முன், முதலில் அக்னி பகவானை வணங்கி முதலில் எடுக்கப்படும் இட்லிகளை அக்னிக்கு அர்ப்பணிப்பதாகக் கூறி பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று கூறினேனே அவ்வாறு செய்தாயா?" என்று வினவினார். ராஜா அய்யர், "பகவானே நான் மறந்து விட்டேன்" என்று அவர் தன் தவறை ஒத்துக் கொண்டவுடன், பகவான், "போய் முதலில் அதைச் செய். அக்னி பகவானிடம் முதலில் எடுக்கப்படும் இட்லிகளை அர்ப்பணிப்பதாகப் பிரார்த்தனை செய்து கொள்," என்று அறிவுறுத்தினார். பகவான் ஸமாதியான பிறகும் அந்த வழக்கத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து வந்ததாக ராஜா அய்யர் என்னிடம் கூறினார். 1970-ம் வருடங்களின் பிற்பகுதி வரையில் அவரே இட்லி தயார் செய்தார். தினமும் முதலில் தயாராகும் இட்லி, அக்னி பகவானுக்கு அர்ப்பணிக்கப்பட்டது.

உணவு உண்பதில் இருந்த ஆர்வத்தால், ஸ்கந்தாச்ரமத்திற்கும், விரூபாக்ஷ குகைக்கும் போகும் அதே ராஜா அய்யர் தான் இவர். உண்பதில், அப்போதும் மிகுந்த ஆர்வம் இருந்ததால் சமையலறைக்குச் சென்று, சமைத்ததோ, சமைக்கப்படாததோ எதை வேண்டுமானாலும் சாப்பிடுவார். ஒரு நாள், ஒரு பக்தர் பகவானிடம், "பகவானே! இதெல்லாம் என்ன? இந்த மனிதர் கட்டுக்குள் அடங்காதவராக இருக்கிறார். கிடைத்ததை எல்லாம் சாப்பிடுறார்," என்று குறை கூறினார். அதற்கு பகவான் புன்சிரிப்புடன், "நீ ராஜாவைப் பற்றித்தானே குறைகூறுகிறாய்?" என்றார். அதற்கு அந்த பக்தர், "ஆம் பகவானே! அவரது செயல் ஆச்ரமத்தின் விதி முறைகளுக்கு உட்பட்டதாக இல்லை," என்றார். அதற்கு பகவான், "அது ராஜா அய்யரின் தவறு என்பது நிச்சயமாகத் தெரியுமா?" என்று வினவினார். "ஆம் பகவானே," என்று பதிலிறுத்த பக்தரிடம் தொடர்ந்து, "நீ இன்னும் தெளிவாகக் கூறமுடியுமா'? நீயும் ஏன் அடுக்களைக்குப் போய் அதே போன்று அடிக்கடி சாப்பிடக் கூடாது? என்று கேட்டார். அதற்கு அந்த பக்தர், "இல்லை பகவானே! என்னால் அப்படிச் செய்ய முடியாது, முடியவே முடியாது," என்று பதிலுறுத்தார்.

அதற்கு பகவான் பக்தரிடம், "அவர் அது போன்று அடிக்கடி சாப்பிடுவதால் உனக்கு ஒரு தொந்தரவும் இல்லை; உண்மை என்னவென்றால் உன்னால் அதே போன்று அடிக்கடி சாப்பிட முடியவில்லையே என்ற உனது எண்ணம் தான் உனக்குத் தொல்லை தருகிறது" என்றார். இவ்வாறு, பகவான் 'அந்நியர்' என்பதே இல்லை என்று அந்த பக்தருக்கு தெளிவாக உபதேசித்தார். நாம் நமது சொந்தக் குறைபாடுகளை அடிப்படையாகக் கொண்டே மற்றவரைக் குறித்த கருத்துக்களைக் கொண்டுள்ளோம். சின்னஸ்வாமிக்குப் பயந்து, குறைகூறிய அந்த பக்தரால், தனக்குப் பிடித்ததெல்லாம் சாப்பிடமுடியவில்லை. அதனாலேயே அவர் ராஜா அய்யரைப் பற்றிக் குறை கூறினார். ஆனால் ராஜா அய்யர் சின்னஸ்வாமிக்குப் பயப்படவில்லை. பிற்காலத்தில் ராஜா அய்யரே என்னிடம், "சின்னஸ்வாமியிடமிருந்து நிறைய வசைமொழிகளை வாங்கிக் கட்டிக் கொண்ட போதும், தன்னால் சமையலறைக்குச் சென்று சாப்பிடுவதை நிறுத்த முடியவில்லை" என்று கூறினார். பகவான் பின்னர்



அந்த பக்தரிடம், "மற்றவர் என்பதே கிடையாது. நீ வெளியில் பார்ப்பதெல்லாமே உனது பிரதிபலிப்புத் தான். அவை எல்லாவற்றையும் உன் மனமே தோற்றுவிக்கிறது" என்று அறிவுரை வழங்கினார்.

1937-ல் ரமணாச்ரம தபால் அலுவலகம் ஆரம்பிக்கப்பட்டு, ராஜா அய்யர் அதன் முதல் போஸ்ட் மாஸ்டராக நியமிக்கப்பட்டார். அந்தத் தபால் அலுவலகம் மாட்டுக் கொட்டிலுக்கு அருகில் இருந்தது. தபால் அலுவலகம் முதன் முதலாகப் பயன்பாட்டுக்கு வரும் தினத்தன்று ராஜா அய்யர் பகவானை அங்கு வரும்படி கேட்டுக் கொண்டார். பகவான் அங்கு வந்ததும், ராஜா அய்யர் பகவானிடம் தபால் முத்திரையைக் கொடுத்து, அன்று வந்திருந்த எல்லாக் கடிதங்களிலும் பகவான் அவரது கையால் முத்திரையைப் பதிக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். அதேபோல் மாலை வேளையில், வெளியே அனுப்பப்படும் தபால்களுக்கும் அவர் தன் திருக்கரத்தினால் முத்திரையிட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இவ்வாறு, தபால் அலுவலகம் ரமணாச்ரமத்தில் செயல்பட ஆரம்பித்த முதல் நாள் அன்று எல்லாக் கடிதங்களும் பகவானால் முத்திரையிடப்பட்டு ஆசீர்வதிக்கப்பட்டன.

திருவண்ணாமலையில், மக்கள் வழக்கமாகச் சென்று வழிபடும் `பச்சையம்மன்` திருக்கோயில் உள்ளது. ஆரம்ப காலங்களில் பகவானும் அங்கு தங்கியுள்ளார். பகவானுக்குப் புற்றுநோய் வந்தபோது, அவரிடம் தீவிரமான பக்தி கொண்டிருந்த ராஜா அய்யரும், கிராம மக்களும் பச்சையம்மனின் குங்குமப் பிரஸாதம், பகவானைக் குணப்படுத்தும் என்று பூரணமாக நம்பினர்.

அதனால் கோயிலில், பகவானை முன்னிட்டு ஒரு சிறப்புப் பூஜையை நிகழ்த்தி, பகவானிடம் கொடுப்பதற்காக, குங்குமப் பிரஸாதத்தை எடுத்துச் சென்றார் ராஜா அய்யர். ஆனால் பகவானுக்கு சிகிச்சை அளித்துக் கொண்டிருந்த மருத்துவர்கள், பகவானின் அறைக்குள் ஒருவரையும் அனுமதிக்கக் கூடாது என்று கண்டிப்பான உத்தரவு பிறப்பித்திருந்தனர். பகவானுடன் அறையில் மருத்துவர்களும், வேறு சிலரும் இருந்தனர். ராஜா அய்யர் மிகவும் மன வருத்தமடைந்து, "இந்தப் பிரஸாதத்தை என்னால் பகவானிடம் கொடுக்க முடியவில்லையே! இந்தப் பிரஸாதத்தை மட்டும் அவர் ஸ்வீகரித்துக் கொண்டால் நிச்சயமாகக் குணம் அடைந்து விடுவார்." என்று தனக்குள் புலம்பிக் கொண்டிருந்தார். சில தினங்களுக்குப் பிறகு, திடீரென்று ஒருவர் ராஜா அய்யரிடம் வந்து, "பகவான் உங்களை அழைக்கிறார்" என்று கூறினார். எப்பொழுதும் அந்தப் பிரஸாதத்தை தன்னுடைய சட்டை பையில் வைத்திருந்த ராஜா அய்யர் மிகவும் ஆச்சர்யமடைந்தார். அவர் பகவானைப் பார்க்க உள்ளே சென்ற போது, "ராஜா! எனக்கு கொடுப்பதற்காக ஏதாவது வைத்திருக்கிறாயா?" என்று அவர் வினவினார். ராஜா அய்யருக்குப் பச்சையம்மன் கோயில் பிரஸாதம், நினைவிற்கு வரவே, "பகவானே! இது பச்சையம்மன் பிரஸாதம். அம்மனிடம் நீங்கள் பூரண குணமடைய வேண்டும் என பிரார்த்தித்துக் கொண்டேன். நீங்கள் இந்தப் பிரஸாதத்தை எடுத்துக்கனும்." என்று வேண்டிக் கொண்டார். பகவான் அதில் கொஞ்சம் எடுத்து நெற்றியில் பூசிக்கொண்டு, "இதை எல்லோருக்கும் கொடு, பச்சையம்மன் மிகவும் சக்தி வாய்ந்தவள். இந்தப் பிரஸாதம் உண்மையில் சக்தி வாய்ந்தது." என்று கூறினார். "ஒவ்வொரு பக்தரிடமும் பகவானுக்கு இருந்த அன்பை அவரவர்களால் உணர முடியும்" என்றும், "அந்த அன்பை அவர்களுக்கு எப்படித் தவறாமல் வெளிப்படுத்த வேண்டும் என்பது பகவானுக்குத் தெரியும்" என்றும் என்னிடம் ராஜா அய்யர் கூறினார்.

மேலை நாடுகளிலிருந்து ஆச்ரமத்திற்கு வந்த பக்தர்களை ராஜா அய்யர் கவனித்துக் கொண்டார். ராஜா அய்யர் இந்தக் கடமையை நேர்த்தியாகச் செய்வதைப் பகவான் பாராட்டியுள்ளார். நான் ரமணாச்ரமத்திற்கு 1960-ல் வந்ததில் இருந்து 1972-ம் ஆண்டு வரை ஆச்ரமத்திற்கு வரும் மேலை நாட்டவரிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும், எப்படி அவர்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும், என்பதை ராஜா அய்யரே தெரிவிப்பார். ஹ்யூகோ மேயரும் (Hugo Maier), நானும், ராஜா அய்யர் சாப்பாடுப் பிரியராகையால், அவருடைய கடைசி நாட்களில் உண்பதற்கு ஏதாவது கேட்டுக் கொண்டே இருப்பார் என்றும், அதனால் மிகவும் கஷ்டத்திற்கு உள்ளாவார் என்றும் எண்ணினோம். ஆனால் சற்றும் எதிர் பார்க்காத ஒன்று நடந்தது. உயிர் துறப்பதற்கு ஒரு வாரத்திற்கு முன்பு அவர் திடீரென்று உண்பதை நிறுத்திவிட்டார். உயிர் பிரிவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு "நான் ஜலம் மாத்திரம் குடிப்பேன்." என்று கூறினார். அவர் எவ்வித நோய் நொடியுமின்றி முதுமையின் தாக்கத்தால் மட்டுமே இறந்தார். என்னுடைய அனுபவத்தில் பகவானின் பக்தர்களில் ராஜா அய்யர், சாமா தாத்தா என்ற இரண்டு பேர் மட்டுமே, முதுமையினால் உடல் நலிந்து இறந்தனர்.

(சாமா தாத்தா என்பவர் விரூபாக்ஷ குகையிலும், ஸ்கந்தாச்ரமத்திலும் பகவான் இருந்த போது, அவருக்கு அவ்வப்போது உணவு கொண்டு வந்து கொடுக்கும் பேறு பெற்றிருந்தார். பின்னர், தான் பார்த்துக் கொண்டிருந்த வேலையை விட்டுவிட்டு வந்து, பகவானின் தாயாருக்கு, சமையல் பணிகளில் உதவி செய்து வந்தார். தற்போதைய ரமணாச்ரமத்தில், தன்னுடைய உடல் வலிமை குறையும் வரை, காலைச் சிற்றுண்டியை அவரே தயார் செய்து வந்தார். வயதான நிலையில் தொடர்ந்து வேலை செய்ய முடியாத போது, அவர் ஆச்ரமத்தை விட்டுச் செல்லுமாறு பணிக்கப்பட்டார் அதனால் துக்கத்தில் மூழ்கிய சாமா தாத்தா, பகவான் இருந்த ஹாலுக்குச் சென்று அமர்ந்து கொண்டார் பகவானுடன் இருந்த அவரது தொண்டர் ஒருவர், சாமா தாத்தாவின்

பரிதாபமான நிலை மீது பகவானுடைய கவனத்தைத் திருப்பினார். பகவான் அப்போது அங்கு அமர்ந்திருந்த அரசாங்க அதிகாரியைப் பார்த்து "அரசாங்க அலுவலகத்தில் 25 வருடங்கள் பணி செய்தவருக்கு ஓய்வூதியம் தருவார்களில்லையா?" என்று வினவினார். இதைக் கவனித்த அந்தத் தொண்டர், குறிப்பை உணர்ந்து கொண்டு ரமணாச்ரம அலுவலகத்திற்கு ஓடிச்சென்று சின்னஸ்வாமியிடம் அவ்விஷயத்தைக் கூறினார். சின்னஸ்வாமி உடனே பகவான் இருந்த ஹாலுக்கு வந்து, சாமா தாத்தாவிடம் ரமணாச்ரமத்தை விட்டுச் செல்ல வேண்டாம் என்று வேண்டிக்கொண்டார். மேலும், எந்த ஒரு வேலையும் செய்ய வேண்டாமென்றும் கூறினார். இவ்வாறு கூறியது மட்டுமின்றி, பகவான் முன்னிலையிலேயே அமைதியுடனும், மகிழ்ச்சியுடனும் எப்போதும் தங்கி இருக்கும்படியும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்.

1960-ல் சாமா தாத்தா இறக்கும் தறுவாயில் இருந்த போது அவரைக் கவனித்துக் கொள்ளும் மிகப் பெரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவருக்கு எந்த வித நோய் க்ஷணமும் இல்லாத போதும், வயது முதிர்ந்த காரணத்தினால் அவரது சரீரம் கரைந்து போய்க் கொண்டிருந்தது. அவருடைய அந்திம கிரியைகளை நான் செய்ய வேண்டும் என அவர் விரும்பியதால் அவரது இறுதி நாளன்று என்னை அழைத்து, ஒரு ஸாது ஆச்ரமத்தில் உயிர் நீத்தால் அவரை எவ்வாறு தஹனம் செய்ய வேண்டும் என்ற முறையைக் கற்றுக் கொடுத்தார். பகவானிடமிருந்து ஓய்வூதியம் பெற்று, அதன் மூலம் அவரது ஸந்நிதியிலேயே தங்கும் பேறும், உடலை உகுக்கும் வாய்ப்பும் பெற்ற இந்தப் புண்ணிய புருஷனுக்கு அந்திமக் கிரியைகளைச் செய்ததன் மூலமே ஸாதுக்களுக்கு அந்திம கிரியைகளைச் செய்யும் எனது பணி துவக்கப்பட்டது.)



(முன் வரிசை) ராஜா ஐயர், கணேசன், திருமதி ஆஸ்போர்ன், ஈதெல் மெர்ஸ்டன்
(பின் வரிசை) மேஜர் சாட்விக், டெரன்ஸ் க்ரேய் மற்றும் ஆர்தர் ஆஸ்போர்ன்

ராஜா அய்யர் இறக்கப் போகும் நாளன்று, நான் சென்று, அவரது பாதங்களைத் தொட்டு வணங்கி, "ராஜா அய்யர்! தயைகூர்ந்து என்னை ஆசீர்வதியுங்கள்" என்று வேண்டினேன். அதற்கு அவர், "இல்லை அது பகவான் செய்ய வேண்டியது; பகவான் இங்கே இருக்கிறார்; அவரது ஆசிகளைப் பெற்றுக் கொள்" என்றார். அப்படி அவர் கூறினாலும், "பகவானது ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொள்கிறேன். ஆனால் நீங்களும் என்னை ஆசீர்வதிக்க வேண்டும்" என்று வற்புறுத்திக் கூறினேன். தொடர்ந்து அவரிடம், "ராஜா அய்யர் உங்களுக்கு என்னைப் பற்றித் தெரியும். நான் இயன்றவரை எதையும் சிறப்பாகச் செய்வேன். உங்களுக்கு ஏதாவது விருப்பங்கள் இருந்தால் தயவு செய்து என்னிடம் கூறுங்கள். அதை நான் நிறைவேற்றி வைக்கிறேன். நான் அவ்வாறே செய்வேன்" எனக் கூறினேன். அதற்கு அவர் "கணேசா! எனக்கு எந்த ஒரு விருப்பமும் இல்லை. எண்ணம் என்பதே இல்லை. எந்த எண்ணமும் எனக்கு எழுவதில்லை. பார்! பகவான் இங்கு இருக்கிறார்! பகவான் இங்கு இருக்கிறார்!" என்று பலமுறை திரும்பத் திரும்பக் கூறினார். இறுதியாக, "நான் பூரணமான பேரின்ப நிலையில் இருக்கேன். ஆம், பரிபூர்ண ஆனந்த நிலை. பார்! பகவான் இங்கு இருக்கிறார்," என்று சொன்னார். "பகவான் என்னை அழைக்கிறார்" என்பதே அவர் கூறிய இறுதி வார்த்தைகள் ஆகும். நான் எப்போதும் என் நண்பர்களிடம் "பகவான் ராஜா அய்யரை சாதாரணத் தபாலில் இல்லாமல் விரைவுத் தபாலில் அழைத்துச் சென்றார்" என்று கூறுவேன்!





ஸ்ரீ பகவான் – ஸ்கந்தாச்ரமத்திற்கு முன்னால்

# 23 ராமஸ்வாமி பிள்ளை



ஸ்ரீ ரமண மஹர்ஷியின் பழைய பக்தர்களில் சிலர் முக்கியமானவர்கள் என்றோ, குறிப்பிடத் தக்கவர்கள் என்றோ, பிரபலமானவர்கள் என்றோ கூற முடியாதவர்களாக இருந்தனர். அதற்குக் காரணம் என்னவென்றால், அவர்கள் தங்களை வெளிப்படுத்திக் கொள்ளாமல் மறைவாக இருக்க விரும்பியதே ஆகும். ஆனால் பகவானுக்கும் அவர்களுக்கும் இருந்த உறவையும், அவருடைய உபதேசங்களைப் புரிந்து கொண்டதையும், அவற்றைக் கடைப்பிடித்ததையும் நோக்கும் போது அவர்களும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்களே. அவர்களில் சிலர் மக்களால் விரும்பப்படவில்லை என்பதுடன், துரதிருஷ்டவசமாக வெறுக்கப்பட்டனர் என்றாலும், பிரபலமாக அறியப்பட்ட பக்தர்களுடையதைப் போன்றே, பகவானுக்கும் அவர்களுக்கும் இடையே இருந்த உறவு அற்புதமானதாகவே இருந்தது.

ராமஸ்வாமி பிள்ளை அசைவ உணவு பழக்கமுள்ள குடும்பத்தில் பிறந்தவர். அவ்வாறிருந்தும், குழந்தைப் பருவத்திலிருந்தே அவரால் மாமிசம் சாப்பிட முடியாத காரணத்தால் சைவராகவே இருந்தார். அவரைப் பார்த்து, குடும்பத்தினரும் கூட சைவ உணவு உண்ணத் துவங்கினர். பைபிளை நன்கு கற்றிருந்த அவர், புத்தரின் உபதேசங்களையும் படித்திருந்தார். "நான் பல முறை மசூதிக்குச் சென்று இஸ்லாமியரைப் போன்றே பிரார்த்தனை செய்துள்ளேன். அவர்கள் 'அல்லா' என்று கூறும் போது என்னால் கடவுளை உணர முடிந்தது" என்று என்னிடம் ஒருமுறை கூறினார். அது வித்தியாசமானதென்றோ, வேற்று மதமென்றோ ஒரு போதும் அவர் எண்ணியதில்லை. அவரது பின்னணி அத்தகையது.

ராமஸ்வாமி பிள்ளை திருவண்ணாமலையிலிருந்து தொன்னூறு மைல் தொலைவிலிருந்த சிதம்பரத்தில் கல்வி கற்றவர். ஒரு நாள் அவரது ஆசிரியர், வகுப்பில் ரமண பகவானின் படத்தைக் காட்டி "இது அருணாசலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு சிறந்த ஞானியின் படம்" எனக் கூறினார். வகுப்பிலிருந்த நாற்பது மாணவர்களில் ராமஸ்வாமி பிள்ளை ஒருவரை மட்டுமே காந்தம் போன்று அப்படம் கவர்ந்தது. அவர் வகுப்பு முடிந்தவுடன் ஆசிரியரை அணுகி, "எனக்கு அந்த ஞானியின் படம் ஒன்றைத் தர முடியுமா?" என வினவினார். ஆசிரியரும் மிகுந்த மகிழ்ச்சியோடு ஒரு படத்தைக் கொடுத்தார். இந்நிகழ்ச்சியை நினைவுகூர்ந்த போது, "பகவானிடம் நான் செல்வதற்கு முன் அவரே என் அறைக்கு வந்து விட்டார்" என்று அவர் குறிப்பிட்டார்.

இதைப் போன்ற அனுபவத்தைப் பெற்ற பலர் என்னிடம் "நான் என் குருவிடம் செல்லும்முன் என் குரு என்னிடம் வந்து விட்டார்" என்று கூறியுள்ளனர். பகவானின் படம் கிடைத்த பின்னர் அவரைக் காண வேண்டுமென்ற பேராவல் ராமஸ்வாமி பிள்ளைக்கு உண்டாயிற்று. விரைவிலேயே திருவண்ணாமலைக்குச் சென்ற அவர், விரூபாக்ஷ குகையில் ஒரு பாறையின் மீது பகவான் அமர்ந்திருப்பதைக் கண்டார். முதன் முதலாக பகவானைத் தரிசித்த போதே "இதோ இங்கு உலகத்தை ஒரு குடையின் கீழ் ஆளும் சக்ரவர்த்தி அமர்ந்துள்ளார்" என்ற எண்ணம் அவருக்கு உதித்தது. "முதல் முறை மட்டுமல்லாமல், பகவானை ஒவ்வொரு முறை பார்க்கும் போதும், ஒரு

நாளைக்கு எத்தனை முறை பார்த்தாலும், அவர் மறையும் வரை அவர் அகில உலகிற்கும் சக்ரவர்த்தி என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது'' எனப் பிள்ளை என்னிடம் கூறினார்.

பகவான் 108 செய்யுட்களைக் கொண்ட அக்ஷரமணமாலையை ஏற்கனவே இயற்றியிருந்தார். அதை மனப்பாடம் செய்வதற்கு, இளம் ராமஸ்வாமி பிள்ளைக்கு ஒரு மணி நேரத்துக்குச் சற்றுக் கூடுதலாக மட்டுமே ஆயிற்று. அப்போதிருந்தே, பள்ளி மாணவப் பருவத்திலிருந்தே அப்பாடல்களை விடாமல் தொடர்ந்து ஓதிவந்தார். கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது இரண்டாவது முறையாகப் பகவானை தரிசிக்க வந்தார். பகவான் இதற்குள் ஸ்கந்தாச்ரமத்திற்கு இடம் பெயர்ந்திருந்தார். தனது நண்பனுடன் ராமஸ்வாமி பிள்ளை பகவானைக் காண வந்த அன்று பகவான், அண்ணாமலையின் அடிப்பகுதியில் காட்டுப் பாதைகளினூடே சென்று உட்பிரதக்ஷணம் செய்தார். பிள்ளையும் அவரது நண்பரும் அடர்ந்த காட்டினுள் அவரைப் பின் தொடர்ந்து சென்றபோது, மஹாராஜாவான பகவான் முன் செல்ல அவரது படைகள் பின் தொடர்வது போன்ற உணர்வு ராமஸ்வாமி பிள்ளைக்கு ஏற்பட்டது.

கிரிவலம் அவருக்கு அளித்த அனுபவம் காரணமாக மறுதினமே அவர் மீண்டும் கிரிவலம் செல்ல விரும்பினார். என்றாலும், இம்முறை தனியாகச் சென்றார். ஆனால் காட்டுப் பாதையில் வழி தவறிப் போன போது என்ன செய்வதென்று அவருக்குப் புரியவில்லை. திரும்பிப் பார்த்த போது ஆச்ரமத்து நாய் கமலா தன் பின்னால் நிற்பதைக் கண்டார். வழி தவறி அவர் திகைத்து நிற்பதை உணர்ந்து கொண்ட கமலா, முன்னால் வழி காட்டியவாறு அவரைக் காட்டினுள் அழைத்துச் சென்றாள். அவர் ஓய்வெடுத்த போது தானும் ஓய்வெடுப்பாள். ராமஸ்வாமி பிள்ளை எழுந்து நின்றால் கமலாவும் எழுந்து நடக்க ஆரம்பிப்பாள். அந்த நாய் ஒரு நிமிடம் கூட அவரை விட்டு விலகவில்லை. இவ்வாறு வழி காட்டி அழைத்து வந்த கமலா ஊருக்குள் வந்ததும் எங்கோ மறைந்து விட்டாள். பிள்ளை ஸ்கந்தாச்ரமம் வந்து சேர்ந்த போது ஏற்கனவே கமலா அங்கு வந்து சேர்ந்திருந்தாள். நாய் தனக்கு வழி காட்டி அழைத்துச் சென்று கொண்டிருந்த போது, அது வெறும் நாய் என்று அவருக்குத் தோன்றவில்லை. பகவானே அந்த உருவில் வந்து தனக்கு உதவியதாக உணர்ந்தார். ராமஸ்வாமி பிள்ளை ஸ்கந்தாச்ரமத்தை அடைந்து பகவானைப் பார்த்தபோது அவர் மிகவும் அழகானப் புன்னகை புரிந்தார். "வாழ்க்கையில் வழி தெரியாத பாதைகளினூடே பகவான் என்னை வழி நடத்துவார் என்ற உறுதியான நம்பிக்கை அந்த நொடியில் எனக்கு உண்டாயிற்று'' என அவர் கூறினார். பகவானுடைய ஸாந்நித்தியத்தில் அவருக்கு முதன் முதலாக ஏற்பட்ட உண்மை அனுபவம் இது.

ராமஸ்வாமி பிள்ளை பகவானிடம் அடிக்கடி வரத் துவங்கினார். ஒரு முறை வந்த போது, பகவான் அற்புதம் நிகழ்த்துவதைக் காண வேண்டுமென்ற தீவிர அவா அவருக்கு ஏற்பட்டது. ஒரு நாள் மாலை ராமஸ்வாமி பிள்ளை, ஊருக்குள் சென்ற போது யாரோ ஒருவர் ஒரு தேங்காயையும் சிறிது அரிசிக் குருணையையும் கொடுத்தார். அவற்றை அவர் பகவானிடம் கொண்டுக் கொடுத்தார். "இவற்றை வைத்து நல்ல பாயஸம் செய்யலாம். உள்ளே சர்க்கரையோ, கற்கண்டோ இருக்கிறதா என்று பாரும்.'' என பகவான் கூறினார். எதையும் கேட்கும் வழக்கம் இல்லாத பகவான் கற்கண்டு கேட்டபோது மெய்சிலிர்த்துப் போனார் ராமஸ்வாமி பிள்ளை. ஸ்கந்தாச்ரமத்தில் பொருட்கள் வைப்பதற்காக ஒரு சில மண்பாண்டங்களே இருந்தன. அவை அனைத்துமே காலியாக இருப்பதைக் கண்ட ராமஸ்வாமி பிள்ளைக்கு பகவான் கேட்டபடி கற்கண்டைக் கொடுக்க முடியவில்லையே என்று ஏமாற்றமாக இருந்தது.

உடனே ஊருக்குள் சென்று கற்கண்டை வாங்கி வரவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. வெளியில் மழை கொட்டிக் கொண்டிருந்ததோடு, இருட்டாகவும் இருந்தது. பாறைகளும் நிச்சயமாக வழுக்கும் என்று அவர் அறிவார். உள்ளே கற்கண்டு இல்லை என்று பகவானிடம் தெரிவிக்க விரும்பாமல் மெதுவாக கதவருகே வந்து நின்று கொண்டு, மழை நின்ற பின் ஊருக்குள் சென்று கற்கண்டு வாங்கி வருவதற்காகக் காத்திருந்தார். திடீரென்று கதவை யாரோ தட்டுவதாகத் தோன்றியது. முற்றிலுமாக நனைந்துபோன ஒரு இளைஞன் உள்ளே வந்து கொஞ்சம் கற்கண்டையும், ஒரு சீப்பு வாழைப் பழத்தையும் ஒரு துணிப் பையிலிருந்து வெளியே எடுத்தான். அந்த நிகழ்ச்சியை நினைவு கூறும் பொழுது ராமஸ்வாமி பிள்ளை "ஏதோ அசாதாரணமான ஒன்று நடக்கிறது என்பதை நான் ஏற்கனவே புரிந்து கொண்டேன். நான் எழுச்சியுற்று தைரியமாக பகவான் அருகில் சென்றேன். பகவான் என்னைப் பார்த்து 'இதோ பார் கற்கண்டு வந்து விட்டது. நாம் பாயஸம் செய்யலாம். அதோடு சேர்த்து உண்பதற்கு வாழைப் பழங்களும் இருக்கு. வாரும், இன்று நல்ல விருந்து தான்' என்று கூறினார். பகவான் எப்போதும் உணர்விலேயே நிலைத்து நிற்கும் தூய ஞானி. அற்புதங்களைக் காண நான் ஏங்க வேண்டிய அவசியமே இல்லை. பகவானது ஸாந்நித்தியத்தில் அவை தாமாக நிகழ்ந்தன. அந்த ஸாந்நித்தியத்திற்கு காந்தத்தைப் போன்ற சக்தி இருந்தது. இரும்புத் துகள்களைத் தானாகவே கவர்ந்து கொள்ளும் காந்தம் போன்று அற்புதங்கள், பகவான் அவற்றைக் கவனிக்காதபோதும், அவரது ஸாந்நித்தியத்தில் எப்பொழுதுமே நிகழ்ந்து கொண்டிருந்தன" என்று கூறினார். மேலும் தொடர்ந்து "நான் ஒரு அற்புத நிகழ்ச்சியைக் காண விரும்பினேன். இப்பொழுது அது நிகழ்ந்துள்ளது. அது எவ்வாறு நடந்தது?" என்று பகவானை கேட்டேன். "இது இருப்பின் சக்தி விசேஷத்தால் - ஸந்நிதி விசேஷத்தால் நடந்துள்ளது. இந்த ஸந்நிதி விசேஷத்தில் எண்ணமோ ஆசையோ குறுக்கிடுவதில்லை" என்று கூறிய பகவான் தொடர்ந்து "ஓராண்டு காலத்தில் இன்று தான் ஒரே நாளில் இரண்டாவது முறை சாப்பிடுகிறேன்" என்று கூறியதை ராமஸ்வாமி பிள்ளை என்னிடம் தெரிவித்தபோது அவரது கண்கள் பனித்தன. "அந்த நாளை என்னால் மறக்கவே முடியாது. என் மனதில் அதை நிரந்தரமாகப் பகவான் பதித்து விட்டார்" என்று அவர் முடித்தார்.

பகவானுடைய தாயார் உயிர் நீத்தபோது அவரது உடலை மலையிலிருந்து கீழே கொண்டு வருவதற்கும் ஸமாதியில் இருத்துவதற்கும் ராமஸ்வாமி பிள்ளை உதவியாக இருந்தார். அவர் கடும் உழைப்பாளி. ஸ்கந்தாச்ரம நாட்கள் முதல், பகவானுடன் தங்குவதற்காக வாழ்க்கையில் அனைத்தையும் துறந்து விட்டார். தற்போது நாம் ரமணாச்ரமத்தில் காணும் பெரிய தென்னை மரங்கள் அனைத்தும் அவர் கடுமையாக உழைத்து நட்டவை. பகவானிடம் 'நான் யார்' என்னும் உபதேசத்தை ஏற்கனவே பெற்றிருந்தபோதும், தோட்டவேலை செய்யும் பொழுதும், ஆச்ரமத்தைச் சுற்றிச் சுத்தம் செய்யும் பொழுதும் பிள்ளை, 'அருணாசல சிவ' என்ற மந்திரத்தை ஓதியபடி இருந்தார்.

தற்போது ஆச்ரமத்தின் வெளிப்புறத்தில் காணப்படும் தூய்மையை ராமஸ்வாமி பிள்ளைதான் ஏற்படுத்தினார். தோட்ட வேலையிலோ, சுத்தம் செய்வதிலோ அல்லது குழிகள் தோண்டுவதிலோ அவர் ஒரு நாளைக்குப் பதினெட்டு மணி நேரம் கழித்தார். ஆச்ரமத்தில் அப்போது ஒரே ஒரு சைக்கிள் மட்டுமே இருந்தது. அலுவலகத்தில் பணி புரிந்தவர்களுக்கு நகருக்குள்ளிருந்து ஏதாவது தேவைப்பட்டால் வாங்கி வருவதற்கு ராமஸ்வாமி பிள்ளை ஒருவர் மட்டுமே முன் வருவார். அதனால் ராமஸ்வாமி பிள்ளை என்ற பெயரை விட 'சைக்கிள் ஸ்வாமி' என்ற பெயரே அவருக்கு நிலைத்து விட்டது.

ஒரு நாள் "நீங்கள் எப்பொழுதும் தோட்டத்தில் வேலை செய்து கொண்டு பகவானுடைய ஸந்நிதியில் இருந்து விலகியே இருக்கிறீர்கள். இதை உங்களால் எவ்வாறு ஏற்க முடிந்தது?" என்று அவரிடம் நான் கேட்டேன். அவர் "ஏன் கணேசா? சற்றுத் தொலைவிலிருந்து பகவானுடைய பெயரை ஓதியபடியே அவருடைய உருவத்தை என்னால் பார்க்க முடிந்தது. என் இதயத்தில் எப்பொழுதும் அவர் நிறைந்து இருக்கிறார். அவர் பூரணமானவர். அவர் பூரணமாக இருந்ததால் நாம் அவரைப் பார்க்கும் பொழுதோ, அவரது பெயரை ஓதும்போதோ அந்தப் பூரணத்துவம் நமக்கும் வந்துவிடுகிறது. அவர் எப்பொழுதுமே ஆனந்தமாக இருந்ததால் நாங்களும் அந்த நிலையிலேயே இருந்தோம்" என்று கூறிய பின்னர், தான் கூறியதற்கு ஆதாரமாக நமது பாரம்பரியமாக கூறப்பட்ட ஒரு விஷயத்தைத் தெரிவித்தார். "கணேசன்! நமது சாஸ்திரங்களில் இதற்குப் பெயர் குரு துரீயம் என்பதாகும். துரீயம் என்றால் விழிப்பு, கனவு, தூக்கம் ஆகிய மூன்று நிலைகளுக்கும் அப்பாற்பட்ட நான்காவது நிலையாகிய ஸமாதி நிலை. நீ எப்பொழுது குருவைப் பார்த்தவாறோ அல்லது அவரது பெயரை ஓதியவாறோ கடினமாக உழைக்கிறாயோ, அப்போது அவர் உன்னை இந்த நிலைக்கு உயர்த்துகிறார்; இது உனது தகுதியால் ஏற்படுவதில்லை. உன் மீது அவர் அருளைப் பொழிவதால் மட்டுமே இது நிகழ்கிறது. அதனால்தான் இது 'குரு துரீயம்' எனப்படுகிறது. நாம் ஸமாதியில் நிலைத்தோமானால் அதற்குக் காரணம் குருவின் அருளே," என்றார்.

ராமஸ்வாமி பிள்ளையைப் பிறர் அதிகமாகப் பார்த்ததில்லை. ஆனால் அவரும் பகவானும் அநேகமாக மனதால் இணைந்தே வேலைகளைச் செய்வார்கள். பகவான், பிள்ளை மீது அவரது அருளைப் பொழிந்த வண்ணம் இருந்தார். ராமஸ்வாமி பிள்ளை பகவானது பெயரை ஓதியவாறேதான் வேலைகளைச் செய்வார். ஆனாலும் தனது முன்னேற்றம் குறித்து ஒரு நாள் அவருக்குச் சந்தேகம் எழுந்தது. ஆச்ரமத்தில் பாடப்படும் பாடல்களிலும், பூஜை, விழாக்கள் முதலியவற்றிலும், மற்ற பணிகளிலும் தான் ஊக்கத்துடன் கலந்து கொள்ளாதது தவறோ என்ற எண்ணம் எழுந்தது. பகவானிடம் "நான் செய்வது சரியா?" என அவர் வினவிய போது "ஆத்ம விசாரம் செய்யும். அதனுள் இவையனைத்துமே அடக்கம்" என்றார் பகவான். அதன் பின் தோட்ட வேலை செய்யும் போதும், நகரினுள் சைக்கிளில் செல்லும் போதும் கூட ஆத்ம விசாரத்தில் உணர்வு பூர்வமாக ஈடுபடுவார். 1960-ல் நான் ஆச்ரமத்தில் அவரைப் பார்த்த போதெல்லாம் "பூஜைகளிலோ, மற்ற பணிகளிலோ நீ மாட்டிக் கொண்டுவிடாதே. அவை எந்தப் பயனையும் அளிக்காது. ஆத்ம விசாரம் மட்டுமே செய்" என்று என்னிடம் அவர் கூறுவார்.

ஒருமுறை ராமஸ்வாமி பிள்ளை தன் சாவிக் கொத்தைத் தொலைத்துவிட்டு பகவானிடம் சென்று "என் சாவிகள் காணாமல் போய்விட்டன" எனக் கூறினார். பகவான் சிரித்தவாறே "சாவிகள் ஒன்றும் தொலைந்து போகவில்லை. அவை வைத்த இடத்திலேயே உள்ளன. எங்கு வைத்தோம் என்பதை நீர்தான் மறந்து விட்டீர்" என்று பதிலளித்ததோடு ஒரு அறிவுரையையும் வழங்கினார். "இதுவும் ஆத்மாவைப் போன்ற ஒரு விஷயம் தான். ஆத்மா எங்கு இருக்கிறதோ அங்கேயே தான் எப்பொழுதும் உள்ளது. நாம் அதை மறந்துவிட்டு வேறு பல வழிகளிலும் தேடுவதற்கு முயற்சி செய்து 'என்னால் ஆத்மாவைக் கண்டு பிடிக்க முடியவில்லை; அது என்னவென்றோ எங்கிருக்கிறதென்றோ தெரியவில்லை' என கூறிக் கொண்டு நம்மிடமே உள்ள அதைத் தேடிக் கொண்டிருக்கிறோம். ஆத்மா காணாமல் போகவில்லை. அதை நாம் மறந்து விட்டோம்" என பகவான் கூறினார். இதுபோன்ற சிறு நிகழ்ச்சிகளின் மூலம் ராமஸ்வாமி பிள்ளை எனக்கு பகவானின் உபதேசங்களை எடுத்துரைப்பார்.



நன்கு சமப்படுத்தப்பட்டுப் பாறைகள் பதித்த ஒரு பாதை ரமணாச்ரமத்தையும் ஸ்கந்தாச்ரமத்தையும் இணைப்பதை ஸ்கந்தாச்ரமத்திற்குச் சென்றவர்கள் நிச்சயமாகப் பார்த்திருப்பார்கள். தனி ஒருவராகவே ராமஸ்வாமி பிள்ளை அந்தப் பாதையை அமைத்தார். பகவானின் வரலாற்றை கூறும் ஆங்கில புத்தகம் ஒன்று இந்தப் பாதையைப் பற்றி "ரமணாச்ரமத்திலிருந்து ஸ்கந்தாச்ரமம் வரை வழவழப்பான பாறைகள் பதித்த பாதை ஒன்றை ஒரு பக்தர் தனியாகவே (Singlehanded) அமைத்திருந்தார்" என்று குறிப்பிட்டுள்ளது. பின்னர் அது ஃப்ரெஞ்சு பாஷையில் தவறாக மொழிபெயர்க்கப்பட்டு "அது, ஒரு கை மட்டுமே இருந்த ஒரு மனிதனால் அமைக்கப்பட்டது" என்று வெளியாகியிருந்தது. ராமஸ்வாமி பிள்ளை, "எனக்கு இரண்டு கைகள் உள்ளன. ஆனால் ஃப்ரெஞ்சு புத்தகமோ எனக்கு ஒரு கையே உள்ளதாகக் கூறி, இருந்தும் நான் பாதையை அமைத்ததாகச் சொல்கிறது" என்று கூறுவார்.

பகவான் நடக்கும் பாதைகளிலெல்லாம் ஒருவருக்கும் தெரியாமல் 'வெல்வெட்' போன்ற மணலைப் பரப்பி வைப்பார். தினமும், கடுமையான வெயிலிலும் கூட நின்று கொண்டு, பகவான் வழக்கமாக நடக்கும் பாதைகளை சமப்படுத்தி வருவார். மிகவும் அடக்கத்தோடு கூடிய அவரைப் பலருக்கும் தெரியாது என்பதுடன் அவரைப் பொருட்படுத்தவுமில்லை. ஒரு நாள் பகவான் ரமணாச்ரமத்திலிருந்து மலை மீது ஏறிய பொழுது ஒரு பாறையில் தனது காலை உராய்ந்து கொண்டார். அவர் அதைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் அதைப் பார்த்த அவரது தொண்டர்களில் ஒருவர், ராமஸ்வாமி பிள்ளையிடம் விஷயத்தைக் கூறினார். மறுநாள் முதல் முன்னைவிட அதிக கவனத்தோடு பகவானுக்கு மென்மையான ஒரு பாதையை அமைக்க முற்பட்டார்.

ராமஸ்வாமி பிள்ளை பகவான் அமரும் "ஹாலு"க்குள் எப்போதாவதுதான் செல்வார். சாதாரணமாக அதிகாலையிலேயே பகவானை வணங்கிவிட்டு, நாள் முழுவதும் தொடரும் அவருடைய கடுமையான வேலையைச் செய்யக் கிளம்பிவிடுவார். தனித்தன்மை வாய்ந்த நகைச்சுவை அவருக்கு இருந்தது. ஒரு நாள் அவர் "ஹாலு"க்குள் வந்தபொழுது, இந்து பாரம்பரியத்தைக் கடைப்பிடிக்கும் இரு தரப்பினர் உணர்ச்சிவசப்பட்டுத் தீவிரமான விவாதத்தில் ஈடுபட்டிருந்தனர் அதில் ஒரு குழு. சிவபெருமானே நமது சாஸ்திரங்கள்படி மிகவும் உயர்ந்தவர் என்று உறுதியாகக் கூறினார் ஆனால் அடுத்த குழு. சிவபெருமானின் மனைவியான சக்தியே

அனைவருக்கும் மேலானவர் என்று கூறினர். (சக்தி என்றால் வலிமை. சாஸ்திரங்களின் ஒரு பகுதி சிவனிடமிருக்கும் வலிமை சக்தியிடமிருந்தே அவருக்குக் கிடைப்பதாகக் கூறுகிறது.) இரண்டு தரப்பினரும் பகவான் முன்னிலையில் தொடர்ந்து விவாதித்துக் கொண்டிருந்த போதும் பகவான் அதை ஸாக்ஷியாக மட்டுமே பார்த்துக் கொண்டிருந்தார். நகைச்சுவையோடு வெளிப்படையாக பேசும் ராமஸ்வாமி பிள்ளை உள்ளே வந்த பொழுது பகவானுக்குச் சற்று உற்சாகம் ஏற்பட்டது.

விவாதத்தைப் பற்றி அறிந்து கொண்ட ராமஸ்வாமி பிள்ளை, "ஓ! அது மிகவும் சுலபமானது தானே! பெண்மையை ஆதரிக்கும் குழுவின் வாதமே சக்தி வாய்ந்தது என்று கூறிப் பின் ஆங்கிலத்தில் "HE" என்பது "SHE" யில் அடங்கியுள்ளது. அதனால் "SHE" தான் மிகவும் சக்தி வாய்ந்தவள், இதில் என்ன பிரச்சனை இருக்கிறது?" என்று கூறிய பொழுது சக்திக்காக வாதிட்ட குழுவினர் "நாங்கள் வென்றுவிட்டோம்" என்று சந்தோஷ ஆரவாரம் செய்தனர். ஆனால் ராமஸ்வாமி பிள்ளை தொடர்ந்து, "பொறுங்கள், பொறுங்கள், அவசரப்படாதீர்கள் "HE" என்பது தனித்துநிற்க முடியும். ஆனால் "SHE" தனியாக இருக்க முடியாது. "HE" இருந்தால் மட்டுமே அவளால் இருக்க முடியும்" என்று கூறிய பொழுது சிவபெருமானுக்காக வாதிட்டவர்கள் கைதட்டி "நாங்கள் வென்று விட்டோம்" என்று ஆரவாரம் செய்தனர். ராமஸ்வாமி பிள்ளையின் நகைச்சுவையை மிகவும் ரசித்த பகவான் குலுங்கக்குலுங்க வாய்விட்டுச் சிரித்தார். பிள்ளை எப்பொழுதெல்லாம் ஹாலுக்குள் நுழைகிறாரோ அப்பொழுதெல்லாம் பகவான் மிகவும் உற்சாகமாக இருப்பார். ஏன் என்றால், கள்ளம் கபடம் அற்ற தன்மை பகவானுக்கு மிகவும் பிடித்தமானது. அது ராமஸ்வாமி பிள்ளையின் போற்றத்தக்க சிறந்த குணமாகும்.

மிகுந்த நகைச்சுவையுடன் கூடியவரானாலும் என்னிடம் "நீ ஆத்ம விசாரம் செய்ய வேண்டும். பகவானது ஸாந்நித்யத்தில் மனம் என்பது நிழலைப் போன்றது - ஆத்மாவின் நிழல் - என்பதை நாம் உணரமுடியும். அஹங்காரம் அல்லது மனம், ஆத்மாவின் நிழல் மட்டுமே - தேவையற்ற ஒரு பரிணாமம் - அஞ்ஞான நிலை," என்று பலவிதத்தில் வற்புறுத்திக் கூறிவிட்டுப் பின் நகைச்சுவையோடு "அது நாசம் செய்யப்படுவதால் ஒன்றும் குறைந்து விடாது (எந்தக் குறையும் வராது.) பொய்யானதை அழித்தே ஆக வேண்டும். தொடர்ந்து ஆத்ம விசாரம் செய்தால் அது நிச்சயமாக அழிந்தும் போகும். அப்படிப்பட்ட ஆத்ம விசாரம் குருவின் அருளே ஆகும். மற்றெல்லா முயற்சிகளும் தீர்மானமாகக் கால விரயம்தான்" என்று ராமஸ்வாமி பிள்ளை கூறுவார்.

நாம் ஆரம்பத்தில் கூறியவாறு, பகவானைப் பார்த்த முதல் நாளிலிருந்தே, அவர், பகவான் எழுதிய நூல்களையும், பாடல்களையும் மனப்பாடம் செய்து வந்தார். நாட்கள் செல்லச் செல்ல பகவான் மேலும் பல பாடல்களை இயற்றினார். அவை பெரும்பாலும் நான்கு வரி வெண்பாக்கள். மாலை வேளைகளில், ஆச்ரமத்தில், இரு குழுக்களாக அவற்றைப் பாராயணம் செய்வார்கள். முதற் குழு முதல் இரு வரிகளையும் இரண்டாவது குழு அடுத்த இரண்டு வரிகளையும், பாடுவார்கள். குறிப்பிட்ட விதத்தில் இசையமைக்கப்பட்ட அவற்றை எல்லோரும் ஒரே மாதிரியாகப் பாட வேண்டும் என எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் ராமஸ்வாமி பிள்ளை சட்டென்று உணர்ச்சி வசப்பட்டுத் திசை மாறித் தன் இஷ்டம் போல் வேறு விதமாக உரக்கப் பாட ஆரம்பித்து விடுவார். பாராயணம் செய்யும் பக்தர்களுக்கு இது பெரிய இடைஞ்சலாக இருந்ததால் அவர்கள் பகவானிடம் இது பற்றி முறையிட்டனர். "பகவானே! ராமஸ்வாமி பிள்ளை கூட்டத்தோடு ஒத்துப் போகாமல் தன்னிஷ்டம் போல் பாடுகிறார். இந்தப் பிரச்சனையைத் தாங்கள் தீர்த்து வைக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்ட போது அவர் "இது ஒரு பிரச்சனையா? அவருக்கு அவ்வளவு உரத்த குரல் உள்ளது. அவர்

தனியாக இரு வரிகளைப் பாடட்டும்; பின் நீங்கள் எல்லோருமாகச் சேர்ந்து இருவரிகளைப் பாடுங்கள்" என்று பகவான் கூறிவிட்டதால், ராமஸ்வாமி பிள்ளை தொடர்ந்து அவருடைய இஷ்டம் போல் பாடி வந்தார். மற்றவர்கள் அவர்களது வழியில் பாராயணம் செய்தனர்.

இறுதி நாட்களில் ராமஸ்வாமி பிள்ளைக்குப் பற்கள் அனைத்தும் விழுந்து விட்டதால் ஆச்ரம உணவை அவரால் சாப்பிட முடியவில்லை. கோதுமை, சர்க்கரை இவை கொண்டு தயாரிக்கப்பட்ட மும்பை அல்வாவை (பம்பாய் அல்வாவை) மட்டுமே உண்பார். அது 'ஜெல்லி' யைப் போன்று மிகவும் மென்மையாக இருக்குமென்பதால் அவர் அதை எளிதில் விழுங்கிவிட முடியும். அவருக்கு ஊட்டம் தந்த ஒரே பொருள் அல்வா மட்டுமே. நான் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விடுவேன். ஆச்ரமத்தினுள்ளேயே தங்கிய அவருக்குக் கழிப்பறை வசதியுடன் கூடிய ஒரு அறையை ஒதுக்கி இருந்தேன். அவரது தேவைகளைக் கவனித்துக் கொள்ள ஒரு தொண்டரையும் ஏற்பாடு செய்தேன்.



ஆச்ரமம் தோட்டத்தில் முன்னாளில் எடுக்கப்பட்ட புகைப்படம்

ஒரு முறை யோகா ஆசிரியர் T. K. V. தேசிகாச்சாரி, அவரது ஆசிரியர் குழுவுடன் சென்னையிலிருந்து வந்திருந்தார். பிரபலமான யோகா குருவான அவர் எனக்கு யோகா, பிராணாயாமம் இவற்றைக் கற்பித்திருந்தார். நான் அவரை ரமணாச்ரமத்திற்கு வருமாறு அழைத்திருந்தேன். நானும், எனது தோழி அனுராதாவும் அவர்கள் குழுவினருக்கு ஆச்ரமத்தைச் சுற்றிக் காட்டி ஸ்கந்தாச்ரமத்திற்கும் அழைத்துச் சென்றோம். அங்கு செல்லும் வழியில் நான் தேசிகாச்சாரியிடம் 'இந்தப் பாதை, தற்போது நூறு வயதைத் தாண்டிவிட்ட திடகாத்திரமான ஒரு மனிதரால் அமைக்கப்பட்டது' எனத் தெரிவித்தேன். தேசிகாச்சாரியின் தந்தை ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரி, நூற்றியோரு வயது வரை வாழ்ந்த சிறந்த யோகி. ஸ்கந்தாச்ரமத்திலிருந்து திரும்பி வரும்போது

எங்களிடம் "நூறு வயதைக் கடந்து விட்ட அந்த முதியவரை நான் பார்க்க முடியுமா?" என தேசிகாச்சாரி கேட்டதால், அவரை ராமஸ்வாமி பிள்ளையின் அறைக்கு அழைத்துச் சென்றேன். எப்பொழுதும் போல், என்னைப் பார்த்ததும் உணர்ச்சி வசப்பட்ட ராமஸ்வாமி பிள்ளை "கணேசா! வா. ஏன் தனியாக வந்திருக்கிறாய்? உன் தந்தை, சகோதரர்கள் சுந்தரம், மணி, அதோடு ஆச்ரமத்திலுள்ள அனைவரையும், ரமண நகரிலிருப்பவர்களையும் கூட அழைத்து வா. நான் எல்லோரையும் பார்க்க விரும்புகிறேன்" என்று அவர் கூறிய போது நான் மிகவும் ஆச்சர்யம் அடைந்தேன். ஏனெனில் ராமஸ்வாமி பிள்ளை ஸ்நேக பாவத்தோடு கலகலப்பாகப் பழகுபவரில்லை.

இதற்குள் அவர் அல்வா சாப்பிட வேண்டிய நேரம் வந்து விட்டது. நான் என் கையை நீட்டியபோது அதை மெதுவாகத் தட்டிக் கொடுத்து "நீ என்னுடைய குழந்தை. கையை நீட்டி என்னிடம் அல்வா கேட்கிறாயா? கிட்டே வா" என்று சொல்லியபடி, நான் சிறு குழந்தை என்ற பாவனையுடன் எனக்கு அல்வாவை ஊட்டி விட்டார். இது 1995-ல் நிகழ்ந்தது - அப்போது எனக்குக் கிட்டத்தட்ட அறுபது வயது ஆகி விட்டது! நான் சிறு குழந்தை இல்லை என்ற போதும் அவர் ஊட்டி விட்டார்! பின் அல்வாவைத் தன்கையாலேயே மற்றவர்களுக்கும் விநியோகம் செய்தார். இந்தக் காட்சியை ரசித்த தேசிகாச்சாரி என்னிடம் "கணீரென்ற குரலில் இவர் பாராயணம் செய்வாரென்று கூறினீர்களே, நாங்கள் அவர் பாடுவதைக் கேட்க முடியுமா?" என்று வினவினார். நான் உடனே பிள்ளையிடம் "நீங்கள் பாடுவதை இவர்கள் கேட்க விரும்புகின்றனர். தயவுசெய்து பகவானது பாடல் எதையாவது பாடுங்கள்" என்று கேட்ட போது கடுமையான கோபத்தோடு "பகவானுடைய பாடல் எதையாவது என்று ஏன் கூறுகிறாய்? எனக்கு ஒரே ஒரு பாடல்தான் உள்ளது - அது பகவானின் அக்ஷரமணமாலை" என்று கூறித் தனது கம்பீரமான குரலில் அதைப் பாடினார்.



பத்தாவது பாடலைப் பாடும்போது அவருக்கு மூச்சு முட்டல் வந்துவிட்டது. நான் உடனே அவரைத் தழுவியபடி "ராமஸ்வாமி பிள்ளை நிறுத்தி விடுங்கள். இது போதும்" எனக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டேன். "ஓ! நான் நிறுத்த வேண்டுமென்கிறாயா? சரி. நிறுத்திவிடுகிறேன்" என்று கூறினார். நாங்கள் அவரிடம் விடை பெற்ற போது மதியம் மூன்றரை மணி. நாங்கள் அங்கிருந்து கிளம்பிய உடனே, நிறுத்திய இடத்திலிருந்து அக்ஷரமணமாலையை அவர் மீண்டும் பாட ஆரம்பித்தார். மாலை ஐந்து மணி வரை அவர் பாடிக் கொண்டிருந்ததாக அவருடைய தொண்டர் பின்னர் என்னிடம் கூறினார்.

அதன் பிறகு "என்னை உட்கார வை" என்று தொண்டரிடம் கூறிய ராமஸ்வாமி பிள்ளை முழு உணர்வோடு மீண்டும் பாட ஆரம்பித்து அவரது உடல் கீழே சாயும் வரை பாடினார். அந்த இறுதி நேரத்தில் நான் அவருடன் இல்லை. மறுநாள், ஆச்ரமத்தினுள்ளே, அவர் விரும்பியவாறு அக்ஷரமண-மாலையைப் பாடிக்கொண்டே அவரது உடலை அடக்கம் செய்தோம். ஆச்ரமவாசிகளும், ரமண நகரில் வாழ்ந்த மக்களும் அங்கு கூடினர். ஏற்பாடுகளைச் செய்து நானே அவரை ஸமாதியினுள் வைத்தேன். ராமஸ்வாமி பிள்ளை என்ற மிக வலிமையான பாறை அருணாசலத்தோடு கலந்தது. பகவான் ராமஸ்வாமி பிள்ளையிடம் அன்பு காட்டினார். அவரும் பகவானை நேசித்தார். அதனால் நானும் பிள்ளையிடம் அன்பு வைத்திருந்தேன். ஆச்ரமத்திற்கு மட்டுமின்றி அங்கிருந்த பகவானின் ஒவ்வொரு பக்தருக்கும் அவர் தொண்டாற்றினார். ஸ்கந்தாச்ரமத்திற்குச் செல்லும் பாதை பல்லாண்டு நிலைத்து நிற்கும். அதிலுள்ள ஒவ்வொரு பாறையும் ராமஸ்வாமி பிள்ளையைப் பற்றிப் பேசும். மனிதர்களாகிய நாம் அவர் செய்த உதவிக்கு அவருக்கு நன்றி கூறுகிறோமோ இல்லையோ, ஆச்ரமத்திலுள்ள ஒவ்வொரு தென்னை மரமும் அவரிடம் நன்றியோடு இருக்கும்.

ராமஸ்வாமி பிள்ளையின் ஸமாதி கட்டி முடிக்கப்பட்டதும் ஆச்ரமத்தின் தலைவர், நான் தங்கியிருந்த அறையின் சாவிகளை ஒப்படைக்குமாறு கூறினார். அன்னை கிருஷ்ணாபாய் என் காதுகளில் "பகவான் உனக்கு ஓய்வூதியம் தருகிறார். சாவிகளை ஒப்படைத்து விட்டு - சுதந்திரமாக இரு" என மெதுவாகக் கூறுவதாகத் தோன்றியது. முப்பத்தேழு ஆண்டுகள் தொண்டாற்றிய பின், அன்று நான் கர்மயோகத்தையும், ஆச்ரமத்தையும் விட்டு நான் விலகினேன். ராமஸ்வாமி பிள்ளைக்கு என் வணக்கத்தைச் செலுத்துகிறேன்.





ஸ்ரீ பகவானும் குஞ்சு ஸ்வாமியும் குரங்குகளுக்கு உணவளித்தல்

# 24 குஞ்சு ஸ்வாமி



ஆத்மா யாரைத் தேர்ந்தெடுக்கிறதோ அவர்களுக்குத் தன்னை வெளிப்படுத்துகிறது' என்று முண்டக உபநிஷதம் கூறுகிறது. ரமணாச்ரமத்திலோ அல்லது வேறு எங்காவதோ பக்தர் யாரை சந்தித்தாலும், அவர்களிடம், "நீங்கள் எவ்வாறு ஆன்மீக வாழ்க்கைக்கு வந்தீர்கள்? நீங்கள் ஆன்மீகத்தில் நுழைவதற்குக் காரணமாக இருந்தது எது?" என்று நான் கேட்பது வழக்கம். இவ்வாறு கேட்பதற்கான ஒரே காரணம், அவர்கள் இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களென்று நான் கருதுவதை அவர்களுக்கு சொல்வதற்காகவே. நண்பர் ஒருவரின் தூண்டுதலாலோ அல்லது புத்தகம் ஏதோ படித்ததாலோ, இத்திருப்பம் யதேச்சையாக ஏற்பட்டிருந்தாலும் கூட, இறைவன் அழைத்ததால் மட்டுமே அவ்வாறு நிகழ்ந்தது என்பதுதான் உண்மை. ஞானிகள், சந்நியாசிகள், பகவானின் பழைய பக்தர்கள், இவர்களுடைய வாழ்க்கையைப் படிப்பதன் முக்கிய நோக்கம், அவர்கள் ஒவ்வொருவரது வாழ்க்கையிலும் இத்திருப்பம் எவ்வாறு நேர்ந்தது என்பதை ஆராய்வதற்காகவே

இம்மாதிரியான ஸாதுக்களில் முக்கியமான ஒருவர் குஞ்சு ஸ்வாமி. மலையாளத்தில் 'குஞ்சு' என்றால் குழந்தை என்று பொருள். அவரது பெற்றோர், அவரை விலை மதிக்க முடியாதவராகக் கருதியதால் அவ்வாறு அழைத்தனர். நம் ஒவ்வொருவரையும் ஆத்மா எவ்வாறு தேர்ந்தெடுத்துள்ளதோ அதே போன்று, குஞ்சு ஸ்வாமியும் ஆத்மாவால் தேர்ந்தெடுக்கப்பட்டவர். 'நான் அவ்வாறன்று' என உங்களை விலக்கி விடாதீர்கள். ஏனென்றால், அவ்வாறில்லையானால், இப் புத்தகத்தை நீங்கள் இப்போது படித்துக் கொண்டிருக்கமாட்டீர்கள். குஞ்சு ஸ்வாமி எப்போதும் ஆனந்தமாக, உற்சாகமாக, நேசத்தோடு, மகிழ்ச்சியாக இருந்தார். உண்மையைச் சொன்னால், அவரை வேறு விதத்தில் யாருமே பார்த்ததில்லை. அவரை ஒரு முறை பார்த்துவிட்டவர்களால், பின், அவரை மறக்க இயலாது. நான் நேரில் சந்திக்க முடியாமற்போன பல முன்னாள் பக்தர்களைக் குறித்த விஷயங்களை, குஞ்சு ஸ்வாமி மூலமாகவே நான் அறியப்பெற்றேன். பல முறை, அவரது அன்பான உபசரணையை நான் பெற்றுள்ளேன். "ஸ்வாமி! நான் வெளிநாடுகளுக்குச் சொற்பொழிவாற்றச் செல்லும் போதெல்லாம், தேவையான உணவை எனக்கு அளிப்பது நீங்கள் தான்" என்று நன்றியோடு நான் கூறியபோது, அவர் அதை ரசித்துச் சிரித்தவாறு "ஆம், நான் உனக்கு அளிக்கும் விஷயங்கள் எல்லாம் விஷய தானம்" எனக் குறிப்பிட்டார். விஷய தானம் என்றால், ஸம்ஸ்க்ருத மொழியில், செய்திகள் தருதல் என்றும், உணவு அளித்தல் என்றும் பொருள் கொள்ளலாம். தனது பத்தொன்பதாம் வயதில் பகவானிடம் வந்தது முதல், பழுத்த 'இளமையான' தொண்ணூற்று ஆறு வயதில் இறைவனடி சேரும் வரையில் பகவானிடம் குஞ்சு ஸ்வாமி பூரணமான பக்தி செலுத்தி வந்தார்.

அவர், தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத்தில் பிறந்தவர். அக்காலத்தில், இந்தியாவில் இருந்த வழக்கப்படி, கீழ் ஜாதியைச் சேர்ந்தவர்கள் சமுதாயத்திலிருந்து விலக்கி வைக்கப்பட்டிருந்தார்கள். பிறந்த உடன் குஞ்சு ஸ்வாமியின் ஜாதகம் கணிக்கப்பட்ட போது, ஜோதிடர், "இது ஒரு தெய்வீகக் குழந்தை. அதனால் மிகுந்த கவனத்தோடு வளர்க்க வேண்டும்" எனக் கூறியிருந்தார். அவர்களுக்கு ஐந்தாறு குழந்தைகள் இருந்தபோதும், ஜோதிடர் கூறியதை மதித்து.

குஞ்சு ஸ்வாமியிடம் பெற்றோர் அதிகமாகக் கவனம் செலுத்தினர். தந்தையிடம் மிகுந்த பிரியம் வைத்திருந்த அவர், தந்தையுடன் எல்லா இடங்களுக்கும் செல்வார். அருகிலுள்ள சிறிய குளத்தில் குளிப்பதற்கு அவருடன் அடிக்கடி செல்வார். மூன்று வயதிலேயே விஷயங்களைக் கிரஹிக்கும் திறனுடைய அவர், பிராம்மணர்களும், சந்நியாசிகளும் இடுப்பளவு தண்ணீரில் நின்று கொண்டு மந்திரங்கள் ஜபிப்பதை கண்ணுற்றார்.

"அப்பா! அவர்களைப் போன்று நாமும் மந்திரம் ஜபிக்கலாமா? எனக்கு ஒரு மந்திரம் கற்றுத் தருகிறீர்களா?" என ஆவலுடன் கேட்டார். தந்தை மறுத்துக் கூறும் விதத்தில் தலை அசைத்து "இல்லை, நாம் தீண்டத்தகாதவர்கள். உயர் குலத்தவரான பிராம்மணர்கள், சந்நியாசிகள் இவர்களுக்கு மட்டுமே ஜபம் செய்ய உரிமையுள்ளது. நாம் ஜபிக்கக் கூடாது" என்று கூறவும், சிறுவன் மனம் உடைந்து, இரகசியமாகக் கண்ணீர் சிந்தினான். அன்றிரவு சிவபெருமான் சிறுவனின் கனவில் தோன்றி "குழந்தாய்! நான் உனக்கு ஒரு மந்திரம் தருகிறேன். 'ஓம் நமசிவாய' என்று ஜபம் செய்" எனக் கூறி மறைந்தார். சிறுவன் எழுந்த உடனேயே ஜபிக்க ஆரம்பித்தான். சில தினங்கள் சென்ற பின் மீண்டும் குளத்திற்குச் சென்ற போது மக்கள் சிறிய பையிலிருந்து விபூதியை எடுத்துப் பூசிக் கொள்வதை அவன் கண்டான். "அப்பா! எனக்கும் அவர்களைப் போல் ஒரு விபூதிப் பை வேண்டும்" என்றான். மீண்டும் முன் போன்றே, "இல்லை குழந்தாய்! நாம் தீண்டத்தகாதவர்கள். நாம் விபூதியை அணிவதோ, விபூதிப்பையை வைத்துக் கொள்வதோ கூடாது" எனத் தந்தை பதிலுரைத்தார். இச்சொற்களைக் கேட்ட குஞ்சு மிகவும் மனச் சோர்வுற்றார். மீண்டும் கனவில் தோன்றிய சிவபெருமான் ஒரு மரத்தைச் சுட்டிக் காட்டி "குழந்தாய்! அந்த மரத்தடியில் சில நாணயங்கள் உள்ளன. அவற்றைக் கொண்டு, ஒரு விபூதிப் பை வாங்கிக் கொள்" எனக் கூறிச் சென்றார். மறுதினம் அவன் அங்கு ஓடிச் சென்று பார்த்த போது அங்கு இந்தியாவில் அக்காலத்தில் புழக்கத்திலிருந்த முக்கால் அணா நாணயம் இருந்தது. அதைத் தந்தையிடம் காட்டி நடந்ததைக் கூறியதும் அவர் "அப்படியானால், இது சிவனுடைய கட்டளை. கடைக்குச் சென்று விபூதிப் பை ஒன்றை வாங்கிக் கொள்" என்று கூறினார். குஞ்சுவும் மிகுந்த மகிழ்ச்சியோடு தந்தை கூறியவாறு செய்தான்.

ஓராண்டு காலத்திற்குப் பின், ஐந்து வயதான போது, தனக்கு ஒரு உருத்திராக்ஷ மாலை வேண்டுமெனச் சிறுவனுக்குத் தோன்றியது. புனிதமானதாகக் கருதப்படும் உருத்திராக்ஷ மாலையை இந்துக்கள், முக்கியமாக சந்நியாசிகள், ஜபிப்பதற்கு உபயோகிப்பார்கள். 'நாம் தீண்டத்தகாதவர்கள்' என்ற பதிலைத் தந்தைக் கூறுவாரோ என்ற பயத்தில் தனது ஆசையை அவரிடம் தெரிவிக்காமல், சிவபெருமானிடம் மாலைக்காக மனப்பூர்வமாகப் பிரார்த்தனை செய்தான் குஞ்சு. ஒரு நாள், நண்பனோடு குளித்து விட்டுத் திரும்பும் வழியில், ஏதோ வேலை நிமித்தமாக அவனது நண்பன் அவசரமாகத் திரும்பிவிடவே, சிறுவன் குஞ்சு தனியாக நடந்து வரும் போது, திடீரென்று ஒரு அற்புதமான காட்சியைக் கண்டான். தெருவில், நன்கு மலர்ந்த தாமரைப் பூ ஒன்றைப் பார்த்தபோது அதைக் குனிந்து எடுத்தான். அதனுள் பொன்னூலினால் கட்டப்பட்ட உருத்திராக்ஷ மாலையைக் கண்ட உடன், உணர்ச்சி பொங்கத் தந்தையிடம் ஓடிச் சென்று அதைக் காண்பித்தான். 'இது உண்மையாகவே ஒரு தெய்வீகக் குழந்தைதான்' என்ற உறுதி மனதில் ஏற்படவும் தந்தை அதை வாங்கி சந்தோஷமாகக் குழந்தையின் கழுத்தில் தானே அணிவித்தார்.

இந்தச் சிறுவன் பத்து வயதிற்குள் சிவ பக்தியில் முழுமையாக ஆழ்ந்து விட்டான். திருவிளையாடற் புராணத்தில் கூறப்பட்டுள்ள, சிவபெருமானின் கதைகளைக் கேட்க, அருகிலுள்ள

கிராமத்துக்கு அவனைத் தந்தை அழைத்துச் சென்றார். பக்தர்களோடு, பகவான் புரிந்த லீலைகளையும், பகவான் பக்தர்களுக்கு அருள் செய்த திறத்தையும் குறித்த கதைகளை, சிறுவன் மிகவும் ஆழ்ந்த கவனத்துடன் கேட்டு, மனதில் வாங்கிக் கொண்டான். திரும்பி வந்ததும், தந்தை சொற்படி, தாயிடம் கதைகளைத் திரும்பக் கூறும் போது, ஒரு எழுத்துக் கூட விடாமல் அப்படியே கூறுவான்.

அவனுடைய அபாரமான ஞாபக சக்தியைக் கண்ட குடும்பத்தினர், திகைப்படைந்தனர். மறுநாள் தந்தை கிராம மக்களை எல்லாம் கூட்டிச் சிறுவனைப் பேச வைத்தபோது, அவன், தன் திறமையைக் காட்டி அவர்களைப் பிரமிக்கச் செய்தான். விரைவில், கிராமத்தாரும், ஆன்மீகச் சொற்பொழிவுகள் கேட்க அவனைத் தங்களுடன் கூட்டிச் செல்லத் துவங்கினர். அவன் மனித 'டேப்ரிகார்டர்' போன்று செயல்பட்டான். இதைவிட ஆச்சர்யம் என்னவென்றால், தன் தாய்மொழியான மலையாளச் சொற்பொழிவுகள் மட்டுமின்றி, தமிழ், ஸம்ஸ்க்ருதம் உட்பட எந்த மொழியில் பேசப்பட்டாலும் அவற்றைத் தவறின்றித் திருப்பிச் சொன்னான்.

குஞ்சுவின் வாழ்க்கையில் நிகழ்ந்த பல அதிசயிக்கத்தக்க நிகழ்வுகள், தந்தையின் பொறுப்புணர்வை மேலும் அதிகரிக்கச் செய்தன. சரியான வழியில் அவனுக்கு கல்வியளிக்க வேண்டுமென எண்ணி, கிராமத்திற்கு வந்திருந்த குப்பாண்டி ஸ்வாமி என்பவரிடம் மகனை அழைத்துச் சென்றார். குப்பாண்டி ஸ்வாமி அவனுடைய ஸித்திகளையெல்லாம் பரிகசித்துப் பேசிப் பின் சிறுவனை நோக்கி "இவற்றில் எல்லாம் உன் கவனத்தைச் செலுத்தாதே. அவை உனக்கு எவ்விதத்திலும் உதவி செய்யாது. இறைவன் கனவில் தோன்றி, உனக்காக இவ்வளவெல்லாம் செய்தது ஸித்திகளுக்காக அன்று." என்று கூறினார். ஸ்வாமிகளின் பாதங்களில் விழுந்து வணங்கி, "என்னை வழி நடத்த வேண்டும்" என்று சிறுவன் விண்ணப்பித்துக் கொண்டான். மந்திர ஜாலம், ஜோதிடம், மருத்துவம், வேதாந்தம் இவற்றில் கரை கண்டவராக இருந்த குப்பாண்டி ஸ்வாமியும் அதற்கு இசைந்தார். "ஏதாவது ஒரு கலையைத் தேர்ந்தெடு. உன்னை அதில் பயிற்றுவிக்கிறேன்" என்றார். "ஸ்வாமி! எனக்காக நீங்களே ஒன்றைத் தேர்ந்தெடுங்கள்," என்று சிறுவன் கூறவும், "என்னால் அப்படிச் செய்யமுடியாது. உனக்கு அதில் ஈடுபாடு இருக்க வேண்டும்" என்று குப்பாண்டி ஸ்வாமி கூறினார். கடைசியில் படிக்க வேண்டிய விஷயங்களைத் தனித்தனி சீட்டுக்களில் எழுதிப் பகவான் முன் குலுக்கிப் போட்டு ஒன்றை எடுத்தனர். அதில் வேதாந்தம் என்ற சீட்டு வந்ததால், அதுவே சிறுவனுக்குப் பாடமாக அமைந்தது. (என்னைப் பொறுத்தவரையில், இறைவன் நம்மை வழி நடத்திச் செல்கிறான் என்பதற்கு இது ஒன்றே எடுத்துக்காட்டு. ஆனால் நமக்கு இதில் ஆழ்ந்த நம்பிக்கை மட்டும் இருக்க வேண்டும்.)

ஸ்வாமிகள், 'கைவல்ய நவநீதம்' என்ற கிரந்தத்தைக் கற்றுக் கொடுக்கத் துவங்கினார். கைவல்ய நவநீதம் என்றால் 'கடைந்தெடுக்கப்பட்ட, முக்தி என்னும் வெண்ணெய்', என்று பொருள். பகவான் ரமணருக்கு இது மிகவும் பிடித்த புத்தகம். ஞானம் என்பது தயிரைப் போன்றது. தயிரைத் போதுமான அளவு கடையும் போது வெண்ணெய் திரண்டு வருகிறது. அதேபோன்று நாம், சாஸ்திரங்கள் உட்பட எதைப் படித்தாலும், அவற்றின் உட்கருத்தைப் புரிந்து கொண்டு, சிரத்தையோடு பயிற்சி செய்தால், நமக்கும் 'ஸத்யம்' என்ற வெண்ணையை நேரடியாக அனுபவிக்க முடியும் என்பது தெளிவு. குஞ்சு ஸ்வாமி மிக்க கவனத்துடன் படித்தார். அவரது அபாரமான ஞாபக சக்தியால், முதல் நாளே, இருபது பாடல்களை அவர் படித்து விட்டார். ஐந்து நாட்களுக்குள் புத்தகம் முழுவதையுமே மனப்பாடம் செய்து விட்டார். "இப்படிப் படித்தால் போதாது. அவற்றின் அர்த்தத்தைக்

கற்க வேண்டும்" என அவரது தந்தை கூறியதால் மீண்டும் குப்பாண்டி ஸ்வாமியிடம் சென்று பாடல்களின் பொருளையும் கற்றுக் கொண்டார். குப்பாண்டி ஸ்வாமி ஊரை விட்டுச் செல்ல வேண்டி வந்தபோது, யோக வாஸிஷ்டத்தில் தேர்ச்சி பெற்ற மற்றொரு ஸ்வாமியிடம் குஞ்சுவை ஒப்படைத்துவிட்டுச் சென்றார். இந்தப் புது ஆசிரியர் வாஸிஷ்டத்தைக் கற்றுத் தந்ததோடு "மனப்பாடம் செய்து கருத்தைப் புரிந்து கொண்டால் மட்டும் போதாது. அவற்றில் கூறப்பட்டவைகளைப் பயிற்சி செய்யவும் வேண்டும்" என்று அறிவுரை வழங்கினார்.



அந்த உபதேசங்களை நடைமுறையில் பழகவும் துவங்கினார் குஞ்சு ஸ்வாமி. இருந்தபோதும் அவருக்கு மன நிறைவு ஏற்படவில்லை. தீர்த்த யாத்திரை சென்றிருந்த குப்பாண்டி ஸ்வாமி சில ஆண்டுகளுக்குப் பின் திரும்பி வந்த போது குஞ்சு உற்சாகமிழந்து இருப்பதைக் கண்டார். "நீ ஏன் இவ்வாறு இருக்கிறாய்?" என்று ஸ்வாமிகள் அவரிடம் கேட்டார். "ஸ்வாமி! நான் செய்யும் பயிற்சிகள் எதுவும் எனக்குத் திருப்தியைத் தருவதில்லை. பண்டைய வேத காலத்தில் ஒரு பார்வையினாலேயே ஆத்மானுபவத்தைத் தரவல்ல மஹர்ஷிகள் இருந்ததாகச் சாஸ்திரங்களிலும், புராணங்களிலும் கூறப்பட்டிருப்பதை நான் படித்திருக்கிறேன். இப்போது அத்தகைய மஹர்ஷிகள் யாரும் இல்லையா?" என்று குஞ்சு கேட்டார். அதற்கு ஸ்வாமிகள் "ஆம். இப்போதும் அம்மாதிரியான ஞானி ஒருவர் இருக்கிறார். அவர் பெயர் ரமண மஹர்ஷி" என்று பதிலுரைத்தார். 'ரமண மஹர்ஷி' என்ற பெயரைக் கேட்ட அக்கணத்திலேயே குஞ்சு பரவசநிலையை அடைந்தார். சில நிமிடங்களுக்குப் பின் இயல்பு நிலைக்குத் திரும்பி "ஸ்வாமி! நீங்கள் ரமண மஹர்ஷியைப் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டார். "ஆம். அருணாசலத்திற்குச் சென்று அவரைப் பார்த்தேன்" என்று குரு பதிலளித்த போது "நானும் அங்கு செல்ல விரும்புகிறேன்" என குஞ்சு கூறினார்.

குப்பாண்டி ஸ்வாமி ஆன்மீக முதிர்ச்சி அடைந்திருந்த ஆச்சாரியர். அவருக்கு நூற்றுக் கணக்கில் சீடர்கள் இருந்தனர். இரண்டு ஆண்டுகளுக்குப் பின், தான் ஜீவ ஸமாதியில் அமரப் போவதாகவும், உயிரோடு, தான் புதைக்கப்படும் ஸமாதியைக் குஞ்சு தான் மூட வேண்டும் என்பதாகவும் அவருக்கு முன்னறிவிப்புக் கிடைத்திருந்தது. அதனால் அவர் "தயவு செய்து அதுவரை காத்திரு, சிவனுடைய அனுக்ரஹம் உனக்கு இருப்பதால், நீயே ஸமாதியை மூடத் தகுதி வாய்ந்தவன் என்று உன்னைத் தேர்ந்தெடுத்துள்ளேன். அதுவரை நான் உனக்கு ஆன்மீக விஷயங்களைக் கற்றுத் தருகிறேன்" என்று குப்பாண்டி ஸ்வாமிகள் கூறினார். அந்தக்கால கட்டத்தில், அடுத்த கிராமத்தைச் சேர்ந்த ராமகிருஷ்ணன் என்னும் குஞ்சுவின் நண்பர், அவரைக் காண வந்தார். குஞ்சு தனது நண்பரிடம், "நீயாவது முதலில் சென்று ரமண மஹர்ஷியைத் தரிசித்து வா. அங்கு எப்படிச் செல்ல வேண்டுமென்பதை நான் உனக்குக் கூறுகிறேன்" என்று உரைத்தார். கடைசியில் குப்பாண்டி ஸ்வாமிகள் ஜீவ ஸமாதியில் அமர வேண்டிய நாளும் வந்தது. நூற்றுக் கணக்கானவர்கள் அந்த அற்புத நிகழ்ச்சியைக் காணக் குழுமியிருந்தனர். குழி தோண்டப்பட்டு ஸ்வாமிகள் அதனுள் அமரும் முன் குஞ்சுவிடம் கல்லால் குழியை மூடுமாறு கூறினார். "எப்போது கல்லால் மூட வேண்டுமென்பது எனக்கு எவ்வாறு தெரியும்?" என்று குஞ்சு கேட்ட போது, "நான் ஸமாதியில் இறங்கிய பின் என் தலை திடீரென ஆடுவதை நீ காண்பாய். அதுவே கல்லை வைத்து மூடுவதற்கான அடையாளம்" என்று ஸ்வாமிகள் உத்தரவிட்டார். "எப்போது அம்மாதிரி நிகழும் எனக் குஞ்சு கேட்கவும், "நான் ஸமாதிக் குழிக்குள் இறங்கிய பின் அரை மணி நேரத்தில் நீ அதைப் பார்ப்பாய்" என்று குரு கூறினார்.

அரை மணி நேரம் ஆனது; பின் ஒரு மணி நேரம், இரண்டு மணி நேரம் என்று காலம் கடந்ததே தவிர ஸ்வாமிகள் கூறியபடி எதுவும் நிகழவில்லை. திடீரெனக் குப்பாண்டி ஸ்வாமி குழியிலிருந்து மேலே ஏறி வந்து, குஞ்சுவையும் இழுத்துக் கொண்டு ஓடினார். ஒரு மைல் தூரம் ஓடிய பின் ஒரு மரத்தடியில் நின்றார். குஞ்சு அவரை வணங்கி "ஸ்வாமி என்னவாயிற்று? என்று கேட்டார். "எனக்கே தெரியவில்லை. நான் யாரையும் ஏமாற்ற எண்ணவில்லை. எனக்கு முன்னறிவிப்பு வந்தது உண்மை. அதன்படி ஜீவ ஸமாதியில் அமர வேண்டிய நாளும் தீர்மானிக்கப்பட்டது. தீர்மானித்தது நான் அன்று. அது இறைவனின் இச்சையால் நிகழ்ந்தது. ஏதோ தவறு நேர்ந்துள்ளது என்றால் நான் மேலும் சில ஸாதனைகளைச் செய்ய வேண்டுமென்பது தான் பொருள். நான் தீர்த்த யாத்திரை செல்கிறேன். திரும்பி வர மாட்டேன். அதனால் நீ ரமண மஹர்ஷியிடம் செல். குழந்தாய்! உன்னை ஆசீர்வதிக்கிறேன்" என்று கூறிவிட்டு குரு சீடனை விட்டுப் பிரிந்து சென்றார்.

ஸ்வாமிகள் ஜீவ ஸமாதியில் அமரவில்லை என்ற பரபரப்பான செய்தி எங்கும் பரவியது. சில நாட்களில் பரபரப்பு அடங்கியது. தனது உபகுரு தோல்வியைச் சந்தித்ததும், ஊரைவிட்டுச் சென்றதும் குஞ்சுவிற்கு மிகுந்த வேதனையையும் மன உளைச்சலையும் கொடுத்தது. அவரது நிலையைக் கண்டு பரிதாபப் பட்ட தந்தை "மகனே! நீ குப்பாண்டி ஸ்வாமியுடன் இருந்திருக்கிறாய். யாரிடமாவது பணம் வாங்கியிருக்கிறாயா?" என்று கேட்ட போது "நான் ஒருவருக்கு ஐந்து ரூபாய் கொடுக்க வேண்டியுள்ளது" என்று குஞ்சு கூறினார். "இதோ, இந்தப் பணத்தை அவரிடம் கொடுத்து விடு" என குஞ்சுவின் கையில் ஐந்து ரூபாயைத் திணித்தார் தந்தை. திருவண்ணாமலைக்குச் செல்வதற்காகச் சிவபிரானே அந்தப் பணத்தைத் தந்ததாகக் குஞ்சுவிற்குத் தோன்றியது.

ஜனவரி 1920க்குள் தனது கிராமத்திலும் அண்டையிலுள்ள கிராமங்களிலும் குஞ்சு மிகவும் பிரபலமாக இருந்தார் மக்களுடைய, தேவையில்லா ஆர்வத்தையும், வம்புப் பேச்சுக்களையும்

தவிர்க்கும் பொருட்டு இரவு வரை காத்திருந்து, பின் ஊரை விட்டுக் கிளம்பினார். ரயில்வே நிலையத்திற்கு ஓடிச் சென்றார் எனினும், ரயிலைத் தவற விட்டு விட்டார். ஒளிந்திருந்து பின்னர், காட்பாடிக்குச் செல்லும் அடுத்த வண்டியில் ஏறினார்.

காட்பாடி சென்றபோது, திருவண்ணாமலைக்குச் செல்லும் ரயிலைத் தான் அங்கும் தவற விட்டதை அறிந்து கொண்டார். அடுத்த வண்டி மாலை ஆறு மணிக்கே என்பதால் பகல் முழுவதும் காத்திருக்க வேண்டி வந்தது. மாலை ஐந்து மணிக்குப் பயணச் சீட்டு வாங்கச் சென்ற போது, திருவண்ணாமலையில் 'பிளேக்' (கொள்ளைநோய்) பரவியுள்ளதால் அங்கு யாருக்கும் இறங்குவதற்கு அனுமதியில்லை என்ற செய்தியறிந்தார். மனம் தளர்ந்து போன குஞ்சு "இப்போது என்ன செய்வது? நான் திருவண்ணாமலைக்குச் செல்ல வேண்டுமே" என்று அருகிலிருந்தவரிடம் விசாரித்தார். "திருவண்ணாமலைக்கு அடுத்த ஸ்டேஷன் திருக்கோயிலூர். அதனால் திருக்கோயிலூருக்கு டிக்கெட் வாங்கிக் கொண்டு, திருவண்ணாமலை ஸ்டேஷன் வரும் போது வண்டியிலிருந்து குதித்து விடு. அதுதான் ஒரே வழி" என்று அவர் யோசனை வழங்கினார்.

முன்பின் தெரியாத அவர் அறிவுரைப்படி டிக்கெட் வாங்கச் சென்ற போது, தன்னிடம் உள்ள தொகை திருவண்ணாமலைக்குச் செல்வதற்கு மட்டுமே போதுமானது என்பதும், திருக்கோயிலூருக்குச் செல்ல மேலும் நான்கு அணா தேவை என்பதையும் அறிந்த போது, மனம் நொந்து போய், செய்வதறியாமல், பகவானிடம் பிரார்த்திக்கத் துவங்கினார். அவர் கீழே பார்த்த போது இரு தண்டவாளங்களுக்கு இடையில் நான்கு அணா நாணயம் ஒன்று கிடப்பதைக் கண்டார். மகிழ்ச்சி பொங்க அதைக் கொண்டு டிக்கெட் வாங்கி, கடைசியில் திருக்கோயிலூருக்குச் செல்ல வண்டி ஏறினார். ரயில் திருவண்ணாமலையை அடைய இரவு ஒன்பதரை ஆகும். விதிகளை மீறாமல் ஸத்யத்தைக் கடைப்பிடிக்கும் இளைஞனாக இருந்ததால், தடை செய்யப்பட்ட இடத்தில் இறங்குவதற்குச் சற்றுத் தயக்கம் உண்டாயிற்று. திடீரென்று அவர் அருகில் அமர்ந்திருந்தவர், "நான் திருவண்ணாமலையில் இறங்கப் போகிறேன். நீங்களும் இங்குதான் இறங்கவேண்டும்" என்று கூறியவாறு, குஞ்சுவையும் இழுத்துக் கொண்டு இறங்கி விட்டார். இருவரும் இருட்டில் மறைந்து போயினர். பிற்காலத்தில் இந்த சம்பவத்தை நினைவு கூர்ந்த போது, எல்லாமே எவ்வாறு திட்டப்படி நடந்தது என்பதைக் குறிப்பிட்டார் குஞ்சு ஸ்வாமி: "நான் மட்டும் காலையில் கிளம்பிய ரயிலைத் தவற விட்டிருக்காதிருந்தால், யாரும் அறியாமல் திருவண்ணாமலையில் இறங்கியிருக்க முடியாது. விதியை மீறத் தயங்கிய என்னை யாரோ வலுக்கட்டாயமாகக் கீழே இறக்கி விட்டு விட்டார்கள். நான் அந்த நபருடன் ஊருக்குள் சென்ற பின், ஒரு கோயில் மண்டபத்தில், இருவரும் படுத்து உறங்கி விட்டோம். காலையில் எழுந்த போது, அருகில் படுத்திருந்தவரைக் காணவில்லை. அது என்னுடைய பகவான் அல்லாது வேறு யாராக இருக்க முடியும்?"

பகவானைக் காண மலை ஏறிச் செல்ல வேண்டும் என்று குஞ்சு ஸ்வாமிக்கு வழிப்போக்கர்கள் வழி காட்டினார்கள். அவர்கள் காட்டிய திசையில் மூன்று பாதைகள் தென்பட்டன. எந்தப் பாதையில் செல்ல வேண்டுமென அவருக்குத் தெரியவில்லை. (இதுவும் ஆன்மீக ஸாதகர்களுக்கு அறிவுறுத்துவதற்காகச் சங்கேதமாகத் தெரிவிக்கப்பட்டதாகும். நாம் ஸத்யத்தை உணர முயற்சி செய்யும் போது, சந்தேகங்கள், பிரச்சனைகள், தடைகள் வருவது ஸஹஜம். எனினும் நாம் உறுதியான நம்பிக்கையோடு இருந்தால், ஸத்ய வஸ்துவே இவற்றையெல்லாம் விலக்கி வழி காட்டும். விடாமுயற்சி, குறிக்கோளில் முனைப்பு, நம்பிக்கை இவையே நமக்குத் தேவை)

குஞ்சு ஸ்வாமி ஒரு பாதையைத் தேர்ந்து, அதில் சென்ற போது வழியில், வாட்டசாட்டமானவரும் நீளமான, சடை விழுந்த முடி, தாடி முதலியவற்றுடன் கூடியவருமான ஒரு சந்நியாசியைக் கண்டார். புராணக் கதைகளில் சாபம் கொடுக்கும் ரிஷிகளைப் பற்றி அவர் படித்திருந்ததால், குஞ்சு ஸ்வாமிக்குச் சற்று பயமாகவே இருந்தது. வந்த வழியே திரும்பி ஓடிச் சென்ற போது, வழிப்போக்கர் ஒருவரைக் கண்டார். எங்கு போக வேண்டுமென்று அந்த நபர் கேட்கவும், "நான் ரமண மஹர்ஷியைப் பார்க்க வேண்டும்." என்று பதில் கூறினார். "இந்தப் பாதையில் செல்" என்று அவர் வழி காட்டினார். சிறிது தூரம் நடந்த போது, விரூபாக்ஷ குகைக்குச் சிறிது மேலே ஒரு சிறு குடிசையைக் கண்டார். பகவானுக்குத் தினமும் உணவளித்து வந்த முதலியார் பாட்டி அதில் தான் வசித்து வந்தார். அங்கே அந்த இளைஞரைக் கண்டவுடன், "எங்கே செல்கிறாய்?" என்று அவர் விசாரித்தார். அதற்கு, "ரமண மஹர்ஷியைத் தரிசிக்க விரும்புகிறேன்" என்றார் குஞ்சு ஸ்வாமி.

"இந்தப் பக்கமாகப் போ. அங்கே ஓடையில் குளித்து விட்டுப் பின், மஹர்ஷியைக் காணச் செல்" என்று பாட்டி வழிகாட்டினார். ரமண மஹர்ஷிக்கு உணவு எடுத்துக் கொண்டு வரும் பொழுது உங்களுக்கும் உண்பதற்கு ஏதாவது எடுத்து வருகிறோம் என்று முதலியார் பாட்டி கூறினார். ஸ்கந்தாச்ரமத்திற்குச் செல்லும் வழியில், "எனது குருவை முதன் முறையாகச் சந்திக்கப் போகிறேன். அவருக்கு என் மரியாதையை எவ்வாறு செலுத்துவது?" என்று சிந்தித்த வண்ணம் சென்றார் குஞ்சு

ஸ்கந்தாச்ரமத்தை அடைந்த போது, அங்கு பகவான் உட்கார்ந்திருப்பதையும், மூவர், அவருக்கு ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்வதையும் கண்டார். அவர்களில் ஒருவர் குஞ்சு ஸ்வாமியின் நண்பர் ராமகிருஷ்ணன், மற்ற இருவர், பெருமாள் ஸ்வாமியும், ஸ்வாமி அகண்டானந்தரும் ஆவர். "நானும் இவ்விதத்திலேயே என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என எண்ணியவாறு பகவானை வணங்கிக் காத்து நின்றார். ஏனெனில் "குருவே முதலில் பேசி, உபதேசமும் தருவார்" என்றும், "அதுவரை சீடன் அமைதி காக்க வேண்டும்" என்றும் கைவல்ய நவநீதம், ஞான வாஸிஷ்டம் முதலிய நூல்களில் அவர் படித்திருந்தார். அந்த சமயத்தில் பகவான் அருகிலிருந்த ஒரு பெண்மணியை நோக்கி "நீ எதற்காக அழுகிறாய்? உன்னுடைய ஒரு பிள்ளை போய்விட்டானென்று தானே அழறாய். இப்போது இன்னொரு பிள்ளை வந்துவிட்டான் பார்" என்று கூறிச் சமாதானம் செய்தார். அந்தப் பெண்மணி பகவானின் தாயார் அழகம்மாள் தான். அன்று காலை அண்ணாமலை ஸ்வாமி என்ற ஒருவர், 'பிளேக் நோயினால் தாக்கப்பட்டு இறந்துவிட்டதாகவும், அன்னை



அழகம்மாளுக்கும், ஸ்கந்தாச்ரமத்திலிருந்த மற்றவர்களுக்கும் பலவாறு தொண்டு செய்து வந்த அவரிடம் அன்னை மிகுந்த பிரியம் வைத்திருந்தார் என்பதையும் சில காலம் சென்ற பின்னரே, குஞ்சு ஸ்வாமி அறிந்தார்.

சிறிது நேரம் சென்ற பின், பகவான், கும்முட்டி அடுப்பு, ஒரு பாத்திரம், சில பொருட்கள் இவற்றை எடுத்து வந்தார். ரிஷிகள், மந்திர சக்தி வாய்ந்த கஷாயங்களைத் தயார் செய்வார்கள் என்றும், அவற்றைக் குடிப்பதாலேயே ஒருவர் முக்தியைப் பெற முடியும் என்றும் படித்திருந்த குஞ்சு ஸ்வாமி "நான் எத்துணை அதிருஷ்டசாலி! எனது குருவான ரமண மஹர்ஷி, எனக்கென்று மந்திர சக்தியுடன் கூடிய அதிசய மருந்தினைத் தயாரித்து, முதல் நாளே எனக்கு அளிக்கப்போகிறார்" என்ற எண்ணத்தால் பூரித்துப் போனார். கஷாயத்தைத் தயார் செய்து ஆற வைத்த பகவான், அருகிலிருந்த கூடையைத் திறந்தார். அதனுள் நான்கு நாய்க்குட்டிகள் அடைந்து கிடந்தன. பகவான் தயாரித்தது, அவைகளுக்கான கஞ்சிதான். கூடை திறக்கப்பட்டவுடன், நாய்க் குட்டிகள் அங்கும் இங்கும் சிதறி ஓடின. பகவான் குஞ்சு ஸ்வாமியை நோக்கி "நான்கையும் நன்றாகப் பிடித்துக் கொள்" என்று கூறினார். குஞ்சு ஸ்வாமியும் அதன்படி செய்தபோது அவற்றிற்குக் கொடுப்பதற்காகச் சிறிய தட்டில் கஞ்சியை ஊற்றி பகவான் தயாராக வைத்தார். "எனக்குக் கிடைத்த முதல் உபதேசம் இதுவே. இதன் மூலம் நான் புரிந்து கொண்டது 'நான்கு மஹாவாக்கியங்களையும் இறுகப் பற்றிக் கொள்' என்பதுதான். கீழே கொடுக்கப்பட்டுள்ள நான்கு மஹாவாக்கியங்களும் இந்து தர்மப்படி மிக உயர்ந்த ஞானமாகக் கருதப்படுகின்றன. ப்ரக்ஞானம் பிரஹ்ம (உணர்வே பிரஹ்மம்), அஹம் ப்ரஹ்மாஸ்மி (உணர்வாகவே நான் இருக்கிறேன்), தத் த்வமஸி (நான் என்று உன்னில் எழுவது எதுவோ அதுவே அந்த உணர்வு), அயமாத்மா பிரஹ்ம (ஸகல ஜீவராசிகளிலும், தனி மனிதனிலும் அண்ட சராசரம் அனைத்திலும் இருப்பது அதே 'நான்' என்னும் உணர்வுதான்.) பின்னர் குருநாதர் "இனி, ஒவ்வொன்றாக அவற்றை விடு" என்று கூறினார். குஞ்சு ஸ்வாமி ஒவ்வொரு குட்டியாகப் போகும்படி விட்டார். நான்கு மஹாவாக்கியங்களையும் நன்கு கிரஹித்துக் கொண்டு, பின்னர் ஒவ்வொன்றாக விட்டுக் கடைசியில் உணர்வாகவே நிற்கும் நிலையை அடைய வேண்டும் என்பதாகக் குஞ்சு ஸ்வாமி இந்த இரண்டாவது உபதேசத்தைப் புரிந்து கொண்டார். மிக உயர்ந்த ஞானத்தைக் குரு உபதேசித்துள்ளதைப் புரிந்து கொண்ட அவர் பரவசத்தில் ஆழ்ந்தார். நாய்க்குட்டிகள் வயிறாறக் கஞ்சியை உண்டபின், ஒரு குட்டி சிறுநீர் கழித்தது. சாக்கு ஒன்றைக் கொண்டுவந்து பகவான் அதைச் சுத்தம் செய்தார். மற்றுமொரு குட்டி சிறிது அலைந்த பின் சிறுநீர் கழித்த போது பகவான் மீண்டும் சுத்தம் செய்தார். மூன்றாவது குட்டி சிறுநீர் கழித்த போது, 'பகவான் இத்தகைய காரியங்களைச் செய்வது முறையன்று; அந்தப் பணியை நானே செய்வது நல்லது' என்ற எண்ணம் குஞ்சு ஸ்வாமிக்குத் தோன்றியது. பகவான் உடனே குஞ்சு ஸ்வாமியை நோக்கி "நீ சுத்தம் செய்ய விரும்புகிறாயா? சரி. இந்தா சுத்தம் செய்" என்று சாக்கைக் கொடுத்த போது மூன்றாவது உபதேசத்தை அவர் பெற்றார். "சுத்தம் செய் - உன் மனதை எப்போதும் சுத்தமாக வைத்திரு" என்ற உபதேசமாக அதைப் புரிந்து கொண்டார். இந்த மூன்று உபதேசங்களையும் தனது வாழ்நாள் முழுவதும் மிகுந்த சிரத்தையுடன் கடைப்பிடித்ததோடு அதனால் மட்டற்ற மகிழ்ச்சியையும் அடைந்தார்.

குஞ்சு ஸ்வாமி பதினெட்டு நாட்கள் பகவானுடன் தங்கிய பின் ஒரு நாள் "நீ என்ன ஸாதனை செய்கிறாய்?" என பகவான் வினவினார். 'ஓம் நம: சிவாய' என்னும் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபிப்பதாக அவர் தெரிவித்த போது, பகவான் திருப்தியடைந்து "அதையே தொடர்ந்து செய்து வா" என்று கூறினார். மேலும் பதினெட்டு நாட்கள், பகவானுடன் தங்கி ஸாதனையைத் தொடர்ந்த போது,

தான் ஆத்மானுபவம் பெற்றுவிட்டதாகக் குஞ்சு ஸ்வாமிக்குத் தோன்றவே, ஆச்ரமத்திற்குப் பாரமாக இருக்க விரும்பாமல், தன் நண்பர் ராமகிருஷ்ணனுடன் சொந்த ஊருக்குத் திரும்பி, அங்கேயே அந்த ஆனந்த நிலையில் இருக்க எண்ணினார். ஆனால், ஊருக்குத் திரும்பிய பின்னர், அந்த ஆனந்தம் சிறிது சிறிதாகக் குறைவதைக் கண்டபோது, பகவானுடைய ஸந்நிதிக்கு மீண்டும் செல்லவேண்டியதன் அவசியத்தை உணர்ந்தார். முதல் முறை திருவண்ணாமலைக்குச் சென்ற போது பெற்றோரின் அனுமதி பெறாமல் சென்ற குஞ்சு ஸ்வாமி, இம்முறை அவர்களது ஆசீர்வாதத்தைப் பெற்றுச் சென்றார்.

குருவின் அருகிலேயே இருந்து அவருக்குப் பணிவிடைகள் செய்வதும், அவரது கட்டளைக்குக் காத்திருப்பதும் நன்மை பயக்கும் என்ற திட நம்பிக்கை இந்தியாவில் நமக்கு உள்ளது. குஞ்சு ஸ்வாமியும், ராமகிருஷ்ணனும் ஸ்கந்தாச்ரமத்தை அடைந்தபோது, குரு சேவையில் ஈடுபட மிகுந்த ஆர்வத்துடன் இருந்தனர். நல்லவேளையாக, பகவானுடைய அணுக்கத் தொண்டரான பெருமாள் ஸ்வாமி, தீர்த்த யாத்திரை செல்வதாக இருந்ததால், பகவானுக்குத் தான் செய்து வந்த, கால்களைப் பிடித்து விடுதல், குளிப்பாட்டுதல் போன்ற, பணிகளை அவர்களிடம் ஒப்படைத்தபோது, தனது பிரார்த்தனை நிறைவேறியதில், எல்லையற்ற மகிழ்ச்சியடைந்த குஞ்சு ஸ்வாமி, இனி என்ன நேர்ந்தாலும், ஒரு போதும் பகவானை விட்டுப் பிரிவதில்லை என்றும், பகவானுடைய கட்டளைப்படி, எவ்விதத் தொண்டானாலும் அதைச் செய்வது என்றும் உறுதி பூண்டார்.

பகவானிடம், "எனது கிராமத்திற்குச் சென்ற பின் பரவசநிலை கை நழுவிப் போய், துயரத்தில் மூழ்கியதற்குக் காரணம் என்ன? எனது குழப்பங்கள் நீங்கி மீண்டும் தெளிவு பெற நான் என்ன செய்ய வேண்டும்?" என்று குஞ்சு ஸ்வாமி கேட்டார். பகவான் சிரித்தபடியே அவரது கேள்வியைக் கேட்ட பின், "நீ 'கைவல்ய நவநீதம்' படித்திருக்கிறாய் அல்லவா, அதில் ஒரு பாடலில் 'நான் யார்' என்னும் விசாரம் செய்வதால் ஒருவன் தன்னை உணரலாம். அவ்வாறு தன்னை உணர்ந்தவனுக்கு பிறப்பும் இறப்பும் இல்லாது ஒழிகிறது என்று கூறப்பட்டுள்ளது" என்று உரைத்தார். "நான் பிரஹ்மத்தை அறிவது எவ்வாறு?" எனக் குஞ்சு ஸ்வாமி கேட்கவும், "முதலில் நீ யார் என்பதை அறிந்து கொள்" என்று குரு பதிலிறுத்தார். "நான் யார் என்பதை எப்படி அறிவது?" என அவர் வினவவும், "எண்ணங்கள் எங்கிருந்து எழுகின்றன என்பதைக் கவனி" என்று பகவான் மறுமொழி பகர்ந்தார். குஞ்சு ஸ்வாமி, "அதை எவ்வாறு செய்வது?" என்று மீண்டும் கேள்வியை எழுப்பவும் "உன் மனதை உண்முகமாக்கி, இதயமாகவே நிலைத்து நில்" என்று கூறிய பகவான் தன் அருட்பார்வையைக் குஞ்சு ஸ்வாமியின் மீது பதித்து, தன் இயல்பான மௌனத்தில் மீண்டும் ஆழ்ந்தார். அந்த நொடியிலேயே குஞ்சு ஸ்வாமியின் பதற்றங்களும், குழப்பங்களும் மறைந்தன. இதுவரை அனுபவித்திராத அமைதியையும் ஆனந்த அனுபவத்தையும் அவர் பெற்றார்.

"கிராமத்திற்குச் சென்ற பின் எனது பரவச நிலையை நான் இழக்கக் காரணம் யாது?" என்ற கேள்வியை மீண்டும் குஞ்சு ஸ்வாமி எழுப்பிய போது, பகவான் மீண்டும் கைவல்ய நவநீதத்திலிருந்து ஒரு பாடலைக் கூறித் தெளிவுபடுத்தினார். "குருவின் ஸந்நிதியில், ஒரு க்ஷணத்திற்கு ஆத்மானுபவம் ஏற்படக்கூடும். ஆனால் அது நிலைத்து நிற்கும் என்று கூறுவதற்கில்லை. மீண்டும் மீண்டும் சந்தேகங்கள் எழும்பும். அவற்றை நீக்க, சீடன் தொடர்ந்து சாஸ்திரங்களைப் படிப்பதோடு, ஆழ்ந்து சிந்தித்து ஸாதனைகளையும் பழக வேண்டும். படிப்பது அல்லது கேட்பது சிரவணம் எனப்படும். ஆழ்ந்து சிந்தித்தல் என்பது மனனம். மனதை உண்முகமாக்கி 'நான் யார்' விசாரத்தைப் பழகுதலே நிதித்யாஸனம். காண்பான், காட்சி, காணப்படும்பொருள் ஆகிய மூன்றிற்கும் வேற்றுமையில்லாத

நிலையை அடையும் வரை, சிரவணம், மனனம், நிதித்யாஸனம் இவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். வேற்றுமைகள் இருத்தல் கூடாது. அந்நியம் இல்லாத நிலை அது. இரண்டாவது பொருளில்லாத நிலை'' என்று பகவான் விளக்கமாகக் கூறிய போது, அவருடைய ஸந்நிதியிலேயே இருந்து, அவர் கூறியவாறு ஸாதனைகளைப் பழகுவதெனத் தீர்மானித்தார். தனது மனதில் சந்தேகங்கள் எழும் போதெல்லாம், பிறர் கேள்விகளுக்குப் பகவான் அளிக்கும் விடைகளைக் கேட்பதாலேயே, அவை அனைத்தும் நீங்கி விடுவதை அவர் அனுபவத்தில் கண்டதால், அநேகமாக, குஞ்சு ஸ்வாமிக்கு வினாக்களை எழுப்பவே தேவையில்லாமல் போய்விட்டது.

அதிகாலை நான்கு மணிக்கே ஸ்கந்தாச்ரமத்தில் பணிகள் துவங்கிவிடும். பகவானின் அன்னை எழுந்து பக்திப் பாடல்களைப் பாட ஆரம்பித்து விடுவார். ஐந்து மணிக்கு பகவான் வெளியே வந்த பின்னர், பக்தர்கள் அக்ஷரமணமாலையைப் பாடுவார்கள். சில சமயங்களில் சாமா தாத்தா சமையல் செய்வார். அல்லது எச்சமாள் உணவு ஏதாவது எடுத்து வருவார். எட்டு மணிக்கு அனைவரும் உணவு அருந்திய பின் எஞ்சிய நேரம் முழுவதும் தியானம் செய்வதிலும், ரிபு கீதை அல்லது கைவல்ய நவநீதம் படிப்பதிலும் கழியும். பகவான் அநேகமாக மௌனத்தில் ஆழ்ந்திருப்பார். குஞ்சு ஸ்வாமி, பகவானைப் பற்றிய சில சுவாரஸ்யமான விஷயங்களை என்னிடம் கூறியிருக்கிறார். அவர் பார்த்த வரையில் பகவான், நிமிர்ந்தோ அல்லது ஒரு பக்கமாகவோ படுக்காமல் எப்போதும் சாய்ந்த வண்ணமாக ஓய்வெடுப்பார். பகவான் எதிலும் சிக்கனத்தைக் கடைப்பிடிப்பார். தினமும் பற்பொடி தயாரித்துப் பொட்டலமாகக் கட்டப்பட்டு, பகவானுக்குக் காலையில் கொடுக்கப்படும். பொட்டலத்தில் அவரது தேவைக்கு அதிகமாக இருந்தால், அதை அவரே மீண்டும் மடித்து வைத்து, மறுநாள் காலை தனக்குத் தரப்பட வேண்டும் என்று எதிர்பார்ப்பார். குளிப்பதிலும் அவர் சிக்கனத்தைக் கடைப்பிடித்தார். சிறிது எண்ணெயை உள்ளங்கையில் எடுத்து, வெந்நீரை அத்துடன் கலந்து தேய்த்துப் பசை போன்று செய்து உடம்பு முழுவதும் தேய்த்துக் கொண்டு விடுவார். முதுகில் தானாகவே எண்ணெயைத் தேய்த்துக் கொள்ள முடியாததால், குஞ்சு ஸ்வாமி பகவானுக்கு அதைச் செய்வார்.

ஸ்கந்தாச்ரமத்தில், திருவண்ணாமலை ஊரைப் பார்த்தபடி, கல்லால் ஆன திண்ணை போன்ற ஒன்று இருந்தது. அதன் மேல் அமர்ந்தவாறே பகவான் பல் துலக்குவார். மிகவும் குளிராக இருந்தபோதும், பகவான் கௌபீனம் மட்டுமே அணிந்திருப்பார். அதிகாலையில், குளிரில், பகவான் அவ்வாறு அமர்ந்திருப்பது நல்லதன்று எனக் குஞ்சு ஸ்வாமிக்குத் தோன்றிய போதும், அவர் தொடர்ந்து அப்படியே உட்கார்ந்திருந்தார். இதன் காரணத்தைக் குஞ்சு ஸ்வாமி, பின்னர்தான் கண்டு பிடித்தார். சௌபாக்யம்மாள் என்ற ஒரு பெண்மணி தினமும் ஸ்கந்தாச்ரமத்திற்கு வந்து கொண்டிருந்தார். வயது முதிர்ந்த நிலையிலும், 'பகவானைத் தினமும் தரிசிக்காமல் சமைக்கவோ, சாப்பிடவோ, குளிக்கவோ கூட மாட்டேன்,' என்ற ஒரு விரதம் பூண்டு வாழ்ந்தார். ஒரு நாள் அவர் ஆச்ரமத்திற்கு வராததால், "நீ ஏன் நேற்று வரவில்லை?" என பகவான் அவரிடம் கேட்டபோது, "பகவான்! நேற்று என் வீட்டில் இருந்தபடியே தங்களைத் தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. நீங்கள் அந்தப் பாறையின் மீது அமர்ந்திருந்ததை அங்கிருந்தபடியே என்னால் பார்க்க முடிந்தது" என அவர் பதிலிறுத்தார். அன்று முதல், மழையோ குளிரோ எதுவானாலும், சௌபாக்யம்மாளுக்குத் தினமும் தரிசனம் தரும் பொருட்டு, பகவான் அந்தப் பாறையின் மீது காலையில் அமர்வார்.

ஸ்கந்தாச்ரமத்தில் ஒவ்வொரு நாளுமே புனிதமான நாள்தான் காவ்யகண்ட கணபதி முனிக்குப் பகவான், குஞ்சு ஸ்வாமியை அறிமுகம் செய்து வைத்தார். காவ்யகண்டரின் 'கபால பேத'

அனுபவத்தை அவர் கண் கூடாகப் பார்த்துள்ளார். தனது உச்சந்தலையிலிருந்து வெளிப்பட்ட சூடான ஆவியின் மீது குஞ்சு ஸ்வாமியின் கையை வைத்து அதன் மிகுந்த உஷ்ணத்தைக் காட்டியிருக்கிறார் முனி. அந்தச் சூட்டின் காரணமாக ஏற்பட்ட சிரமத்தையும் வலியையும் குறைப்பதற்காக, அவர் பகவானுடைய கையைத் தன் தலைமீது வைத்துக் கொள்வார். அதனால் ஏற்படும் குளிர்ச்சியால் அவரது வேதனையும் குறையும். "காவ்யகண்டர் தமது அனுபவத்தை நம்மிடம் கூறினார். நான் யாரிடம் போய்ச் சொல்ல முடியும்?" என்று பகவான் இச்சம்பவத்தைப் பிற்காலத்தில் குறிப்பிட்ட போது அருகிலிருந்த பக்தர் ஒருவர், "பகவானே! தங்களுக்கும் அத்தகைய அனுபவம் உண்டாயிற்றா? என்று கேட்டார். அதற்கு பகவான் ஏதோ முணுமுணுத்தாரே தவிர 'ஆம்' என்றோ 'இல்லை' என்றோ நேரிடையாகப் பதில் எதுவும் தரவில்லை.

நாயனா, பகவானுடைய ஆன்மீக நிலையைக் குஞ்சு ஸ்வாமிக்கு விளக்கிய போது, அவர் ஸஹஜ நிஷ்டையில் இருப்பவர் என்று கூறியுள்ளார். சாஸ்திரங்களில் கூறிய படி, ஆன்மீக ஸாதகர்கள் இறுதியில் பல இடங்களுக்கு யாத்திரைகள் செய்தோ அல்லது ஒரே இடத்தில் இருந்து கொண்டோ, லோக ஸங்க்ரஹம் செய்வார்கள். மீரா, ஆதிசங்கரர், விவேகானந்தர் போன்ற ஞானியர், தம்மிடம் பெருக்கெடுத்த ஆன்ம சக்தியை, பரவசத்தில் ஆழ்த்தக் கூடிய பாடல்களாகவும் சொற்பொழிவுகளாகவும் வெளிப்படுத்தினர். பகவானோ மௌனத்தில் வேரூன்றி நின்றதால் அருணாசலத்தைவிட்டுச் சிறிது கூட அசையவில்லை. இது ஸஹஜ நிஷ்டையின் அறிகுறியாகும்; அதாவது தன் நிலையிலேயே நிற்றல் என்பதாகும். இதனால் தான் K. K. நம்பியார் என்ற பழம்பெரும் பக்தர், பகவானை 'மலை விழுங்கி' என்று அழைத்தார்.

இந்தக் கால கட்டத்தில், கேரளத்தில் நாராயண குரு என்ற ஒரு ஞானி இருந்தார். அவருடன் சில மணித்துளிகளைக் கழிக்கும் வாய்ப்புக் கிடைத்தாலும், அது பெரிய பாக்கியம் என்று மஹாத்மா காந்தியும் கூட எண்ணினார். இவ்வாறு மிகவும் புகழ் பெற்றவராக விளங்கினார் அவர். நாராயண குரு பொதுவாக, எங்கும் அதிகமாகச் செல்வதில்லை. உள்ளதைச் சொன்னால், பிற மஹான்கள், அவருக்கு மரியாதை செலுத்தும் பொருட்டு அவரிடம் வருவதுண்டு. அவ்வாறிருந்தும் அந்த ஞானி, தன் சீடர்களுடன் பகவானைக் காண ஸ்கந்தாச்ரமத்திற்கு வந்திருந்தார். பகவான், அவருடன் மலையாளத்திலேயே பேசி, அன்போடு வரவேற்று உபசரித்துத் தன்னுடன் உணவு உண்ணுமாறு அழைத்தார். "ஓ! ஆகட்டும்! நாங்கள் மஹர்ஷியின் பிரஸாதம். உண்கிறோம்" என்று அவர் தமிழிலேயே பதில் அளித்தார். பின்னர், நீண்ட நேரம் பகவான் தமது அருட் பார்வையை அவர் மீது செலுத்த, இருவரும் பரவசமான மௌனத்தில் மூழ்கினர். கிளம்ப வேண்டிய நேரம் வந்த போது, ஸஹஜ ஸமாதியில் இருந்த பகவானை நாராயண குரு நோக்கி "அப்படியே இருக்கட்டும்" என்று மலையாளத்தில் கூறினார். இதை ஸஹஜ ஸமாதியை வேண்டி அவர் செய்த பிரார்த்தனை எனச் சிலர் அர்த்தம் கொண்டனர். ஆனால் நாராயண குருவின் சீடர்கள் மூலமும், அவர் எழுதிய நூல்களின் மூலமும், அவர் ஏற்கனவே அந்த நிலையில் இருந்ததாக அறியப்படுகிறது. ஸஹஜ நிஷ்டையின் பெருமையை விளக்கிக் கூறும் நிர்விருத்தி பஞ்சகம் என்ற ஐந்து ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்களை அப்போது, அங்கேயே நாராயண குரு இயற்றினார்.

மலையிலிருந்து சீடர்களுடன் இறங்கிய நாராயண குரு பரவசநிலையில் மூழ்கியிருந்தார். தனது சீடர்களை மகிழ்ச்சியுடன் நோக்கி "மஹர்ஷி ஒரு ராஜ ஸர்ப்பம்" என்று குறிப்பிட்டார். இந்து சமய ஆன்மீகப் பரிபாஷையில், ஞானிகளை ஸர்ப்பம் என்றோ நல்லபாம்பு என்றோ கூறும் வழக்கமுண்டு. நாராயண குரு தானே ஞானியாக இருந்தபோதும், பகவானை 'அவரும் ஒரு நல்ல

பாம்பு' என்று சாதாரணமாகக் குறிப்பிடாமல், பகவானுடைய உன்னத நிலையைக் கூறும் விதத்தில் 'ராஜ ஸர்ப்பம்' என்று குறிப்பிட்டார். இந்த உண்மை அவரது ஹ்ருதயத்திலிருந்து வெளிப்பட்டது. அவரது சீடர்களில் பெரிய செல்வந்தர் ஒருவரையும், மஹா பண்டிதர் ஒருவரையும் அழைத்து “மஹர்ஷியின் தற்போதைய ஆன்மீக நிலையில், அவரது ஒரே ஒரு பார்வையே முக்தியளிக்க போதுமானது. இப்போது அவர் குடத்தினுள் இட்ட விளக்காக உலகிற்கு அறிமுகமில்லாதவராக உள்ளார். அவரை உலகம் அறிந்து கொள்ள வேண்டும். இந்த ஆன்மீகப் பொக்கிஷம் பல ஸாதகர்களால் கொள்ளையடிக்கப்பட வேண்டிய ஒன்று. நீங்கள் இருவரும் ஆறு மாதங்களுக்கு இங்கேயே தங்கி, வரும் யாத்திரிகர்களுக்கு தேவையான உணவு, தங்குமிடம் இவற்றுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். மஹர்ஷியைத் தினமும் பலர் சந்தித்து ஆன்மீக நலம்பெறத் தேவையான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். பகவானுடைய விழிப்படைந்த நிலை பற்றிப் பண்டிதர்கள் நடுவிலும், தீவிர ஆன்மீக ஸாதகர்களிடமும் எடுத்துக் கூற வேண்டும்.'' என்று உரைத்தார். பகவானிடம் மனதைப் பறிகொடுத்த அவர், கேரளம் சென்ற பின், மீண்டும், முனிசர்யா பஞ்சகம் என்ற வேறு ஐந்து ஸ்லோகங்களை எழுதினார்.

கேரளத்திற்குத் திரும்பிய நாராயண குருவின் உடல் நலம் குன்றியதை அறிந்த பகவான், அவரிடம் கொடுக்கும்படி கூறிக் குஞ்சு ஸ்வாமியிடம் ஒரு எலுமிச்சம் பழத்தை அனுப்பி வைத்தார். பகவான், தனக்காகப் பிரஸாதம். அனுப்பியதைக் கண்ட அவர், கண்களில் கண்ணீர் மல்க, அதைத் தனது கண்கள், தலை, மார்பு இவற்றில் பக்தியோடு வைத்து ஒற்றிக் கொண்டார். தமிழ் நாட்டிலிருந்து யாராவது வந்தால் “நீங்கள் பகவான் ரமண மஹர்ஷியைத் தரிசித்து விட்டீர்களா?'' என்று அவர்களிடம் கேட்பார். 'இல்லை' என்ற பதில் அவர்களிடமிருந்து வந்தால் “பின் ஏன் இங்கு வந்தீர்கள்? திரும்பிச் சென்று, அங்கு தரிசனம் செய்து விட்டு வாருங்கள்'' என்று அனுப்பி விடுவார். நாராயண குருவின் மஹா ஸமாதி நெருங்கி விட்டதை அறிந்த பகவான், அவரது உடலை எவ்வாறு காப்பாற்றி வைக்க வேண்டும் எனக் குஞ்சு ஸ்வாமிக்கு அறிவுறுத்தினார். நாராயண குரு ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்ற ஞானி என்பதால், அதற்கேற்றவாறு அவரது ஸமாதி அமைக்கப்பட வேண்டுமென்பதில் பகவான் கவனம் செலுத்தினார். திருப்தியான முறையில் அது அமைக்கப்பட்டதா என்ற விபரத்தைத் தனக்குத் தெரிவிக்க வேண்டுமென்றும் குஞ்சு ஸ்வாமியிடம் கூறியிருந்தார். பின்னர் நாராயண குரு ஸமாதியான செய்தியைப் பகவான் அறிந்த போது, “நாராயண குரு ஒரு பூரண புருஷர்; முழுமையாக மலர்ந்தவர்'' என்று குறிப்பிட்டார்.

பகவான், தன்னிடம் மிகவும் இயல்பாகவும், யதார்த்தமாகவும் நடந்து கொண்டதாகக் குஞ்சு ஸ்வாமி கூறுவார். பலமுறை பகவான் ஸமாதியில் ஆழ்ந்து விடுவார். அப்போதெல்லாம் அவருக்குப் புற நினைவைக் கொண்டு வருவதென்பது கடினமான காரியம். இம்மாதிரியான சமயங்களில், நான்கு பேர் பகவானுடைய காதில் நீண்ட நேரம் சங்கை ஊதிய பின்னரே, அவர் சுயநிலைக்குத் திரும்புவார். ரமணாச்ரமத்திற்கு வந்த பிறகும் கூட இந்தப் பழக்கம் தொடர்ந்தது. மனதைக் கவர்ந்து இழுப்பதற்கு, மணிஓசை எழுப்புவதையும், சங்கு ஊதுவதையும் இரண்டு வழிகளாக சாஸ்திரங்கள் கூறியுள்ளன. அடங்கிவிட்ட மனதை வெளியில் கொண்டு வரக் கூடியது சங்க நாதம். சித்த ஸ்வாதீனமில்லாதவர்களை இயல்பு நிலைக்குக் கொண்டு வருவதற்குக் கூட இம்முறையைப் பயன்படுத்தலாம். மணியோசை மனதை உண்முகப்படுத்த வல்லது. இதனால் தான் கோயில்களிலும், தேவாலயங்களிலும் மணி பயன்படுத்தப்படுகிறது. அது வெறும் சடங்கு மட்டுமன்று. மனதை உண்முகப்படுத்தும் வழியுமாகும்.

பகவானுடைய தாயார் மஹாஸமாதியான போது, குஞ்சு ஸ்வாமி, மற்றவர்களுடன் சேர்ந்து, தாயாரின் உடலைத் தற்போதைய ரமணாச்ரமத்திற்கு எடுத்து வந்தார். அன்னையின் உடல் புதைக்கப்பட்ட இடத்தின் மேல் எழுப்பப்பட்ட ஓலைக் குடிசையில் பகவானின் தம்பி நிரஞ்ஜனானந்த ஸ்வாமியும், தண்டபாணி ஸ்வாமியும் தங்கியிருந்தனர். சில சமயங்களில் தோசை தயாரிக்கத் தேவையான பொருட்களைச் சேகரித்து, பின் குஞ்சு ஸ்வாமியைத் தங்களுடன் இரவில் தங்குமாறு கூறி, மறுதினம் காலையில் அவர்களுடன் சேர்ந்து தோசை உண்டபின் செல்லுமாறு செய்தியனுப்புவார்கள். இது போன்று அப்போதே புதிதாக தயாரித்து சமைத்த உணவுகள் என்பது, ஸ்கந்தாச்ரமத்தில் போகப் பொருட்களாகக் கருதப்பட்டன. இவ்வாறு தயாரிக்கும் உணவில் சிலவற்றை பகவானுக்கும் அனுப்புவார்கள். குஞ்சு ஸ்வாமி அதிகாலையில் எழுந்து, மற்றவர்களுடன் சேர்ந்து, பாத்திரங்களைக் கழுவுவார். ஒரு நாள் துணியால் தன்னை நன்கு மறைத்துக் கொண்டு, குஞ்சு ஸ்வாமியின் பின்னால் வந்து நின்ற நபர் ஒருவர், "விருந்தாளி வந்துள்ளேன், உண்பதற்கு ஏதாவது உள்ளதா?" என்று குரல் கொடுத்தார். திரும்பிப் பார்த்த குஞ்சு ஸ்வாமி, அது பகவானே விளையாட்டாகச் சொன்னது என்பதைப் புரிந்து கொண்டு மிகவும் மரியாதையுடன், "பகவானே! சரியான சமயத்தில் வந்துள்ளீர்கள். நாங்கள் தோசை செய்யப் போகிறோம். இங்கேயே சிறிது நேரம் தங்குங்கள்" என்று பதில் கூறினார்.

பகவானைத் தரிசித்த பின்னரே தன் அன்றாட பணிகளைத் துவக்கும் வழக்கமுடைய பெண்மணி ஒருவர் இருந்தார். தற்போதைய ரமணாச்ரமம் அப்போது வெறும் குடிசையாக மட்டுமேயிருந்தது. அங்கே பகவான் வந்திருப்பதை அறிந்த அந்த பெண்மணி, பகவானிடம், தான் அவருக்காக சமைத்து, உணவளிக்க விரும்புவதாகக் கூறி பகவானை அங்கேயே தங்குமாறு வற்புறுத்தினாள். பகவானும் இசைந்தார். அடுத்த நாள், வேறொருவர், தான் பிக்ஷை அளிக்க விரும்புவதாகத் தெரிவித்தார். (பிக்ஷை என்ற வார்த்தையே ஸம்ஸ்க்ருதத்தில் 'பிக்ஷா' என்று கூறப்படுகிறது. ஆனால் அதன் மேலெழுந்தவாரியான அர்த்தம் 'விருந்து' என்றாகி விட்டது.) இவ்வாறு பிக்ஷையளிக்கும் நபர், தன்னுடன் பகவான் கிரிவலம் வரவேண்டும் என்று வேண்டிக் கொள்வது வாடிக்கையான ஒன்று. பகவான் மெதுவாக நடப்பார் என்பதால், கிரிவலம் செய்து முடிவதற்குள் இரவு நேரம் கடந்து காலைப்பொழுதே விடிந்துவிடும்.

பகவான் தற்போதைய ரமணாச்ரமத்திலேயே தங்க வேண்டுமெனப் பல பக்தர்கள் கேட்டுக்கொண்டனர். ஒரு முறை, தொடர்ந்து ஐந்து தினங்கள் பகவானுக்குப் பிக்ஷை அளிக்கப்பட்டதால், தொடர்ச்சியாக அந்த ஐந்து இரவுகளும் உறக்கமின்றி பகவான் கிரிவலம் வரும்படியாயிற்று. இதைக் கவனித்த குஞ்சு ஸ்வாமி, மறுநாள் பிக்ஷை அளிக்க இருந்தவரைத் தடுக்க முயற்சி செய்தார். ஆனால் இதை அறிந்த பகவான், அவரைக் கண்ணாலேயே கண்டித்துத் தடுக்க முடியாதபடி செய்து விட்டார். பகவான், தான் ஐந்து நாட்களாக உறங்கவில்லை என்னும் விஷயத்தை யாருக்கும் தெரிவிக்கக் கூடாதென ஜாடையாலேயே உணர்த்தினார். இவ்வாறாக ஏழு நாட்கள் தொடர்ந்து கிரிவலம் நடந்தபின், குஞ்சு ஸ்வாமியால் அதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவர், பகவானிடம் மறுப்புத் தெரிவித்தார். "பகவானே! நீங்கள் உறங்கவேயில்லை. உங்களுக்கு ஓய்வு தேவையில்லையா? இந்த பக்தர்களைத் தடுக்க விடாமல் செய்து விடுகிறீர்களே?" என்று தாபத்தோடு வினவினார். பகவான் தமது அருட்பார்வையைக் குஞ்சு ஸ்வாமி மீது செலுத்தித் "தூக்கம் என்பது என்ன? மனதிற்கு ஓய்வு கொடுப்பதற்காக ஏற்பட்டதுதான் தூக்கம். மனம் என்ற ஒன்று இருந்தால்தான் அதற்கு ஓய்வு தர வேண்டும். மனம் எங்கே இருக்கிறது? இருபத்து நான்கு மணி நேரமும் கண்கள் மூடி மூடித் திறப்பதால் சற்று சிரமமும் கண்களில் வலியும் ஏற்படலாம். சற்று

நேரம் கண்களை மூடி வைத்திருந்தாலே அந்தக் கஷ்டம் நீங்கிவிடும். எனவே. பிரச்சனை எங்கே உள்ளது?" என்று பகவான் குஞ்சு ஸ்வாமியை மடக்கி விட்டார்.

பகவான், கீழே இறங்கி வந்து அன்னையின் ஸமாதியில் தங்க ஆரம்பித்த பின். ஊருக்குள் இருந்த பக்தர்கள் அவருக்குத் தொடர்ந்து பிக்ஷையளித்து வந்தனர். பகவான் நீண்ட நாட்களாக ஸ்கந்தாச்ரமம் வராமல் இருந்ததால். அங்கு காவலாக இருந்த குஞ்சு ஸ்வாமியும். ராமகிருஷ்ண ஸ்வாமியும் பகவானது பிரிவால் புலம்ப ஆரம்பித்தனர். "நாம் பகவானுடன் இருப்பதற்காகத்தான் இங்கு வந்தோமேயன்றி மலை மீதுள்ள கட்டடத்தைக் காவல் காப்பதற்காக வரவில்லை" எனக்



கடுகடுப்புடன் எண்ண ஆரம்பித்தனர். அதனால் யாருக்கும் தெரியாமல், பகவானுடன் இருப்பதற்காகக் கீழே இறங்கி வந்து விடுவார்கள். இதைக் கவனித்த பகவான் ஒரு நாள் "எல்லோரும் கிரிவலம் சென்று வரலாம்" என்று அவர்களையும் அழைத்துச் சென்றார். பகவானுடன் கிரிவலம் சென்று திரும்பிய குஞ்சு ஸ்வாமியும், ராமகிருஷ்ண ஸ்வாமியும் மீண்டும் ஸ்கந்தாச்ரமத்திற்குத் திரும்பினர். பகவானும் மற்றவர்களும் ரமணாச்ரமம் சென்றனர். சுமார் ஒரு மணி நேரத்திற்குப் பின் குஞ்சு ஸ்வாமியும், ராமகிருஷ்ண ஸ்வாமியும் ரமணாச்ரமத்திற்கு அழுதபடி ஓடி வந்து "பகவானே! ஸ்கந்தாச்ரமத்தில் திருடர்கள் நுழைந்து அனைத்தையும் திருடிச் சென்று விட்டனர்! வைத்திருந்த எல்லாப் பொருட்களுமே திருட்டுப் போய் விட்டன!" என்று கூறினர். சிறிதும் குழப்பமடையாத பகவான் "நல்லதாயிற்று. கட்டடத்தை யாரும் காவல் காக்க வேண்டிய அவசியமில்லை. நீங்களும் இங்கேயே வந்து தங்கிவிடலாம்" என்று கூறினார். ரமணாச்ரமம் இவ்வாறுதான் வளர ஆரம்பித்தது. ஒரு சாதாரணக் குடிசையில், பகவான் படுப்பதற்கான தாழ்வான திண்ணையோடு ஆரம்பிக்கப்பட்டது. தென்னங்கீற்றுகளால் ஆன பாய்களில் ஆறு அல்லது ஏழு பக்தர்கள், பகவானுக்கு அருகில் கீழே படுத்திருப்பார்கள். அந்த நாட்கள் பொன்னானவை என்று குஞ்சு ஸ்வாமி கூறுவார். ஏனெனில் தங்கள் குருவுக்கு அருகிலேயேயிருந்து, இரவு முழுவதும் அவர் உதிர்த்த ஞான முத்துக்களை அவர்களால் பகிர்ந்து கொள்ள முடிந்தது. மற்றொரு கோணத்தில் பார்த்தால், அவர்கள் உண்ண உணவின்றிக் கழித்த பல நாட்கள் உண்டு. பகவானுடைய புகழ் அப்போதுதான் பரவத் துவங்கியிருந்தது. அப்படி ஒருவர் இருப்பதைக் கூடப் பலரும் அறிந்திருக்கவில்லை என்பதோடு, அவருக்கு உணவு அளிப்பதற்கும் யாரும் முன்வரவில்லை. பகவானுக்கு நாற்பத்தைந்து வயதிற்குள்தான் இருக்கும். குஞ்சு ஸ்வாமியும், ராமகிருஷ்ண ஸ்வாமியும் இருபத்தைந்து வயதிற்குட்பட்ட இளைஞர்கள். அவர்கள் எல்லோருமே சுறுசுறுப்பாக வேலை செய்யக் கூடியவர்கள். ஆனால் பல நேரங்களிலும் பசியுடனேயே இருந்து வந்தனர்.

அமாவாசை, பௌர்ணமி இவற்றிற்குப் பின் வரும் பதினொன்றாவது நாளான ஏகாதசியன்று, இந்து ஸம்பிரதாயப்படி உபவாஸம் இருப்பது வழக்கம். மறுநாள் துவாதசியன்று, அதை ஈடுசெய்வது போல் விருந்து உண்பார்கள். உணவு கிடைக்காத நாளாக இருந்தால், "இன்று நாமெல்லாம் ஏகாதசி விரதம் கடைப்பிடிப்போம்" என்று மற்றவர்களிடம் வேடிக்கையாகப் பகவான் கூறுவார். ஓரிரு தினங்களுக்குப் பின் யாராவது நிறைய உணவு பதார்த்தங்களை எடுத்து வந்தால் "இன்று நாம் துவாதசியைக் கொண்டாடுவோம்" என்பார். சில நாட்களில் தேவையான அளவு சாதம் இருக்காது. ஆனால் உண்பதற்குப் பத்துப் பேர் இருப்பர். இம்மாதிரி சமயங்களில் பகவான் அவர்களையெல்லாம் ஊக்குவிக்கும் விதமாக, அவர்களைக் காட்டிற்குள் அழைத்துச் சென்று விடுவார். பகவானுக்கு எல்லாக் கீரை வகைகளைப் பற்றியும் தெரியுமென்பதால், அவற்றின் மருத்துவ குணங்களை எடுத்துக் கூறியவாறு அவற்றைப் பறிக்கச் சொல்லி, அதை சமைக்கும் முறையையும் கூறுவார். தென்னிந்தியாவில் அரிசிச் சோறு முக்கியமான உணவு. அத்துடன் சேர்த்து உண்ணப்பட வேண்டிய இரண்டாவது இடம் காய்கறிகளுக்கு. "சாதத்திற்கு மட்டுமே எப்போதும் ஏன் முதலிடம் கொடுக்க வேண்டும்? இன்று கீரைக்கு முக்கியத்துவம் தந்து, சாதத்தை அதனுடன் சேர்த்துக் கொண்டு சாப்பிடுவோம்" என்று கூறுவார், பகவான்.

சாதாரண மனிதனுக்குத் தேவையான அடிப்படை வசதிகள் கூட கிடைக்காத போதும், தாங்கள் சோர்ந்து போனதே இல்லை என்று குஞ்சு ஸ்வாமி கூறுவதுண்டு. பகவான், தன்னுடைய சமமான மனநிலையை அவர்களுக்கும் புகட்டினார். பகவானைப் போன்று ஆன்மீகத்தில் மிக உயர்ந்த நிலையை அடைந்தவர்களுக்கு, தேவையான அளவு உணவு உள்ளதா, இல்லையா என்று

எதற்கும் கவலை கிடையாது. ஆனால் பகவானுடைய தனிச்சிறப்பு என்னவென்றால், தனது அடியார்களுக்கும் திதிக்ஷா எனப்படும் சகிப்புத் தன்மையை வழங்கினார். "மதுரையில் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போதே, பதினாறு வயதிலேயே அருணாசலத்திற்கு வந்துவிட்டார் பகவான். அதனால் பலவகைப்பட்ட திறமைகளை வளர்த்துக் கொள்ளும் வாய்ப்பு அவருக்குக் கிடைக்க வழியில்லை. இருந்த போதும், அவர் பல சிறப்பான திறமைகளைப் பெற்றிருந்தார். அழகான பூமாலைகள் கட்டுவதிலும், தையல் இலைகளைத் தைப்பதிலும் தேர்ந்திருந்தார். சமையல் கலையிலும் வல்லவர். விதவிதமான பதார்த்தங்களைச் செய்வதில் கை தேர்ந்தவர்." என்று கூறிய குஞ்சு ஸ்வாமி, 'இவை எல்லாம் பகவானுக்கு எங்கிருந்து வந்தது?' என எப்போதும் அதிசயப்படுவார்.

பகவானுக்குப் பிக்ஷையளிப்பவர்கள் அரிசி, பருப்பு, காய்கறிகள் இவற்றுடன் ஐந்து ரூபாயையும் காணிக்கையாக அளிப்பார்கள். அவர்களுடன் பகவான் கிரிவலத்திற்கு வர வேண்டும் என்ற ஒரே ஒரு நிபந்தனையை மட்டும் முன் வைப்பார்கள். ஆச்ரமவாசிகளான ஏழெட்டு பேர் உட்பட, அனைவருக்குமே அது மிகவும் ஆனந்தத்தைத் தரும் விஷயம். அவர்களைப் பொறுத்த வரையில், பகவானுடன் கிரிவலம் வருவதென்பது கடவுளுடன் செல்வது என்றுதான் பொருள். "நாங்கள், எங்கள் நண்பர்களில் ஒருவருடனோ அல்லது ஒரு மஹானுடனோ நடப்பதாக எங்களுக்குத் தோன்றவில்லை. கால்கள், கைகள், தலையோடு கூடிய அந்த எல்லாம் வல்ல பரம்பொருளுடன் நடப்பதாகவே உணர்ந்தோம்" என்று குஞ்சு ஸ்வாமி ஒருமுறை என்னிடம் கூறினார்.

தற்போது தியானம் செய்ய உபயோகப்படுத்தப்படும் பழைய 'ஹால்' 1926-ல் கட்டப்பட்டது. பகவானுக்கு விருப்பமில்லாத போதும், அவருக்கெனத் தனியாக மஞ்சம் ஒன்றைத் தரமுடிந்ததில் குஞ்சு ஸ்வாமிக்கு மிக்க மகிழ்ச்சி. "நான் பாறையின் மீது படுப்பதையே விரும்புகிறேன்" என்றதோடு, அடியார்கள் 'வெல்வெட்டால்' ஆன மெத்தையை அதன் மேல் விரித்தபோது, "உங்களுக்கு வேண்டுமானால் இது சுகமாகவும் ரசிக்கத்தக்கதாகவும் இருக்கலாம், எனக்கு இது முள் படுக்கை போன்றுள்ளது. பாறையில் அமர்வதையே நான் உசிதமென எண்ணுகிறேன்" என்று பகவான் தெரிவித்தார். அப்படியிருந்தும், பகவானுக்கு மஞ்சத்தின் வசதியைச் செய்து தர முடிந்ததில் குஞ்சு ஸ்வாமிக்கு சந்தோஷம்தான். இங்கும் பகவானுடனேயே, அந்த ஹாலில் பக்தர்களும் படுத்துக் கொண்டனர்.

ரமணாச்ரமத்தில் சில நாய்கள் இருந்தன. தொல்லை தரக்கூடிய அந்த மிருகங்களைக் கண்டால், ஆச்ரமவாசிகள் யாருக்குமே பிடிக்காது என்பதைக் குஞ்சு ஸ்வாமி ஒப்புக் கொண்டிருக்கிறார். அவர்கள் படுக்கும் அந்த 'ஹாலே' சமையலறையாகவும், சாப்பாட்டுக் கூடமாகவும், விருந்தினர் அறையாகவும் உபயோகிக்கப்பட்டு வந்தது. அந்த நாய்களும் அங்கேயேதான் வாழ்ந்தன. சில அடியார்களுக்கு நாய்களால் அசௌகர்யம் இருந்தது என்பது பகவானுக்கு தெரியும். அதனால் அவரது மஞ்சத்திற்கு அடியிலேயே அவைகளைப் படுக்கச் செய்வார். இரவில் நாய்களை நடப்பதற்கு வெளியில் அழைத்து சென்று, பின் திரும்பி வந்து "எல்லோரும் ஸோஃபாவிற்கு அடியில் போய்க்கோங்கோ. நீங்கள் வெளியில் இருந்தால், மற்றவர்களுக்குக் கோபம் வரும். உள்ளே சென்று விடுங்கள்" என்று கூறுவார். பகவான், பக்தர்களுடன் இணைந்தே வேலைகளைச் செய்வார். தோட்ட வேலை, காய்கறி நறுக்குவது, சமையல் வேலை, சுத்தம் செய்யும் பணி, கட்டுமான வேலைகள் உட்பட எல்லா ஆச்ரம வேலைகளையும் பகவானும் கூடச் செய்வார். பாறைகளைச் சுமந்து வருவார் சுவர் கட்டுவதற்குச்

சுண்ணாம்பு, களிமண், தண்ணீர் இவற்றைக் குழைக்கவும் செய்வார். பகவானும் அடியார்களுடன் கூடவே உழைத்ததால், அவர்களுக்கு ஆனந்தமும் புத்துணர்வும் உண்டாயிற்று.

ஒரு நாள், அடியார்கள் மத்தியில் அமர்ந்திருந்தபோது, பகவான் திடீரென எழுந்து வேகமாக மலையை நோக்கிச் சென்றார். "பகவான், சாதாரணமாக, இவ்வாறு எதிர்பாராத விதத்தில் திடீரென்று எதுவும் செய்யும் வழக்கமுடையவர் இல்லையென்பதால் நான் அதிசயப்பட்டேன். எப்போதாவது அவர் இம்மாதிரி நடந்து கொண்டால், அதற்கு ஏதாவது முக்கிய காரணமிருக்கும்" என்று குஞ்சு ஸ்வாமி என்னிடம் கூறினார். இது குறித்து பகவான் தன்னை அழைத்து ஏதாவது விஷயம்



தெரிவிப்பார் என்று எதிர்பார்த்து குஞ்சு ஸ்வாமி காத்திருந்தார். ஆனால், பகவானோ தனியாகச் சென்று விட்டார். சற்றுத் தொலைவில் குரங்குகளால் சூழப்பட்ட நிலையில் பகவான் நின்று கொண்டிருந்ததை அவர் கவனித்தார். சுமார் அரை மணி நேரத்திற்குப் பின் திரும்பி வந்த பகவானின் கண்கள் அழுதழுது வீங்கிப் போயிருந்தன. பதறிப்போன நாங்கள், "என்னவாயிற்று பகவானே?!" என்று கேட்டோம். "இந்தக் குரங்குகள் ஸ்கந்தாச்ரமத்தில் என்னைத் தேடிப் பார்த்திருக்கின்றன. நான் அங்கிருந்து வந்துவிட்டபடியால், தங்களுக்கு வரக்கூடிய ஆபத்துக்களைப் பற்றிக் கூட சிந்திக்காமல்,

மலை முழுவதும் என்னைத் தேடிப் பார்த்திருக்கின்றன. குரங்குகள் தனித்தனிக் கூட்டமாக வாழும். மற்ற குழுவின் இடத்திற்குள் சென்றுவிட்டால் எதிரிகளின் கூட்டத்தால் மரண ஆபத்துமிருக்கலாம். இவர்கள் குழந்தை குட்டிகளோடு உயிருக்குப் பயப்படாமல் இங்கே வந்து, என்னைப் பிரிந்து வேதனைப் படுவதாகவும், நான் மீண்டும் ஸ்கந்தாச்ரமத்திற்கு வரவேண்டுமென்றும் கெஞ்சுகின்றனர். என்னுடைய நிலைமையை அவர்களுக்குப் புரியவைத்து, சமாதானம் செய்து, திருப்பி அனுப்புவதற்கு எனக்கு நீண்ட நேரம் ஆயிற்று. அவர்கள், மீண்டும் அவர்களுடைய இடத்தைப் பத்திரமாக அடைந்து விடுவார்கள் என்ற தைரியமும் கொடுத்தேன்'' என்று பகவான் பதிலிறுத்தார். இந்தச் சம்பவம் குறித்து நினைவு கூறும் போதெல்லாம், பகவானுக்கும், விலங்கினங்களுக்கும் இடையே நிலவிய, உணர்ச்சிமிக்க நெருக்கத்தை அச்சமயத்திலும் உணர்வார் என்பதால் குஞ்சு ஸ்வாமி தாங்க முடியாமல் குலுங்கி அழுவார். நம்மையும் உணரச்செய்து உணர்ச்சிவசப்படச்செய்வார். "நமக்கும், மிருகங்களுக்கும், பறவைகளுக்கும் என்ன வித்தியாசம் உள்ளது? பக்ஷிகள், பறவைகளின் உடம்பை அணிந்துள்ளன. மிருகங்கள், விலங்கு உடல்களைத் தரித்துள்ளன. நாம் மனித உடலைப் போட்டுக் கொண்டிருக்கிறோம் - வேறு வேறு சட்டைகளை அணிவது மாதிரி - அவ்வளவுதான். உண்மையில் நாம் அனைவரும் ஒரே ஆத்மா - இருப்பு மட்டுமே!'' என பகவான் அடிக்கடி கூறுவதுண்டு. குஞ்சு ஸ்வாமி மிருகங்களிடம் மிகுந்த பிரியம் உள்ளவர் என்பதால், பகவானுக்கும், மிருகங்கள், பறவைகள் இவைகளுக்கும் இடையே இருந்த உறவு பற்றிய அனைத்துக் கதைகளுமே, அவர் மூலமாகவே நமக்குக் கிடைத்துள்ளன.

ரமணாச்ரமத்திற்கு நீங்கள் சென்றால், விலங்கினத்தைச் சேர்ந்த நால்வரின் ஸமாதியைக் காண முடியும். மனிதர்களிடம் நடந்து கொண்டதைப் போன்றே, எவ்வித வித்தியாசமுமின்றி, விலங்கினங்களுடனும் பகவான் நடந்து கொண்டார். தனது தாயாருக்கு முக்தி நல்கியதைப் போன்றே, ஒரு மான், ஒரு நாய், ஒரு காகம், ஒரு பசு இவற்றிற்கு அவர் முக்தியளித்துள்ளார் என்பது மட்டுமே நாம் அறிந்து கொண்ட விஷயம். இது மட்டுமின்றி, பகவான் ஸ்கந்தாச்ரமத்திலிருந்த போது, (குஞ்சு ஸ்வாமி தானே நேரில் பார்த்த இந்த சம்பவத்தை என்னிடம் கூறினார்.) குரங்குக்குட்டி பிறந்தவுடன் அந்த குரங்குக் கூட்டம் முழுவதும் பகவானிடம் வந்து, புதிதாக பிறந்த அந்த குரங்குக் குட்டியை, ரத்தத்தோடு எடுத்து வந்து அவரது மடியில் கிடத்தின. பகவானும் அதைக் குளிப்பாட்டி தாயிடம் திருப்பிக் கொடுத்தார். இது இயற்கைக்கு மாறான, அதிசயிக்கத்தக்க நிகழ்ச்சியாகும்; ஏனென்றால் பொதுவாக மனித குலத்தவரால் தீண்டப்பட்டுவிட்டாலே, தங்கள் கூட்டத்திலிருந்து புதிதாகப்பிறந்த குட்டியை விலக்கி வைத்து விடும் வழக்கம் குரங்குகளுக்கு உண்டு. ஆச்ரமத்தில் நாய்க்குட்டிகள் பிறந்தாலும் பகவான் அதிக கவனம் எடுத்துக்கொள்வார். தங்கள் ஆவலாதிகளைத் தெரிவிக்கும் அணில்களை நடுநிலையில் நின்று, பலமுறை சமாதானம் செய்து வைத்துள்ளார். பூனைகளுக்கு உடல் நலம் குன்றிய போதெல்லாம் அவற்றையும் கவனித்துக் கொள்வார். ஒரு பூனைக்குக் கண்ணில் நோய் வந்திருந்தது. பூனையின் கண்ணைத் துடைத்துச் சுத்தம் செய்ய ஒரு துண்டை பகவான் வைத்திருந்தார். இது உடனிருந்த தொண்டருக்கு எரிச்சலை ஏற்படுத்தியது. பகவான் அந்த தொண்டரின் உணர்ச்சிகளுக்கும் மதிப்பளித்து அந்தத் துண்டைத் தானே தோய்த்து உலர்த்துவார்.

பகவான், சாதாரணமாக, யாரிடமும் எதையும் கேட்கமாட்டார். ஒரு முறை, முன்பின் தெரியாத ஒருவர், ஹாலில் பகவான் முன் வந்து அமர்ந்தார். அவரை நோக்கி, "அடுத்த முறை நீங்கள் வரும் போது எனக்கு முந்திரிப் பருப்புக் கொண்டுவர முடியுமா?'' என்று கேட்டார். அனைவரும் ஆச்சர்யத்தில் மூழ்கினர். அறிமுகமில்லாதவர்களிடம், அவர் எளிதில் பேச முற்படமாட்டார் அன்றோ. வழக்கத்துக்கு மாறாகத் தானாகப் பேசியதோடு மட்டுமல்லாமல், தனக்கு

ஏதோ கொண்டு வர வேண்டுமெனக் கெஞ்சாத குறையாகக் கேட்டிருக்கிறார். விரைவிலேயே, அணில்கள் தான் இதற்குக் காரணம் என்பதை மற்றவர்கள் புரிந்து கொண்டனர். அவை பட்டாணிக்கடலையை விட முந்திரிப் பருப்பையே அதிகம் விரும்பி உண்டன. ஆனால் ஆச்ரம நிர்வாகமோ வேறு விதமாக நினைத்தது. ''அவை சாதாரண அணில்கள் தானே! பசியாக இருந்தால் எதைக் கொடுத்தாலும் சாப்பிடும். அதனால் பட்டாணிக்கடலை கொடுத்தாலே போதுமானது'' என நிர்வாகிகள் எண்ணினர் என்றாலும், அவை பட்டாணிக் கடலையைத் தொட்டுக் கூடப் பார்க்க மறுத்தன. ஐந்தாறு அணில்கள் பகவானிடம் தங்கள் குறைகளைக் கூறிக் கொண்டிருந்தன. "அவை என்னைத் தாஜா பண்ணி 'எங்கள் உணவு எங்கே?' என்று கேட்கின்றன" என்று பகவான் விளக்கினார்.

இரண்டாவது உலக மஹா யுத்தம் நிகழ்ந்து கொண்டிருந்த சமயமாதலால், முந்திரிப்பருப்பு உற்பத்தி தேசியமயமாக்கப்பட்டிருந்தது. அதனால் கடைகளில் கிடைக்காத நிலை. ஆச்ரமச் சமையலறையிலும் முந்திரிப்பருப்பு இருக்கவில்லை. ஆஸ்ரம ஸ்டோரிலிருந்த சிறிதளவு முந்திரிப் பருப்பு அத்யாவசியத் தேவைக்கெனத் தனியாக வைக்கப்பட்டிருந்தது. பகவான், நான்கு முறை முந்திரிப் பருப்பு வேண்டுமெனக் கேட்டு அனுப்பிய போதும் "இங்கு உள்ள பருப்புக்கள், இனிப்புக்கள் செய்யத் தேவைப்படும். அதனால் அவற்றை எப்படித் தருவது?" என்று கூறி அனுப்பிவிட்டனர். கடைசியில் பகவானின் அளவு கடந்த தயை வென்றது. பகவான் தனது அசாதாரணமான கட்டுபாட்டையும், மௌனத்தையும் மீறி, வந்த விருந்தினர் மூலம் முந்திரிப் பருப்பைப் பெற முயற்சி செய்தார். பகவான் முந்திரிப்பருப்புகளை சிறிய துண்டுகளாக்குவதை பல முறை காணலாம். அவற்றைச் சிறிய பெட்டியில் போட்டு வைப்பார். தனக்கு வேண்டுமென அவர் கேட்கும் ஒரே பொருள், அணில்களுக்கான முந்திரிப் பருப்பு மட்டுமே.

பாம்புகளும், மயில்களும் கூட ரமணாச்ரமத்திற்கு அடிக்கடி வருவதுண்டு. பகவான் தனது மரணத் தறுவாயிலும் கூடத் தனது தயைக்கு ஒரு உதாரணத்தை நமக்கு அளித்துள்ளார். உடலை விடுவதற்குச் சில நொடிகளுக்கு முன், பத்மாஸனத்தில் அமரத் தனக்கு உதவி செய்யுமாறு கேட்டுக் கொண்டார். வெளியில், ஒரு வெள்ளை மயில் சத்தமிட்டுக் கொண்டிருந்தது. ஐந்து நிமிடங்கள் சென்ற பின் பகவான் கண்களைத் திறந்து ''அவனுக்குப் பசிக்கிறது. ஆகாரம் கொடுங்கள்'' என்று கூறினார். (இந்தியாவில், மிருகங்கள், பக்ஷிகள் இவற்றைச் சாதாரணமாக 'அது' என்று ஜடப்பொருளைப் போன்றே குறிப்பது வழக்கம். ஆனால் பகவான் 'அவன்' 'அவள்' என்றே குறிப்பிடுவார்.) கடைசியில் அவர் கூறிய சில வார்த்தைகளில் இவையும் அடங்கும். விலங்குகளிடமும், பறவைகளிடமும் பகவான் காட்டிய தயையை அசாதாரணமானது என்று கூடச் சொல்வது தவறு. ஏனெனில் எல்லா ஜீவராசிகளிடமும் அவர் ஒரே மாதிரியாகத்தான் நடந்து கொண்டார். மனித குலத்தையும், மற்றுமுள்ள ஜீவராசிகள் அனைத்தையும் நாம் வேறுபடுத்திக் காண்பதாலேயே, பகவான் அவற்றிடம் காட்டிய அன்பைத் தனியாகப் பெருமைப் படுத்திக் கூறுகிறோம். அவற்றிடம் அவர் தனிப்பட்ட கவனம் செலுத்தவில்லை. எல்லோரிடமும் சமமான கவனமே காட்டினார்.

தண்டபாணி ஸ்வாமிதான் சமையல் செய்வார். பகவான் அவருக்கு உதவி செய்வார். தண்டபாணி தினமும் ஒரு விதமான கள்ளிச் செடியை எடுத்து வருவார். அதை நன்றாக அறைத்தால் மட்டுமே உண்ண முடியும். பகவான்தான் அந்தப் பணியைச் செய்வார் என்பதால் நாட்கள் செல்லச் செல்ல அவரது வலது கை விரல்களில் கொப்பளங்கள் ஏற்பட்டன. பகவான்

அதைக் குறித்துச் சிறிதும் கவலைப் படவில்லை. ஆனால் குஞ்சு ஸ்வாமிக்கு அது மிகவும் வேதனையாக இருந்தது. அதனால் தண்டபாணி ஸ்வாமியை அணுகி, "நாளை முதல் அந்தக் கள்ளிச் செடியைக் கொண்டுவர வேண்டாம்" எனக் கடுப்போடு கூறினார். "இங்கு நான்தான் சமைப்பவன். என் வேலையில் நீர் குறுக்கிட வேண்டாம்" என்று அவர் பளிச்சென்று பதில் சொல்லிவிட்டார். குஞ்சு ஸ்வாமி உடனே பகவானிடம் சென்று, "பகவானே! தண்டபாணி ஸ்வாமியிடம் 'உங்கள் விரல்களில் கொப்பளங்கள் வரக் காரணமாக உள்ள அந்தக் கள்ளிச் செடியை நாளை முதல் எடுத்து வர வேண்டாம்' என நான் கூறியபோது, பிடிவாதமாகக் கொண்டுதான் வருவேன் என்று கூறுகிறார். நீங்கள் அதை அரைத்தால் நான் சாப்பிடமாட்டேன்" என்றார். மறுநாள் எந்த மாறுதலும் நிகழாததால், குஞ்சு ஸ்வாமி சாப்பிடவில்லை. இதைக் கவனித்த பகவான், "யார் யாரோ சொல்றதையெல்லாம் நான் கேட்டுத்தான் ஆகனுமென்றால், எனக்கு என்ன சுதந்திரமிருக்கு? அவர்கள் சொல்றபடி செய்யலை என்றால் உணவு சாப்பிடமாட்டார்கள்! எனக்கு சுதந்திரம் எங்கே இருக்கிறது?" என்ற போது குஞ்சு ஸ்வாமிக்குத் தன்னைத் தாக்கிய வேதனை ஏற்பட்டது. பகவான் மேலும் அவரைத் தாக்குவது போன்று "குஞ்சு நான் சாப்பிட்டாச்சு. இனி நான் எழுந்திருக்கலாமா?," "நான் இந்தப் புஸ்தகத்தைப் படிக்கலாமா? உன் அனுமதியில்லாமல் படித்தால் நீ சாப்பிடமாட்டாய்," "எனக்கு மலைமேல் நடக்கப் போகனும். நான் வெளியில் போகலாமா? சொல். இல்லாவிட்டால் நீ சாப்பிட மாட்டாய்" என்று பலவிதமாகத் தனக்கே உரிய பாணியில் அவரைப் பரிகசித்துப் பேசினார்.

இதனால் குஞ்சு ஸ்வாமிக்கு மிகுந்த மன அழுத்தமும் சோர்வும் ஏற்பட்டது. இந்த அனுபவம் மூன்று நாட்கள் நீடித்தபோது பகவானை அணுகி "பகவானே! நான் திருப்பதிக்குப் போகிறேன். எனக்கு மாலை ஆறரைக்கு ரயில்" என்று கூறினார். திருவண்ணாமலையில் இருந்து நூறு மைல் தொலைவிலுள்ள, ஆந்திரப்பிரதேசத்திலுள்ள புண்ய க்ஷேத்திரம் அது. மத்யானம் சாப்பாடுக்கப்புறம், 'நாமெல்லோரும் கிரிவலம் சென்று வருவோம்' எனப் பகவான் கூறினார். ராமகிருஷ்ண ஸ்வாமி, குஞ்சு ஸ்வாமியை நோக்கி "உங்களது ரயில் மாலை ஆறரை மணிக்குத் தான். நாமெல்லோரும் பகவானுடன் கிரிவலம் செல்வோம். 'டவுனை' நாம் நெருங்கிவிட்டால் அங்கு உங்கள் ரயிலைப் பிடித்துவிடலாம்" என்று கூறினார். பகவானுடன் நடப்பதற்குக் கிடைக்கும் வாய்ப்பை நழுவ விட மனமின்றி குஞ்சு ஸ்வாமியும் சம்மதித்தார். அன்று பகவான், வேண்டுமென்றே மிகவும் மெதுவாக நடந்தார். அவர்கள் நடந்த வேகத்தில், ஊருக்கு அருகில் அவர்கள் வருவதற்குள் ரயில் கிளம்பியிருந்தது. "அங்கே பார் குஞ்சு. உனது ரயில் கிளம்பறது. ஓடிப் போய் ஏறிக்கோ" என்று கூறி பின்னர் அவரைச் சமாதானம் செய்ய முற்பட்டார். "உன்னால் ஆச்ரம உணவையே சாப்பிட முடியாது. கார சாரமாக இருக்கு என்று ரஸம், சாம்பாரில் தண்ணீரைச் சேர்த்து நீர்க்கச் செய்து சாப்பிடுவாய். ஆந்திராவில் எல்லாத்துலயும் மிளகாய் சேர்த்தே செய்வார்கள். அங்கே உன்னால் எப்படிச் சாப்பிட முடியும்?" என்று பகவான் கேட்ட உடன் குஞ்சு ஸ்வாமி அவர் பாதங்களில் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். பிற்காலத்தில் இச்சம்பவம் பற்றிக் கூறும்போது "இரவும் பகலும் பகவானுக்குப் பணிவிடை செய்ததால் அவர் அருகிலேயே நான் இருந்தேன். இதனால் எனக்குக் கர்வம் ஏற்பட்டு, நானே அவரது சிறந்த பக்தன், தொண்டன் என்றும், எல்லோரையும் விட மேலானவன் என்றும் எண்ண ஆரம்பித்தேன். பகவான் ஒரு லீலையைச் செய்து, ஸஹஜமாகவும் அழகாகவும் எனக்குப் பாடம் புகட்டினார்" என்று குஞ்சு ஸ்வாமி கூறினார்.

ராமகிருஷ்ண ஸ்வாமிக்கு வாஸு என்ற ஒரு தம்பி இருந்தார். திருவண்ணாமலையில் இருந்து நானூறு மைல் தொலைவிலுள்ள ஒரு கல்லூரியில் படித்து வந்தார். வாஸு, ஒரு ஹடயோகியின் உபதேசங்களைப் பின்பற்றி, புருவ மத்தியில் மனதைக் குவித்துத் தியானம் பழகுவதாக ராமகிருஷ்ண

ஸ்வாமிக்கு அவரது குடும்பத்தினர் கடிதம் எழுதியிருந்தனர். மிகவும் உறுதியோடு இவ்வாறு பழகி வந்ததால் வாஸுவிற்குச் சித்தப் பிரமை ஏற்பட்டது. சாப்பிடவோ, தூங்கவோ முடியாமல், பரிதாபமான நிலையில் அவர் இருந்தார். குடும்பத்தினரின் அறிவுரையைக் கேட்காமல், பழக்கத்தை விட மறுத்தார். பகவானுக்கு அந்தக் குடும்பத்தில் அனைவரையும் தெரியுமென்பதால், ராமகிருஷ்ண ஸ்வாமி பகவானிடம் விஷயத்தை எடுத்துரைத்து "பகவானே! நான் சென்றால் என் பேச்சை அவன் கேட்கமாட்டான்." என்றார். உடனே பகவான் குஞ்சு ஸ்வாமியிடம் "நீ போய் உபதேசத்தைப் பற்றி எடுத்துக் கூறு." என்று அனுப்பினார். குஞ்சு ஸ்வாமிக்குக் கொடுப்பதற்கு, ராமகிருஷ்ண ஸ்வாமியிடம் ஐந்து ரூபாய் மட்டுமே இருந்தது. அது ரயில் டிக்கெட் வாங்குவதற்கு மட்டும் போதுமானதே தவிர, வழியில் உணவு வாங்குவதற்குப் போதாது. இதைப் பகவானிடம் எப்படித் தெரிவிப்பது என அவர்கள் தயங்கினர். கடைசியில், 'பரவாயில்லை. பகவான் போகச் சொல்வதால், நான் செல்கிறேன். நான் பட்டினியாக இருந்தாலும் பாதகமில்லை' என்று சமாதானம் செய்து கொண்டார், குஞ்சு ஸ்வாமி. மாலை ஆறரை மணிக்கு அவருக்கு ரயில்.

மதியம் மூன்று மணிக்கு ஆச்ரமத்திற்கு வந்த ஒருவர் சில பூரிகளை எடுத்து வந்தார். வழக்கமாக சிறிதாக இருந்தால் இரண்டும், பெரியதாக இருந்தால் ஒன்றை மட்டுமே பகவான் உண்பார். சமமாகப் பகிர்ந்து உண்ணும் பழக்கமுள்ள பகவான், ஒரே ஒரு பூரி இருந்தால், அதைச் சிறு, சிறு துண்டுகளாக்கிச் சமமாக எல்லோருக்கும் விநியோகித்து விடுவார். ஆனால் அன்று, பூரி பரிமாறப்பட்ட போது, பகவான் ஒன்றோடு போதுமெனக் கூறவில்லை. வந்தவர், இரண்டு பூரிகளைப் பரிமாறிய பின் சற்று காத்து நின்றார். பகவானிடமிருந்து எந்த சமிக்ஞையும் வராததால் தொடர்ந்து, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு எனப் போட்ட பின்னரே "போதும்" என்று கூறினார் பகவான். சாதாரணமாக ஒன்றை மட்டுமே உண்ணும் பகவான் அன்று ஆறு பூரிகளை ஏற்றுக் கொண்டது, அனைவரையும் ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது. அதுவரை தனது பிரச்சனையைக் கூறாத குஞ்சு ஸ்வாமியை அழைத்து, ஐந்து பூரிகளை அழகாகப் பொட்டலமாகக் கட்டி, அவரிடம் தந்தார். "டிக்கெட்டுக்கான பணம் தானே உன்னிடம் இருக்கு! என்ன சாப்பிடுவாய்? இவற்றை எடுத்துச் சென்று வழியில் சாப்பிடு" என்று கொடுத்தார். குஞ்சு ஸ்வாமி உருகிப் போனார். இச்சம்பவம் பற்றிக் கூறும் போதெல்லாம், தான் கண்ணீர் சிந்துவதோடு, நம்மையும் அழ வைத்து விடுவார் அவர். மென்மையும் அன்பும் கலந்த பகவானின் கவனிப்பு அத்துணை அழகானது

குஞ்சு ஸ்வாமியும் பிறரிடம் அக்கறை காட்டக் கூடியவர். அடுத்த இரு தினங்களில் நான்கு பூரிகளை மட்டுமே அவர் உண்டார். பகவானே கட்டிக் கொடுத்ததில் எஞ்சிய ஒன்றை ராமகிருஷ்ணன் குடும்பத்தாருக்குப் பிரஸாதமாக எடுத்துச் சென்று, வாஸுவிற்கு முதலில் அளித்தார். பின் வாஸுவை ஹடயோகப் பாதையிலிருந்து, பகவானுடைய ஆத்ம விசாரப் பாதையில் திருப்பிவிடச் சில நாட்கள் ஆயின. அவரிடம் மாற்றம் ஏற்பட்டு வருவதை உறுதிசெய்து கொண்டபின் ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்து, பகவானிடம் விஷயங்களைக் கூறினார். அவர் திரும்பி வருவதற்குள்ளாகவே, வாஸு ஹடயோகத்தை விட்டு பகவானது ஆத்ம விசாரம் செய்யும் தகவல் கடிதம் மூலம் தெரிவிக்கப்பட்டிருந்தது. வாஸு பின்னர், காவல் துறையில் சேர்ந்து, உயர்ந்த அதிகாரியின் பதவியை அடைந்தார். அவர் அத்துறையிலிருந்து ஓய்வு பெற்றபின் நான் அவரைச் சந்தித்தேன். வாட்டசாட்டமாக ஆறடி உயரமிருந்த அவர், பூரிப் பிரஸாதத்தின் பெருமையாலும், ஆத்ம விசாரத்தாலும் தெளிவான, கபடமில்லா மனத்தோடு இருந்தார்.

நின்றார். பகவான் அவரைப் பார்த்து "உனக்கு இங்கு என்ன வேலை? இவர்களோடு நீ ஏன் சேர்ந்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்ட போது, அவர்களுடன் சேர்ந்து கொள்ளும் பொருட்டு அங்கு அவர் வராததால் குஞ்சு ஸ்வாமியால் பதில் கூற முடியவில்லை. பகவான் மீண்டும் "நீ எதற்காக இங்கு வந்தாய்?" என்று கேட்கவும் "தங்கள் ஆசியைப் பெற" என்று குஞ்சு ஸ்வாமி பதிலளித்தார். "அப்படியானால் அந்த வேலையைப் பார். இங்கு எதற்கு நிற்கிறாய்?" என்று கடிந்து கொண்டார். 'நாம் எதற்கு வந்துள்ளோமோ அதை மட்டும் தான் கவனிக்க வேண்டும்' என்னும் பாடத்தை அன்று பகவான் அவருக்குப் புகட்டினார். இந்த உண்மையை ஒவ்வொருவரும் உணரவேண்டும் என்பதற்காக பகவான் இவ்வாறு சொன்னாரேயன்றி, குஞ்சு ஸ்வாமிக்காக மட்டும் இது சொல்லப்பட்டதன்று. இது பகவானது நேரடி உபதேசம். குஞ்சு ஸ்வாமியால் என்னிடம் உறுதியாகக் கூறப்பட்ட இது - அதாவது பிறர் விஷயங்களில் தலையிடாமல் இருக்க வேண்டுமென்பது மிகவும் பத்திரமான, நடைமுறைக்கு ஒத்துவரக் கூடிய ஒரு உபதேசம் என்பதில் ஐயமில்லை.

1932-ல், பகவானுக்குப் பன்னிரண்டு ஆண்டுகள் தனிப்பட்ட முறையில், இரவும் பகலும் சேவை செய்த பின், தன் ஆத்ம விசார ஸாதனையைத் தீவிரப்படுத்தும் பொருட்டு, குஞ்சு ஸ்வாமி ஆச்ரமத்திலிருந்து விலகி நிற்க விரும்பினார். பகவானுக்கு எவ்வாறு பணிவிடைகளைச் செய்ய வேண்டும் என்பதை மாதவ ஸ்வாமி என்ற இளைஞருக்குப் பயிற்றுவித்தார். தான் பணியிலிருந்து ஓய்வு பெற்று, அடுத்துள்ள பலாக்கொத்தில் தங்கப் போவதைப் பகவானிடம் தெரிவிக்கத் தகுந்தநாளை எதிர்பார்த்திருந்தார். எவ்வாறு இதைத் தெரிவிப்பதென்று அறியாமல் தயங்கினார். இந்தச் சிக்கலான நிலையில், ஒரு நாள் பழைய ஹாலுக்குள் அவர் நுழைந்த போது, பகவான் "உண்மையான சேவை என்பது, எனது உடற்தேவைகளைக் கவனிப்பதாகாது. அது என் உபதேசங்களைக் கடைப்பிடிப்பதே" என்று மற்றவர்களுக்கு விளக்கிக் கொண்டிருந்தார். "நான் குருவிற்கு சரீர சம்பந்தமான பணிவிடைகள் செய்கிறேன் என்றிருப்பதில் எந்தப் பயனுமில்லை. "குருவின் உபதேசங்களை அன்றாடம் கடைப்பிடிக்க வேண்டும்," என்று முன்னர் ஒரு முறை பகவான் கூறியிருந்தார். சில நாட்களுக்குப் பிறகு, வேறொரு தருணத்தில் "குருவிற்குச் செய்யும் மிகச் சிறந்த தொண்டு, ஆத்மவிசாரம், தியானம், மனம், வாக்கு, உடம்பு இவற்றைச் சுத்தமாக்கும் ஆன்மீக ஸாதனைகள் இவற்றைப் பழகுவதே" என்று பகவான் கூறியதைக் கேட்டார். குஞ்சு ஸ்வாமியின் காதுகளில், காலையிலும், மாலையிலும் மீண்டும் மீண்டும் இத்தகைய உபதேசங்கள் விழுந்த வண்ணமிருந்தன. பகவானிடம் கூற அவர் தயங்கிய போதும், பகவான், குறிப்பால் அவருக்கு விடையளித்து வந்தார். மற்றொரு நாள், குஞ்சு ஸ்வாமி பழைய ஹாலுக்குள் நுழையும் போது, கைவல்ய நவநீதத்தில், 'சீடன் குருவிடம், தான் அவரது அருளுக்கு என்ன கைம்மாறு செய்ய முடியும்?' என்று கேட்கும் பகுதிக்குப் பகவான் விளக்கம் கூறிக் கொண்டிருந்தார். 'புறத்தடைகளும், வெளி நாட்டங்களும் அமைதியைக் குலைக்காதபடி ஸ்வரூபநிஷ்டனாக நீ இருப்பாயானால், அதுவே எனக்குச் செய்யும் பேருதவி' என்று குரு சீடனிடம் பதிலளிக்கிறார்.

இதன் பிறகு, குஞ்சு ஸ்வாமிக்குத் தைரியம் வந்தது. "பகவான்! நான் பலாக்கொத்தில் இருந்து கொண்டு, ஆத்ம விசாரத்தில் ஈடுபட விரும்புகிறேன்" என்று தெரிவித்தார். பகவான் மிக்க மகிழ்ச்சியோடு "அப்படியா! ரொம்ப நல்லது. வேறு எதிலும் மனதை விடாமல் விசாரம், தியானம், ஜபம், பாராயணம் இவற்றில் மட்டும் ஈடுபடுத்தினால் போதும்" என்று பதிலளித்தார். குஞ்சு ஸ்வாமி மீண்டும் ஸாஷ்டாங்கமாக வணங்கி "பகவானே! என்னை ஆசீர்வதியுங்கள். நான் உங்களைப் பிரிந்து தனியே செல்கிறேன். என்னை வழிநடத்துங்கள்" என்று பிரார்த்தித்தார். பகவான் தனது அருட்பார்வையை அவர் மீது செலுத்தி, "உனது முடிவான குறிக்கோள் ஆத்ம விசாரம் என்று

கொள். ஆனால் தியானம், ஜபம், பாராயணம் இவற்றையும் விடாமல் பழகு. தியானத்தில் களைப்பு ஏற்பட்டால் ஜபம் செய். ஜபத்தில் சலிப்பு ஏற்பட்டால் ஆத்ம விசாரம் செய். அதில் களைப்புத் தோன்றினால் பாடல்களை ஓது. இவற்றில் ஏதாவதொண்ணைச்செய்து கொண்டிரு. உன் வேலையிலிருந்து மனம் வெளியே செல்லாமல் கவனித்துக் கொள். இதை நம்பிக்கையுடன் பழகினால், முடிவில் ஆத்ம விசாரத்தில் நிலைபெற்று, ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறுவாய்" என்றார். பகவானுடைய இந்த உறுதிமொழி குஞ்சு ஸ்வாமிக்கு மட்டும் கொடுக்கப்பட்டதன்று. குருவின் இந்த ஆழ்ந்த கருத்துக்களைச் கேட்பவர் அனைவருக்குமே கூறப்பட்டது. இப்போதே நீங்கள் எந்த மெய்ப்பொருளாக இருக்கிறீர்களோ, அந்த ஸத்தியத்தில் ஆத்ம விசாரம் உங்களை நிலை நிறுத்தும் என்பதில் ஐயமில்லை.

குஞ்சு ஸ்வாமி பலாக்கொத்தில் சிறிய குடிசை ஒன்றில் வாழ்ந்து வந்தார். பணம் சம்பாதிக்கவோ, அல்லது பிக்ஷை எடுக்கவோ அவர் முற்படவில்லை. அவர் வசம் இருந்த மளிகைச் சாமான்கள் தீர்ந்துபோன நிலையில், உண்ண உணவு இருக்கவில்லை. மதிய உணவிற்குப் பின், பகவான் பலாக்கொத்திற்குச் சென்று, அங்கிருந்த சிறிய குளத்தைச் சுற்றி நடப்பார். குஞ்சு ஸ்வாமியைத் தவறாமல் சென்று பார்த்து, "எப்படி இருக்கிறாய்? என்ன செய்துகொண்டிருக்கிறாய்? தியானம் செய்கிறாயா? ஆத்ம விசாரம் செய்கிறாயா? என்றெல்லாம் விசாரிப்பார். குஞ்சு ஸ்வாமி அவரது நிலைமையை பகவானிடம் கூறவேயில்லை. தனக்கு உடலளவில் இருந்த பிரச்சனைகளைத் தன் குருவிடம் கூறுவது அற்பத்தனமென அவர் எண்ணினார். குருவுக்குத் தெரியாதா என்ன? பலாக்கொத்திற்குக் குஞ்சு ஸ்வாமி சென்ற மூன்றாவது நாள், பகவானது பணக்கார பக்தரான ஒரு கவுண்டர், ஹாலில் அவரைப் பார்த்து நமஸ்கரித்தார். அவர் குஞ்சு ஸ்வாமியின் நண்பர். "ஓ! உங்கள் நண்பனைக் காண வந்தீரா?" என்று பகவான் கேட்கவும் "ஆம் பகவான். நேற்று நாள் முழுவதும் வேலை செய்து களைத்துப்போன நான், அயர்ந்து உறங்கி விட்டேன். நீங்கள் என் கனவில் தோன்றி 'நீ அமைதியாகத் தூங்கிக் கொண்டிருக்கிறாய். ஆனால் உனது நண்பன் மூன்று நாட்களாகப் பட்டினியாக இருக்கிறான். நீ மட்டும் இவ்வாறு தூங்குவது உனக்கே சரியாகப் படுகிறதா?' என்று கேட்டீர்கள். அதனால் உடனே எழுந்து, ஒரு ரயிலைப் பிடித்து இங்கு வந்தேன்" என அவர் கூறினார். "போய் உங்கள் நண்பனைப் பாரும்" எனப் பகவான் அனுப்பி வைத்தார். அவர் குஞ்சு ஸ்வாமியைப் பார்த்த போது, அவர் மூன்று நாட்களாகப் சாப்பிடவில்லை என்பதையும், அவரது எளிய குடிசையில் எதுவுமே இல்லை என்பதையும் உணர்ந்து கொண்டார். மளிகை சாமான்களுக்காகப் பணமும் தந்து, ஆகாரமும் அளித்தார். அவர் திரும்பச் செல்ல வேண்டியதாக இருந்ததால், பகவான் முன்னிலையில் "பகவானே! குஞ்சு ஸ்வாமி பட்டினி கிடப்பதற்கு இனி நான் விடமாட்டேன். மாதந்தோறும் அவருக்கு ஐந்து ரூபாய் அனுப்பி வைக்கிறேன்" என்று வாக்குக் கொடுத்தார். அந்த நாட்களில், ஒருவரது தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு, ஐந்து ரூபாயே அதிகம். "என்னிடம் பாத்திரங்களோ, வேறு பொருட்களோ எதுவும் இருக்கவில்லை. மற்றொரு நண்பர் இதை உணர்ந்து ஒரு அடுப்பு, மளிகைப் பொருட்கள் இவற்றை வாங்கித் தந்தார். பல ஆண்டுகளுக்குப் பின், கவுண்டர், குஞ்சு ஸ்வாமிக்கென ஆச்ரமத்திற்கு எதிர்ப்புறம் ஒரு வீட்டைக் கூடக் கட்டிக் கொடுத்தார். நீங்கள் மெய்ப்பொருளாகிய குருவிடம் சரணடைந்து விட்டால், பிரார்த்தனை செய்வதற்குக் கூடத் தேவையில்லை. அவருக்கு எல்லாமே தெரியும். அது அது நடக்கவேண்டிய சமயத்தில் நடக்கும்" என்று குஞ்சு ஸ்வாமி கண்ணீர் மல்கக் கூறுவார்.

அவர் பலாக்கொத்தில் இருந்த சமயத்தில், ரமணாச்ரமம் வேகமாக வளரத் தொடங்கியது. ஆச்ரமத்திற்குப் புதிதாகப் பலரும் வர ஆரம்பித்தனர். பகவானுடன் தினமும் ஒரு வாக்கியமாவது

பேசவில்லை என்றால் குஞ்சு ஸ்வாமிக்குத் திருப்தி ஏற்படாது. பகவானுக்கு நிறைய வேலைகள் இருந்ததால், அந்த விருப்பம் நிறைவேறுவது மேலும் மேலும் கடினமாகிக் கொண்டிருந்தது. குஞ்சு ஸ்வாமி, கீழ்க்காணும் சம்பவத்தை மிகுந்த சந்தோஷத்தோடு நினைவு கூறும் போது "நான் மிகவும் தந்திரக்காரன். தினமும் மாலையில் பகவான் இயற்றிய தமிழ்ப் பாடல்களை. நூல் திரட்டிலிருந்து பாராயணம் செய்வோம். நான் பாடும் போது, வேண்டுமென்றே ஒரு வரியை விட்டுவிட்டுப் பாடுவேன். 'ஏய்! குஞ்சு! நீ ஒரு வரியை விட்டு விட்டாய்' என்று பகவான் கூறுவார். அல்லது ஏதாவது வார்த்தையைத் தவறாக உச்சரித்தால் 'இல்லை, இல்லை. குஞ்சு! அப்படியில்லை. சரியாக உச்சரி' எனத் திருத்துவார். என்னிடம் அவர் பேசிவிட்டதால் மிக்க சந்தோஷம் அடைவேன். பகவான் என்னிடம் பேச வேண்டுமென்று நான் விரும்பினால், அதை எப்படிச் சாதிக்க வேண்டும் என்ற தந்திரத்தை நான் அறிந்திருந்தேன்" என்று குஞ்சு ஸ்வாமி கூறுவார்.

பகவானுடைய நூல் திரட்டு, தமிழில் புத்தகமாக வெளியிடப்பட்டது. துரதிருஷ்டவசமாக, அதை ஆச்ரமத்திலிருந்து வாங்கும் வசதி பல ஸாதுக்களுக்கும் இருக்க வில்லை. அதனால், ஒரு பக்தரின் உதவியோடு, அவற்றை ஒரு நோட்டில் எழுதிக் குஞ்சு ஸ்வாமியிடம் கொடுத்தார் பகவான். அதில், அச்சடிக்கப்பட்ட, பகவானின் சிறிய புகைப்படம் ஒன்றும் ஒட்டப்பட்டிருந்தது. தனது நூல்திரட்டுப் பிரதியில் அருணாசலத்தின் புகைப்படம் ஒன்றை ஒட்ட விரும்பினார் குஞ்சு ஸ்வாமி. ஆனால் அவருக்குப் படம் கிடைக்கவில்லை. அவர், அதைப் பற்றிய சிந்தனையில் மூழ்கியிருந்த போது, பகவான் அவரைக் கூப்பிட்டு "குஞ்சு! உன் நோட்டுப் புத்தகத்தை கொண்டு வா" என்று கூறி அதில் அருணாசலத்தின் படத்தை வரைந்தார். குஞ்சு ஸ்வாமி அந்த நோட்டை, அனுராதா என்ற மற்றொரு பக்தையிடம், பரம்பரை சொத்தாக அளித்தார். அதில், நிறைய பகவானுடைய கையெழுத்தும், மேற்கூறிய, அவர் வரைந்த படமும் உள்ளது. அனுராதா அந்த விலைமதிக்க முடியாத பொக்கிஷத்தை தற்போது. ஆச்ரம ஆவணங்கள் வைக்கப்படும் இடத்தில் சேர்த்துவிட்டார்.



பகவானின் உபதேசங்களுக்கு குஞ்சு ஸ்வாமி விளக்கம் கொடுத்தல்
(கனகம்மா, அனுராதா மற்றும் கணேசன் பார்வையாளர்கள் மத்தியில் அமர்ந்துள்ளனர்)

அச்சிடப்படும் பகவானது புத்தகங்களை, பகவானே பிழை திருத்தம் செய்வார். தனக்கு இரண்டு பிரதிகளைக் கேட்பார். ஒன்றில், திருத்தம் செய்து அச்சகத்துக்கு அனுப்புவார். மற்றதைத் தன்னிடமே வைத்திருப்பார். பொதுவாகப் பிழைகள் அதிகம் இருக்கும் என்பதால் ஒரு பிரதியையே நான்கைந்து முறை திருத்த நேரிடும். அவ்வாறு வரும் ஒவ்வொரு பிரதியையும் பத்திரமாக வைத்திருந்து. நான்கைந்து புத்தகங்களாக்கிவிடுவார். பிழைகள் மலிந்துள்ள பிரதியைத் தான்

வைத்துக் கொண்டு, குறைவாக உள்ளவற்றைக் குஞ்சு ஸ்வாமிக்கும், விலைகொடுத்து வாங்க வசதியில்லாத மற்றவர்களுக்கும் கொடுப்பார். பகவானுடைய கருணையும் தயையும் அத்தகையது.

ஒரு சமயம், தொடர்ந்து தியானிக்கவோ, ஆத்ம விசாரத்தில் ஈடுபட்டு ஆத்மாவில் நிலை நிற்கவோ குஞ்சு ஸ்வாமியால் இயலவில்லை. இந்த நிலை குறித்துப் பகவானிடம் தெரிவித்து "என்னால் நிலைத்து நிற்க இயலவில்லை. தடை ஏற்படுகிறது" என்று கூறியபோது "ஏன்? அது மிகவும் எளிது தானே! தூங்கப் போகும்முன், தியானம் செய்து ஆத்மாவில் நிலை நிறுத்து. நீ அப்படியே தூங்கிவிடவும் செய்வாய். அப்போது, நீ உறங்கிய நேரம் முழுவதுமே ஆத்மாவில் தான் தியானத்தில் லயித்திருப்பாய். காலையில் விழித்த பின், சில நிமிடங்கள் தியானம் செய்து, ஆத்மாவில் நில். இவ்வாறு செய்யும் போது, விழிப்பு நிலையில் நீ வேலை செய்தாலும், சர்ச்சையிலோ சண்டையிலோ ஈடுபட்டாலும், அடி நீரோட்டம் போன்று ஆத்மாவில் தான் இருப்பாய். கீழே அமையும் இந்த உட்தளம் உன்னை ஆத்மாவில் நிலை நிறுத்தும்" என்று அவர் கூறினார். "பகவானிடம் நான் பெற்ற உபதேசங்களில் இது மிகச் சிறந்ததும், கடைப்பிடிக்கச் சுலபமானதும் ஆகும்" என்று குஞ்சு ஸ்வாமி கூறினார்.



**தமிழ் பாராயணம் – குஞ்சு ஸ்வாமி நடுவில் அமர்ந்திருக்கிறார்**

பகவானுடைய இறுதி நாட்களில், ஆச்ரம நிர்வாகம் பல பிரச்சனைகளை எதிர் கொள்ள வேண்டியிருந்தது. தங்கள் பணிகளை எவ்வாறு தொடர்வது என்பது பக்தர்களுக்கு விளங்கவில்லை. அதனால் குஞ்சு ஸ்வாமியுடன் பகவானை அணுகினர். "இப்போது ஆச்ரம நிர்வாகம் எவ்வாறு நடக்கிறது? நீங்கள் நிர்வகிக்கிறீர்களா? அல்லது வேறு யாரோ நடத்திச் செல்வதாக எண்ணுகிறீர்களா? எல்லாவற்றையும் நடத்தும் உயர்ந்த சக்திதான் இதை எல்லாம் நடத்திச் செல்கிறது. அதே சக்தி, தொடர்ந்து இதை நடத்திக் கொள்ளும்" என்று பகவான் கூறினார். பகவான் தேஹத்யாகம் செய்யும் சமயம் வந்த போது, பக்தர்கள் மீண்டும் பகவானுடைய வழிகாட்டுதல்

வேண்டுமென விரும்பினர். "பக்தர்களாகிய நாங்கள் என்ன செய்ய வேண்டும்?" என்று மிகுந்த கவலையுடன் வினவினர். குஞ்சு ஸ்வாமியுடன் இருபது பேர் சென்று பகவானிடம் பிரார்த்தித்தனர். "பகவானே! எங்களுக்கு வழி காட்டுங்கள்" என்று கேட்டபோது, அவர், அந்த பக்தர்களுக்கு மட்டுமின்றி அனைவருக்குமே உரியதான தனது கடைசி உபதேசத்தை - 'உபதேசங்களைக் கடைப்பிடியுங்கள்' என்று கூறியருளினார்.

குருவைப் பற்றிய கதைகளைக் கூறிக் குஞ்சு ஸ்வாமி எங்களை மெய் மறக்கச் செய்துவிடுவார். நான் உங்களுடன் பகிர்ந்து கொள்ளும் விஷயங்கள் அனைத்துமே அவர் தந்த பிரஸாதம், தான். மற்ற பக்தர்கள் பற்றிய தகவல்கள், நினைவுகள், பகவானுடன் அவர்களுக்கு இருந்த உறவு, குரங்குகள், மிருகங்கள், மனிதர்கள், மரங்கள், செடிகள், பாறைகளுடன் கூடிய மலை, ஏன்? அதன் மணற்துகள்களுடனும் கூட அவர் கொண்டிருந்த அருமையான உறவு என்ற பெரிய சொத்தைத் தந்தவர் அவரே. நாம் அனைவருமே அவருக்கு நன்றிக் கடன் பட்டுள்ளோம். அவர் என் மீது காட்டிய அக்கறையை என்னால் ஒருபோதும் மறக்க முடியாது. சாட்விக்கின் (Chadwick) பழைய அறையைக் குஞ்சு ஸ்வாமியின் உபயோகத்திற்குக் கொடுத்திருந்தேன். "கணேசா! பக்கத்து அறைக்கு வந்து நீ என்னோடு இரு" என்று அழைத்தார். ஆச்ரமத்தில், பல பொறுப்புக்கள் உள்ள ஒரு நபராக நான் இருந்தும், என்னைக் குழந்தையைப் போல் கவனித்துக் கொண்டார். அத்தனை கருணை அவருக்கு!

உடல் ரீதியிலான பல வேதனைகளை அவர் அனுபவித்ததால், அவருக்கு இரு தொண்டர்களை ஏற்பாடு செய்திருந்தேன். இத்தொண்டர்கள் தங்கள் கடமைகளைச் சிறப்பாகச் செய்த போதும், சில சமயங்களில் அசட்டுத்தனமாகத் தவறிழைத்து விடுவார்கள். குஞ்சு ஸ்வாமி குறை ஏதும் கூறமாட்டார். ஒரு நாள் "ஸ்வாமி! அவர்கள் உங்களைச் சரியாகக் கவனித்துக் கொள்கிறார்களா?" என்று கேட்டேன். "நன்றாகப் பார்த்துக் கொள்கிறார்கள். உண்மையில், உன்னை அழைத்து, மனித குலத்துக்கு ஒரு நல்ல செய்தியைத் தர எண்ணினேன்" என்று கூறினார். எனக்குப் புதிராக இருந்ததால் "ஸ்வாமி நீங்கள் எதைப்பற்றிக் கூறுகிறீர்கள்?" என்று நான் கேட்ட போது "உடம்பில் தேனை நன்கு தேய்த்துவிட்டால், தசை சம்பந்தமான வலிகள் எல்லாம் குணமாகிவிடும் என்பது உனக்குத் தெரியுமா?" என்று அவர் கேட்டபோது, "இப்போதும் ஒன்றும் புரியவில்லையே ஸ்வாமி!" என்று நான் பதிலிறுத்தேன். குஞ்சு ஸ்வாமிக்கு உடம்பில் தேய்க்க வேண்டிய தேன் நிற பாட்டிலில் இருந்த எண்ணெய்க்குப் பதிலாக அருகில் வைக்கப்பட்டிருந்த தேனைத் தவறுதலாக, எடுத்துத் தொண்டர்கள் உடம்பில் தேய்த்துள்ள விபரம் பின்னர்தான் தெரியவந்தது.



குஞ்சு ஸ்வாமி அனுராதாவுடன்

அவ்வாறு மாற்றித் தேய்த்தது எவ்விதத்திலும் பிரயோசனப் படவில்லை என்ற போதும், "மருத்துவ ரீதியிலான புதியதொரு கண்டுபிடிப்பை வெளியிடலாமென எண்ணினேன். ஆனால் அது நிறைவேறவில்லை" என்று மட்டுமே குஞ்சு ஸ்வாமி கூறினார். குறையாகச் சொல்லாமல், மிகுந்த வேதனைக்கு இடையிலும், தான் சொல்ல வேண்டியதை மறைமுகமாக எடுத்துரைத்தார்.

கடைசி நாட்களில், அவர் அநேகமாகப் படுத்தபடுக்கையாக இருந்தார். அனுராதாவும், நானும் மற்றும் சிலரோடு அவரைப் பார்க்கச் சென்று, வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருப்போம். பகவானுடைய பாடல்கள் பற்றி ஏதாவது கூறும்படி அவரிடம் கேட்டால் அவருக்குப் புத்துணர்வு வந்துவிடும். அனுராதாவின் மகன் சங்கர், பள்ளிப் படிப்பை முடித்து, மருத்துவப் படிப்பின் பொருட்டு விரைவிலேயே அமெரிக்காவிற்குச் செல்வதாக இருந்தான். அவனை அநேகமாக குஞ்சு



குஞ்சு ஸ்வாமியின் தொண்ணூறாவது பிறந்த நாளில் கணேசன் அவரை வணங்கி சிறப்பித்தல்

ஸ்வாமிதான் வளர்த்தார் என்பதால், அவனுக்கு அவரை மிகவும் பிடிக்கும். அடுத்த முறை தான் அமெரிக்காவிலிருந்து வரும் போது குஞ்சு ஸ்வாமி உயிரோடு இருக்கமாட்டார் என்பதை அவன் உணர்ந்திருந்தான். அது அவனை மிகுந்த துயரத்தில் ஆழ்த்தியது. நாங்கள் குஞ்சு ஸ்வாமியை உற்சாக மூட்ட நினைத்த அதே சமயத்தில், அவர் அவனை சந்தோஷப் படுத்த எண்ணினார். சங்கரரின் நூல்களைப் பகவான் தமிழாக்கம் செய்ததில் உங்களுக்குப் பிடித்த பாடல் எது?' என்று நான் கேட்டபோது, குஞ்சு ஸ்வாமி என்மீது தன் பார்வையை நிலை நாட்டினார்.

நான் தொடர்ந்து "'நான் ஆத்மாவாக இருக்கிறேன்! நான் உணர்வாக இருக்கிறேன்' என்று எதில் கூறப்பட்டுள்ளதோ அந்தப் பாடலே எனக்கு மிகவும் விருப்பமானது. ஆனால் 'நீ ஆத்மாவாக

இருக்கிறாய், நீ 'அதுவாக' இருக்கிறாய்' என்று கூறும் பாடலே அனுராதாவிற்குப் பிடித்தது. நீங்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்?" என்று கேட்ட போது, குஞ்சு ஸ்வாமி "அனுராதா முதலில் பாடட்டும்" என்று சொன்னார். 'அவ்வான்மா நான்' எனக் கூறும் ஹஸ்தாமலக ஸ்தோத்திரத்தை அனுராதா முதலில் பாடினார். அடுத்து 'அவ்வஸ்து அன்றோ நீ தான்' எனக் கூறும் குருஸ்துதியைப் பாடினார். நான் மீண்டும் "நீங்கள் 'நான் 'அதுவாக' இருக்கிறேன்' கட்சியா? அல்லது 'நீ 'அதுவாக' இருக்கிறாய்' கட்சியா?" என வினவினேன். குஞ்சு ஸ்வாமி எங்களைப் பார்த்துச் சிரித்தவாறு "'நீ' 'நான்' என்ற இரண்டிற்கும் என்ன வித்தியாசம் உள்ளது? 'நீ அதுவாக இருக்கிறாய்' என்பதில் முக்கியமான சொல் 'இருக்கிறாய்' என்பது தானே தவிர, 'நீயோ' 'அதுவோ' அன்று. 'இருக்கிறாய்' என்பதில் இரண்டுமே கலந்து விடுகின்றன. 'நான் அதுவாக இருக்கிறேன்' என்பதில், 'இருக்கிறேன்' தான் முக்கியச் சொல் 'நானோ, அதுவோ' அன்று. அதனால் 'இருப்பாக' இரு" என்று குஞ்சு ஸ்வாமி கூறினார்.

அந்தப் பாடல்களைக் கேட்ட சில நாட்களிலேயே அவர் உடலை உகுத்தார். கடைசி இரவில், அவரது மரக்கட்டிலில் இருந்த திண்டுகளை நீக்கிப் பத்மாஸனத்தில் உட்கார வைக்குமாறு கேட்டுக் கொண்டார். "நான் தியானம் செய்யப் போகிறேன்" என்று கூறி, ஆழ்ந்த தியானத்தில் மூழ்கினார். தொண்டர்களும் உறக்கத்தில் ஆழ்ந்தனர். 2 மணி நேரம் கழித்து அவர்கள் விழித்த போது, குஞ்சு ஸ்வாமியின் உடல் சில்லிட்டுப் போயிருந்தது. மௌனத்திலேயே அவர் உயிர் நீத்திருந்தார். அவரது இதயம், அருணாசலத்தில், ஸத்குரு ரமணரின் பாதங்களில் என்றும் வாழ்ந்து கொண்டிருக்கும்.



# 25 நிரஞ்ஜனானந்த ஸ்வாமி (சின்னஸ்வாமி)



திருச்சி ஸ்வாமி என்ற ஒரு பெரிய மஹான் என்னை ஆசீர்வதித்து அறிவுரை வழங்கிய போது, "ஆன்மீகத்தில் நிறைவு வரவேண்டுமானால் ஒருவருடைய இதயம் ரோஜா இதழைப் போன்று மென்மையாகவும், இரும்பைப் போன்று கடினமானதாகவும், எளிதில் தகர்க்க முடியாததாகவும் இருக்க வேண்டும். உலகத்தோடு தொடர்பு கொள்ளும் போது ஸாதகனுடைய இதயம் இரும்பைப் போன்று கடினமானதாக இருக்க வேண்டும். உலகக் காரியங்களைத் தெளிவான உறுதியோடும், பற்றின்றியும் செய்ய வேண்டும். தினசரி அலுவலோ, அல்லது நீண்டகாலத்துப் பணியோ, எதுவானாலும் இடையில் பிரச்சனைகள் எழுந்தாலும், அவை நிறைவு செய்யப் பட வேண்டும். இதற்கு மிகவும் தேவையானது விடாமுயற்சி. ஆனால் ரோஜாவைப் போன்ற மென்மையான இதயத்தோடு, ஆன்மீக ஸாதகன் முழுமையாகவும், தன்னலமற்ற சரணாகதியோடும் குருவின் சேவையைச் செய்ய வேண்டும். இதுமட்டுமன்றி, உண்மையை உணர்வதற்கு, பக்தியால் உருகுவதோடு, குருவின் உபதேசங்களின் ஸாரத்தைப் புரிந்து கொள்வதற்கு, மற்றவர்களுக்கும் உதவ வேண்டும். இதற்குப் பொறுமை மிகவும் அவசியம்" என்று கூறினார். தொடர்ந்து, "ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போன்ற விடாமுயற்சியையும், பொறுமையையும் எப்போதும் நீ கடைப்பிடிப்பது அவசியம்." என்றும் கூறினார். நிரஞ்ஜனானந்த ஸ்வாமி முழுமையான அர்ப்பணிப்போடும், பக்தியோடும், பகவானிடம் இருந்தது, அவரது ரோஜாவைப் போன்ற மென்மையான இதயத்தின் வெளிப்பாடு. ஆனால், பிரச்சனைகளுக்கும், எதிர்ப்புக்கும் நடுவே ஆச்ரம நிர்வாகம் என்ற பெரும் சுமையை தைரியமாகத் தாங்கியது, அவரது இரும்பு இதயத்தைக் காட்டுகிறது.

இந்து சாஸ்திரப்படி கடவுள், இராமர் அல்லது கிருஷ்ணர் போன்ற அவதாரங்கள் எடுத்த போதெல்லாம் அவருடைய சகோதரர்களுடன் வந்ததாக கூறப்பட்டுள்ளது. இராமராக வந்தபோதும், கிருஷ்ணராக வந்தபோதும், அவர்களுடைய சகோதரர்களாக முறையே இலட்சுமணரும், பலராமரும் வந்தனர். ஞானேச்வர் மஹராஜ், ராமகிருஷ்ண பரமஹம்ஸர் போன்ற ஞானிகளுக்கும் சகோதரர்கள் இருந்தனர். சகோதரர்களாக உடன் வந்தவர்கள் பூரண புருஷர்களாக இல்லாமல் இருந்திருக்கலாம். ஆனாலும் அவதாரங்களும், ஞானிகளும் அவர்களை ஏற்றுக் கொண்டு, அவர்களது குறைகளை அவ்வப்போது திருத்தினர். தெய்வீக லீலையில் நற்பண்புகளையும், நன்மைகளையும் உலகில் பரப்ப வேண்டிய முக்கியமான கடமை சகோதரர்களுக்கு இருந்ததால் அவர்களும் முக்கியமானவர்களே. இதேபோன்று பகவானும் தனது தம்பியான நிரஞ்ஜனானந்த ஸ்வாமியை நிபந்தனை ஏதுமின்றி தன்னுடனேயே இருக்க அனுமதித்திருந்தார். பெரிய மஹான்களுடைய சகோதரர்களைப் பார்க்கும் போது விருப்பு வெறுப்பற்ற மனநிலையோடு நாம் அவர்களைப் பார்ப்பது மிகவும் முக்கியம். ஏனென்றால் இறைவனது பெரிய திட்டத்தில் அவர்களும் முக்கியமானவர்கள் என்பதால் அவர்கள் தவறுகள் செய்திருந்த போதும் அவர்களை நாம் மதிப்பிடக் கூடாது.

பகவானுக்கு இரண்டு சகோதரர்களும் ஒரு சகோதரியும் இருந்தனர். அண்ணன் நாகஸ்வாமி, தம்பி நாகசுந்தரம் மற்றும் தங்கை அலமேலு. இவர்களுடைய தந்தை சுந்தரமய்யர் இறைவனடி சேர்ந்த போது குடும்பம் இரண்டு கிளைகளாகப் பிரிந்தது. நாகஸ்வாமியும் வேங்கடராமனும் மதுரைக்குச் சென்றனர். நாகசுந்தரம், அலமேலு இவர்களுடன் அன்னை அழகம்மாள்

மானாமதுரையிலிருந்த தனது மைத்துனர் வீட்டிற்குச் சென்றார். 16 வயதில் மரணானுபவத்திற்குப் பிறகு பகவான் அருணாசலத்திற்குச் சென்று விட்டார். 1902-ல் பகவான் அருணாசலத்திலிருப்பதைக் குடும்பத்தார் அறிந்த போது நாகசுந்தரம் தனது தமையனைக் காண்பதற்கு அங்கு வந்தார். அந்த சமயத்தில் விரூபாக்ஷ குகைக்கு கீழே இருந்த ஸத்குரு ஸ்வாமி குகையில் பகவான் வாழ்ந்து கொண்டிருந்தார். அவரைப் பிராம்மண ஸ்வாமி என்று அங்குள்ளவர்கள் அழைத்தனர். தனது தமையனை தவக்கோலத்திலும் முழு மௌனத்திலும் கண்ட நாகசுந்தரம் அவரை அணைத்தபடி கண்ணீர் பெருகினார். தனது சகோதரன் உணர்ச்சிகளுக்கு அப்பாற்பட்ட நிலையில் இருந்ததை அவர் பார்த்தார். பகவான் மௌனமாக இருந்ததால், அவருடன் தங்கி உதவி செய்ய வேண்டும் என்று நாகசுந்தரம் எண்ணினார். நாகசுந்தரத்திற்கு அனேக உலகக் கடமைகள் இருந்தது பகவானுக்குத் தெரியும். அதனால் அவர் அங்கு தங்குவதற்கு அனுமதி கேட்ட போதும் பகவான் மறுமொழி எதுவும் கூறவில்லை. அதனால் ஏமாற்றமடைந்த நாகசுந்தரம் மீண்டும் வீட்டிற்குத் திரும்பினார்.

நாகசுந்தரத்தின் பாலபருவத்தைக் குறித்தோ, அதைத் தொடர்ந்த வருடங்கள் குறித்தோ நமக்குத் தகவல்கள் ஏதும் அதிகமாக இல்லை. அவர் திருமணம் செய்து கொண்டு குமாஸ்தாவாக வேலை பார்த்து வந்தார். பின்னர் அவருடைய வாழ்க்கையில் தொடர்ந்து வருந்தத்தக்க பல சம்பவங்கள் நிகழ்ந்தன. அவரது பெரிய அண்ணன் நாகஸ்வாமி திடீரென்று தனது இருபதாவது வயதிலேயே மரணத்தைத் தழுவினார். குறுகிய காலத்திற்குள் அவர்களது பரம்பரை சொத்து ஏலத்தில் விடப்பட்டதால் அவர்கள் அனைத்தையும் இழந்தனர். இதைத் தொடர்ந்து திடீரென நாகசுந்தரத்தின் மனைவி ஒரு மகனை (எனது தந்தை திரு. வேங்கடராமன்) விட்டுவிட்டு உயிர் நீத்தாள். நாகசுந்தரத்திற்கு இருந்த ஒரே ஆதரவு அவரது தாயார் அழகம்மாள் மட்டுமே. ஆனால் அவரும் பகவானுடன் தங்குவதற்காக அருணாசலத்திற்குச் சென்று விட்டார்.

இந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் அவரை உலுக்கியதால் சரணாகதி, பணிவு, தொண்டு என்னும் பாதைக்கு அவர் இழுக்கப்பட்டார். தனது தங்கையிடம் விடப்பட்ட தன் மகன் உட்பட, 'தனது' என்று இருந்த அனைத்தையும் துறந்தார். அந்த சமயத்தில் அவருக்கு சிறிது நம்பிக்கை ஏற்படும் வகையில் அன்னை அழகம்மாள் தன்னுடனும், பகவானுடனும் வந்து தங்குமாறு அவருக்கு அழைப்பு விடுத்திருந்தார். இவ்வாறு நாகசுந்தரம் அருணாசலத்திற்கு சென்ற போது அங்கு பகவான் அவரை ஏற்றுக் கொண்டார். துறவியாக இருந்த தனது மகனிடம், "எனது மூன்றாவது மகன் நாகசுந்தரம் பெரிய புத்திசாலி இல்லை. முரட்டு ஸ்வபாவமுள்ள அவனுக்கு உலகத்தில் காலந்தள்ளுவது மிகவும் கடினம். நீதான் அவனை கவனித்துக் கொள்ள வேண்டும்" என்று அன்னை அழகம்மாள் கூறியதால் அன்னைக்குக் கீழ்படிந்து நாகசுந்தரத்தை பகவான் ஏற்றுக் கொண்டார்! எனினும், அவர் ஏன் அவ்வாறு செய்து, வாழ்நாள் முழுவதும் அவருக்குத் துணை நின்றார், என்பதன் காரணத்தைப் பிற்காலத்தில் தான் விளக்கினார். ஒரு முறை நிர்வாகத்தினரிடையே ஏற்பட்ட வாக்கு வாதத்தில் நிரஞ்ஜனானந்த ஸ்வாமியும் சம்பந்தப்பட்டிருந்ததாக திரு. T. P. ராமச்சந்திர அய்யர் என்னிடம் கூறினார். அன்று மலைமேல் சென்று கொண்டிருந்தபோது பகவான், "நான் என்ன செய்ய முடியும்? வாக்குக் கொடுத்து விட்டேனே" என்று தொடர்ந்து தனக்குள் முணுமுணுத்தபடி வந்து கொண்டிருந்தார். பகவான் என்ன சொல்கிறார் என்பதை உடன் வந்த ராமச்சந்திர அய்யரால் புரிந்து கொள்ள முடியவில்லை. "பகவானே, என்ன சொல்கிறீர்கள்" என்று அவர் கேட்ட போது, "பிச்சை (தம்பியின் வீட்டுப்பெயர்) இங்கு வந்த போது, அம்மா, என்னிடம் 'நான் அவனை விட்டுவிட மாட்டேன்' என்றும், 'அவனை அரவணைத்து, என்னிடமே வைத்துக் கொள்வேன்' என்றும்,

என்னிடமிருந்து வாக்குறுதி பெற்றுக் கொண்டு விட்டாள். நான் என்ன செய்ய முடியும்?" என்று பகவான் பதிலளித்தார்.

வாழ்க்கையில் அடிபட்டு ஸ்கந்தாச்ரமம் வந்த போது நாகசுந்தரமும் துறவு ஏற்றார். அவர் தவ வாழ்க்கையை மேற்கொண்டு திருவண்ணாமலை வீதிகளில் பிக்ஷை எடுத்தார். இதற்குள் 'நான் யார்?' 'அருணாசல பஞ்சரத்னம்' என்பவற்றை பகவான் எழுதியிருந்தார். அந்த உன்னதமான நூல்களைத்தான் அனேக பக்தர்கள் தியானிக்கவும், அதிலுள்ள பாடல்களைப் பாடவும் செய்தனர். நாகசுந்தரம் ஆழ்ந்த சிந்தனையிலும் படிப்பதிலும் மூழ்கி தனிமையில் வாழ்ந்தார். காவ்யகண்ட முனி பிராம்மண ஸ்வாமியை பெருமைப்படுத்தி 'பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷி' என்ற பெயரையும் சூட்டியிருந்தார். நாகசுந்தரத்தைச் சந்தித்த போது பகவானுடைய கவனம் அவரிடம் செல்வதைக் காவ்யகண்டர் பார்த்தார். அதனால், அவரும், நாகசுந்தரத்தை நல்வழிப்படுத்துவதில் பகவானுக்கு உதவி செய்ய விரும்பி நாகசுந்தரத்திடம் "நீங்கள் ஏன் காவியணிந்து பாரம்பரிய முறையில் துறவு ஏற்கக் கூடாது?" என்று ஆலோசனை கூறி அவர் துறவு ஏற்ற போது 'மாசற்ற மனிதர்' என்று பொருள் படும்படியாக 'நிரஞ்ஜனானந்த ஸ்வாமி' என்ற பெயரையும் அவருக்குச் சூட்டினார். ஆனால் அனைவரும் அவரை பகவானின் தம்பி என்ற முறையில், சின்னஸ்வாமி என்றே அழைத்தனர்.

அன்னை அழகம்மாள் ஸமாதியான சமயத்தில், அப்போது முட்புதர்களாக இருந்த தற்போதைய ரமணாச்ரமத்திற்கு அவரது உடலை எடுத்து வந்தவர்களில் சின்னஸ்வாமியும் ஒருவர். மற்றவர்களுடைய உதவியோடு அவரது உடலை ஸமாதியில் அடக்கம் செய்தனர். அன்னைக்கு சின்னஸ்வாமியே பூஜை செய்ய வேண்டும் என்று காவ்யகண்டர் வற்புறுத்தினார். வழக்கப்படி ஸமாதியின் மேல் ஒரு லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. சாதாரணமாக சிறிது நேரத்திற்குப் பிறகு லிங்கத்தை எடுத்துவிடுவது வழக்கம் என்றாலும் அதை அப்படியே விட்டுவிட்டனர். காவ்யகண்டர் நிரஞ்ஜனானந்தாவிடம் "பகவான் அவருக்கு முக்தியளித்திருக்கிறார். உங்கள் தாயார் சாதாரண வியக்தி அல்லர். அவர் கடவுளே என்பதால் இது ஸமாதி மட்டும் அல்ல, ஒரு கோயிலும் கூட. நீங்கள் முறைப்படி அவருக்குப் பூஜைகளைச் செய்ய வேண்டும்" என்று கூறினார். அதை



ரமணாச்ரமம் – முன்னாளில் எடுக்கப்பட்ட புகைப்படம். பகவான் கடிதம் படித்துக்கொண்டிருப்பதைக் காணலாம்

மாத்ருபூதேச்வரர் என்று காவ்யகண்டர் அழைத்தார். இதனால் அங்கேயே தங்கி சின்னஸ்வாமி தினமும் பூஜை செய்ய வேண்டியிருந்தது. ஆனால் பகவான் ஸ்கந்தாச்ரமத்திலேயே தங்கியிருந்தார். ஒரு நாள் ருசியான உணவு என்று கருதப்பட்ட தோசைகளை மறுதினம் செய்து, தான் ஸ்கந்தாச்ரமத்திற்குக் கொண்டு வருவதாக பகவானுக்குச் சின்னஸ்வாமி செய்தி அனுப்பினார். மறுநாள் காலை "அதிதிக்கு ஏதாவது உணவு இருக்கிறதா?" என்று ஒரு இனிய குரல் சின்னஸ்வாமியின் காதுகளில் கேட்டது. விருந்தினராகத் தன்னை அறிமுகம் செய்து கொண்டது பகவானே தவிர வேறுயாருமில்லை.

தற்போதைய ரமணாச்ரமத்திற்கு அன்னையின் கோயிலே மையமாக இருந்தது. பகவான் அங்கு தங்கிய போதும், அது தனக்குச் சொந்தமானது என்று அவர் எண்ணவில்லை. தன்னைக் கடைசிவரை ஒரு விருந்தினராகவே கருதினார். எப்போதும் வேறு யாரோதான் ஆச்ரமத்தை நிர்வகித்தனர். 1929-ல் சேஷாத்ரி ஸ்வாமி ஸமாதியான பின்பு, அதை நிர்வகிப்பதில் பல வழக்குகளை எதிர்கொள்ள வேண்டி இருந்ததாக சில வழக்கறிஞர்கள் பகவானிடம் கூறினர். அதனால் பின்னாளில் ரமணாச்ரமத்திலும் அது போன்ற குழப்பங்கள் வராமல் தவிர்ப்பதற்கு, அதன் நிர்வாகியாக அதிகாரபூர்வமாக ஒருவரை நியமிப்பது நல்லது என்று அவர்கள் ஆலோசனை கூறினர். நாயனா அந்தப் பொறுப்பை ஏற்க வேண்டும் என்று அனைவரும் விரும்பினர். ஆனால், பகவான் நாயனாவைப் பார்த்து, 'பிச்சை அந்தப் பொறுப்பை ஏற்க தபஸ் பண்ணிண்டிருக்கான். அவனே நிர்வாகத்தை ஏற்றுப் பொறுப்பைச் சுமந்துட்டுப் போகட்டுமே' என்று கூறினார். ஆன்மீகத்தில் உன்னத நிலையில் விளங்கிய நாயனாவே, அந்தப் பொறுப்பை ஏற்கத் தகுந்தவர் என்று பல பக்தர்கள் கருதினார்கள். ஆனால், பகவானது முடிவு மிகவும் சரியானது என்பது பிற்காலத்தில் நிரூபிக்கப்பட்டது. நிரஞ்ஜனானந்த ஸ்வாமிக்கு ஆன்மீக ரீதியாக அபிப்ராயங்கள் ஏதும் இல்லாத காரணத்தால் மிகுந்த மனோதிடத்தோடு பகவானிடம் மாறாபக்தியுடன் ஆச்ரமத்தை நிர்வகித்தார். அவரது ஏகபக்தி பகவானின் உபதேசங்களைச் சொல்லின்றிப் பிரதிபலித்தது.

காவ்யகண்டர், "இது பகவானது கட்டளை என்பதால், நாம் அனைவரும் அவரது முடிவிற்கு ஆதரவு தர வேண்டும்" என்று தன் சீடர்களுக்குக் கூறியதால், சின்னஸ்வாமி நிர்வாகியாக செயல்படுவதற்கு, அவர்கள் எப்போதும் உறுதுணையாக இருந்தனர். 1930-ம் ஆண்டு, ஆச்ரமத்தின் லௌகீக விவகாரங்களை நிரஞ்ஜனானந்த ஸ்வாமியின் குடும்பமே நிர்வகிக்கும் என்றும், பகவானுக்கு ஆன்மீக ரீதியில் வாரிசு யாரும் கிடையாது என்றும் ஒரு உயில் எழுதுமாறு பகவான் கேட்டுக் கொள்ளப்பட்டார்.

சின்னஸ்வாமி மிகவும் எளிமையோடும், கட்டுப்பாடோடும், கண்டிப்போடும் இருந்தார். அவருடைய கண்டிப்பு அவருக்குக் கெட்ட பெயரை வாங்கிக் கொடுத்தது. ஆனால், அவர் அதைப் பொருட்படுத்தவில்லை. ஆச்ரம நிதியிலிருந்து தனது சொந்த உபயோகத்திற்காக ஒரு பைசா கூட அவர் உபயோகிக்க மாட்டார். அந்த அளவிற்கு அவரிடம் எளிமையும் கண்டிப்பும் இருந்தது. பகவானுடைய பக்தர்களான இருவர் அவருக்கு நண்பர்களாக இருந்தனர். அவர்களே பற்பொடி, தலைக்கு எண்ணெய், வெற்றிலை, பாக்கு, குடை போன்ற அவரது சிறு தேவைகளைப் பூர்த்தி செய்து வந்தனர். அந்தச் சமயத்தில், அவர் தனி மனிதராக, ஸர்வாதிகாரியாக இருந்து ஆச்ரம நிதியை நிர்வகித்து வந்தார். கணக்கைப் பரிசீலிக்க ஒரு குழுவோ அல்லது அறங்காவலர்களோ இருக்கவில்லை. இருந்தும், அவர் ஒரு போதும் நம்பிக்கைத் துரோகம் செய்யவில்லை. தனது கிழிந்த உடைகளைத் தானே தைத்து மீண்டும் உபயோகிக்கும் அளவிற்கு அவர் தவ வாழ்க்கை வாழ்ந்தார்

என்று பழைய அடியார்கள் கூறியுள்ளனர். அவர் நினைத்திருந்தால் புதிய ஆடைகளை வாங்கியிருக்க முடியும். ஆனால், யாராவது செல்வந்தர் வந்து ஆச்ரமவாசிகளுக்கு வஸ்திரதானம் செய்வதற்காக மாதக்கணக்கில் காத்திருப்பார். அப்போதும் தனக்கென ஒரே ஒரு உடுப்பை மட்டுமே எடுத்துக் கொள்வார். ஆச்ரமத்திற்குப் பணியாட்கள் நியமிக்கப்படுவதற்கு வெகுகாலம் முன்பிருந்தே ஆச்ரமத்தின் எல்லாத் தேவைகளையும், சமையல் வேலையையும் சேர்த்து தான் ஒருவராக இருந்து கவனித்துக் கொண்டார். (அவரைப் பற்றி முன்பு குறை கூறியவர்களே பின்னாளில் இந்த உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளனர்.)

பகவானால் செல்லமாக வளர்க்கப்பட்ட ஜாக்கி என்ற நாய், ஒரு முறை பன்றியுடன் சண்டையிட்டு, குடல் வெளியே தெரியுமளவிற்குப் படுகாயமடைந்து, மிகவும் வேதனையுடன் கிடந்தது. சின்னஸ்வாமிதான் அதை ஒரு கூடையில் வைத்துத் தன் தலையில் சுமந்து கொண்டு போய் கால்நடை மருத்துவமனையில் சிகிச்சை அளிவித்தார். ஜாக்கி பூரணகுணமடைந்து பல ஆண்டுகள் வாழ்ந்தது. 1938-ல் ஆச்ரமத்தை நிர்வகிக்க சின்னஸ்வாமிக்கு உதவி தேவைப்பட்டதால் தனது மகனை (எனது தந்தை), குடும்பத்தினர் அனைவருடனும் வந்து தன்னுடன் தங்குமாறு செய்தி அனுப்பினார். என் தந்தை என்னை ரமணாச்ரமத்திற்கு அழைத்து வந்தபோது எனக்கு வயது இரண்டு. சின்னஸ்வாமி தனது மகனிடம் மிகவும் கண்டிப்போடு நடந்து கொண்டார். அவர் தனது மகனுக்கு சலுகைகள் எதுவும் தரவில்லை. இதனால் என் தந்தை எப்போதும் ஏமாற்றத்தோடும், அதிருப்தியோடும் இருந்தார். சைக்கிள் போன்ற நன்கொடைகளை ஆச்ரமத்திற்கு யாராவது கொடுப்பார்கள். எனது தந்தை தனக்கும் அதில் ஒன்று வேண்டும் என்று கேட்டால், சின்னஸ்வாமி மறுத்துவிடுவார். ஏமாற்றத்தால் என் தந்தை முகத்தைச் சுளித்தால், "வெங்கட்டூ! பகவான் ஆச்ரமத்தை நிர்வகிக்க வேண்டும் என்றுதான் நமக்கு உத்தரவிட்டுள்ளார். நாம் அவரது அடிமைகள். அதனால் பரம்பரை பரம்பரையாக இதைச் செய்தே ஆக வேண்டும். ஆனால், இந்த இடத்தில் நமக்கு விசேஷ உரிமைகள் ஏதும் கிடையாது. வைக்கோல் போரை பாதுகாக்கும் ஒரு நாயைப் போன்று இந்தப் பணிக்கு நம்மை நாம் அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும். வைக்கோலை நாய் தானும் தின்னாது. அதே சமயம் தெருவில் போகும் ஆடு மாடுகளைத் தின்னவும் விடாது." இந்த அறிவுரையை, என் தந்தையும், எனது இரு சகோதரர்களும், நானும் மிகவும் கவனமாகப் பின்பற்றினோம். மூன்றாவது தலைமுறை இப்போது ஆச்ரமத்தை நிர்வகிக்கிறது. சின்னஸ்வாமியின் ஆசியினாலேயே, ஸர்வாதிகாரிகளைப் போன்றோ அல்லது தனிநிர்வாகி என்பது போன்றோ ஆச்ரமத்தை நிர்வகிக்காமல், நாய்கள் வைக்கோல்போரைக் காப்பது போல் பரம்பரை பரம்பரையாக ஆச்ரமத்தை கவனித்துக் கொள்கிறார்கள்.

உள்ளதை உள்ளபடி பட்டெனப் பேசும் ஸ்வபாவமுடைய சின்னஸ்வாமி பலரோடும் மோதிக்கொள்ள நேர்ந்தது. ஆனால், பல பக்தர்கள் கூறுவதுபோல், அந்தக் கதைகளை நாம் பாரபக்ஷமின்றிப் பார்க்கவேண்டும். இருதரப்பினுடைய வாதங்களுக்கும் நாம் முக்கியத்துவம் தரவேண்டும். சின்னஸ்வாமியினுடைய பிரச்சனை ஒரு நிர்வாகிக்கு இயல்பானதே. ஆச்ரமவாசிகள் அனைவருமே ஹாலில் பகவானுடன் அமர்ந்திருக்க விரும்பினால் ஆச்ரமத்தின் அன்றாடப் பணிகளான சமைப்பது, தோட்ட வேலைகள், பண்டகசாலை நிர்வாகம், கடிதப் போக்குவரத்துகள், விருந்தினர் உபசரிப்பு, பணப்பட்டுவாடா, புத்தகப் பிரசுரம், சொத்துக்கள், கட்டிடங்கள் தவிர ஆச்ரமவாசிகளுடைய பாதுகாப்பு, பொதுவான பராமரிப்பு போன்றவை எவ்வாறு நடக்குமென்பது அவருடைய வாதம். இதனால் ஆச்ரமத்தில் தங்க விரும்புகின்றவர்கள் ஏதாவது ஒருவிதத்தில் நிர்வாகத்தில் பணியாற்ற வேண்டுமென்ற கண்டிப்பான நிபந்தனையை விதித்திருந்தார். இந்த

விதிமுறையை ஏற்றுக் கொள்ளாதவர்கள் ஆச்ரமத்தை விட்டுச் சென்று விட வேண்டும் என்று கூறுவார். அவருடைய கண்டிப்பினால் பாதிக்கப்பட்டவர்கள், சின்னஸ்வாமி கடுமையாக நடந்து கொண்ட விதத்தைப் பற்றிக் கூறுவார்களே தவிர அவர் விதித்த நியாயமான விதியை பற்றிக் குறை கூறமாட்டார்கள்.

முருகனார், ராமஸ்வாமி பிள்ளை, சாட்விக், விஸ்வநாத ஸ்வாமி, அண்ணாமலை ஸ்வாமி, குஞ்சு ஸ்வாமி, தேவராஜ முதலியார், சூரி நாகம்மா, முனகால வேங்கடராமையா, ஆகியவர்கள் சின்னஸ்வாமியினால் பாதிக்கப்பட்ட பழைய அடியார்கள் பட்டியலில் உள்ள சிலர். நான் வருந்தத்தக்க இந்த விஷயம் குறித்து அவர்களிடம் விசாரித்த போது அவர்கள், "சின்னஸ்வாமி கடுமையாக நடந்து கொண்டதால் நாங்கள் அனைவருமே பாதிக்கப்பட்டோம். அதோடு அந்தச் சமயத்தில் நாங்கள் மனமொடிந்து போனோம் என்பதும் நிஜம்தான். என்றாலும் அவர் எங்களை அம்மாதிரி நடத்தியிராவிட்டால் நாங்கள் இடையறாது ஆச்ரம நிர்வாகப் பணிகளில் மூழ்கி, எங்களது ஆன்மீக ஸாதனைகளைத் தொடர்ந்திருக்க மாட்டோம் என்பதைப் பிற்காலத்தில் நாங்கள் உணர்ந்து கொண்டோம். பின்னோக்கிப் பார்க்கும் போது, சின்னஸ்வாமியின் கண்டிப்பான நடத்தையும் கூட பகவானுடைய அருள் என்பதை எங்களால் உணர முடிந்தது" என்று ஒரே குரலில் ஆமோதித்தனர்.

முருகனார் என்னிடம், "சின்னஸ்வாமி என்னைப் பலமுறை அவமதித்ததோடு ஆச்ரமத்தில் உணவளிக்க முடியாது என்றும் மறுத்தார். நான் தெருவில் பிக்ஷை எடுக்க வேண்டி வந்தது. சின்னஸ்வாமி உணவளிக்க மறுத்ததற்கு காரணம் நான் அன்னையின் கோயிலில் தொடர்ந்து பூஜை செய்ய வேண்டும் என்றும், கடிதப் போக்குவரத்துக்களில் அவருக்கு உதவி செய்ய வேண்டும் என்றும் அவர் விரும்பியதுதான். நான் அதைச் செய்யாததால் ஆச்ரமத்தை விட்டு வெளியேற வேண்டி வந்தது. ஆனால் அவ்வாறு நான் வெளியே சென்ற காரணத்தால், விலை மதிக்க முடியாத இரண்டு வரங்களைப் பெற முடிந்தது என்பதை உறுதியாகக் கூறுவேன். உண்மையைச் சொல்லப் போனால் சின்னஸ்வாமி என்னிடம் கடுமையாக நடந்து கொண்டிருக்காவிட்டால், நான் இன்னமும் ரமணாச்ரமத்தில் பூஜை செய்து கொண்டும், கடிதங்கள் எழுதிக் கொண்டு தான் இருந்திருப்பேன்" என்றார். உங்களுக்குக் கிடைத்த இரண்டு வரங்கள் எவை? என்று நான் கேட்டதற்கு, "இரவோ, பகலோ எந்நேரத்திலும் பகவானுடைய ஸாந்நித்தியத்தில், அவரோடு நெருக்கமாக இருக்க முடிந்தது. நான் என்னை நிர்வாகப் பணிகளில் ஆழ்த்திக் கொண்டிருந்தால் அது எனக்குக் கிடைத்திருக்காது. இரண்டாவது வரம் என்னவென்றால் நான் எப்போதுமே பரவச நிலையிலிருந்ததால் கவிதைகள் எழுதுவதை மட்டுமே விரும்பினேன். பகவானைப் பற்றியும், அவருடைய உபதேசங்கள் குறித்தும் ஏறத்தாழ நாற்பதாயிரம் பாடல்களை நான் எழுதினேன். இவை அனைத்தும் மௌனத்திலும், தனிமையிலும் எழுதப்பட்டன. வெளி விவகாரங்கள் இருந்திருந்தால் இது ஸாத்யமாகி இருக்காது. இந்த இரு வரங்களையும் நான் பெறுவதற்குச் சின்னஸ்வாமி ஒரு முக்கியமான கருவியாக இருந்தார்" எனக் கூறினார்.

பகவான், சின்னஸ்வாமியை ஒரு துணி துவைக்கும் கல்லைப் போன்று பயன்படுத்தி, பக்தர்களுடைய சித்த மலங்களை நீக்கவும், பூர்வ வாசனைகளை அழிக்கவும், அவர்களது கவனத்தை முழுமையாக ஆன்மீக ஸாதனைகளில் திருப்பவும் உபயோகித்தார்" என்று சமையலறையில் உதவி செய்த சுப்புலட்சுமி அம்மாள் என்னிடம் கூறினார். இக்காரணத்தினால் சின்னஸ்வாமி நிரந்தரமாகக் கெட்ட பெயரைச் சம்பாதித்துக் கொண்டார். பலராம ரெட்டியார் என்னிடம், "சின்னஸ்வாமியின் நிர்வாகத்தில் குறைகள் இருந்தபோதும், பகவான் எப்போதும் அவருக்கு

## சின்ன ஸ்வாமியின் நிர்வாகத்தில் ஸ்ரீ ரமணாச்ரமத்தின் படிப்படியான வளர்ச்சி – 1



ஆச்ரமத்தின் நுழைவாயில்

பகவானின் 'பழைய ஹால்' (1926)






ஆச்ரம அலுவலகம் மற்றும் புத்தகாலயம்

## சின்ன ஸ்வாமியின் நிர்வாகத்தில் ஸ்ரீ ரமணாச்ரமத்தின் படிப்படியான வளர்ச்சி – 2


கோசாலை, உணவுக்கூடம் மற்றும் வைத்தியசாலை


மாத்ருபூதேச்வரர் கோயில்


ஸ்ரீ ரமணாச்ரமம் (1948)

ஆதரவு தந்தார் என்னும் உண்மையை நான் மீண்டும் மீண்டும் கவனித்தேன். ஒருமுறை அவரைப் பற்றி நான் குறை கூறிய போது உடனே பகவான் என்னைத் திருத்தினார். அந்த அறிவுரையை ஆச்ரமத்தில் வாழ்ந்த காலம் முழுவதும் உறுதியோடு கடைப்பிடித்தேன். பகவான் மனதில் சுருக்கென்று தைக்கும்படியாக, 'ஆச்ரம நிர்வாகத்தில் உள்ள குறைகளைக் கண்டுபிடித்து, சரி செய்வதற்காகவோ நீ இவ்வளவு தூரம் வந்திருக்கிறாய்? நீ எந்தக் காரியத்திற்காக இங்கு வந்தாயோ அதைக் கவனி. உள்ளிருந்து இந்தக் குறைகளை யார் எழுப்புகிறார்? என்பதைக் கண்டுபிடி. மற்ற அனைத்தையும் அந்த உன்னத சக்தியிடம் ஒப்படைத்து விட்டு அமைதியாக இரு' என்று கூறியதாக ரெட்டியார் கூறினார்.

1973-ல் 'தி மௌண்டன் பாத்' (The Mountain Path) என்ற ஆச்ரம பத்திரிகைக்கு, விஸ்வநாத ஸ்வாமி பதிப்பாசிரியராக இருந்த போது நான் அதன் நிர்வாக ஆசிரியராக அவருக்கு உதவி செய்தேன். நான் அவரிடம் சின்னஸ்வாமியின் இரும்பைப் போன்ற கடினமான ஸ்வபாவத்தைப் பற்றி மிகவும் வருத்தத்தோடு கூறினேன். விஸ்வநாத ஸ்வாமி சட்டென்று அவருடைய ரோஜா இதழைப் போன்ற மென்மையான ஸ்வபாவத்தைச் சுட்டிக் காட்டி, "பிறரைக் கூண்டில் ஏற்றித் தீர்ப்பளிக்க முனைவது மிகவும் சுலபம். ஆனால், யார், யாரை எடை போட்டுப் பார்க்கிறார்கள்? ஒரு மனம் மற்றொரு மனதின் செயல்பாட்டைச் சீர்தூக்கிப் பார்க்கிறது." என்றார். (இந்தக் கூற்று சின்னஸ்வாமியிடமும், உலகில் ஒவ்வொருவரிடமும் எனக்கிருந்த மரியாதையை உயர்த்தியது. ஏனென்றால் மக்களை ஆத்மாவாக, அதாவது 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வாகப் பார்த்தால் புகழ்ச்சிக்கோ, இகழ்ச்சிக்கோ அங்கு இடமில்லை.)



'ஸர்வாதிகாரி' சின்னஸ்வாமி – அவர் அலுவலகத்தில்

விஸ்வநாத ஸ்வாமி தொடர்ந்து, "கணேசா! புனிதமான அண்ணாமலையிலிருந்து நமது ஸத்குருவான பகவானுக்கு உறுதுணையாக இருக்கும் பொருட்டு உருண்டோடி வந்த மிகப்பெரிய பாறையே சின்னஸ்வாமி. பகவான், ஒரே இடத்தில் 24 மணிநேரமும் நம்முடன் இருக்க முடிந்ததற்குக் காரணம், சின்னஸ்வாமியின் அயராத உழைப்பும், சிரத்தையுமே. எந்தத் தடங்கலுமின்றி பகவானது ஸாந்நித்தியத்தில்,

ஸாக்ஷாத் பகவானிடமிருந்தே நேரடியாக நாம் அனைவரும் ஹ்ருதய வித்யையை - இதயத்தின் உண்மையை அறிந்தோம். இரவும் பகலும் பழைய 'ஹாலில்' ஆத்ம ஞானத்தின் உண்மையை பகவான் நம் மீது பொழிந்து கொண்டிருந்ததை நாம் அனைவரும் அனுபவித்தோம். ஆச்ரமத்தைப் போன்ற பலமான ஒரு மையம் இல்லாதிருந்தால் அது எவ்வாறு சாத்தியமாகும்? ஒரு நிறுவனத்தை நடத்திச் செல்வதற்கு, இரும்பைப் போன்று உறுதியான தீர்மானங்களை எடுக்கக் கூடியவரும், இருபத்துநான்கு மணிநேரமும் அயராது உழைக்கக் கூடியவருமான சின்னஸ்வாமியைப் போன்ற ஒருவர் தவிர்க்க முடியாத தேவை. இதனால் தான் ஒரே சமயத்தில் எல்லாவிதத்திலும் (உலகரீதியாகவும், ஆன்மீக ரீதியாகவும்) வளர்ச்சி பெற வழி வகுத்து, பகவானால் மௌனமாக இருக்க முடிந்தது. உலகரீதியான வளர்ச்சி என்பது, ஆச்ரமம் என்ற ஒரு நிறுவனத்தை ஸ்தாபிப்பது, அதன் நிர்வாகம், புஸ்தக பிரசுரம், பகவானைக் காண விழையும் மக்கள் கூட்டத்திற்கு உணவளித்தல் மற்றும் அதைச் சார்ந்த பல பணிகளையும் மேற்கொள்வது போன்றவையாகும். அதே சமயத்தில் அதைவிட வலியுறுத்தப்பட வேண்டியது ஆன்மீக வளர்ச்சி, அதாவது - ஒருவர் அகவாழ்க்கையில் முன்னேறுவதற்குத் தேவையான போதனைகளைத் தருவதாகும். இது ஆத்ம விசாரம், தன்னிலேயே கவனம், தியானம் இவற்றைக் குருவின் ஸந்நிதியில் அவரது அருளால் பெறுவதோடு தனிமையில் தவ வாழ்க்கையை மேற்கொள்வது ஆகியவையும் உள்ளடக்கியதாகும். உலகரீதி என்பதில் திரளான மக்கள் கூட்டமும், பலதரப்பட்ட பணிகளும் உள்ளடங்கும். ஆனால் ஆன்மீக ரீதி என்னும் போது தனி மனிதனின் முன்னேற்றத்தையும், அவன் தன்னுள்ளே உண்மையை உணர்வது என்பதையும் அழுத்தமாகக் கூறுவதாகும். மிகவும் சிரமப்பட்டு சின்னஸ்வாமியால் வளர்க்கப்பட்ட இந்த ஆச்ரமத்தில் உலகரீதியாக மற்றும் ஆன்மீக ரீதியாக வளர்ச்சி, நன்கு வேரூன்றுவதற்கான சூழ்நிலையை பகவான் அமைத்துக் கொடுத்தார். அருணாசலத்தின் இந்த திவ்ய லீலையில் சின்னஸ்வாமி மிக முக்கியமான பொறுப்பை ஏற்றிருந்தார். அதனால், பகவான் அவருக்கு நிர்வாகத்தில் தொடர்ந்து துணை நின்றார். அதே சமயத்தில் ஆச்ரமத்தின் உள்ளேயோ அல்லது பலாக்கொத்திலோ எங்கே வாழ்ந்தபோதும் நம் ஒவ்வொருவரையும் உண்முகமான ஆன்மீக ஸாதனையில் பகவான் வழி நடத்தினார்" என்று கூறி முடித்தார்.

இது, ஸாதகர்களாகிய நாம் மகோன்னதமான புனித ஸத்யத்தின் ஸாந்நித்யத்திலேயே எப்போதும் இருக்கிறோம் என்ற உணர்வுடன் இருக்கவேண்டும். ஒரு நாளைக்குக் காலையில் ஒரு மணிநேரம், மாலையில் ஒரு மணிநேரம் என்று இல்லாமல், ஒவ்வொரு க்ஷணமும் இந்த உணர்வோடு இருக்க வேண்டும் என்பதை எனக்குத் தெளிவாக்கியது. இதை பகவான் என்றோ, அருணாசலம் என்றோ, எந்தப் பெயராலும் குறிப்பிடலாம். இந்த உண்மையை நமக்கு எடுத்துக் காட்டியவர்களிடம் நாம் நன்றி உணர்வோடு இருப்பது அவசியம். சின்னஸ்வாமிக்கு மட்டுமல்லாது, 1922-ம் ஆண்டிலிருந்து 1940-ம் ஆண்டு வரை ஆச்ரமத்தின் உலகரீதியாக ஏற்பட்ட வளர்ச்சியில் முக்கியமான இணைப்பாக இருந்தவர்களான தேவராஜ முதலியார், அண்ணாமலை ஸ்வாமி, விஸ்வநாத ஸ்வாமி, B. V. நரசிம்மஸ்வாமி, முருகனார், பால் பிரண்டன் மற்றும் பலருக்கும் நாம் நன்றிக் கடனைச் செலுத்த வேண்டும். மேற்கூறிய பக்தர்கள், உலகரீதியான இணைப்பாக இருந்த போதும், இந்த பக்தர்கள் ஒவ்வொருவருக்கும் ஆன்மீக வளர்ச்சியான ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை பகவான் அருளினார் என்பது உண்மையாகும். இரண்டு தண்டவாளங்களில் இரயில் ஓடுவது போல இந்த இரு வளர்ச்சிகளும் ஒருங்கே நிகழ வேண்டுமென முருகனார் ஒருமுறை கூறினார்.

குரு—பக்தர் உறவு எவ்வாறிருக்க வேண்டுமென்பது குறித்து நான்கு விஷயங்கள் மனதில் கொள்ள வேண்டும். முதலில் - ஒரு பக்தன் தன்னுடைய குருவின் தேவைகளைக் கவனித்துக்

கொள்ள வேண்டும். பகவானைப் போன்ற குருமார்களுக்கு தமது தேஹஸ்மரணை இல்லாமல் இருக்கலாம். அருணாசலம் எவ்வாறு பல அன்னையரின் வடிவெடுத்து, பகவானின் தேகத்தை கவனித்துக் கொண்டது என்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம். அவ்வாறு இல்லையென்றால், பாதாள லிங்கக் குகையில் பகவான் இருந்த போதே, அவரது தேகம் கரைந்து போயிருக்கக்கூடும். அந்தத் தேகத்தால் ஆத்ம ஞானத்தைப் பரப்ப முடியாமல் போயிருக்கும். தன்னுடைய தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்று குரு ஒரு போதும் கேட்க மாட்டார். அவருக்கு மிக நெருக்கமாக இருப்பவர்கள், அவரது தேவைகள் என்னவென்பதைத் தெரிந்து கொண்டு, அவற்றைப் பூர்த்தி செய்ய வேண்டும். இரண்டாவது விஷயம் - குரு வசிக்கும் இடத்தைத் தூய்மையாக, பிரச்சனைகள் இன்றிப் பாதுகாத்து கவனித்துக் கொள்ள வேண்டும். மூன்றாவது - குருவின் உபதேசங்களைச் சேகரித்துப் பாதுகாக்க வேண்டும். நான்காவது - மேற்கூறியவற்றை நிறைவேற்றிய பின்போ அல்லது நிறைவேற்றிக் கொண்டிருக்கும் போதோ, குருவின் உபதேசங்களைப் பக்தர் கடைப்பிடித்து, உண்மையைத் தான் உணர்வதோடு மற்றவர்களும் அதை உணர்வதற்கு உதவ வேண்டும்.

முதல் மூன்று அம்சங்களும் - அதாவது குருவின் தேகத்தைக் கவனித்துக் கொள்ளுதல், அவர் வசிக்குமிடத்தைக் காப்பது, குருவின் உபதேசங்களைப் பாதுகாத்தல் - ஆகியவை உலகரீதியான வளர்ச்சியைக் குறிப்பதோடு, செயல்களை அடிப்படையாகக் கொண்டவை. கடைசி அம்சமான உபதேசங்களைக் கடைப்பிடித்தல் என்பது ஆன்மீக வளர்ச்சியாகும். இவ்விரண்டு வளர்ச்சிகளுக்குமே சமமான முக்கியத்துவம் கொடுத்து, கருணையோடும், பொறுமையோடும், மௌனமாகவும் 24 மணி நேரமும் பகவான் ஆச்ரமத்தில் அமர்ந்திருந்தார். ஆச்ரமத்தின் உரிமைகளைக் காப்பதிலும், புத்தங்களைப் பதிப்பதிலும், பகவானது உபதேசங்களைச் சேகரிப்பதிலும் ஈடுபட்டவர்கள் உலக ரீதியான வளர்ச்சிக்கு மட்டுமே தொண்டு செய்தனர் என்றாலும் அவர்களுக்கும் ஆன்மீக வளர்ச்சியான 'ஸத்தியத்தை உணர்தல்' என்ற ஆசியை பகவான் அருளியுள்ளார்.



பகவானுடன் காவ்யகண்டர், B. V. நரசிம்மஸ்வாமி, யோகி ராமையா, சின்னஸ்வாமி மற்றும் பிற பக்தர்கள்

இந்த நான்கு அம்சங்களின் அடிப்படையிலேயே, சின்னஸ்வாமியின் வாழ்க்கையை நாம் நோக்க வேண்டும். மிக மிக முக்கியமான முதல் மூன்று அம்சங்களில் மட்டுமே தனது முழு கவனத்தைச் செலுத்த சின்னஸ்வாமி தேவைப்பட்டார். பகவானின் தேகத்தையும், பகவானுடைய தேவைகளையும் கவனித்துக் கொண்டதால், அவர் இன்றியமையாதவரானார். தவறுகள் நேர்ந்திருக்கலாம். எப்படியானாலும், இடைவெளியற்ற கவனிப்பு ஒரு நாளைக்கு 24 மணி நேரமும், வாரத்தில் 7 நாட்களிலும் தேவைப்பட்டது. இவ்வாறாக நம் பொருட்டு பகவானின் தேகத்தின் பாதுகாப்பும், பராமரிப்பும், இடையறாத ஸாந்நித்யமும் அவர் பொறுப்பும் பேறுமாயின. இரண்டாவதாக ரமணாச்ரமத்தின் சொத்துகளைப் பாதுகாக்க அவர் போராட வேண்டியிருந்தது. அவரால் தான், நாம் இன்றும் அங்கு வசதியாகத் தங்க முடிகிறது. பகவான் எழுதிய நூல்களை மிகுந்த அக்கறையோடு சேகரித்து வைத்தார். விரூபாக்ஷ குகையிலும், ஸ்கந்தாச்ரமத்திலும் இருந்த போது, சிறு காகிதத் துண்டுகளில் பகவான் எழுதியவைகளில் பெரும் பகுதி தொலைந்து விட்டது. பகவானே இதைப் பற்றிக் கூறியிருக்கிறார். சின்னஸ்வாமியால் நிர்வகிக்கப்பட்ட ரமணாச்ரமத்திற்கு வந்தபிறகு, பகவான் எழுதியவற்றில் ஒரு அக்ஷரம் கூடக் காணாமல் போகவில்லை.

முதல் மூன்று அம்சங்களையும் சின்னஸ்வாமி தவறின்றி வெகு விழிப்புடன் கவனித்துக் கொண்டதால், அவருக்குத் தனிப்பட்ட முறையில் ஸாதனைகள் செய்ய நேரமிருக்கவில்லை. அதனால் பகவான் தனது அருளை அவருக்கு வழங்கினார். சின்னஸ்வாமி அவருடைய கடைசி நாட்களில் தன்னுடைய தவறுகளுக்கான பரிகாரமாக உடலளவில் மிகவும் துன்பப்பட்டார். அதன் பிறகு பகவான் அவருக்கு விடுதலை அளித்தார். இதற்கு விஸ்வநாத ஸ்வாமியே ஸாக்ஷி. ஏனென்றால், "சின்னஸ்வாமி அவரது மரணத் தறுவாயில் மகிழ்ச்சியோடு தனது கைகளைத் தூக்கினார். பகவான் வந்து அவரை அழைத்துச் சென்று அருணாசலத்தில் கலப்பதற்கு உதவியதை என்னால் உணர முடிந்தது." என்று அவர் கூறினார்.

பகவானின் குறிப்பிடத்தக்க மூன்று பக்தர்கள், சின்னஸ்வாமியைப் பற்றி என்னிடம் கூறியதை இத்தருணத்தில் உரைப்பது பொருத்தமாக இருக்கும். S. S. கோஹென் (S. S. Cohen) என்னிடம் கூறியதாவது: 'தன் வாழ்க்கை முழுவதையும் பகவானது சேவையில் கழிக்கும் நோக்குடன் 1917-ல் ஸ்கந்தாச்ரமத்தில் சின்னஸ்வாமி அவரிடம் வந்து சேர்ந்தார். 1930-ம் ஆண்டு ஆச்ரமத்தின் ஸர்வாதிகாரியாகப் பொறுப்பேற்று, லௌகிக காரியங்களை நிர்வகித்தார். அப்போதிருந்து 1953-ல் இறைவனடி சேரும் வரை பிறர் பின்பற்றத்தக்க வகையில் பக்தியோடு ஆச்ரம நலனுக்காக ஓயாமல் உழைத்தார். இதைச் சாதிப்பதற்கு, சட்டரீதியான பிரச்சனைகளையும், நீதிமன்ற வழக்குகளையும் உறுதியோடு எதிர் நின்று, ஆச்ரம உரிமைகளைக் காப்பாற்றப் போராடியே ஆக வேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு இருந்தது. ரமணாச்ரமம் மற்றும் அதைச் சார்ந்தவை இவற்றின் இன்றைய நிலைக்கு, அவரது எஃகு போன்ற உறுதியான ஸங்கல்பங்களும், உழைப்பும் மட்டுமே காரணம் எனலாம். தனது மகனும் வாரிசுமான T. N. வேங்கடராமனுக்கு, தான் இறைவனடி சேர்வதற்கு முந்தைய தினம் கொடுத்த அறிவுரைகளிலிருந்து, ஆச்ரம நலன் கருதி அவர் எவ்வளவு சிக்கனமாக இருந்திருக்கிறார் என்பதை நாம் நிர்ணயிக்க முடியும். 'சுத்தமான கைகளோடும், தெளிவான மனசாட்சியோடும், நான் இந்த உலகை விட்டுச் செல்கிறேன். எனது சுயநலத்திற்காக ஆச்ரம நிதியிலிருந்து ஒரு பைசா கூட உபயோகித்ததில்லை. இங்கு இருப்பது அனைத்தும் பகவானுடையது. அவை மிகுந்த கவனத்தோடும், விழிப்புணர்வோடும் பாதுகாக்கப்பட வேண்டும். பகவான் ரமணருடைய தொண்டில் உங்களை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு அவர் அருளைப் பொழிவார் என்று உறுதியாகக் கூறுகிறேன். முழு மனதோடு நேர்மையாகவும், உண்மையாகவும் தொண்டு செய்யுங்கள்.

நான் எவ்வாறு நமது பாரம்பரியத்தை என் வாழ்நாள் முழுவதும் காத்தேனோ, அதே போன்று மதிக்கத்தக்க அவற்றை நீயும் நிலை நிறுத்து', என்று சின்னஸ்வாமி கூறியதாக S. S. கோஹேன் கூறி முடித்தார்.

1938-ம் ஆண்டிலிருந்து இறுதிவரை ஆச்ரமத்தில் தங்கியிருந்த மேஜர் சாட்விக், 'சின்னஸ்வாமி இல்லையேல் ரமணாச்ரமம் என்ற ஒன்றே இருந்திருக்காது. ஓலைக் குடிசையாக இருந்த ஆச்ரமத்தைப் பலமான கட்டிடங்களாக மாற்றியவர் அவர். ஆர்வத்தோடு அயராது கடுமையாக உழைத்தார். பகவானைக் காண வரும் பக்தர்களுக்கு நல்ல சத்தான உணவு வழங்குவதில் அவருக்கு ஒரு மகிழ்ச்சி. ஆச்ரமவாசிகளான எங்களுக்கு, போர்க்களத்தில் படைவீரர்கள் உபயோகிக்கும் கேடயத்தைப் போன்றவர், சின்னஸ்வாமி. அதனால் வெளி உலகில் நிகழும் போர், பூகம்பம் போன்ற எதையும் கவனிக்காமல் எங்களது ஆத்ம ஸாதனைகளில் தடையின்றித் தீவிரமாக ஈடுபட்டோம். அவ்வாறு பகவானது ஸந்நிதியில் இரவும் பகலும் நாங்கள் தூய்மையடைந்தோம்', என்று சாட்விக் என்னிடம் கூறினார்.

குடும்பத்தோடு வாழ்ந்ததால், ஆர்தர் ஆஸ்போர்ன் எப்போதும் ஆச்ரமத்திற்கு வெளியே தான் வசித்தார். சாட்விக் ஆச்ரமத்தினுள்ளே தங்கினார். ஆச்ரமவாசியாக அவர் இருந்ததால், நிர்வாகத்துக்கு ஆதரவாகப் பேசுவது இயல்பு என்று எனக்கு அப்போது தோன்றியதால், நான் நிர்வாகத்தோடு சம்பந்தப்படாத ஆர்தர் ஆஸ்போர்னது அபிப்ராயத்தைக் கேட்டேன். ஆர்தர் ஆஸ்போர்ன் தன் அபிப்ராயத்தைத் தெரிவிக்கும் வகையாக 'எனது அன்பான குருவால் தேர்ந்தெடுக்கபட்டவராதலால் என்னைப் பொறுத்த வரையில் சின்னஸ்வாமியை விடச் சிறந்த நிர்வாகியொருவர் இருக்க முடியாது', என்று கூறினார். அவருக்கு பகவானிடமிருந்த பக்தியின் காரணமாக சின்னஸ்வாமியின் நிர்வாகத்தை அவர் எடை போடவில்லை. பதிலாக அவர் மேலும் ஒரு படி சென்று, 'பகவானால் தேர்ந்தெடுக்கப்பட்டவரின் நிர்வாகம் நல்லதா, கெட்டதா என்று என் மனம் ஆராயவேயில்லை. என்னைப் பொறுத்தவரையில் இதை விட நல்லதொரு நிர்வாகம் இருக்க முடியாது', என்றார்.

சின்னஸ்வாமிக்கு என் மரியாதைகளைத் தெரிவித்துக் கொண்டு அவர் தனிப்பட்ட முறையில் சாதித்த சிலவற்றை உங்களோடு பகிர்ந்து கொள்கிறேன். திருச்சுழியில் பகவான் பிறந்த வீடு மிகவும் புனிதமானது. அது ஏலத்தில் விடப்பட்டதால் கை நழுவிப் போனது. சின்னஸ்வாமி மேலாளரான பிறகு மிகவும் பாடுபட்டு அந்த வீட்டை மீட்டார். பகவானுக்கும் அவரது பெற்றோருக்கும் வழிபாடு நடத்தும் வகையில், அதை ஒரு கோயிலாக்கினார். 'சுந்தர மந்திரம்' என்று அவர் பெயரிட்ட அந்த இல்லம் இன்றும் திருச்சுழியில் உள்ளது. நாம் மறக்க முடியாத மற்றொரு ஸாதனை என்னவென்றால், மரணானுபவத்துக்குப் பின் பகவான் மதுரையில் எந்த வீட்டில் ஆத்மானுபவத்தை அடைந்தாரோ அந்த வீட்டையும் ஆச்ரமத்துக்குச் சொந்தமாக்கினார். அதை மிகவும் கஷ்டப்பட்டு வாங்கி, இறுதியில் 'ரமணமந்திரம்' என்ற கோயிலாக மாற்றினார். மேற்கூறிய இவ்விரு இடங்களும் இப்போது ரமண பக்தர்களுக்கு வழிபாட்டுத் தலங்களாக உள்ளன.

பகவான் அருணாசலத்திற்கு வந்து 50 ஆண்டுகள் நிறைவுற்ற போது, அதைப் பொன்விழாவாகச் சிறப்பாகக் கொண்டாட விரும்பினார் சின்னஸ்வாமி. ஆயிரக்கணக்கானோர்க்கு அன்னதானம் வழங்கப்பட்டது. உலகெங்கிலுமிருந்து வந்த பண்டிதர்கள் பகவானுக்குத் தங்கள் மரியாதையைச் செலுத்தினார்கள். சிறந்த சங்கீத வித்வான்களும் அழைக்கப்பட்டார்கள். பகவான் அருணாசலத்தை விட்டு வேறிடமெதுவும் சென்றதேயில்லையென்பதால், பகவானுக்குக்

காணிக்கையாக்கப்படும் சங்கீதம், உணவு மற்றும் அனைத்துமே மிகவும் சிறப்பாக இருக்க வேண்டுமென்று சின்னஸ்வாமி விரும்பினார். இந்த விழாவைப் பற்றிய விபரங்களை 'Letters From Ramanasramam' (ரமணாச்ரமத்திலிருந்து கடிதங்கள்) என்ற நூலில் காண முடியும். அப்போது 10 வயதே நிரம்பியிருந்த நான், விழாவில் கலந்து கொண்டேன். அவற்றில் சில நிகழ்ச்சிகள் என் நினைவில் நின்றன.

என்னைப் பொறுத்த வரை சின்னஸ்வாமியின் மிகப் பெரிய ஸாதனை, அந்தப் பொன்விழா சமயத்தில் அருணாசலேச்வரர் கோயிலிலிருந்து யானையை வரவழைத்து அந்த யானையின் மூலம் பகவானுக்குக் கோயில் மரியாதைகளைச் செய்வித்ததுதான். எதற்காக அந்தக் கோயில் யானையை வரவழைத்தார்? பொன் விழாவில் பலர் குழுமியிருந்த போதிலும், முதன்முதலில் பகவான் திருவண்ணாமலைக்கு வந்தபோது, அவருடனிருந்தது அந்த யானை மட்டுமே. அருணாசலேச்வரர் கோயிலிலுள்ள ஆயிரங்கால் மண்டபம் இருட்டாகவும், பயமூட்டுவதாகவும் இருந்ததால் அங்கு யாருமே செல்ல மாட்டார்கள். அந்த இடத்தில் ஒரு யானை கட்டப்பட்டிருந்தது. அங்குதான் பகவான் அமர்ந்தார். முதலில் குறும்புத்தனமுள்ள பல சிறுவர்கள், தியானம் செய்யும் போது தன்னைத் தொந்திரவு செய்ததால், பகவான் இந்தத் தனிமையான இடத்தைத் தேர்ந்தெடுத்தார். அந்தச் சமயத்தில் பல மாதங்களுக்குத் தனக்கு அந்த யானை மட்டுமே துணையாக இருந்ததென பகவான் கூறியுள்ளார். பகவானது இந்தக் கூற்றை மனதில் கொண்டு சின்னஸ்வாமி அந்த யானையை வரவழைத்து, பகவானுக்கு மரியாதை செய்யும்படியாக ஏற்பாடு செய்திருந்தார்.

1949-ல் அமெரிக்க பக்தர் ஒருவர் அந்த யானையை மீண்டும் அழைத்து வந்து அது பகவானுக்கு சலாம் போடுவதைப் போன்ற ஒரு புகைப்படத்தை எடுத்தார். அவர் அமெரிக்காவுக்குச் சென்ற பின் அந்தப் புகைப்படத்தையனுப்பி அதன் பின்னால், "தேகமே அறியாத பெரிய வஸ்துவும்(பகவான்) மற்றும் ஆத்மாவை அறியாத பெருத்த தேகமும் (யானை) இரண்டும் ஒரேயிடத்தில் உள்ளனர்" என்று எழுதியனுப்பியிருந்தார். எல்லோரும் குதூகலமடையும் வண்ணம் பகவான் அந்த அழகான வரிகளை உரக்கப் படித்தார்.

அன்னையின் கோயிலுக்கு 1949-ல் சின்னஸ்வாமி கும்பாபிஷேகத்தை நடத்தினார். பகவானுக்குச் சடங்குகளில் விருப்போ வெறுப்போ இல்லையென்றாலும், பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்க அவர் எல்லா நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டார். மிகவும் நேர்த்தியாக ஏற்பாடு செய்யப்பட்ட இந்த கும்பாபிஷேகம், நான்கு நாட்களுக்கு நடந்தது. ஆயிரக்கணக்கானோர்க்கு உணவு அளிக்கப்பட்டது. விழாவின் வெற்றிக்காகப் பாடுபட்ட அனைவருக்கும் விழா முடிந்தபின் சின்னஸ்வாமி நினைவுப் பரிசுகளை வழங்கினார். சின்னஸ்வாமியைப் பெரிதும் மதித்த ஒரு சாரார், பகவான் முன் ஒரு நாற்காலியைப் போட்டு, அவரை அழைத்து வந்தனர். இந்து சமுதாயத்தில் மிகுந்த பாசத்தோடு இருப்பவர்கள் உணர்ச்சி வசப்பட்டு வழக்கமாகச் செய்வது போன்று அவருக்குப் பாத பூஜை செய்ய விரும்பினர். சின்னஸ்வாமி இதை உணர்ந்து கொண்டு நாற்காலியில் உட்கார மறுத்து கோபமாக, 'இந்தப் பாத பூஜை எல்லாம் யாருக்கு உடம்பைப் பற்றிய உணர்வேயில்லையோ, அவருக்குத் தான் செய்யலாம். நான் அதற்குத் தகுதியற்றவன். எனக்கு இன்னும் உடல் உணர்வு இருக்கிறது', எனக் கூச்சலிட்டார். 'எல்லோரிலும் சிறந்த பகவான் இங்கு இருக்கிறார். எல்லாப் பெருமைகளும், நமது குருவான பகவானையே சாரும். வேறு யாருக்கும் அந்தத் தகுதியில்லை', என்று பகவானைச் சுட்டிக் காட்டி சின்னஸ்வாமி கூறினார்.

பகவானும் சின்னஸ்வாமியும் சம்பந்தப்பட்ட சில நிகழ்ச்சிகள் அவர்களிடையேயிருந்த உறவைத் தெளிவாக உணர்த்துகின்றன. ஒருமுறை பகவானது பிறந்த நாள் கொண்டாடப்பட வேண்டிய முன்தினம் ஆச்ரமவாசிகள் பண்டக சாலையில் பொருட்களேதுமில்லையென்பதை அறிந்தனர். நூற்றுக்கணக்கான பக்தர்கள் ஏற்கனவே வந்து விட்டனர். பணம் இல்லாததோடு கால அவகாசமும் இல்லாததால், சின்னஸ்வாமி தைரியத்தையிழந்து என்ன செய்வதென்று புரியாமல் பயந்து அங்குமிங்கும் அலைந்தார். பகவான் பக்தர்களோடு ஹாலில் இருந்தார். நள்ளிரவில் ஒரு மாட்டு வண்டியில் அரிசி, பருப்பு, காய்கறிகள், எண்ணெய் ஆகியவை அனைத்தும் கொண்டு இறக்கப்பட்டன. ஆனாலும் எல்லா பக்தர்களும் உறங்கிக் கொண்டிருந்ததால், காய்கறி நறுக்கவோ, சமையல் செய்யவோ அங்கு யாரும் இருக்கவில்லை. பகவான், நிலைமையைப் புரிந்து கொண்டு தன் கைத்தடியால் உறங்கிக் கொண்டிருந்த பக்தர்களை மெதுவாகத் தட்டி எழுப்பி, "கொதிக்கும் பாலில் வாயை வைத்துவிட்ட பூனையைப் போன்று, சின்னஸ்வாமி அங்கு தவித்துக் கொண்டிருக்கிறார். காய்கறிகளை நறுக்கி அவருக்கு உதவி செய்வோம்," என்று கூறி அனைவரையும் அழைத்துச் சென்றார். பகவானும் பக்தர்களும் காய்கறிகளை நறுக்கி, மறுநாளைக்குத் தேவையான உணவையும் சமைத்தனர். பகவானது பிறந்த நாள் விழா விமர்சையாக நடந்தேறியது என்பதைக் கூறவும் வேண்டுமோ?



நிரஞ்ஜனானந்த ஸ்வாமி – அவர் அலுவலகத்தில்

பால் பிரண்டன், முனகால வேங்கடராமையா, சின்னஸ்வாமி இவர்கள் சம்பந்தப்பட்ட சச்சரவை நான் தெளிவு செய்ய விரும்புகிறேன். ஹாலில் நடந்த சம்பாஷணைகளை பால் பிரண்டன் குறிப்பெடுத்து கொண்டிருந்தார். அதைச் சின்னஸ்வாமி கடுமையாக எதிர்த்து நிறுத்திவிட்டார் என்று ஒரு செய்தி நிலவி வந்தது. பக்தர்கள் படிக்கவேண்டிய, 'ரமணமஹர்ஷியின் வசனாம்ருதம்' என்று பின்னர் தொகுக்கப்பட்ட சம்பாஷணைகளை முனகால வேங்கடராமையா குறிப்பெடுத்துக் கொண்டிருந்தார். பால் பிரண்டனிடம் கூறியது போன்று, அவரையும் பதிவு செய்வதை நிறுத்தும்படி சின்னஸ்வாமி கூறிவிட்டார். பால் பிரண்டன், பகவான் முன்னிலையில் எழுதி எடுத்த குறிப்புக்களை பகவானுடைய பெயரைக்கூடத் தெரிவிக்காதபடி விற்றுவந்தார் என்பதால், அவரை எழுதுவதை நிறுத்தும்படி சின்னஸ்வாமி கூறியது உண்மையே. தன்னுடைய புத்தகங்களாலேயே பகவான் பலராலும் அறிந்துகொள்ளப்பட்டார் என்று கூட பிரண்டன் பெருமையாகக் கூறிக் கொண்டார். இந்த விபரத்தை அறிந்த போது, ஹாலில் பால் பிரண்டன் அமர்ந்திருந்த இடத்திற்கு நேராகச் சென்று 'எழுதுவதை நிறுத்துங்கள்' 'இனிமேலும் எழுதுவதற்கு உங்களுக்கு அதிகாரம் இல்லை' என்று பளிச்சென்று கூறினார். பிரண்டன் வெகுண்டெழுந்து முகம் சிவக்கப் பகவானைப் பார்த்து 'பகவானுடைய கருத்தும் இதுவேதானா?' என்று வினவினார். பகவான் அமைதி காத்தார்.

இதேபோன்று பகவானுடன் நடந்த உரையாடல்களை நோட்டுப் புத்தகத்தில் எழுதிக் கொண்டிருந்த முனகால வேங்கடராமையா, ஆச்ரமத்திற்கு வெளியே சிலரைக் கூட்டித் தான் செய்யும் பெரிய காரியத்தைக் காட்டிக் கொள்வார். இது சின்னஸ்வாமியின் கவனத்திற்கு வந்தபோது ஹாலுக்குச் சென்று பகவான் முன்னிலையிலேயே அவர் எழுதுவதை நிறுத்தும்படி செய்தார். பிறர் முன்னிலையில் அவமானத்திற்கு ஆளானதால் முனகால வேங்கடராமையா மிகவும் மனவேதனை அடைந்தார். பின்னர், மரியாதையின்றி நடத்தப்பட்டதால் வருந்திய முனகாலர் பகவானிடம் வந்தபோது, பகவான், "ஒருவன் தன்னை ஆசானாக வெளிப்படுத்திக் கொண்டு குருவாகப் பிரகடனம் செய்து கொள்வது என்பது பூதாகாரமான அஹங்காரம் ஆகும்" என்று கூறினார். பகவான் கொடுத்த இந்தச் செய்தி தனக்காகக் கொடுக்கப்பட்டது என்பதை உணர்ந்து முனகாலர், பகவானை உடனே நமஸ்கரித்து மன்னிப்புக்கோரினார். பகவான் அவரைக் காப்பாற்றினார். பின்னாளில் முனகாலரே, "ஆத்மாவை அறிய முற்படும் ஒருவர் குருவானால், முதலில் கடுமையாகப் பாதிக்கப்படுவது அவரது ஸாதனைகளின் முன்னேற்றம்" என்று கூறினார்.



பிரண்டனுடன் எனக்குத் தொடர்பு இருந்ததால், தனது நடத்தைக்காக பகவானிடம் வருத்தம் தெரிவித்ததாக என்னிடம் ஒப்புக் கொண்டார். எவ்வளவு அழகாக பகவான் அவர்களைத் திருத்தி மீண்டும் ஸாதனைகளில் ஈடுபட வைத்துள்ளார்! பிரண்டனும், முனகாலரும் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை அடையவேண்டும் என்பது பகவானின் நோக்கமாக இருந்ததால்

பிற்காலத்தில் அவர்கள் அந்த நிலையை அடைந்தார்கள். முனகாலரும், பிரண்டனும் பகவானது உபதேசங்களை பிரகடனப்படுத்தியபோது உலக ரீதியான வளர்ச்சி ஏற்பட்டது. பகவான் அவர்களுக்கு ஆன்மீக வளர்ச்சியைக் கொடுத்து ஆசீர்வதித்தார். அவர்களது குறைகளை நீக்குவதற்குத் துணி துவைக்கும் கல்லாக சின்னஸ்வாமி உபயோகப் படுத்தப்பட்டார் என்று முனகாலரே என்னிடம் கூறினார். நாங்கள் சின்னஸ்வாமியைக் குறை கூறினோம். ஆனால் பகவான், அவர் மூலமாக எங்களைக் காப்பாற்றினார் என்று முனகாலர் கூறினார்.

மேலும் பகிர்ந்து கொள்ளக்கூடிய பல நிகழ்ச்சிகள் இருந்தாலும், அண்ணாமலை ஸ்வாமி சம்பந்தப்பட்ட ஒன்று விசேஷமாகக் குறிப்பிடத்தக்கது. ஆச்ரமத்தில் கட்டட வேலைப் பொறுப்புக்களை அண்ணாமலை ஸ்வாமி ஏற்றுக்கொண்டிருந்தார். ஆனால் சாதாரணமான கட்டிடங்களையே அவரால் எழுப்ப முடியும். சின்னஸ்வாமி கோயில் கட்ட முற்பட்டபோது, தென்னிந்தியாவில் உள்ள கட்டட நிபுணர்கள் வரவழைக்கப்பட்டனர். கட்டுமானப் பணிகள் தொடங்கிய பின்னர், தொழில் நுட்ப சம்பந்தமான சிக்கல் ஒன்று ஏற்பட்டபோது அதை அண்ணாமலை ஸ்வாமியால் சரி செய்ய முடியவில்லை. அவ்வாறிருந்தும் தனது வழியிலேயே வேலைகள் நடக்க வேண்டும் என்று விரும்பினார். கோயில் கட்டும் ஸ்தபதிகளும் சின்னஸ்வாமியும் அதற்கு இணங்காததால் அண்ணாமலை ஸ்வாமி வெளியில் அனுப்பப்பட்டார். பின்னாளில் என்னிடம் அவர் இவ்விஷயமாகப் பேசியபோது, "வெளிப்பார்வைக்கு சின்னஸ்வாமியும் நானும் சண்டையிட்டோம் என்பதும், என்னை அவர் வெளியே அனுப்பினார் என்பதும் உண்மை. ஆனால் பிற்காலத்தில்தான் அந்தச் சிகிச்சை அப்போது எனக்கு தேவைப்பட்டது என்பதை நான் உணர்ந்தேன். இல்லாவிட்டால் என் வாழ்க்கை முழுவதும் ஆச்ரமத்தில் கட்டிடம் கட்டிக்கொண்டே இருந்திருப்பேன். இதை உணர்ந்து கொண்ட பகவான் ஆச்ரமத்திற்குள்ளேயே வரவேண்டாமென்று என்னைப் பணித்தார். பகவான் தினமும் பலாக்கொத்தில் எனது இருப்பிடத்திற்கு வந்து தவ வாழ்க்கையிலும், ஸாதனைகளிலும், தனிமையிலும் என்னை ஊக்குவித்ததால் அவர் என்னை நிந்திக்கவில்லை என்பதை நான் புரிந்து கொண்டேன். என்னுடைய குடிலில் வந்து எனக்குத் தனிமையில் உபதேசங்களைக் கொடுத்தார் என்பது எனக்கு எத்தனை பெரிய அனுக்ரஹம்!! உண்மையில் இதற்கெல்லாம் காரணமான சின்னஸ்வாமிக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். நான் அகமுகமாகி, 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வே நமது பகவான் என்பதை என் உள்ளுணர்வில் அறிந்து கொண்டேன்.

மூத்த பக்தர்கள் அனைவரும் ஏன் பலாக்கொத்திற்குச் சென்றார்கள் என்பதை, விஸ்வநாத ஸ்வாமி விளக்கி "எங்களுடைய ஸாதனைகளை அங்கு தொடர முடியும் என்பதால், நாங்கள் அங்கு சென்றோம். பகவானும் அதற்கு ஒப்புதல் கொடுத்தார்." மேலும், 'எந்த மாதிரி உங்களுடைய குடிலை அமைத்துக் கொள்ளப் போகிறீர்கள்?' என்று பகவான் கேட்பார். "அத்துடன் அவர் தெருக்களில் பிக்ஷை எடுப்பதற்கும் எங்களை ஊக்குவித்தார். அதனால்தான் நாங்கள் பகவானுடன் முழுநேரமும் இருக்க முடிந்தது. அதன் விளைவாக ஆத்மாவை உணர்ந்து கொண்ட நிலையில் இன்று நாங்கள் இருப்பது சாத்தியமாயிற்று. நாங்கள் ஆச்ரமத்தை விட்டு வெளியே வந்ததால்தான், இது நடந்தது. பகவானும் இவ்வாறே நடக்க வேண்டும் என்று விரும்பினார்" என்று கூறினார்.

சின்னஸ்வாமியின் கடுமையான நடத்தையால் அதிகமாகப் பாதிக்கப்பட்டது விஸ்வநாத ஸ்வாமியே. ஒருமுறை, அவர், 3 நாட்களுக்கு உணவின்றி இருக்க நேர்ந்தது. சமையலறை உதவியாளர், அவரைச் சமையலறை வழியாக உணவுக் கூடத்திற்கு அழைத்துச் சென்று

மற்றவர்களோடு அமரச்செய்தார். அவர் உண்ண ஆரம்பிக்கும் முன், அங்கு வந்த சின்னஸ்வாமி அவர் கையை பிடித்திழுத்து வெளியே தள்ளினார். பகவான் இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த போதும் மறுப்பு ஏதும் தெரிவிக்கவில்லை.

இதில் விநோதமென்னவென்றால் சின்னஸ்வாமியின் இறுதி நாட்களில் இதே விஸ்வநாத ஸ்வாமி அவருக்குப் பணிவிடை செய்தார். "அவமதிக்கப்பட்டு, மிகுந்த மன வேதனைக்குள்ளாகிய போதும், உங்களால் சின்னஸ்வாமிக்கு எவ்வாறு பணிவிடை செய்ய முடிந்தது" என்று நான் வியப்புடன் கேட்டபோது, அவர் 1953-ம் ஆண்டு நான் திண்டுக்கல்லில் இருந்த போது, ரமணர் என் கனவில் தோன்றி, ரமணாச்ரமத்திற்கு வரும்படி கூறினார். நான் உடனே ஆச்ரமத்திற்குக் கிளம்பினேன். அப்போது பகவான் மஹாஸமாதி அடைந்திருந்தார். எதற்காக பகவான் என்னை வரும்படி கூறினார் என்பது தெரியவில்லை. வந்தபோது சின்னஸ்வாமி கவனிப்பாரற்று மரணப்படுக்கையில் இருப்பதைக் கண்டேன். 'பகவான், அவரைக் கவனித்துக் கொள்வதற்காகத்தான் என்னை வரவழைத்தார்' என்பதைப் புரிந்து கொண்டேன். இரவும் பகலும் அவருடனேயே இருந்து, அவரைக் குளிப்பாட்டித் தேவையான பணிவிடைகளைச் செய்தேன். ஒருநாள் சின்னஸ்வாமி என் கைகளைப் பிடித்துக்கொண்டு தன்னை மன்னிக்குமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். அவருடைய செயல்களுக்காக சின்னஸ்வாமி கடுமையாக வேதனைகளை அனுபவிக்க வேண்டி இருந்தது என்பது துயரத்தைத் தந்தது. பகவான் அவருடைய தவறுகளை நேரில் கண்டதால் அதற்குப் பரிகாரமாக உடலளவில் அவர் துன்பங்களை அனுபவிக்கச் செய்தார். சின்னஸ்வாமி அவருடைய கடைசி 2 நாட்களில் பகவான் படத்தைப் பார்த்தவாறு 'ரமணா, ரமணா' என்று ஜபித்தபடி இருந்தார். மரணத் தறுவாயில், கைகளை நீட்டினார். கண்கள் மூடியவாறு இருந்தன. அவரது முகம் களங்கமற்று, அமைதியாகவும், சந்தோஷமாகவும், பிரகாசமாகவும் இருந்தது. அருணாசலத்திடம் ஐக்கியப் படுத்துவதற்காக பகவான் அவரை அழைக்க வந்தார்.

என்னைப் பொறுத்தவரையில், சின்னஸ்வாமி என்னிடம் எப்போதும் மிக்க அன்பாக இருந்தார். தினமும் காலையில் எனக்குப் பல் துலக்கிவிட்டு என்னை அழைத்துச் சென்று பகவானை நமஸ்கரிக்கச் செய்வார். "இங்கே பார். நமது கடவுள்" என்று கூறுவார். பகவானது ஸாந்நித்தியத்தின் புனிதத்தை இப்போது உணரும் நான் அப்போது உணரவில்லை. என்றாலும் பகவானிடம் என்னை அழைத்துச் சென்றதற்காக அவருக்கு நான் எனது நன்றிக் கடனைச் செலுத்துகிறேன். எனக்கு 4 அல்லது 5 வயதாக இருக்கும்போது வீட்டிலிருந்து ரமணாச்ரமத்திற்குத் தனியாகவே ஓடிப்போய்விடுவேன். அந்த நாட்களில் தெருக்கள் இருட்டாகவும், ஆட்கள் நடமாட்டமின்றியும் இருக்கும். முதன்முறை நான் அம்மாதிரி செய்தபோது, சின்னஸ்வாமி திடுக்கிட்டுப் போனார். 'நீ ஏன் வந்தாய்?' என்று அவர் என்னிடம் கேட்டபோது 'அப்பா என்னை ரொம்பத் திட்டினா, வந்து விட்டேன்' என்று பதிலிறுத்தேன். என்னை உடனே பகவானிடம் அழைத்துச் சென்று, 'இவன் வீட்டிலிருந்து இவ்வளவு தூரம் பயமின்றித் தனியாகவே வந்திருக்கிறான். நான் வெங்கிட்டுவுக்குத் தகவல் கூறிவிட்டேன்', என்று சொன்னார். பகவான் என்னைப் பார்த்துக் குறும்புத் தனமாகச் சிரித்தார். அது எனக்கு இப்போதும் நினைவிருக்கிறது என்றாலும், அப்போது அதன் பொருள் விளங்கவில்லை. பிறகு சின்னஸ்வாமி என்னை அலுவலக அறைக்கு அழைத்துச் சென்று, அங்கு அவர் உறங்கும் ஒரு சௌகரிமான படுக்கையை எனக்குக் கொடுத்தார். 'பகவான் என்னைப் பார்த்து ஏன் சிரித்தார்?' என்று நான் அவரிடம் கேட்டேன். "உனக்கு இரண்டு வயதாக இருந்த போது காளை மாடு பூட்டப்பட்டு நின்று கொண்டிருந்த ஒரு காலி வண்டியில் நீ ஏறி அமர்ந்து கொண்டிருந்தாய். வண்டிக்காரனும் அங்கு இருக்கவில்லை. தெருவில் சென்ற ஒருவர், திடீரென்று குடையை

விரிக்கவும், மாடு மிரண்டு போய் வண்டியை இழுத்துக் கொண்டு ஊருக்குள் சென்று விட்டது. உன்னைக் காணாத போது பித்துப் பிடித்தது போன்று, ஆச்ரமம் முழுவதும் உன்னைத் தேடியும், கண்டுபிடிக்க முடியவில்லை. பகவானிடம் சென்று உன்னைக் காணவில்லையென்று தெரிவித்தோம். அதற்கு அவர், 'நாம் என்ன செய்ய முடியும்? வீட்டை விட்டு ஓடிப் போவது என்பது நம் குடும்பத்தில் ரத்தத்தில் ஊறிப் போயிருக்கிறது', என்று பகவான் கூறியதாக சின்னஸ்வாமி தெரிவித்தார். ஒன்றும் புரியாமல் அவர் சொன்னதன் அர்த்தமென்னவென்று கேட்டேன். பகவானுடைய தந்தையின் தமையனார் வேங்கடேச ஐயர் ஆன்மீக நாட்டத்தினால் வீட்டைவிட்டு ஓடிப் போய்விட்டாரென்று சின்னஸ்வாமி என்னிடம் விளக்கிக் கூறினார்.

பகவானுடைய ஸமாதி 'ஹாலை'க் கட்டும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டிருந்த போது, பல பிரச்சனைகள் எழுந்தன. ஒரு நாள், ஸ்ரீமதி தலயார்கான், எல்லாப் பிரச்சனைகளும் தீர்ந்துவிடுமென்று என்னிடம் கூறினார். நான் அவரைக் கேள்விக் குறியோடு நோக்கிய போது, அவர் தொடர்ந்து, "பகவான் நேற்றிரவு என் கனவில் தோன்றி 'சின்னஸ்வாமியின் ஸமாதியைப் பக்கத்திலேயே கட்டுவதற்கு ஏற்பாடு செய்யும்படி கணேசனிடம் கூறுங்கள். எல்லாம் சரியாகிவிடும்', என்று பகவான் கூறினார்" என்று அவர் தெரிவித்தார். பகவானுடைய அருளால் பகவான், நிரஞ்ஜனானந்த ஸ்வாமி ஆகிய இருவரின் ஸமாதிகளையும் ஒரே சமயத்தில் என்னால் கட்ட முடிந்தது. 1967-ல் அன்னை அழகம்மாள், பகவான், சின்னஸ்வாமி ஆகிய மூவரின் ஸமாதிகளுக்கும் கும்பாபிஷேகம் நடைபெற்றது.



சின்னஸ்வாமியின் ஸமாதியைக் கட்டுவதில் நான் ஈடுபட்டிருந்த போது, அதில் நிரஞ்ஜனானந்த ஸ்வாமியின் பெயரையும், அவர் பிறந்த, இறந்த தேதிகளையும் குறிப்பிட்டு ஒரு கல்வெட்டைப் பொருத்துவதாக இருந்தேன் ஆனால் அதற்குப் பதிலாக கல்வெட்டு எழுதுபவர், 'நிரஞ்ஜனானந்த ஸ்வாமி - அருணாசலத்தில் ஒன்றிய நாள் 29. 1. 1953' என்று எழுதி அனுப்பியது

என்னை சிலிர்ப்படைய வைத்தது. அதன் பிறகு கட்டப்பட்ட 15 ஸமாதிகளில் ஒவ்வொரு பக்தருக்கும் அதேபோன்று கல்வெட்டுக்களை - 'முருகனார் அருணாசலத்தில் ஒன்றினார்', 'குஞ்சு ஸ்வாமி அருணாசலத்தில் ஒன்றினார்', 'மேஜர் சாட்விக் அருணாசலத்தில் ஒன்றினார்' என்பது போன்ற கல்வெட்டுக்களையே பொருத்தினேன்.

பகவான் எப்போதும் தன்னிருப்பிலேயே இருந்தார். 'நான் இருக்கிறேன்' என்ற இருப்புணர்வை நமக்கெல்லாம் அருள்வதையே குறிக்கோளாகக் கொண்ட நம் குருநாதனுக்கு சேவை செய்வதற்காக அருணாசலத்திலிருந்து உருண்டு வந்த மிகப் பெரிய பாறைகளில் ஒன்றாகிய சின்னஸ்வாமியை, நாம் நினைவு கூர்வோம்.



# 26 B. V. நரஸிம்ம ஸ்வாமி



பகவானுடைய வாழ்க்கையில் நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக எவ்வாறு நிகழ்ந்தன என்பதை நோக்கும் போது அதன் பூர்ணமான அழகு வெளிப்படும். அதனுள் ஒளிர்ந்த தெய்வீகத் தன்மை படிப்படியாக விரிந்து காணப்பட்டது. அதில் நாம் ஆழ்ந்து மூழ்கினால் அது வெளித்தோற்றம் மட்டும் அன்று என்பதை உணர்வோம். இந்தத் தன்மை நம் அக வாழ்க்கையிலும் தென்படத் துவங்குகிறது. ஞானியுடன் வாழ்வதாலோ அல்லது அவரது வாழ்க்கையைப் பற்றி அறிந்து கொள்வதாலோ இது நிகழ்கிறது.

நமது அன்புரு பகவான் 1916 முதல் 1922 வரை ஸ்கந்தாச்ரமத்தில் இருந்தபோது தீவிர ஆன்மீக நாட்டம் உள்ளவர்கள் மெல்ல மெல்ல வரத் துவங்கினர். இந்தப் பொற்காலத்தில் அவர் தனது அருட்பார்வை ஒன்றினாலேயே ஒவ்வொருவர் மனதிலும் ஆழ்ந்த அமைதியை நிலை நாட்டினர். இந்தக் காலகட்டத்தில்தான் கேரளத்தைச் சேர்ந்த ஞானியான நாராயணகுரு பகவானைப் பார்க்க வந்தார். பகவானுடைய மிக உயர்ந்த ஆன்மீக நிலை அவர் மனதில் ஆழமாகப் பதிந்து பரவசமூட்டியது. அதன் விளைவாகத் தனது சீடர்கள் இருவரை அழைத்து "நீங்கள் இருவரும் ஆறு மாதங்கள் இங்கேயே தங்கி மஹர்ஷியைத் தினமும் காண வரும் யாத்ரீகர்களுக்கு ஊனுக்கும் ஜாகைக்கும் ஏற்பாடு செய்யுங்கள். அதன் மூலம் தினமும் மஹர்ஷியைக் காண, ஆயிரக்கணக்கானவர்களுக்கு ஆன்மீக லாபம் ஏற்பட அனுகூலமுண்டாகும். மஹர்ஷியின் பெருமையைப் பண்டிதர்கள் குழாமும் தீவிர ஆன்மீக நாட்டம் உள்ளவர்களும் அறிந்து கொள்ளும் வண்ணம் அவர்களிடம் சென்று பகவானைப் பற்றிப் பேசி அவருடைய மஹிமையைப் பரப்புங்கள்," என்று உத்தரவிட்டார்.

பகவானது புகழையும் உபதேசங்களையும் பரப்புவதற்குத் துவங்கும் முன்னரே அதற்குத் தேவையான இரண்டு முன்னேற்பாடுகளை தந்தை அருணாசலேச்வரர் செய்திருந்தார். முதல் படியாக பகவானுடைய மஹிமையை உணர்ந்து அவருக்கு ஒரு பெயரையும் சூட்டியிருந்தார் அக்காலத்தில் ஒப்பற்ற மஹா பண்டிதராக விளங்கிய காவ்யகண்ட கணபதிமுனியை தேர்ந்தெடுத்து ஒரு இளம் பிராம்மணச் சிறுவனுக்கு 'பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷி' எனப் பெயர் சூட்டும்படி செய்தார் தந்தை அருணாசலேச்வரர். இரண்டாவதாக பகவானுடைய உபதேசங்களைப் பரப்புவதற்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டி இருந்தது. இதை சாதிக்கும் பொருட்டு சிவப்பிரகாசம் பிள்ளைக்கு 'நான் யார்' என்பது குறித்த தெளிவான விளக்கங்களையும் கம்பீரம் சேஷய்யாவின் மூலம் 'ஆத்ம விசாரம்' என்பது குறித்தும் காவ்யகண்ட கணபதிமுனிவர் மூலம் ஸ்ரீ ரமண கீதையையும் பகவான் மிகத் தெளிவாக வெளிப்படுத்தியிருந்தார்.

இந்த முன்னேற்பாடுகளுக்குப் பின் தந்தை அருணாசலம் தனது மடியில் அமர்ந்திருந்த மகனான பகவான் ரமணரைத் தன் பாதங்களில் அமரும்படி செய்தார். ஏனெனில் உபதேசங்களைப் பரப்ப வேண்டிய காலம் வந்துவிட்டது. மூன்றாவதாக இப்பணிக்குத் துணை நிற்கும் பொருட்டு முப்பெரும் பாறைகளான பண்டிதர்கள் B. V. நரஸிம்ம ஸ்வாமி, சுத்தானந்த பாரதி மற்றும் கிருஷ்ண பிக்ஷு இவர்கள் அருணாசலத்தால் அனுப்பப்பட்டனர். இந்தப் பண்டிதர்கள் மூவரும் பகவானுடைய எல்லா உபதேசங்களையும் உள்ளடக்கிய அவரது வரலாற்றை எழுதினர். இன்று பகவானையும்

அவருடைய உபதேசங்களையும் நாம் அறிந்து கொள்கிறோம் என்றால் அதற்கு முக்கியக் காரணம் இவர்களுடைய அயராத உழைப்பும் அர்ப்பணிப்புமே என்பதில் ஐயமில்லை.

'பகவான் ரமண மஹர்ஷியின் வாழ்க்கை வரலாறும் உபதேசங்களும்' - Self Realisation - என்ற புத்தகத்தை B. V நரஸிம்ம ஸ்வாமி (BVN) எழுதினார். பகவானின் வாழ்க்கையைப் பற்றி வெளிவந்த முதல் புத்தகம் இதுவே. பகவானுடைய வாழ்க்கை வரலாற்றை ஆங்கிலத்தில் முதன் முதலில் எழுதுவதற்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட தனித்தன்மை வாய்ந்தவர் B. V நரஸிம்ம ஸ்வாமி. அவர் இரண்டாயிரம் பக்கங்கள் கொண்ட தகவல்களைச் சேகரித்து பொருள் ஆழம் குறையாத வண்ணம் மிகத்திறைமையாக சுருக்கி எழுதி, எளிதில் படிக்கும் வகையில் 250 பக்கங்கள் கொண்ட நூலாக்கி 1930-ல் அதை வெளியிட்டார். இந்தப் புத்தகத்தைப் படித்த பின்னரே பால் பிரண்டன், கிருஷ்ண பிக்ஷு, ப்ரணவானந்தர், ஸ்வாமி மாதவ தீர்த்தர், சுத்தானந்த பாரதி, ஸ்வாமி சிவானந்தர், ஸ்வாமி ராம்தாஸ் முதலியோரும் ஆன்மீகத்தில் சிறந்த மற்றும் பல மஹான்களும் அடுத்தடுத்து ரமண மஹர்ஷியிடம் வந்தனர். மேலை நாடுகளில் உள்ளவர்கள் பால் பிரண்டன் எழுதிய புத்தகத்தின் மூலம் பகவானை அறிந்து கொண்டார்கள் என்பது உண்மை என்றாலும் BVN எழுதிய புத்தகத்தின் மூலமே பிரண்டன் பகவானிடம் ஈர்க்கப்பட்டார் என்பதை மறுக்க முடியாது.

திருவண்ணாமலையிலிருந்து தொண்ணூறு மைல் தொலைவில் இருந்த சேலத்தில் சிறந்த வக்கீலாக இருந்தார் BVN. அவர் மிகவும் புகழ் பெற்ற அரசியல்வாதி; சிறந்த பேச்சாளரும் எழுத்தாளரும் கூட. அவருடைய புத்திக் கூர்மையினால் எந்த ஒரு விஷயமானாலும் அதன் மையக் கருத்தை எளிதில் புரிந்து கொண்டு அதன் உண்மையை வெளிக் கொணர்வார். மேலை நாட்டவர்களுக்கு அத்வைத வேதாந்தத்தின் நுழைவாயிலாக விளங்கிய பலரை ஈர்த்த இந்தச் சிறந்த புத்தகம் வெளிவருவதற்கு BVN உடைய விசாரித்து அறியும் மனப்பான்மையே காரணம்.

ஆனால் கடவுளின் தெய்வீக லீலையானது, நாம் முன் கூட்டியே ஊகித்து அறிந்து கொள்ள முடியாத ஒரு மர்மமாகும். பெயர் புகழ் செல்வம் இவற்றில் உச்ச நிலையை அடைந்திருந்த சமயத்தில் குடும்பத்தில் பேரிடியாக விழுந்த ஒரு நிகழ்வு BVN ஐ அடியோடு உலுக்கிவிட்டது. அவர் வீட்டு முற்றத்தில் இருந்த கிணற்றில் அவர் கண் முன்னரே அவரது இரு குழந்தைகள் விழுந்து மாண்டனர். அவர்களுக்கு எவ்வித உதவியும் செய்ய முடியாத வகையில் அந்தத் துயரமான சம்பவத்தைப் பார்த்துக் கொண்டு மட்டும் இருக்குமாறு அவரது கைகளை விதி கட்டிப் போட்டுவிட்டது. துயரம் தாளாமல் வக்கீல்கள் சங்கத்திலிருந்து (Bar council) ராஜினாமா செய்து விட்டு அரசியலில் இருந்தும் அவர் விலகினார். சுதந்திரப் போராட்டத்தின் போது திறமைசாலிகளும் அர்ப்பணிப்புடன் பணியாற்றக் கூடியவர்களும் தேவைப்பட்ட அச்சமயத்தில் BVN அரசியலில் இருந்து விலகியது இந்தியத் தலைவர்கள் பலருக்கும் ஏமாற்றத்தை அளித்தது. ரமண மஹர்ஷியைப் பற்றிக் கேட்ட அவர் நேராக ரமணாச்ரமத்தை வந்தடைந்தார். பகவானைக் கண்டதும் அவரது பாதங்களில் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். ஒரு பார்வையினாலேயே அவரை ஏற்றுக்கொண்ட பகவான் ஒரு குகைக்கு அவரை அனுப்பி அங்கு தியானம் செய்யுமாறு பணித்தார்.

சிறந்த சீடனாக விளங்கிய அவர் மறுமொழி எதுவும் கூறாமல் குருவின் ஆணையைச் சிரமேற்கொண்டு செயலாற்றினார். மூன்றாண்டு காலம் தனிமையில் ஆழ்ந்த சிந்தனையிலும் தியானத்திலும் கழித்தார். அவ்வாறிருந்த போதும் பகவானின் வாழ்க்கை பற்றிய ஒரு நூல் அச்சமயத்தின் அத்யாவசியத் தேவை என்பதை உணர்ந்தார். "வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு ஞானியின் வாழ்க்கை வரலாற்றை நான் வெளிக் கொணர்ந்தே ஆக வேண்டும். ஏதோ ஒரு சில

சம்பவங்களைத் தவிர — அவை உண்மையில் நடக்காதவைகளாகக் கூட இருக்கலாம் - அவரது வாழ்க்கையைப் பற்றி யாருக்குமே தெரியாது." என்ற சக்திவாய்ந்த எண்ணம் அவருள் எழுந்தது. பகவான் மௌன விரதம் எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை என்றாலும் அதிகம் பேசுவது கிடையாது என்பதோடு தன்னைப் பற்றித் தெரிவிப்பதென்பது மிகவும் அபூர்வம் என்பதால் BVN எடுத்துக் கொண்ட பணி மிகவும் பொறுப்பு வாய்ந்த ஒன்றாக இருந்தது.

புத்தகம் எழுத அவர் பகவானின் அனுமதி கோரியபோது, கிருபை கூர்ந்து பகவான் அனுமதியளித்தார். BVN பகவானிடம் கேள்விகள் கேட்கத் துவங்கினார். எப்போதும் பகவான் பதிலளிப்பார் என்று கூற இயலாது. ஏனெனில் அவர் சில சமயங்களில் பேச விரும்பமாட்டார். அப்போதும் BVN பிடிவாதமாகப் பகவான் செல்லுமிடமெல்லாம் பின் தொடர்ந்து செல்வார்; சில சமயம் இரவில் பகவானருகிலேயே படுத்து உறங்குவார். ஒரு கேள்வியை எழுப்பினால் அதற்குப் பதில் எப்போது வரும்? என்பதிலேயே தன் கவனம் முழுவதையும் செலுத்துவார்.

சில சமயங்களில் எளிமையான ஒரு கேள்விக்குப் பகவானிடமிருந்து பதில் வருவதற்கு நாட்களோ வாரங்களோ அதற்கு மேலும்கூட ஆகும் என்று அவர் பதிவு செய்துள்ளார். அப்போதும் கூட அவர் சளைக்காமல் அவருக்கே உரிய உறுதி தளராத ஸங்கல்பத்துடன் செயல்பட்டதாலேயே இன்றும் பகவானது பழைய பக்தர்கள் அவர் மீதிருந்த மரியாதையினால் அவருடைய பெயரைக் கேட்டமாத்திரத்திலேயே நெகிழ்ந்து போகிறார்கள்.

BVN பகவானிடம் கேள்விகளை மட்டும் கேட்கவில்லை. பிறப்பிடத்திலிருந்தே உண்மையை நேரடியாக வெளிக்கொணர்வது அவருடைய சுபாவம். அதனால் திருச்சுழி, மதுரை, திண்டுக்கல் முதலிய இடங்களுக்குச் சென்று பகவானுடன் தொடர்புள்ளவர்களையும் உறவினர்களையும் நேரில் கண்டு பேசுவார். ஏதாவது கிராமத்திலுள்ள பகவானின் உறவினர் அல்லது நண்பர் பற்றிய தகவல் கிடைத்தால் உடனே நேராக அங்கு சென்று கேள்விக் கணைகளைத் தொடுப்பார். ஆயினும் எதையும் நிறைவாகச் செய்யும் அவர் சேகரித்த தகவல் ஒவ்வொன்றையும் பகவானிடம் தெரிவித்து அவை சரியானவைதானா என்பதைக் கேட்டு உறுதி செய்து கொள்வார். அதனால் அவர் எழுதியது எதுவுமே உண்மைக்குப் புறம்பானதாக இருக்க வழியில்லை. 'மதுரையில் பகவானுக்கு ஏற்பட்ட மரணானுபவத்தைப் BVN தனது எழுத்து வன்மையால் எங்கள் கண் முன் நிறுத்தியுள்ளதற்கு நாங்கள் அவருக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளோம்' எனப் பல பழைய பக்தர்கள் என்னிடம் கூறியுள்ளனர். BVN தொடர்ந்து கேட்ட கேள்விகள் காரணமாக பதினாறு வயதில் தனக்கேற்பட்ட அந்த அனுபவத்தைக் குறித்து பகவான் மிக நுணுக்கமாகக் கூறவேண்டியதாயிற்று. 'ஆத்மாவில் அசைவின்றி நிலைத்து நின்ற அந்த மாற்றம் நிகழ்ந்தபோது இடம், காலம் என்பதொன்றும் இருக்கவில்லை' என்று பகவான் கூறியுள்ளார். இவ்விஷயங்களை எல்லாம் சுருக்கி, வெளியிடத் தயாரான, மாதிரி புத்தகத்தை பகவானிடம் காட்டி அனுமதி கோரிய போது அனுமதியளித்ததோடு புத்தகத்துக்குத் 'தன்னையறிதல்' என்ற பொருள்பட 'Self Realisation' என்ற பெயரையும் பகவானே வைத்தார்.

இந்த புத்தக வேலையை முடித்த பின்னர் தனது குகைக்கு அருகில் சமையல் செய்வதற்காகச் சிறிய குடிசையை எழுப்பினார். மற்ற ஸாதகர்களும் தங்கள் நேரத்தையும் பணத்தையும் விரயம் செய்யாதிருக்கவும் பகவானது ஸந்நிதியில் அதிக நேரம் இருக்கும் பொருட்டும் எளிமையான உணவு தயாரிக்கும் முறையை அவர்களுக்குக் கற்றுத் தந்ததுடன் சமைப்பதற்கு உதவியாக குடில்களையும் அமைத்தார். அதிக கவனத்துடன் கூடிய தனது ஸாதனைகளின் மூலம் பகவானின் உபதேசங்களை

நடைமுறையில் கடைப்பிடிக்க வேண்டிய விதத்தைக் கற்றுத்தருவதில் முன்னோடியாகவும் இருந்தார். உண்மையில் பலாக்கொத்து சமுதாயத்தை உருவாக்கியதே அவர்தான்.

பஜனைகள் பாடுவதும் இறையுணர்வில் மூழ்கிப் பரவசத்தோடு ஆடுவதும் அவருக்கு இயல்பாக அமைந்த குணம். தொடர்ந்து அதை மேலும் வளர்த்துக் கொள்ள விரும்பி "பகவான் இது என்னுடைய சுபாவம். எனக்கு பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதிலும் பஜனைகள் பாடுவதிலும் ஈடுபாடு உள்ளது. தாங்கள் என்னை அதில் வழி நடத்துவீர்களா?" என்று பகவானிடம் வேண்டிக் கொண்டார். பகவான் பதில் கூறுவதற்குத் தாமதப்படுத்திய போதும் BVN அவரை விடவில்லை. கடைசியாக இந்தியாவின் மேற்குப் பாகத்திற்குச் சென்று பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடிக்கும்படி அறிவுறுத்தினார். பின் அருணாசலத்தை விட்டு மும்பையை நோக்கிப் பயணமானார் BVN. அவருடைய பிரயாண காலத்தில் பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடித்த பல ஸாதுக்களைப் பார்த்தபோதும் அவர்களிடம் BVN க்கு திருப்தி ஏற்படவில்லை. மிகப் பெரிய மஹானான உபாஸனி பாபாவும் அவருக்கு உதவ முயற்சி செய்தார். அப்போதும் BVN திருப்தி அடையவில்லை. கடைசியில் உபாஸனி பாபா கூறியபடி ஷீரடிக்குச் சென்றார்.

பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்புவரை வாழ்ந்திருந்த ஷீரடி சாய்பாபா அவர்களின் ஸமாதியை அடைந்தார். அங்கு இரவில் (இப்போதும் இவ்வாறு நடைபெறுகிறது) பக்தர்கள் கூடி பக்தியோடு பஜனைகளைப் பாடிக் கொண்டிருந்தனர். ஸமாதியின் முன் நின்றபோது அவருடைய உள்ளுணர்வில் "குழந்தாய்! நானே உனது குரு. நீ இங்கேயே தங்கி என்னுடைய வாழ்க்கை வரலாற்றை எழுது," என்று பாபாவின் குரல் ஒலிப்பதை BVN உணர்ந்தார். அதைத் தொடர்ந்து சாய்பாபாவுடன் வாழ்ந்தவர்கள் பலரையும் சந்தித்து அந்தப் பெருமை வாய்ந்த மஹானுடைய



வாழ்க்கை வரலாற்றை ஆறு பகுதிகளாக எழுதி முடித்தார். அதன் பின்னர் "என் பெயரையும் உபதேசங்களையும் உலகறியச் செய்." என்ற பாபாவின் ஆணையை ஏற்றுச் சென்னைக்கு வந்து சாய்பாபா மையம் என்ற ஒரு அமைப்பைத் துவங்கினார். அங்கு ஒரு கோயிலையும் எழுப்பி ஷீரடி சாய்பாபாவின் புகழை இந்தியா முழுவதும் பரப்பினார்.

1960 ல் நான் ரமணாச்ரமத்திற்கு வந்த போது பெருமைமிக்க BVN பகவானை விட்டு வேறு எங்கோ சென்று விட்டார் என்பதை அறிந்து வேதனைப்பட்டேன். ஒரு நாள் மற்றொரு மூத்த பக்தரான T. P. ராமச்சந்திர ஐயரை அணுகி "நரஸிம்ம ஸ்வாமி பகவானை விட்டு ஏன் வேறு இடத்திற்குச் சென்று விட்டார்?" என வினவினேன். "நீ என்னிடம் இந்தக் கேள்வியைக் கேட்டதில் எனக்கு ஸந்தோஷம். ஏனெனில் எனக்குத் தெரிந்த ஒரு விஷயத்தை மற்றவர்களிடம் பகிர்ந்து கொள்வதற்கு நான் தயங்கினேன்." என்று அவர் பதிலிறுத்தார். 1955 ன் கடைசியிலோ அல்லது 1956 - ன் ஆரம்பத்திலோ திருவண்ணாமலையிலிருந்து வேலூருக்குச் செல்வதற்காக ரயிலில் முதல் வகுப்புப் பெட்டியில் ராமச்சந்திர ஐயர் ஏறினார். கால் முறிவிற்காக போடப்பட்டிருந்த பெரிய மாவுக்கட்டுடன் BV நரஸிம்ம ஸ்வாமி அதே பெட்டியில் அமர்ந்திருந்ததைப் பார்த்து ஆச்சரியப்பட்டார். எல்லா மூத்த பக்தர்களையும் போன்று BVN-ஐப் பெரிதும் மதித்ததால் அவரைப் பார்த்ததில் பெரிதும் மகிழ்ந்தார்.

ஐயர் என்னிடம் "கணேசா! நீ கேட்ட அதே கேள்வியை நான் அன்று BVN-னிடம் கேட்டேன். 'பகவானை விட்டு ஏன் சென்றீர்கள்? என்று அவரிடம் நான் கேட்டபோது அவர் பகவானே அவ்வாறு செய்யுமாறு என்னிடம் கூறினார். நாங்கள் இருவரும் தனியாக இருந்தபோது பஜனைகள் பாடுவதில் எனக்கு உள்ள ஈடுபாட்டை அவரிடம் மீண்டும் மீண்டும் தெரிவித்தேன். என்மீது கருணை கொண்டு 'நீ ஷீரடிக்குச் செல்' என்று கூறியதோடு ஷீரடி சாய்பாபாவினுடைய வாழ்க்கை வரலாற்றை நான் எழுத வேண்டும் என்று சந்தேகத்துக்கு இடமில்லாத வகையில் என்னிடம் தெரிவித்தார். 'சாய்பாபாவை இந்தியாவில் அனைவரும் அறியும் படி செய்' என்றும் கூறினார். பகவான் அவ்வாறு கூறியதால் நானும் இசைந்தேன். என்னுடைய ஆர்வமும், விழைவும் வெறும் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் பாடல்கள் நடனம் இவற்றில் மட்டும் ஆழ்ந்து போகாமல் மற்றொரு ஞானியின் மூலம் வேறு ஒரு தடத்தில் செலுத்தப்பட வேண்டும் என்பதை பெருந்தன்மையும் கருணையுமுடைய பகவான் விரும்பினார். பகவான் கூறியபோதிலும் நான் நேராக ஷீரடிக்குச் செல்லவில்லை. பகவானுடைய கட்டளையை அப்படியே ஏற்றுக் கொள்ளாதது எத்துணை முட்டாள்தனம் என்பதை நான் உணர்கிறேன். 'உடலோடு இல்லாத சாய்பாபா என்னை எவ்வாறு வழி நடத்த முடியும்?' என்ற சந்தேகம் என்னுள் எழுந்ததால் நான் வேறு பல மஹான்களைச் சந்திக்கச் சென்றேன். என்னுடைய மனம் என்னோடு விளையாடிவிட்டது. வாழ்ந்து கொண்டிருக்கும் ஸாதுக்களோடு தங்குவதற்கு நான் செய்த முயற்சிகள் அனைத்தும் காலக்ரமத்தில் எனக்கு ஏமாற்றத்தை அளித்தன. கடைசியில் ஷீரடியில் தான் சாய்பாபா தன்னை எனது குருவாக வெளிபடுத்தி என்னை அணைத்து ஆசிர்வதித்து அருள்புரிந்தார். என்னை சாய்பாபாவிடம் அனுப்பியதற்கு நான் பகவானுக்கு என்றென்றும் நன்றியோடு இருக்கிறேன். பகவானே என்னை சாய்பாபாவிடம் அனுப்பினார் என்பதை நான் யாரிடமும் வெளிப்படுத்தவில்லை. ஏனெனில் இந்த நிகழ்ச்சியின் ஆன்மீக முக்யத்வத்தை மக்கள் புரிந்து கொள்ள மாட்டார்கள் என்று எண்ணினேன். இதுவே உண்மை' என்று கூறி முடித்த போது BVN-னுடைய கண்களில் கண்ணீர் துளிர்த்தது" என்று T. P ராமச்சந்திர ஐயர் கூறி முடித்தார்.

நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது சென்னையில் சாய்பாபாவின் ஆலயத்திற்குச் செல்வேன். அத்துடன் அதற்குப் பின்னால் அமைந்திருந்த B. V. நரஸிம்ம ஸ்வாமியின் ஸமாதிக் கோயிலுக்கும் சென்று வருவேன். இப்போதும் அங்கு பூஜைகள் நடந்து வருகின்றன. ரமண பகவானுடைய பெரிய படம் ஒன்று அங்கே இன்றும் தொங்கவிடப்பட்டுள்ளது. பகவானே BVN-ஐ சாய்பாபாவிடம் அனுப்பினார் என்பதால் நான் சாய்பாபா கோவிலில் வணங்கி அவரது ஆசிகளைப் பெற்றுப் பின் B. V. நரஸிம்ம ஸ்வாமி ஸமாதிக்குச் சென்று மிகச் சிறந்த பக்தர்களில் ஒருவரும் பகவானின் வரலாற்று ஆசிரியர் என்ற சிறப்பைப் பெற்றவருமான அவரது ஸமாதியில் வணங்குவேன்.



**பகவானுடன் காவ்யகண்டர், B. V. நரசிம்மஸ்வாமி, யோகி ராமையா,**



# 27 சுத்தானந்த பாரதி



சுத்தானந்த பாரதி ஸம்ஸ்க்ருத பண்டிதராக இருந்ததோடு சிறந்த தமிழ்ப் புலவராகவும், பாடலாசிரியராகவும் பன்மொழிப் புலவராகவும், ஹடயோகியாகவும் இருந்தார். முப்பது ஆண்டுகள் காஷ்ட மௌனத்தில் இருந்த அவர், அதில் கடைசி ஐந்து ஆண்டுகள் இந்தியா முழுவதும் பிரயாணம் செய்து, மெய்ப்பொருளை நேருக்கு நேர் அறிய வேண்டுமென்ற ஆர்வத்தோடு பல ஸாதுக்களைச் சந்தித்தார். அவ்வாறிருந்தும் வேதங்களில் விளக்கப்பட்டுள்ள அந்த ஸத்தியத்தை அவரால் நேரடியாக உணர முடியவில்லை. அதனால் துயருற்ற அவருக்கு 'தன்னை அறிதல்' (Self realisation) என்ற புத்தகம் யதேச்சையாகக் கிடைத்த போது, அதன் மூலம் அருணாசலத்தில் வாழ்ந்த பகவான் ரமணரைப் பற்றி அறிந்து கொண்டார். அன்று இரவே அவரது இதயத்தில் பகவான் ரமணருடைய காட்சி ஒன்று கிடைத்தது. விரைவிலேயே ரமணாச்ரமத்திற்குச் சென்றார். அப்போது வெறும் குடிசையாக இருந்த அன்னையின் ஸமாதி கோயிலுக்கு அருகில், நுழைவாயிலில் காவ்யகண்ட முனிவரைச் சந்தித்தார். அப்போது, "பாரதி உள்ளே வரட்டும்" என்று உள்ளிருந்து வந்த பகவானின் இனிய குரலைச் செவி மடுத்தார். ஆச்ரமத்திற்குள் நுழைவதற்கு முன்னால் ஸித்த புருஷரான சேஷாத்ரி ஸ்வாமிகளை மலையடிவாரத்தில் அவர் சந்தித்தபோது "போ, போ, போ, சுத்தானந்தம்! நீ உள் நோக்கி ஆழமாக போகும் வரை போய்க் கொண்டேயிரு" என்று அவர் கூறக் கேட்டார். பின்னர் அவரே "ஓடு! ஓடு! சுத்தானந்தம்! ரமணர் உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்! உள்ளே போ!" என்று துரிதப்படுத்தினார். பகவானைக் கண்ட மாத்திரத்தில் சுத்தானந்த பாரதி அவரது பாதங்களில் வணங்கி அவரிடம் முழுமையாகச் சரணடைந்தார்.

சுத்தானந்த பாரதி ரமண பகவானை முதன்முதலாகத் தரிசித்த தனது அனுபவத்தை இவ்வாறு விவரித்தார். "நான் எந்த மனித உருவத்தையும் பார்க்கவில்லை. திகைத்து நின்ற என்னை ஒளி வெள்ளம் சூழ்ந்துகொண்டது. பகவான் என்னை மௌனத்தில் ஆழ்த்தினார். அவருடைய அருட்பார்வை என் மீது பதிந்தபோது என் கண்கள் தாமாகவே மூடிக்கொண்டன. என்னுடைய மனக் குகைக்குள் நான் நுழைவதாகத் தோன்றியது. ஒரு மணி நேரம் ஒரு நொடியில் கழிந்த பின்னர் நான் என் கண்களைத் திறந்த போது பகவான் ரமணரின் தாமரைக் கண்கள் என் மீது நிலையாகப் பதிந்திருந்ததை உணர்ந்தேன். என்னுள்ளிருந்து ஒரு குரல், "இப்போது நீ அதை உணர்ந்து விட்டாய். இதயகுகை திறந்துவிட்டது. 'நான் இருக்கிறேன்' என்பதே உண்மை என்று ஒலித்தது. பல ஆண்டுகள் ஸாதனைகளுக்குப் பின் பகவானது திருப்பாதங்களில் முதன்முறையாக என்னுள் ஒளிரும் - 'இருப்பே' மெய்ப்பொருள் என்பதை உணர்ந்து பகவானது பாதங்களைப் பற்றிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிய, 'இன்று என் இதயத்தில் சூரியனாக எழுந்து அஞ்ஞான இருளை அகற்றி விட்டாய். நான் பரவசத்தில் திளைக்கிறேன்' என்ற மாணிக்கவாசகரின் சொற்களை நினைவு கூர்ந்தேன்" என்று கூறினார்.

பகவான் பாரதியை மீண்டும் மௌனத்தைக் கடைபிடிக்கச் செய்து விரூபாக்ஷ குகையில் வசிக்கும்படிக் கூறினார். பின்னாளில் சுத்தானந்த பாரதியைப் பற்றிப் பகவான் கூறும் போது "பாரதியால் பல நாட்கள் உணவின்றி இருக்க முடியும் அல்லது சில வேப்பிலைகளும் பட்டாணிக்



ஹே அருணாசலா!

சித்திரமாம் இஃது எல்லாம் செம்மலையே! நின்பாலே
உத்திதமாய் நின்றே ஒடுங்கிடுமால் – நித்தியமும்
நானென்று இதயம் நடித்திடுவையால் உன் பேர்
தான் இதயம் என்றிடுவர் தாம்

கடலைகளுமே கூட அவருக்கு வாழ்வதற்குப் போதுமானது." என்று கூறுவது வழக்கம். B. V நரசிம்மஸ்வாமியின் 'Self Realisation' என்னும் புத்தகம், பகவானது சரித்திரத்தைத் தமிழில் எழுதுவதற்கு, எழுத்தாளராகிய சுத்தானந்த பாரதியை ஊக்குவித்தது. இருந்தாலும் இந்த முதிர்ந்த யோகிக்கு பாண்டிச்சேரியிலிருந்த 'ஸ்ரீ அரவிந்தர்' என்ற மஹானைத் தரிசிக்க வேண்டும் என்ற தீவிர அவாவும் இருந்தது. அதனால் அவர் விடாப்பிடியாக "எனக்கு ஸ்ரீ அரவிந்தரிடம் செல்ல வேண்டும் என்று மிகவும் ஆவலாக உள்ளது. தயவு செய்து என்னை நீங்கள் வழி நடத்த வேண்டும்," என்று பணிந்து கேட்டுக் கொண்டார். பகவானின் அனுமதியோடு அவர் ஸ்ரீ அரவிந்தரிடம் சென்று அவரது அரவணைப்பில் 25 வருடங்களைக் கழித்தார். அங்கு இருந்த சமயத்தில் பகவானின் சரித்திரத்தை 'ஸ்ரீ ரமண விஜயம்' என்ற பெயரில் ஒரு புத்தகமாகத் தமிழில் எழுதினார். இந்த நூலைப் படித்த பின்னரே இந்தியாவிலிருந்த தமிழர்கள் பகவானிடம் வந்தனர். தொடர்ந்து சுத்தானந்தபாரதி பலரது சரித்திரங்களை எழுதி ஒரு சிறந்த எழுத்தாளர் என்ற பெயரைப் பெற்றார்.

அண்ணாமலை ஸ்வாமியின் சரிதத்தை எழுதுவதற்காக 1970-ம் ஆண்டு பாரதி ரமணாச்ரமம் வந்த போது நான் அவரை வரவேற்றுச் சில நாட்கள் அவருக்குப் பணிவிடைகள் செய்தேன். அவர் திரும்புவதற்கு முன் சென்னையிலிருந்த அவரது ஆச்ரமத்திற்கு வந்து தங்கும்படியாக என்னை அழைத்தார். அதை ஏற்றுக் கொண்டு அங்கு சென்றபோது அவர் என்னிடம் மிகவும் இனிமையாகவும் நேசத்துடனும் இருப்பதை உணர்ந்தேன். ஒரு நாள் என்னை அவர் அருகில் அமரச்செய்து நம் எல்லோருக்குமே மிகவும் முக்கியமான ஒரு விஷயத்தை என்னுடன் பகிர்ந்து கொண்டார். அவர் "கணேசன், நீங்கள் ஆச்ரமத்தை நிர்வகித்து, 'தி மௌண்டன் பாத் (The Mountain path)' என்ற இதழையும் வெளியிட்டுச் சிறப்பாகச் செயல்படுவதை நான் கண்டேன். உங்களது

நிர்வாகத் திறமையை மக்கள் பாராட்டுவார்கள். நானும் இந்த ஆச்ரமத்தை உங்களிடம் ஒப்படைக்கத் தயாராக இருக்கிறேன். நீங்கள் விரும்பினால் அதை இப்போதே செய்கிறேன். ஆனால், அதிகமான உடைமைகள் ஒருவனின் அகங்காரத்தை அழித்து நீக்கம் செய்யாது, என்பதை நினைவில் கொள்ள வேண்டும். உங்களுடைய ஆன்மீக நிறைவு வெகு அருகிலேயே காத்துக் கொண்டிருக்கிறது என்பது என்னுடைய அகக் கண்களுக்குத் தெளிவாகத் தெரிகிறது. உங்களிடம் பலவந்தமாகத் தரப்படும் எந்தவிதமான உடைமைகள் அல்லது நிர்வாகப் பொறுப்பு என்பது போன்ற வலையில் நீங்கள் விழுந்து விடாதீர்கள். எப்போதுமே நீங்கள் சுதந்திர புருஷர். ஆத்மாவாகவே இருந்து கொண்டு, உள்ளே ஆழ்ந்து செல்லுங்கள். உங்களது இதயத்தில் இப்போது உறைந்து கொண்டிருக்கும் பகவானின் பாததூளியாக இருங்கள். பிரபஞ்சத்தின் இதயமே பகவான். கடவுளின் ஸாம்ராஜ்யம் உங்களது எல்லையற்ற ஆத்மாவில் இருக்கிறது. இதயத்திலேயே நம்பிக்கை வையுங்கள். அதுவே தான் உண்மை," என்று கூறியபின் தொடர்ந்து "நான் செய்த அதே தவறை நீங்களும் செய்யாதீர்கள். நூற்றுக்கணக்கான புத்தகங்கள் எழுதுவதாலும் ஆச்ரமம் அமைப்பதாலும் புகழைத் தேடுவதாலும் கிடைக்கக்கூடிய பெருமைகளிலேயே என் கவனத்தைச் செலுத்தினேன். இவ்வாறு நீங்கள் செய்யாதீர்கள். பகவானை உறுதியாக நம்பி, அவரது உபதேசங்களைக் கடைப்பிடியுங்கள். பகவானது சரணங்களில், அவரது பாததூளியாக அருணாசலத்திலேயே இருங்கள்," என்று சுத்தானந்த பாரதி அறிவுரை வழங்கினார்.



# 28 கிருஷ்ண பிக்ஷு



ஸம்ஸ்க்ருதத்திலும் தெலுங்கிலும் பண்டிதராக இருந்த வேங்கடகிருஷ்ணய்யாவைப் பொதுவாகக் கிருஷ்ண பிக்ஷு என்று அழைத்தார்கள். குழந்தைப் பிராயத்தில் அவரது மாமாவின் இல்லத்திற்குச் சென்ற போது அங்கு அவர் பார்த்த ரமண மஹர்ஷியின் படம் அவரை வெகுவாக ஈர்த்தது. ரமணகீதை என்னும் நூலில் குறிப்பிட்டுள்ள கேள்வியாளர்களில், முதல் கேள்வியைக் கேட்ட கிருஷ்ண பிக்ஷுவின் மாமா பகவானுடன் விரூபாக்ஷ குகையில் இருந்திருக்கிறார். கிருஷ்ண பிக்ஷுவிடமும் ரமண கீதை என்ற நூலின் பிரதி இருந்தது. அதை இளம் வயது முதலே அவர் மிகுந்த ஆர்வத்துடன் படிக்கத் துவங்கினார்.

அவர் சென்னையில் சட்டக்கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது ஒரு நண்பரின் இல்லத்தில் காவ்யகண்டமுனிவரைச் சந்திக்க நேர்ந்தது. காவ்யகண்ட முனிவரின் பேச்சுத்திறமை, கவிதைத்திறன், பணிவு, ஆழ்ந்த புலமை இவற்றையும் அவரது ஸாந்நித்தியத்தில் இருந்த சக்தியையும் உணர்ந்ததால் அவரிடம் வெகுவாக ஈர்க்கப்பட்டார். குறிப்பிட்ட அந்த தினத்தன்று 'காவ்யகண்டர்' தனது குரு ரமண மஹர்ஷியை வெகு அழகாகப் புகழ்ந்து பாராட்டினார். 'இவரே இத்துணை ஆற்றல் மிக்கவராக இருக்கும் போது இவருடைய குரு எத்துணை சிறப்புடையவராக இருக்க வேண்டும்!' என்று கிருஷ்ண பிக்ஷு அதிசயித்தார். இந்தச் சந்திப்பு அவரிடம் ரமணாச்ரமத்திற்குச் செல்ல வேண்டும் என்ற பேராவலைப் பதித்தது.

இறுதியாக ஒரு நண்பருடன் ரமணாச்ரமத்திற்கு வந்தபோது பகவான் எளிமையே உருவாக இருப்பதைக் கண்டார். பகவானைச்சுற்றி இருப்பவர்களிடம் குடும்பத்தில் நிலவுவதைப் போன்ற அந்யோன்யம் எப்போதும் இருப்பதாக அவர் உணர்ந்தார். அவர் மஹர்ஷியிடம் "தயவுசெய்து எனக்கு ஆன்மீக போதனை செய்யுங்கள். ஆனால் அதற்கு முன்னால் நான் தற்போது செய்து கொண்டிருக்கும் ஸாதனைகளைப் பற்றி உங்களிடம் கூறிவிடுகிறேன். நான் காயத்ரி ஜபம், பிராணாயாமம் இவற்றைச் செய்கிறேன். ஆனால் சில மூச்சுப் பயிற்சிகள் என் உடல் நலனைப் பாதிக்கிறது. தயைகூர்ந்து என்னை வழி நடத்தவும்," என்று வேண்டினார் பிக்ஷு. பகவான் அவரிடம் "எல்லா ஸாதனைகளையும் நிறுத்திவிடு." எப்போதும் அத்வைத நோக்குடன் - இரண்டற்ற பார்வையோடு இரு." என்று கூறினார். பகவான் கூறியதன் முழுப் பொருளும் அந்த சமயத்தில் கிருஷ்ண பிக்ஷுவிற்கு விளங்கவில்லையென்றாலும் 1930-ம் ஆண்டில் மீண்டும் பகவானிடம் வந்தார். அந்த நாட்களில் பகவானை எப்போது வேண்டுமானாலும் தரிசிக்க முடிந்தது. பக்தர்கள் பகவானைச் சுற்றி அமர்ந்து கொண்டு அவர் கூறும் கதைகளையும் கேள்விகளுக்கான பதில்களையும் கேட்பதோடு அவரது நகைச்சுவையையும் அனுபவித்துச் சிரித்து மகிழ்ந்தனர். "எனது வாழ்க்கையில் அவை பொன்னான நாட்கள்," என்று கிருஷ்ண பிக்ஷு என்னிடம் குறிப்பிட்டார்.

B. V நரஸிம்ம ஸ்வாமி, தான் பிரசுரிக்கப் போகும் புத்தகத்தின் கையெழுத்துப் பிரதியை கிருஷ்ண பிக்ஷுவிடம் கொடுத்து அவரது அபிப்பிராயங்களைக் கேட்டு அறிந்து கொண்ட காலம் அது. சுத்தானந்த பாரதி, காவ்யகண்டமுனி, B. V நரஸிம்ம ஸ்வாமி இவர்கள் மூவரையும் ஒருங்கே கண்டபோது பகவான் புன்னகை புரிந்தார் ஏனென்றால் மூவருமே அரசியலில் ஒன்றாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தனர் இப்போது மூவருமே அரசியலைத் துறந்து ஒன்றாக ஆன்மீகத்தில்

ஈடுபட்டுள்ளனர். ஆன்மீகத்தின் பொருட்டு மூவரும் மீண்டும் எவ்வாறு இணைந்துள்ளார்கள் என்பதை எண்ணி மெல்லச் சிரித்தார் பகவான்.

B. V நரஸிம்ம ஸ்வாமியின் புத்தகத்தால் தூண்டப்பட்ட கிருஷ்ண பிக்ஷுவிற்கு தனது தாய்மொழியான தெலுங்கில் தானும் பகவானின் சரிதம் ஒன்றை எழுத வேண்டும் என்ற ஆர்வம் எழுந்தது. B. V நரஸிம்ம ஸ்வாமியின் 'Self Realisation' என்ற புத்தகத்தை அடிப்படையாகக் கொண்டு ஒரு மாதத்திற்குள் எழுதவும் செய்தார்.

கிருஷ்ண பிக்ஷுவிற்கும் பகவானுக்கும் இடையே இருந்த உறவு தனித்தன்மை வாய்ந்தது. "பகவான் தந்தையைப் போன்ற ஒரு உன்னத புருஷர். அவரை நான் முழுமையாக நம்பினேன். அவருடைய அறிவுரைகளை மிகவும் கவனத்துடன் நான் பின்பற்றினேன். ஏனென்றால் பகவான் என்னை மிகவும் ரக்ஷிப்பாரென்று நான் உணர்ந்தேன். அதனால் எனக்கு எந்தக் கவலையும் இருக்கவில்லை. என்னையே அர்ப்பணித்து அவரிடம் அன்பு செலுத்தினேன். அவருடனேயே உண்டு உறங்கி சிரித்து அளவளாவி அவர் அருகிலேயே என்னுடைய வாழ்க்கையைக் கழித்தேன். ஆனால் அவருடைய குறைவற்ற அன்பும் அரவணைப்பும் எப்போதும் என்னை இறுகப்பிடித்திருந்தது. "அவரது எல்லையற்ற உணர்வாகிய மடியில் என்னை வைத்து, இரவும் பகலும் அக்கறையோடு கவனித்து என்னை ஆன்மீகத்தில் வளர்ச்சிபெறச் செய்ததை நான் உணர்ந்தேன்" என்று அன்புடன் நினைவு கூர்ந்தார் கிருஷ்ண பிக்ஷு.

ஒரு நாள் ஆச்ரம சமையலறையில் பகவான் காய்கறிகளை அரிந்து கொண்டிருந்தபோது கிருஷ்ண பிக்ஷு தானும் அதைச்செய்யலாமா என்று கேட்டார். மூன்று முறை அவர் கையில் கத்தியை எடுத்தார். ஆனால் ஒவ்வொரு முறையும் அதைக் கீழே வைத்துவிடு என்றார் பகவான். கிருஷ்ண பிக்ஷு 'ஏன் பகவான்?' என்ற போது "வீட்டில் காய்கறிகள் நறுக்குகிறாயா?" என்றார் பகவான். "அங்கு நான் செய்ய வேண்டிய அவசியம் இல்லை," என்று அவர் பதில் கூறியபோது பகவான் சிரித்தபடி "இங்கு, வீட்டில் இருப்பது போல் நினைக்கவில்லையா?" என்று கேட்டு மடக்கினார். பகவான் கூறியதன் உள்ளர்த்தம் என்னவென்றால் கடுமையான ஸாதனைகளைச் செய்யும் போதும் 'நான் செய்கிறேன்' என்ற எண்ணத்தை முழுமையாகத் துறந்து ஆத்மாவில் நிலைத்திருப்பது என்பது தான். அவ்வாறு செய்யும் போது உன் இதயத்தில் 'நான்' என்னும் உணர்வில் - உனது வீட்டில்- நீ எப்போதும் இருக்கிறாய்.

மற்றுமொரு சந்தர்ப்பத்தில் கிருஷ்ண பிக்ஷு "பகவானே! முன்பெல்லாம் நான் உங்களை நினைத்த போதெல்லாம் உங்கள் உருவம் என் கண்முன் தோன்றும்; ஆனால் இப்போது அம்மாதிரி நிகழ்வதில்லை. நான் என்ன செய்வது?" என்று வினவினார். அதற்கு பகவான் "என்னுடைய நாமத்தை ஜபித்தாலே போதும். உருவத்தை விட நாமம் சிறந்தது. காலப்போக்கில் நாமத்தின் முக்கியத்துவம் கூட மறைந்துவிடும். ஆன்மீகத் தேடலை விடாமல் இருந்தால், 'தூய நான்' உன்னுடைய இதயத்தில் உனது முயற்சி ஏதுமின்றி பிரகாசமாக ஸ்புரிக்கத் துவங்கும் என்று கூறினார். நாமம், ரூபம் இவற்றின் பயனை மறுக்காதபோதும் 'நான் இருக்கிறேன்' என்ற நித்யமான உண்மையின் முக்கியத்துவத்தை பகவான் அழுத்தம் திருத்தமாக இவ்வாறு கூறினார்.

பகவான் தன்னுடைய உடலை நீத்த பின்னர் மற்ற பழைய பக்தர்களைப் போன்று கிருஷ்ண பிக்ஷுவும் ஆச்ரமத்தை விட்டு ஊர் ஊராகச் சுற்றி சில நண்பர்களுடைய விருந்தோம்பலை ஏற்று அவர்களுடனேயே தங்கினார். நான் ஆச்ரமத்திற்கு வந்து பழைய பக்தர்ளைத் திரும்பி அழைத்துவர முயன்றபோது ஒரு பக்தர் திடீரென்று "கிருஷ்ண பிக்ஷுவைப் பற்றிய விபரங்கள் ஏதேனும்

தெரியுமா?" என்று வினவினார். கிருஷ்ண பிக்ஷு என்ற பெயரைக் கேட்டமாத்திரத்தில் அவர் ஒரு புத்த பிக்ஷு, என்றும் பகவான் வாழ்ந்த காலத்திலேயே அவர் மறைந்திருக்கக் கூடும் என்றும் நான் நினைத்தேன். பிறகு தான் அவர் முனகால வேங்கடராமய்யாவினுடைய மருமகன் ராமசந்தரய்யாவின் சகோதரர் என்பதை அறிந்தேன். முனகாலரின் மகள் காமாக்ஷிக்கு நான் கடிதம் எழுதி பிக்ஷுவின் விலாசத்தை வாங்கி ரமணாச்ரமத்திற்கு வரும்படி அவரை அழைத்தேன். ஆச்ரமத்திற்கு வந்தபோது அவர் "கணேசா! என்னிடம் பணம் எதுவும் இல்லை." என்று பணிவுடன் உரைத்தார். "பரவாயில்லை. தயவுசெய்து இங்கேயே தங்கி இருங்கள்." என்றேன் நான்.

அவருடைய நேர்மை, பயம் கலந்த மரியாதையை எழுப்பியது. மாதா மாதம் 27 ரூபாயை அவரது நண்பர் ஒருவர் தபால் மூலம் (Money order) அனுப்பி வைப்பது வழக்கம். அதில் 20 ரூபாயை ஆச்ரமத்திற்கு வற்புறுத்திக் கொடுப்பார். மீதி 7 ரூபாயைத் தனது செலவுகளுக்காக வைத்துக் கொள்வார். அவரிடம் எனக்கு இருந்த மரியாதை பல மடங்கு பெருகியது. தவ வலிமையோடு கூடிய இவர், ரமணாச்ரமம் என்னும் கிரீடத்தில் ஒரு ரத்தினம் போல் இருந்தும், அவரது எளிமையான தோற்றத்தால் பலரும் அவரைக் கண்டுகொள்ளவேயில்லை. அவ்வாறிருந்தும் இந்த மேன்மை பொருந்திய மனிதர் பகவானது சரிதத்தைத் தெலுங்கில் 'ரமணலீலா' என்ற புத்தகமாக எழுதியதோடு 1928-ம் வருடம் முதல் பகவானுடன் வாழ்ந்திருக்கிறார்.

ஆச்ரமத்தில் தங்கியிருப்பவர்கள் எவ்வித சேவையும் செய்யாமலிருந்தால் குறைந்தபட்சமாக, மாதா மாதம் 30 ரூபாய் கட்ட வேண்டும், என்ற ஒரு தீர்மானத்தை ஆச்ரம அறங்காவலர் குழு கொண்டு வர இருந்தது. கிருஷ்ண பிக்ஷு "கணேசா! நான் ஆச்ரமத்தை விட்டு வெளியேறுகிறேன்." என்று வருத்தத்தோடு கூறினார். "நீங்கள் ஏன் வெளியே போகிறீர்கள்" என்று நான் ஆச்சர்யத்தோடு கேட்டபோது "என்னால் அவ்வளவு பணம் கொடுக்க இயலாது." என்று கூறினார். அதிர்ச்சியுற்று நேராக அறங்காவலர்களிடம் சென்று அவர்களைக் கடிந்து கொண்டேன். "நீங்கள் செய்ய முற்படுவது என்ன ஒரு முட்டாள்தனமான காரியம்? அவர் ஆச்ரமத்தின் மதிப்பை உயர்த்தக்கூடிய மிக உயர்ந்த மனிதர்." என்று அவர்களிடம் கடுமையாக உரைத்தேன். அவர்கள் மனமிரங்கி அந்தத் தீர்மானத்தை



ஸ்ரீ பகவான் – புத்தகப்பிரதியை சரி பார்த்தல்

ரத்து செய்ய இசைந்தார்கள். கிருஷ்ண பிக்ஷு என் கைகளைக் குலுக்கி, ஆரத்தழுவிக் கொண்டார். அந்த அன்பான அரவணைப்பை என்னால் மறக்க இயலாது.

கிருஷ்ண பிக்ஷுவின் உடல்நலம் குன்றியபோது ரமணாச்ரமத்தை விட்டு வெளியேற தீர்மானித்தார். "எனது நண்பர் ஒரு மருத்துவர். நான் அவரிடம் சென்று சிகிச்சை எடுத்துக் கொள்கிறேன்." என்று என்னிடம் கூறிப் புறப்பட்டார். விடை பெற்றுக் கொள்ளும்போது என்னைத் தழுவி ஆசீர்வதித்தார். அதுவே நான் அவரைக் கடைசி முறையாகப் பார்ப்பது என்பதை நான் அப்போது உணரவில்லை. பின்னர் அவர் இறைவனடி சேர்ந்தார் என்ற செய்தி எனக்குக் கிட்டியது. அவரது இறுதி நாட்களைப் பற்றி அவருடைய மருத்துவ நண்பர் எழுதிய கடிதத்தில் கிருஷ்ண பிக்ஷு கடைசிவரை முழு உணர்வோடு இருந்ததாகவும் இடைவிடாது "ரமணா, ரமணா, ரமணா" என்று ஜபித்து வந்ததாகவும் எழுதி இருந்தார். மரணத்தறுவாயில் அவரது முகம் பூரணப் பொலிவோடு விளங்கியதாகவும் "ஆம், நான் இதோ வந்து விட்டேன்" என்று கூறியபடியே இறைவனடி சேர்ந்தார்." என்றும் அக்கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது. பகவானே நேரில் வந்து அவரை அரவணைத்து அவரை அருணாசலத்திடம் அழைத்துச் சென்று விட்டார் என்று எண்ணத் தோன்றுகிறது —பிக்ஷு மிகச்சிறந்த பக்தர்.



# 29 தேவராஜ முதலியார்



ஒரு முறை முன் பின் அறிமுகமில்லாத ஒருவர் பழைய ஹாலில் பகவான் முன் வந்து நின்றார். பகவான் உடனேயே அவரை அடையாளம் கண்டு கொண்டு "இருபது ஆண்டுகளுக்கு முன் நாம் மலை மீது இருந்த போது இவர் வந்திருக்கிறார்." என்று கூறி அங்கு இருந்தவர்களுக்கு அவரை அறிமுகம் செய்து வைத்தார். முருகனார் இந்த விஷயத்தை என்னிடம் கூறியபோது 'அப்படியானால் பகவானுக்கு அபாரமான ஞாபக சக்தி இருந்தது என்று அர்த்தமா?' என்று உடனே நான் அவரிடம் கேட்டேன். இதற்குப் பதில் கேள்வியாக, "ஒரு பொருளைப் பிரதிபலிப்பதற்குக் கண்ணாடிக்கு ஏதாவது முயற்சி தேவையா என்ன?" என்று என்னை அவர் மடக்கினார். "தன்னை அறிந்து கொண்ட ஞானியின் ஸந்நிதியில் எல்லாமே தானாக வெளிப்படுத்தப்படுகிறது. ஞானி ஒருவரிடம் தொடர்பு கொள்ளும் போது அங்கு காலதாமதமோ அல்லது வேறு செயல்பாடுகளோ இருப்பதில்லை. பகவான் ஞானியாகையால் தன் முன் நிற்பவர் யாராக இருந்தாலும் அவரை உடனே அடையாளம் கண்டு கொள்வார்." என்று கூறிவிட்டு உடனேயே "நான் கூறுவதைப் பிறர் எண்ணங்களை அறிதலென்றோ தூர திருஷ்டியென்றோ தவறாகப் புரிந்து கொண்டு விடாதே. ஏனென்றால் அவை மனதின் எல்லைக்கு உட்பட்டவை. ஞானியோ மனதைக் கடந்தவர். அந்த நிறைவான ஆன்மீக நிலையில் உடல், மனம் போன்றத் தோற்றங்களும் அடங்கலாம். ஆனால் அந்தத் தோற்றங்களில் நிறைநிலை அடங்காது. 'ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியின் முன் வைக்கப்படும் பொருள் எதுவானாலும் அதை உள்ளபடியே எவ்வாறு அது பிரதிபலிக்கிறதோ அதைப் போன்றவர் ஞானி' என்று பகவானே ஒரு முறை கூறியிருக்கிறார்." என்று முருகனார் கூறினார்.

பகவானின் அணுக்கத் தொண்டர்கள் ஒவ்வொருவரும் அவரவருடைய இயல்புக்கு ஏற்றவாறு வெவ்வேறு விதத்தில் பகவானுடன் பழகினார்கள். பகவானும் அதற்கேற்றவாறு நடந்து கொண்டார். உதாரணமாக முருகனார் பகவானைச் சிவனாகப் பார்த்தார். பல நூற்றாண்டுகளுக்கு முன்பு சிவபெருமானிடம் முழுவதுமாகச் சரணாகதியடைந்த கவியும் பக்தருமான மாணிக்கவாசகரைப் போன்றே முருகனாரையும் கருதி, அவருடன் பகவான் பழகினார். மேஜர் சாட்விக் பகவானை அன்னையாகப் பாவித்தார். பேராசிரியர் G. V. சுப்பராமையா பகவானைத் தந்தையாகக் கொண்டார். சின்னஸ்வாமி பகவானைக் குருவாகவும் கடவுளாகவும் கண்டார். அவ்வாறிருந்தும் பகவான் ஒவ்வொரு பக்தரிடமும் காட்டிய அன்பில் எவ்வித வேறுபாடும் இருக்கவில்லை.

பகவானுக்குத் தனித்தன்மை வாய்ந்த மற்றொரு பக்தரும் இருந்தார். கள்ளம் கபடமற்ற குழந்தை, தன் பெற்றோரை நோக்கித் தவழ்ந்து செல்வது போன்று பகவானை அணுகியவர் A. தேவராஜ முதலியார். 'A (ஆ)' என்பது அவரது சொந்த ஊரான ஆற்காட்டைக் குறிக்கும். அவர் இதயத்திலிருந்தது போன்று, பகவானுடன் பேசும் போதும், கடிதங்கள் எழுதும் போதும் எப்போதுமே பகவானை 'அம்மையப்பா' என்றே அழைத்தார். அவர் தன்னை 'ரமணசேய்' என்று கூறிக் கொள்வார். பகவானும் அவரைக் குழந்தையாகவே நடத்தினார். சூதுவாதற்றவராக இருந்தபோதும் தேவராஜ முதலியாரின் குழந்தைத்தனமான போக்கை சில மூத்த பக்தர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

முதலியார் சரணாகதியே உருவானவர். உண்மையை உணர்வதற்கு இரண்டு வழிகள் உள்ளன என்று பகவான் கூறியுள்ளார். நான் யார்? என்னும் கேள்வியின் மூலம் நான் என்னும் அகந்தையின் உற்பத்தி ஸ்தானமான ஆத்மாவைக் கண்டறிந்து, அதில் கரைந்து போவது முதல் வழி. 'நான் இருக்கிறேன்' என்று நம்முள் விளங்கும் பரமாத்மாவிடம் அகங்காரத்தைச் சரணடையச் செய்தல் இரண்டாவது வழியாகும். முதலியாருடைய வாழ்க்கை பகவானுடைய மற்றொரு உபதேசத்தை விளக்குவதாகவுள்ளது. பக்தனின் முயற்சியும் குருவின் அருளும் ஒன்றே. இந்த இரண்டிற்கும் நடுவே கால இடைவெளி கிடையாது. இவ்விரண்டும் ஒரே காலத்தில் நிகழ்பவை. ஒருவர் முயற்சி செய்யும் போதே அருளும் சுரக்கிறது. ஒரு ஸாதகரின் முயற்சியும் குருவின் அருளும் வெவ்வேறானவை அல்ல. 'உண்மையில் இறைவன் அருளாலேயே முயற்சி செய்யப்படுகிறது' என்று பகவான் உறுதியாகக் கூறியுள்ளார்.

தேவராஜ முதலியாருக்கு பகவானுடன் கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுத் தொடர்பிருந்தது. அந்தத்தொடர்பு மற்ற எல்லா பக்தர்களும் அனுபவித்ததை விட அதிகமானது. 1900-ல் அதாவது பகவான் அருணாசலத்திற்கு வந்து நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு கார்த்திகைத் தீபத் திருவிழாவிற்கு நூற்றுக்கணக்கான பக்தர்கள் வந்திருந்தனர். தேவராஜ முதலியாரும் அவர்களில் ஒருவர். அந்தச் சமயத்தில் பகவான் முழுவதுமாக ஆத்மாவில் ஆழ்ந்து கண்களை மூடியபடி இருந்தாலும் முதலியாரின் மீது அவர் அருளைப் பொழிந்தார். அங்கிருந்த நூற்றுக்கணக்கானவர்களில் அந்த இளம் துறவியால் கவரப்பட்டவர் முதலியார் மட்டுமே. 1914-ல் சித்தூரில் புகழ்பெற்ற வக்கீலாக ஆன பிறகு மீண்டும் அவர் அருணாசலத்திற்கு வந்தார். அந்தச் சமயத்தில் பகவான் விரூபாக்ஷ குகையிலிருந்தார். அந்த நாட்களில் பயணம் செய்வது மிகவும் சலிப்பைத் தரக்கூடியது என்றபோதும் பக்தியால் உந்தப்பட்டு, 1917-ல் பகவான் ஸ்கந்தாச்ரமத்திலிருந்த போது மீண்டும் திருவண்ணாமலைக்கு வந்தார். பகவானிடமிருந்து அருள் பெருகுவதை உணர்ந்து அவரிடம் சரணாகதி செய்து பிரார்த்தித்துக் கொள்ள வேண்டுமென்று எண்ணினார். பகவானே தனது குரு. அவரிடமே பிரார்த்தனை செய்வது என்ற உறுதியான தீர்மானத்தோடு திரும்பினார். இவ்வாறு அவர் நேரடியாக வாய்விட்டு சொல்லாமல் தன் மனதிற்குள்ளேயே பிரார்த்தித்துக் கொண்டார்.

வேலைப்பளுவினால் 1918லிருந்து 1922 வரை அவரால் பகவானைச் சந்திக்க முடியவில்லை. 1922-ல் எளிமையான சில குடிசைகளோடு திகழ்ந்த ரமணாச்ரமத்தில் பகவான் இருந்த போது அவர் மீண்டும் திருவண்ணாமலைக்கு வந்தார். அவர் பகவானை வணங்கிய போது இராமஸ்வாமி பிள்ளை என்ற மற்றொரு தீவிர பக்தர் கொட்டும் மழையின் ஓசையையும் மூழ்கடிக்கும் வண்ணம் தனது கம்பீரமான குரலில் திருப்புகழை உரக்கப் பாடிக் கொண்டிருந்தார். மதிய உணவு வேளையில் ஐந்து பக்தர்களேயிருந்தனர். "இங்கு நாங்கள் ஒரு குறிப்பிட்ட உணவு முறையைக் கடைப்பிடிக்கிறோம். உங்களுக்கு வேறு விதமான பழக்கமிருந்தால் நீங்கள் தாராளமாக அப்படியே சாப்பிடலாம்." என்று பகவான் முதலியாரிடம் கூறினார். முதலியார் கோதுமைச் சப்பாத்திகளைத் தனக்கென எடுத்து வந்திருந்தார். ஆனால் பகவான் தன் மீது காட்டிய அக்கறை இதயத்தைத் தொட்டதால், தான் கொண்டு வந்த சப்பாத்திகளை மறந்து எல்லோருடனும் சேர்ந்து உணவை ரசித்து உண்டார்.

பகவானிடம் வழக்கமாக வரத் தொடங்கிய அவர் மேன்மேலும் வினாக்களை அவரிடம் கேட்டார். அவர் என்னுடன் பகிர்ந்து கொண்டதில் முக்கியமான விஷயம் அவர் ஒரு நாத்திகவாதியாக இருந்தார் என்பதாகும். எப்போதுமே கடவுள் நம்பிக்கையில்லாத அவர் கோயிலுக்குச் செல்ல விரும்பவில்லையென்பதோடு சடங்குகளை அறவே வெறுத்தார். நேர்மாறாக

மற்ற பக்தர்கள் எல்லோருமே மத நம்பிக்கையோடு கூடிய பக்தியுடன் கோயில்களுக்குச் சென்று வந்ததுடன் கடவுளைப் பற்றியும் பேசினர். 1922-ல் தன்னுடைய கருத்துக்களை பகவானிடம் தெரிவித்தபோது பகவான், "பரவாயில்லை. அதில் ஒன்றும் தவறு இல்லை. கடவுள் உங்களுக்குள் எப்போதும் இருக்கிறார். மனதை உண்முகமாக்கி உணர்வைத் தியானம் செய்யுங்கள். அதுவே போதும்," என்று கூறினார்.

இந்த கம்பீரமான, மிக எளிய மனிதருடன் இருக்கும் பேறு எனக்குக் கிட்டியது. "நமது பகவானுடைய தனித்தன்மையே அவர் ஒவ்வொருவரையும் அவரவர் இருக்கும் நிலையில் அப்படியே ஏற்றுக் கொள்கிறார். பொதுவாக குருமார்களோ ஒருவரிடம் சீர்திருத்தத்தை எதிர்பார்ப்பார்கள் அல்லது அவரைச் சீர்திருத்திய பின்னரே ஏற்றுக் கொள்வர்," என்று முதலியார் கூறினார். அவர் ஒரு முறை என்னிடம், கவிஞரும் பக்தருமான ஒருவர் முருகப் பெருமான் பெயரில் பாடிய பாடலை தான் பாடிய போது நடந்த நிகழ்ச்சி பற்றிக் கூறினார். எவ்வாறு முருகப் பெருமான் அதைப் பாடியவரை இறுதியில் சீர்திருத்திக் காப்பாற்றினாரென்பதை அந்தப் பாடல் கூறுகிறது. முதலியார் முருகனின் பெயருக்குப் பதிலாக பகவான் பெயரை வைத்து அதே பாடலைப் பாடினார். அங்கு இருந்த முருகனார் அவரைக் கடிந்துகொண்டு "நீங்கள் இந்தப் பாடலைப் பற்றி உயர்வாக எண்ணுகிறீர்கள். ஆனால் நான் அவ்வாறு நினைக்கவில்லை. கட்டுப்பாடு ஏதுமின்றி முழுமையாக ஏற்றுக் கொள்ளும் நமது பகவானையோ அவரது பெருந்தன்மையையோ இந்தப் பாடல் பிரதிபலிக்கவில்லை. "பகவான் தாமதம் ஏதுமின்றித் தம்மிடம் வருபவர்களை எந்தவிதமான தகுதியும், எந்தக் குறையும், எந்த எதிர்பார்ப்பும் இன்றி அப்படியே ஏற்றுக் கொள்கிறார்" என்று முருகனார் கூறினார்.

1922 முதல், முன்னை விட அதிகமாக பகவானைக் காண வரத் தொடங்கி தனது பிரச்சனைகளை விலக்க வேண்டுமென்று மனதில் அவரைப் பிரார்த்தித்தார். "உங்களுடைய கடவுளிடமோ குருவிடமோ நிபந்தனையேதுமின்றி பிரார்த்தனை செய்ய உங்களுக்கு முழு உரிமையுண்டு. அது நிறைவேறினாலும் நிறைவேறாவிட்டாலும், உங்களது மனம் சந்தோஷத்தினாலோ துக்கத்தினாலோ அலைபாயாமலிருக்க வேண்டும். 'சரணடைந்து பேசாமலிருப்பதுதான் உங்கள் கடமை. நான் உங்கள் கோரிக்கையை நிறைவேற்றுகிறேனா இல்லையா என்பதைப் பற்றி நீங்கள் கவலைப் படவேண்டிய அவசியமில்லை' என்று பகவான் ஒரு முறை என்னிடம் கூறியுள்ளார்." என முதலியார் என்னிடம் உரைத்தார்.

இந்தியாவில் அந்த நாட்களில் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பது கடினம். ஆனால் முதலியாரின் பிரார்த்தனையால் அவரது மகளின் திருமணம் எந்தத் தடங்கலுமின்றி நிறைவேறியது. 1930-ம் ஆண்டில் அவரது அன்புக்குரிய மனைவியின் உடல்நலம் வெகுவாகக் குன்றியது. அவர் உடனே பகவானிடம் ஓடி வந்து, அவரது மனைவி குணம் பெற மீண்டும் மீண்டும் பிரார்த்தித்தார். 1933-ம் ஆண்டு அவரது மனைவியின் மறைவு அவருக்குப் பேரிடியாக விழுந்தது. இருந்தும் அவர் பகவானிடம் அதற்காகக் கோபமோ அதிருப்தியோ கொள்ளவில்லை. அவர் "அதுவும் எனக்கு பகவான் கொடுத்த ஆசீர்வாதமே கணேசன்! ஏனெனில் அந்த அதிர்ச்சிக்குப் பிறகு எனது மனமும் சிரத்தையும் என்னுடைய ஆன்மீகத் தேடலில் முழுமையாகத் திரும்பியது. இந்த உலகப்பற்றுகளும் உறவுகளும் எதற்கும் பிரயோஜனமில்லாதவையென்று நான் வலிமையாக உணர்ந்தேன்." என்று முதலியார் என்னிடம் கூறினார். மனைவியின் மறைவிற்குப் பின் அவர் ரமணாச்ரமம் வந்து தன் குருவின் முன் அமர்ந்தார். மனைவியின் இழப்பினால் ஏற்பட்ட மனச்சுமை மறைந்தது. அதற்கு பகவானுடைய ஸாந்நித்தியமே முழுமையான காரணமென்று அவர் எண்ணினார்.

மதிய உணவு சமயத்தில் அவர் வழக்கம் போல் அழைக்கப்பட்டார். ஆனால் அவர் தமக்கு ஒவ்வாமை (Allergy) இருப்பதாகக் கூறி உண்பதற்கு செல்லத் தயங்கினார். அவரது உறவினரும் சென்னையில் புகழ்பெற்ற மருத்துவருமான குருசாமி முதலியார் அவருடைய அந்த நோய்க்கு மருந்து இல்லை என்றும் அரிசி உணவை முழுமையாகத் தவிர்ப்பதால் மட்டும் தடுக்க முடியும் என்றும் கூறியிருந்தார். அன்று 'தேவராஜ முதலியார் எங்கே?' என்று பகவான் கேட்டதால் யாரோ ஒருவர் முதலியாரிடம் அது பற்றிக் கூறினார். முதலியார் பகவானிடம் சென்றபோது பகவான் அவரை ஊடுருவிப் பார்த்து 'இங்கே உட்காருங்கள்' என்று உத்தரவிட்டவுடன் முதலியாரும் பதில் பேசாமல் கீழ்ப்படிந்தார். ரமணாச்ரமத்தில் சற்று அதிகமாகவே அரிசிச்சோறு பரிமாறப்படும். அவ்வாறு பரிமாறப்பட்டபோது முதலியார் தயக்கத்தோடு பகவானை நிமிர்ந்து நோக்கினார். குருவின் சமிக்ஞையை ஏற்று அவர் பரிமாறப்பட்ட சோறு முழுவதையும் உண்டார். "நான் எனது குருவின் கட்டளையை உடனே நிறைவேற்றினேன். சிகிச்சையேயில்லாத அந்த ஒவ்வாமை நோய் (Allergy) உடனே குணமாகிவிட்டது," என்று முதலியார் ஒருமுறை என்னிடம் கூறினார்.

தினமும் புதிது புதிதாக மக்கள் வந்து கொண்டிருந்ததால் ஆச்ரமத்தில் தேவராஜ முதலியாரை யாருக்கும் தெரியாது. "உங்களுக்கு அவர் யாரென்று தெரிகிறதா?" என்று பகவான் ஆச்ரமவாஸிகளைக் கேட்டபோது தெரியாது என்பதாக எல்லோரும் தலையை அசைத்தனர். "ஓ உங்களுக்கு தேவராஜ முதலியாரைத் தெரியவில்லையா?" என்று ஆச்சரியத்தோடு கூறிய பகவான் "இங்கு அவர் பலமுறை வந்துள்ளார். அந்த நாட்களில் எவ்வளவு வித்தியாசமாக இருந்தார் தெரியுமா? அப்போதெல்லாம் ஐரோப்பிய உடைகளான கோட்டும் ஸூட்டும் அவர் அணிவார். இப்போது எத்தனை எளிமையாக இருக்கிறார் பாருங்கள்!" என்றார். "குருநாதர் எத்தனை உன்னிப்பாக என்னைக் கவனித்திருக்கிறார். சீடர் எந்த நிலையிலிருந்தாலும் மேலை நாட்டு உடையிலிருந்தாலும் சாதாரண உடையிலிருந்தாலும் நாஸ்திகராக இருந்தாலும், ஒரு குறிப்பிட்ட ஆன்மீக ஸாதனை செய்பவராக இருந்தாலும் இவை ஒன்றையும் பகவான் பொருட்படுத்தாமல் அவரை உள்ளவாறே ஏற்றுக்கொள்கிறார். பக்தனின் நம்பிக்கைகளையும் செயல்களையும் விட குருவிற்கு பக்தனே மிகவும் முக்கியமானவர்," என்று கண்களில் நீர் ததும்ப முதலியார் கூறினார்.

பகவானிடம் இன்னும் கூட அதிகமாகச் செல்ல ஆரம்பித்தார் அவர். இதன் முக்கியத்துவத்தை முதலியாரே கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார்: "ஸத்தியம் - ஒரு மனிதராகவோ, உபதேசமாகவோ, நிறுவனமாகவோ, கோயிலாகவோ, தேவாலயமாகவோ இவைகளில் எதுவாக இருப்பினும் அதனுடன் இடையறாத தொடர்பு கொள்ளுதல் என்பது ஆன்மீகத்தில் உறுதியாக நிற்பதற்கு மிகவும் முக்கியம். இந்த முறிவில்லாத் தொடர்ச்சியென்பது தவிர்க்க முடியாதது. குருவின் ஆச்சரியகரமான அன்பின் சிறப்பு என்னவென்றால், தனது பக்தரின் போக்கிலேயே சென்று படிப்படியாக அவரைத் தன்பால் ஈர்ப்பதில்தான் உள்ளதே தவிர உபதேசிப்பதில் இல்லை. ஆச்ரம நிர்வாகத்திற்கு 1936-ல் ஒரு இக்கட்டான நிலை ஏற்பட்டது. பகவான், சின்னஸ்வாமி மற்றும் பல ஆச்ரமவாஸிகள் ஆகியோரின் மேல் உள்ளூர் நீதிமன்றத்தில் ஒரு வழக்குப் பதிவு செய்யப்பட்டது. பகவானுடைய பக்தரும் ஓய்வுபெற்ற உயர்நீதிமன்ற நீதிபதியுமான சுந்தரம் செட்டியாரிடம் உடனே அவசரமாகச் சென்று சின்னஸ்வாமி அவருடைய உதவியை நாடினார். திருவண்ணாமலை மற்றும் பிற இடங்களிலிருந்த புகழ்பெற்ற வக்கீல்களைத் தவிர்த்து நூறு மைல்களுக்கப்பால் சித்தூரிலிருந்த தேவராஜ முதலியாரை நீதிபதி சிபாரிசு செய்தார். இந்த நிகழ்வைப் பகிர்ந்து கொள்ளும் போது "குருவின் அருளைப் பார்!" என்று கூறிய தேவராஜ முதலியார் உணர்ச்சி வசப்பட்டுக் கண்ணீர் சிந்தினார் நீதிமன்றத்திலிருந்து அழைக்கப்பட்ட ஒருவர் விசாரணைக்குச் சென்றேயாக வேண்டும்

என்பது நீதிமன்ற விதிகளில் ஒன்றாகும். இதைத் தவிர்க்க வேறு வழியில்லை. தேவராஜ முதலியாரின் சாமர்த்தியத்தினால் இந்த வழக்கு ஆரம்ப கட்டத்திலேயே தள்ளுபடி செய்யப்பட்டது. அதனால் நீதிமன்றத்தில் யாரும் ஆஜராக வேண்டிய அவசியம் இல்லாமற் போயிற்று. வழக்குத் தொடுத்தவர். மேல் முறையீடு செய்தார் என்றாலும் முதலியாரின் சாமர்த்தியத்தினால் அங்கும் அந்த வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது. (பகவான் முதலியாரைத் தேர்ந்தெடுத்ததற்கு வேறு ஒரு உயர்ந்த காரணம் இருந்தது. பிற்காலத்தில் அருணாசலத்தின் 'நான் இருக்கிறேன்' என்ற உபதேசத்தை உலகம் முழுவதும் பரப்புவதில் தேவராஜ முதலியார் முக்கியமான பங்கு வகிக்க வேண்டியிருந்தது. தான் மட்டும் தேவராஜ முதலியாரை ஏற்றுக் கொண்டால் போதாது சின்னஸ்வாமி உட்பட ஆச்ரம நிர்வாகமும் அவரை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பகவான் விரும்பியதால் இவ்வாறு அவர் செய்தார். இந்நிகழ்ச்சியால் தேவராஜ முதலியாரை விமர்சனம் செய்தவர்களின் வாய்க்குப் பூட்டு போடப்பட்டது.)

1939-ல் பகவானுடைய அருளின் வலிமையால் ஈர்க்கப்பட்ட முதலியார் தனது வேலையை இராஜினாமா செய்துவிட்டு பகவானின் திருப்பாதங்களில் நிரந்தரமாக அமர்ந்திருக்க விரும்பினார். அந்த நாட்களில் யாரும் ஆச்ரமத்தில் தனக்கென ஒரு குடிலைக் கட்டிக் கொள்ள அனுமதிக்கப்படவில்லை. இதற்கு மேஜர் சாட்விக்கும், யோகி ராமையாவும் மட்டுமே விதிவிலக்கு. பலர் அனுமதி பெற முயன்றபோதும் "நாங்கள் இந்த ஆச்ரமத்தை எளிமையான வசதிகளோடு தேவையான சிலர் மட்டும் தங்கக் கூடிய சிறிய ஆச்ரமமாக அமைக்க விரும்புகிறோமேயன்றி பலருக்கும் தங்குவதற்கு அனுமதியளிக்க விரும்பவில்லை." என்று கூறி ஆச்ரம நிர்வாகத்தினர் அனுமதி மறுத்தனர். "ஆச்ரமத்தினுள் குடிசையொன்றைக் கட்டிக் கொள்ள அனுமதி கோரி சின்னஸ்வாமிக்குக் கடிதம் எழுதுமாறு என் மனதில் ஒரு எண்ணம் தோன்றும்படிச் செய்தார் பகவான். அனுகூலமான பதில் உடனே கிடைத்தது." என்று முதலியார் கூறினார். சீடன் குருவோடு இருப்பதை விரும்புவது போன்றே குருவும் சீடனோடு இருப்பதை விரும்புகிறார். குருவிற்கும் சீடனுக்குமிடையே இருந்த அருமையான உறவிற்கு தேவராஜ முதலியார் உதாரணமாக விளங்கினார்.

சித்தூரில் தனது பணிகளை முடித்துக் கொண்டு குடில் அமைத்துக் கொள்ள அவருக்கு இரண்டு ஆண்டுகள் பிடித்தன. 1941-ல் அவர் நிரந்தரமாக ரமணாச்ரமத்தில் தங்க ஆரம்பித்தார். அதன்பிறகு தனது நேரத்தைத் தினமும் பகவானுடன் கழித்தார். இருப்பினும் தனது குடிலில் பகவானது திருப்பாதம் பட வேண்டும் என்ற ஆழமான ஆசை அவருக்கு இருந்தது. ஆனால் பகவான் அவருக்கு ஒரு சிறிய நிபந்தனையை விதித்தார். "நான் உங்கள் அறைக்கு வருகிறேன். ஆனால் அதை ஒரு பெரிய விஷயமாக எடுத்துக் கொண்டு யாரையும் அழைக்கவோ அல்லது பக்தர்களைக் கூட்டவோ கூடாது!" என்று பகவான் கூறினார். முதலியார் பகவான் தனது குடிலுக்கு வந்து ஆசீர்வதித்ததைக் கண்கள் பனிக்கக் கூறும் போது "இந்த நிகழ்ச்சி பகவானுடைய சாதாரண வரவாக இல்லாமல் என்னுடைய ஆன்மீக ரீதியான விடுதலையைக் குறிப்பதாக இருந்தது. மேலும் கணேசா! நீ இதை லேசாக எடுத்துக் கொண்டு விடாதே! எனக்கும் பகவானுக்குமிடையே இருந்த உறவின் வெளிப்பாடு ஒவ்வொன்றும் மிகவும் அர்த்தமுள்ளதாக இருந்தது." என்று முதலியார் கூறினார்.

பகவான் எப்போதாவது தான் ஆங்கிலத்தில் பேசுவார். 1940-ல் பால் பிரண்டன் அவர்களின் புத்தகம் வெளி வந்தபின் வெளிநாட்டு ஸாதகர்களின் வரவு அதிகமானதால் அவர்களுடன் பேசுவதற்கு மொழிபெயர்ப்பாளர்கள் தேவையாக இருந்தனர். தேவராஜ முதலியார், முனகால வேங்கடராமையா மற்றும் பலரும் அந்தப் பணியில் ஈடுபட்டனர். "மற்றவர்கள் அனைவரும்

என்னுடைய பேச்சை மொழிபெயர்த்து விளக்கிக் கூறுவார்கள். தேவராஜ முதலியார் மட்டுமே நான் சொல்வதை அப்படியே மொழிபெயர்க்கிறார்," என்று பகவான் ஒருமுறை கூறியதாக முதலியார் மட்டுமின்றி, மற்ற பக்தர்களும் என்னிடம் கூறியுள்ளனர்.

பகவானுடன் அவர் இருந்த நாட்களைப் பற்றி தேவராஜ முதலியார் கூறுவதை மணிக்கணக்கில் கேட்டுக் கொண்டிருப்பேன். அவை என் காதுகளில் தேன்போல பாய்ந்தன. மேலும் அவர்களுக்கிடையே இருந்த உறவைப் பற்றிய கதைகளைக் கேட்பது எனது ஸாதனையின் ஒரு அங்கமும் ஆனது. இரண்டு விஷயங்களைத் தவிர - தர்மம் பற்றிய விஷயங்களோ உலக விஷயங்களோ எதுவானாலும் பகவான் தனது அபிப்ராயத்தை அழுத்தமாகக் கூறமாட்டார். ஒன்று அசைவ உணவு உண்பதை அவர் அறவே ஏற்றுக் கொள்ளவில்லை; இரண்டாவது வெளிப்படையாகத் துறவு மேற்கொள்வது - காவியணிந்து தலையை மழித்து பெயரை மாற்றிக் கொண்டு துறவு ஏற்பதை அவர் முற்றிலுமாக விரும்பவில்லை. 1936-ல் ஆச்ரம ஹாலில் பகவான் ஸந்நிதியில் அமர்ந்திருந்தபோது தான், சைவ உணவு உண்பதையே பகவான் விரும்புகிறார் என்பதை முதலியார் நன்கு உணர்ந்தார். நேரிடையாக பகவான் அதைத் தெரிவிக்காதபோதும் அதை முதலியாரால் புரிந்து கொள்ள முடிந்தது. அதே சமயத்தில் தனக்கு ரத்தசோகை இருப்பதையும் அதற்குப் பரிகாரமாக அதிக அளவில் மாமிசம், முட்டை, கல்லீரல் சூப் போன்றவைகளை உட்கொள்ளுமாறு டாக்டர் குருசாமி முதலியார் அறிவுறுத்தியதும் அவரது நினைவிற்கு வந்தது. முதலியார் ஒளிவு மறைவின்றி "நானும் அசைவ உணவை மிகவும் விரும்பினேன். ஆனாலும் குருவின் முன்பு அமர்ந்திருந்த எனக்கு, 'நான் சைவ உணவு உண்பதையே பகவான் விரும்புகிறார்' என்ற எண்ணமும் பலமாக எழுந்தது," என்று கூறினார். இந்தச் சிக்கலான விஷயத்தை எதிர்கொள்ள வேண்டிய நிலையை பகவானுடன் மலைக்குச் சென்ற போது "பகவான்! உங்களுடைய விருப்பம்



ஸ்ரீ பகவான் - பழைய ஹாலில் சோபாவில் சாய்ந்திருத்தல்

எனக்குப் புரிகிறது. ஆனால் இது என் உடல் நிலைக்குத் தேவையாக உள்ளது." என்று முதலியார் தெரிவித்தார். அதற்கு பகவான் சிரித்துக் கொண்டே "சைவ உணவிலும் ஆரோக்கியம் அளிப்பதற்கும் பலமளிப்பதற்கும் தேவையான ஊட்டச்சத்துக்கள் அனைத்தும் உள்ளன." என்று பதிலளித்தார். அவ்வாறு பகவானின் கூற்றைக் கேட்ட போது முதலியார் மிக்க மகிழ்வுடன் "பகவான்! எனக்கு உணவுப் பரிசோதனையில் இறங்கும் தைரியம் இப்போது வந்துள்ளது. வெறும் காற்று மட்டுமே உனக்குப் போதுமானது என்று நீங்கள் கூறினாலும் என்னால் அப்படி வாழ முடியும் என்பதை உறுதியாக நம்புகிறேன்." என்று கூறினார். அவரது ஆரோக்கியத்தில், உணவு மாற்றத்தினால் எந்த பாதிப்பும் இல்லாமற் போனதோடு அசைவ உணவில் நாட்டமும் இல்லாமல் போனதற்கு பகவானது அருள் மட்டுமே காரணம்.

ஒரு முறை ஒரு விஷயத்தை நம்புவது என்பதற்கும் யோசனையேயின்றி நம்பி ஏற்றுக் கொள்வது என்பதற்கும் (Belief and Faith) உள்ள வித்தியாசத்தை முதலியார் தெளிவுபடுத்தினார். "நம்புவது என்பது வெறும் எண்ணம் மாத்திரமே. உதாரணமாக நான் இந்துவாகயிருந்த போதும் கிறிஸ்தவ மதத்தை ஒப்புக் கொள்கிறேன் என்பது போன்றது. நம்பிக்கையென்பது (Faith) மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வது என்பதால் முழுமையானது. அதில் ஏற்றுக் கொள்ளுதல், நிராகரித்தல் என்ற இரண்டுமில்லை." என்றார். "நீங்கள் கூறுவதற்கு என்ன அர்த்தம்?" என்று நான் கேட்டேன். "கணேசா! பகவான் ஒரு காக்கையைச் சுட்டிக்காட்டி, அது வெள்ளை நிறமுள்ளதென்று சொன்னால் நான் வெள்ளைக் காக்கையைத்தான் அங்கு காண்பேன். எதிர்மறையான எண்ணம் கூட என் மனதில் வராது. இதுவரை வெள்ளைக் காகத்தைப் பற்றிக் கேட்டதில்லையே என்றோ, அவ்வாறு இருக்க முடியாதென்றோ அல்லது பகவான் ஏன் அவ்வாறு கூறினாரென்றோ என் மனதில் எண்ணம், சிந்தனை எழாது. இது 'ஏற்றுக்கொள்வது' அல்ல; ஏனென்றால் ஏற்றுக் கொள்வதென்றால் அங்கு புத்தி செயல்படுகிறது. குருவின் கூற்று தவறாக இருக்க முடியாது. குரு சொன்னால் அது வெள்ளைக் காக்கைதான் என்று பூரணமாக நம்புவது; நம்பிக்கையென்பது அதை வெள்ளைக் காக்கையாகவே காண்பது." முதலியாருடைய கூற்று சரணாகதி அடைந்தவருடைய கோணத்திலிருந்து கூறப்படுவது. அங்கு 'நான்' என்ற அகங்காரம் இல்லை. 'நான்' என்னும் அகங்காரத்திற்கு நம்பத்தெரியுமேயன்றி நம்பிக்கையென்றால் என்னவென்றே தெரியாது. 'நான்' என்ற அகங்காரம் எழும்போது சிந்தனைகள் எழும்பும். புத்தி சர்ச்சையில் ஈடுபட்டு, "இது முட்டாள்தனம். பகவான் அந்த மாதிரிச் சொல்லியிருக்க மாட்டார்," என்பது போன்ற சாக்குப் போக்குச் சொல்லுவோம். நம்பிக்கை என்னும் போது எவ்வித சர்ச்சைக்கும் இடமில்லை.

காலங்காலமாக ஆன்மீக ஸாதகர்களுக்கு 'மனிதமுயற்சி', 'விதி' இவை பற்றி உள்ள குழப்பங்களைத் தீர்க்கும் விதமாக அமைந்துள்ளது முதலியார் நமக்குத் தந்துள்ள மற்றொரு விலை மதிக்க முடியாத உபதேசம். புத்தமதம், ஜைன மதம், இந்து சமயம் மற்றும் பல கீழை நாட்டு மதங்கள் பொதுவாக விதியை நம்புகின்றனர். தற்போது நீங்கள் ஒரு பெண்ணாகப் பிறந்திருக்கிறீர்கள் என்றால் விதியினால் விளைந்ததேயன்றி உங்கள் விருப்பத்தினால் அல்ல. இதுதான் விதியென்பது. நீங்கள் செல்வந்தராகவோ ஏழையாகவோயிருப்பதும் விதியே. அதாவது, இவ்வாறு எல்லாமே விதியின் விளைவு என்றால் ஆன்மீக ஸாதனை செய்வது எதற்காக? ஒரு நாள் பகவானுக்கும் முதலியாருக்குமிடையே இது பற்றி நடந்த ஸம்பாஷணை இவ்வாறிருந்தது – "பகவான்! ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் எந்த தேசத்தைச் சேர்ந்தவனென்பதோ, குடும்பம், தொழில், திருமணம் இவை போன்ற புற விஷயங்களையோ கர்ம வினைக்கேற்ப விதி நிச்சயிக்கிறது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அவரது வாழ்க்கை முழுவதிலும் நிகழும் சிறு சிறு

விஷயங்களும் கூட விதிக்குட்பட்டனவா? இப்போது என் கையிலுள்ள இந்த விசிறியை நான் கீழே வைக்கிறேன்; இதுவும் கூட ஏற்கனவே நிச்சயிக்கப்பட்டதா?" என்று முதலியார் வினவ, பகவான் மிகவும் உறுதியோடு "ஆம், நிச்சயமாக. ஒருவர் பிறக்கும் முன்பே அந்த உடம்பு செய்ய வேண்டிய செயல்களும், பெற வேண்டிய அனுபவங்களும் ஏற்கனவே நிச்சயிக்கப்பட்டு விடுகின்றன," என்று கூறினார்.

முதலியார் நிறுத்தாமல் மேலும் பல கேள்விகளை எழுப்பினார். அவ்வாறென்றால் மனிதனுடைய சுதந்திரத்திற்கும், செயலுக்கான பொறுப்புக்களுக்கும் அர்த்தமுள்ளதா? எனக் கேட்டபோது பகவான் கருணையோடு முதலியாரைப் பார்த்து "மனிதனுக்குள்ள ஒரே சுதந்திரம் முயற்சி செய்து ஞானத்தைப் பெறுவது தான். அதாவது அவன் தன்னை உடம்போடு இணைத்துக் கொள்ளாமல் இருப்பதற்குத் தேவையான அறிவைப் பெறுவதுதான். மனிதன் உடம்பிலிருந்து தன்னைப் பிரித்துக் கொள்வதற்கான சுதந்திரம் மட்டுமே மனிதனுக்குள்ளது. உடம்போடு தன்னைப் பிணைத்துக் கொண்ட மனிதனுக்கு விதியிடமிருந்து விடுதலையேயில்லை. விதிக்கப்பட்ட செயல்களனைத்தையும் அந்த உடம்பு செய்தேயாக வேண்டும் ("நான் என்னை உடலாகக் கருதவில்லையென்ற எண்ணம் மட்டும் இருந்தால் போதாது. ஏனென்றால் மற்ற எண்ணங்களைப் போன்று அதுவும் வெறும் எண்ணம் மட்டுமே. இதனால்தான் நாம் ஸாதனைகளைச் செய்தேயாக வேண்டும். உறுதியாக இதயத்தில் தங்கி ஞானத்தைப் பெற்றால் மட்டுமே, நாம் இந்த உடம்பன்று என்பதை உணர முடியும்.")

அருணாசல மலை, அதனருகில் வசிப்பது, கிரிவலம் — இவற்றின் முக்கியத்துவம் குறித்து பக்தர்களும், ஸாதகர்களும் அடிக்கடி பேசிக் கொள்வார்கள். பல சமயங்களிலும் கிரிவலத்தின் முக்கியத்துவம் பற்றி பகவானிடம் முதலியார் கேட்டதுண்டு. "கிரிவலத்தில் நம்பிக்கை இருந்தாலும் இல்லாவிட்டாலும் கிரிவலம் செல்வது எல்லோருக்குமே நல்லது. தெரிந்தோ தெரியாமலோ நெருப்பைத் தொட்டால் அது எவ்வாறு எரிக்குமோ அதே போன்று கிரிபிரதக்ஷிணம் செய்வதால் நன்மையே விளையும்," என்று பகவான் கூறினார். பின்னர் ஒரு முறை இந்தக் கேள்வியையே மீண்டும் மீண்டும் கேட்டு முதலியார் பகவானை நச்சரித்தார். சிரித்துக் கொண்டே பகவான் "கிரிபிரதக்ஷிணத்தின் சக்தியைக் குறித்து நீங்கள் ஏன் இவ்வளவு கேள்விகள் கேட்கிறீர்கள்? வேறு ஏதாவது கிடைக்கிறதோயில்லையோ கிரிவலம் செய்வதால் உங்களுக்கு உடற்பயிற்சி செய்த பலன் நிச்சயமாகக் கிட்டும்," என்று கூறினார். அதன்பிறகு ஒவ்வொரு முறையும் பகவானிடம் அனுமதிபெற்று நிஷ்டையோடு தவறாமல் முதலியார் கிரிவலம் செய்யத் துவங்கினார். "உங்களுடன் யார் வருகிறார்கள்?" என்ற பகவானின் கேள்வியையே அனுமதியாக எடுத்துக் கொண்டு உடன் வருபவர்கள் யாராவதிருந்தால் அவர்களது பெயர்களைக் கூறுவார். ஒரு முறை பகவானுடைய அந்தக் கேள்விக்கு "பகவான் என்னுடன் வருகிறார். வேறுயாருமில்லை." என்றார் முதலியார். பகவானும் வாய்விட்டுச் சிரித்தபடி அவருக்கு அனுக்ரஹம் செய்தார்.

அருணாசலத்தின் அருகில் வசிப்பது பற்றி பகவான் கூறும் போது அருணாசல மாஹாத்மியத்திலிருந்து ஒரு ஸம்ஸ்க்ருத ஸ்லோகத்தை மொழிபெயர்த்து 'சிவபெருமானுடைய கட்டளைப்படி அருணாசலத்தைச் சுற்றி முப்பது மைல்களுக்குள் வசிப்பவர்கள் தீக்ஷை பெறாத போதும் தங்களுடைய குறைகள் எல்லாம் எரிக்கப்பட்டு மெய்ப்பொருளோடு இரண்டறக் கலப்பார்கள்' என்று பகவான் கூறினார். அந்தப் பாடலின் பெருமையைக் கூறும் போது "அருணாசலத்தினுள்ளேயோ, மேலேயோ, சுற்றுப் புறத்திலோ இருக்கும் யாரானாலும்,

எதுவானாலும், எந்த விதமான சமய ஆன்மீக ஸாதனைகளேதுமின்றி அருணாசலத்தின் மஹிமையொன்றினாலேயே முக்தி அடைவார்கள்." என்று கூறினார். "குற்றவாளிகளும், கொலைபாதகர்களும், நாஸ்திகர்களும், மிருகங்களும், பறவைகளும், இங்குள்ள மரங்களும், கற்களும் கூட எவ்வாறு முக்தி அடைய முடியும்?" என்று முதலியார் வினவினார். அதற்கு பகவான் "அதைக் கூறுவதற்கும் கேள்வி கேட்பதற்கும் நமக்கென்ன அதிகாரமுள்ளது? இது ப்ரிவி கௌன்சிலின் ('Privy Council'-ன்) உத்தரவு. உலகத்தின் பெரும்பகுதியைத் தனது ஆதிக்கத்தின் கீழ் வைத்திருந்த ஆங்கில அரசாட்சி காலத்தில் 'ப்ரிவி கௌன்சில்' (Privy council) என்பது உச்ச நீதிமன்றமாக லண்டனிலிருந்து செயல்பட்டது. முதலியார் வக்கீலென்பதால் விளையாட்டாக, சட்டரீதியிலான வார்த்தையை பகவான் உபயோகித்தார். "நான் வக்கீலென்பதால் இந்த உண்மை என்னுள் ஆழமாகப் பதியும் பொருட்டு பகவான் சட்ட ரீதியான வார்த்தையை உபயோகித்து சிவ பெருமானை ப்ரிவி கௌன்சிலோடு ஒப்பிட்டுப் பேசினார்." என்று தேவராஜ முதலியார் கூறியுள்ளார்.

தனக்கு சாமர்த்தியமில்லாததால் தன்னால் ஆன்மீக முன்னேற்றம் பெறமுடியாதென்று முதலியார் கருதினார். அதனால் பல சந்தர்ப்பங்களில் பகவானிடம் "என்னை நானே காப்பாற்றிக் கொள்ள முடியாது. நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும்." என்று வேண்டிக் கொண்டார். ஒரு நாள் முதலியார் தமிழில் ஒரு பாடலைக் கண்டார். அதில் கவிஞர் விடாப்பிடியாகத் தாயைப் பிடித்துக் கொள்ளும் குரங்குக் குட்டியைப் போல் தான் இல்லையென்றும் தாய்ப்பூனையினால் கழுத்தில் கவ்வப்பட்டு எடுத்துச் செல்லப்படும் பூனைக்குட்டி போலிருப்பதாகவும் கூறுகிறார். அதனால் கடவுள் தன்னைக் காப்பாற்றியாக வேண்டுமென்று கவிஞர் பாடியுள்ளார். முதலியார் அந்தப் பாடலை பகவானிடம் காட்டி "நானும் அதே நிலையில் தான் இருக்கிறேன். நீங்கள் என்னிடம் இரக்கங்காட்டி கழுத்தில் பிடித்து, நான் கீழே விழுந்து அடிபட்டுக் கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்." என்று பிரார்த்தித்தார். பகவான் தன்னுடைய பாணியிலேயே "அது முடியாத காரியம். உங்களுடைய முயற்சி, குருவினுடைய உதவி இவை இரண்டுமே அத்யாவசியமானது என்று பதிலளித்தார். "ஸாதகருடைய தகுதிக்கேற்ப பூனைக்குட்டி வழி, குரங்குக்குட்டி வழி — முறையே மார்ஜாரநியாயம், மர்கடநியாயம் இவையிரண்டையுமே நமது சாஸ்திரங்கள் ஏற்றுக் கொள்ளுகின்றன." என்று முதலியார் கூறி மீண்டும் பிரார்த்தித்தார். அவர் எத்தனை கெஞ்சிய போதும் பகவான் தன்னுடைய நிலையிலிருந்து மாறாமல் ஒரே பதிலையே கூறினார். (சீடனின் முயற்சியே குருவின் அருள். இவற்றிற்குள் இடைவெளியோ வேறுபாடோயில்லை. சீடனின் முயற்சியும் குருவின் அருளும் ஒன்றே தான். நாம் குருவைக் குரங்குக் குட்டியைப் போன்று பலமாகப் பிடித்துக் கொண்டால், அவர் தாய்ப் பூனையைப் போன்று நம்மைப் பத்திரமாகக் கவனித்துக் கொள்வார்.)

1945 முதல் 1947 வரை பகவான் முன்னிலையில் நடந்த எல்லா நிகழ்வுகளையும் முதலியார் டயரியில் குறித்து வைத்திருந்ததே நமக்கு அவர் அளித்த பெரும் பரிசு. அவரது இந்தக் குறிப்புக்கள் 'டே பை டே வித் பகவான் ('Day by Day with Bhagavan') என்ற புத்தகமாக ஆச்ரமத்தால் வெளியிடப்பட்டுள்ளது. அவர் டயரியாக உபயோகித்த சில நோட்டுப் புத்தகங்களை நான் பார்த்துள்ளேன். அவையனைத்திலும் சிற்சில இடங்களில் பகவானுடைய கையெழுத்தும் காணப்பட்டது. அந்தப் புத்தகங்களில் குறைவான பக்கங்களிலேயே திருத்தங்கள் செய்யப்பட்டிருந்தன. திருத்தங்களும் மிகக் குறைவாகவே இருந்தன.

'ஸ்ரீ பகவத் வசனாம்ருதம்' ('Talks with Ramana Maharshi') என்ற புத்தகத்தில் பகவான் பாரம்பரிய ஸம்ஸ்க்ருத நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகள் கூறியுள்ளார் என்றால், டே பை டே வித்

பகவான் ('Day by Day with Bhagavan') என்ற நூலில் தமிழ் பக்தி கிரந்தங்களிலிருந்து மிக அதிகமான எடுத்துக்காட்டுகளை பகவான் கூறியுள்ளார் என்பதை நாம் காண முடியும்.

1950-ன் கடைசியிலும் 1960-ன் தொடக்கத்திலும் முதலியார் கூறிய கதைகளையும் நிகழ்ச்சிகளையும் புத்தக வடிவில் எனக்குத் தருமாறு அவரைத் தூண்டுவது எனக்கு மிகவும் பிடித்த காரியமாக இருந்தது. அதற்கு அவரும் எவ்விதத் தயக்கமுமின்றி அன்போடு ஒப்புதல் அளித்ததன் விளைவாக வெளி வந்ததே 'My Recollections of Bhagavan Shri Ramana' என்னும் பகவானைப் பற்றிய நினைவுகளைக் கூறும் நூல். நான் பட்டப்படிப்பு முடித்தபின் இரண்டு ஆண்டுகள் ஆச்ரமத்தில் தங்கி இருந்தேன். குடும்பத் தேவைக்காக ஏதாவது வேலையெடுத்துக் கொள்ள முயற்சி செய்தேன். என் குடும்பத்தில் நானே முதல் பட்டதாரி. மேஜர் சாட்விக், ஸ்ரீமதி தலயார்கான் போன்றவர்கள் எனக்கு வேலை தேடித் தருவதற்கு உதவி செய்தனர். நான் ஆச்ரமத்தில் தங்கி அலுவலகத்தில் வேலை செய்த போது பகவான் முன் நிகழ்ந்த பல விஷயங்களை என்னிடம் பகிர்ந்து கொள்வதற்குப் பழைய பக்தர்களின் இசைவைப் பெற பகவானது அருள் துணை நின்றது. மேஜர் சாட்விக்கும், முதலியாரும் எப்போதுமே என்னுடன் ஒத்துழைத்தார்கள். அவர்கள் வாய்மொழியாகக் கூறிய கதைகளை எழுத்தில் வடித்துத் தர வேண்டுமென நான் கேட்டுக் கொண்டேன். அவர்கள் எழுதியவையே பகவானைப் பற்றிய நினைவுகளடங்கிய முதல் இரண்டு புத்தகங்கள். 1960-ல் நான் நிரந்தரமாக ரமணாச்ரமத்திற்கு வந்த போது மேஜர் சாட்விக், தேவராஜ முதலியார், இராமஸ்வாமி பிள்ளை, குஞ்சு ஸ்வாமி இவர்கள் மட்டுமே அங்கு தங்கியிருந்தனர். பழைய பக்தர்களில் பலர் அங்கு இருக்கவில்லை. ஸ்ரீமதி தலயார்கானும் S. S. கோஹனும் ஆச்ரமத்திற்கு வெளியே தங்கியிருந்தார்கள். மேஜர் சாட்விக், குஞ்சு ஸ்வாமி, முதலியார் இவர்கள் கூறிய பகவானைப் பற்றிய கதைகளை ஆனந்தமாகக் கேட்டுக் கொண்டும் மேலும் கேட்பதில் ஆர்வத்தோடும் நான் அவர்களுடன் நீண்ட நேரம் கழித்தேன்.

தேவராஜ முதலியாருடைய சமுதாய அந்தஸ்து சராசரி மனிதனுடையது போன்று இருக்கவில்லை. சமுதாயத்தில் மிக உயர்ந்த வகுப்பைச் சேர்ந்த பிரமுகராகயிருந்தார் அவர். ஆங்கில அரசாங்கம், சமுதாயத்தில் பெரிய மனிதரென்று சுட்டிக் காட்டும் 'ராவ் பகதூர்' பட்டத்தையும் கூட அவருக்களித்துக் கௌரவித்திருந்தது. புத்தி சாதுர்யத்தோடு மிக்க புகழ்பெற்ற வழக்கறிஞராகவுமிருந்தார். அவ்வாறிருந்தும் பகவானுடைய பாதங்களில் அனைத்தையும் அர்ப்பணித்திருந்தார். "ஆன்மீக சரணாகதி என்பது வெறும் வார்த்தைகளால் செய்யப்படும் சரணாகதியன்று. 'நான்' என்னும் அகங்காரம் 'நான் இருக்கிறேன்' என்ற மௌன நிலையில் முற்றிலுமாக அடங்குவதே அது," எனக் கூறிய முதலியார் எவ்வாறு 'என் அகந்தையை' - ஒன்றுக்கும் உதவாத 'நான்' என்னும் என் அகந்தையை ஏற்றுக் கொண்டு விலை மதிக்க முடியாத 'நான் இருக்கிறேன்' என்ற பதத்தைத் தனக்கு பகவான் காட்டியருளினார் என்பதை நன்றியோடு நினைவு கூர்ந்தார்.

அது 1961-க்கும் 1963-க்கும் இடைப்பட்ட சமயமாக இருக்கலாம். ஆச்ரமம் ஏழ்மையில் இருந்தது. அங்கு ஒரேயொரு சமையல்காரர் மட்டுமே வேலைக்கு இருந்தார். ரேஷன் காலமாக இருந்ததால் பதினைந்து நபர்களுக்கு உட்பட்டவர்களுக்கு மட்டுமே சமையல் செய்யப்பட்டு வந்தது. பட்டை சாதமும், பருப்பில்லாத குழம்பும், நீர் கலந்த மோரும் ஊறுகாயும் மட்டுமே உணவாக வழங்கப்பட்டன. பெரிய விருந்துகளென்று எதுவுமில்லை. உணவுக் கூடத்தின் தேவைகளையும் மற்ற ஆச்ரம வேலைகளையும் நான் கவனித்து வந்தேன். ஒரு நாள் புதிதாகத் திருமணமான பேத்தியும்,

அவளது கணவரும் ஆச்ரமத்திற்கு வருவதாக இருந்ததால் உணர்ச்சி பொங்க, மிகுந்த ஆர்வத்தோடு முதலியார் அவர்களை எதிர்பார்த்திருந்தார். அவர்கள் பஸ் ஸ்டாண்டிலிருந்து வருவதற்குக் குதிரைவண்டியும் தங்குவதற்கு 'மோர்வி கெஸ்ட் ஹவுஸ்'ம் திரும்பிச் செல்லப் பயணச் சீட்டும் என்னால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆச்ரம வக்கீலைப் பார்க்க வேண்டியிருந்ததால் நான் காலையில் ஊருக்குள் செல்ல வேண்டியிருந்தது. புதுமணத் தம்பதிகளை வரவேற்க நான் வந்து விடுவேனென்று அவருக்கு உறுதி அளித்திருந்தேன்.

ஆனால் நான் வருவதற்குச் சற்று தாமதமானதால் முதலியாரின் அறைக்கு வேகமாகச் சென்று அவரிடம் மன்னிப்புக் கோரினேன். புதுமணத் தம்பதியர் பழைய ஹாலில் இருந்தனர். அந்த இளம் தம்பதியரையும், முதலியாரையும் பழைய உணவுக் கூடத்திற்கு நான் அழைத்துச் சென்றபோது என் கையை இறுகப் பற்றிக் கொண்டு "கணேசா! பகவான் நம்மோடு இல்லாததைக் குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். அவர் மட்டும் இருந்திருந்தால் தன்னுடைய சொந்தப் பேரக் குழந்தைகளை எவ்வாறு தனிப்பட்ட கவனத்தோடு விசேஷமாக உபசரித்திருப்பாரோ அவ்வாறே எனது பேரக் குழந்தைகளைப் பார்ப்பதிலும், அவர்களுடன் பேசுவதிலும், உணவளிப்பதிலும் பெரும் மகிழ்ச்சியடைந்திருப்பார்," என்று கூறிய முதலியாரால் உணர்ச்சி மேலிட, தொடர்ந்து பேச முடியவில்லை.

மணி பத்தரை இருக்கும். வழக்கமான உணவருந்தும் வேளைக்குச் சற்று முன்னதாக அவர்களை உணவுக் கூடத்திற்கு நான் அழைத்துச் சென்ற போது அங்கு தம்பதியருக்கு வாழையிலை போடப்பட்டிருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டேன். (முதலியார் வழக்கமான நேரத்திலேயே உணவு அருந்துவார்) புது மணத் தம்பதிகளுக்கு வடை, பாயசம், அப்பளம் இவை பரிமாறப்பட்டு ஒரு பெரிய விருந்தே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அப்போது ஆச்ரமப் பொருளாளர் என்னருகில் வந்து காதில் கிசுகிசுத்தார். "நீங்கள் காலையிலிருந்தே இங்கில்லை. ஊருக்குள் சென்றுவிட்டீர்கள். தந்தி மணியார்டர் ஒன்று வந்தது. அதில் தனது பேத்திக்கும் அவரது கணவருக்கும் விசேஷமான விருந்துக்கு ஏற்பாடு செய்வதற்கு பணம் அனுப்பியிருந்தார். அதனால் உங்களை கேட்காமலேயே நான் இதெல்லாம் ஏற்பாடு செய்துவிட்டேன். தயவுசெய்து என்னை மன்னிக்க வேண்டும்," என்று கூறினார். தம்பதியருக்கு மிகுந்த மகிழ்ச்சி. அவர்களை நாங்கள் வழியனுப்பிவிட்டு வந்த போது, முதலியார் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக "கணேசா! நான் எத்தனை பெரிய முட்டாள்? உன்னிடம் கூறவில்லையே தவிர என் மனதிற்குள், வருபவர்களுக்கு நாம் உண்ணும் எளிமையான ஆச்ரம உணவைத் தான் அளிக்க வேண்டியிருக்குமென்று மிகவும் வேதனைப்பட்டேன். பகவான் மட்டும் இருந்திருந்தால் அவர் பெரிய விருந்தே ஏற்பாடு செய்திருப்பாரென்றும் எண்ணினேன். ஆனால் இப்போது பார் கணேசா! என்னுடைய வேதனையை நீக்குவதற்காக யாரோ ஒருவரைத் தூண்டி பகவான் தந்தி மணியார்டர் அனுப்பச் சொல்லியிருக்கிறார். கருணையோடு வாழையிலையில் வடை பாயசம் அப்பளத்துடன் ஒரு பெரிய விருந்தையே பகவான் ஏற்பாடு செய்து விட்டார்," என்று கூறி மிகுந்த சந்தோஷத்தோடும் பரவசத்தோடும் ஆனந்தக் கண்ணீர் பெருக்கியவாறிருந்தார்.

முதலியார் எப்போதுமே அழகாக உடைகளணிந்து கொள்வது மட்டுமல்லாமல் இனிமையாகவும் மரியாதையோடும் பழகுவார். ஒரு போதும் கோபப்படமாட்டார். ஒரு முறை, "நீங்கள் எவ்வாறு எல்லோருடனும் சந்தோஷமாகவும் இனிமையாகவும் நடந்து கொள்கிறீர்கள்?" என்று நான் கேட்ட போது அதற்கு பதில் கூறும் வகையாக மூன்று உபதேசங்களைப் பகிர்ந்து கொண்டார்.

"மனதை இலேசாக வைத்துக் கொள். ஒரு போதும் பாரமாக வைத்துக் கொள்ளாதே. 'உனக்கு நீயே ஒளியாக இருக்க வேண்டும்' என்று இயேசு நாதர் கூறியுள்ளார். அது தான் முக்கியம். சிக்கல்களில் நீ மாட்டிக் கொள்ளாதே. என்னைப் பார். நான் எத்தனை மகிழ்ச்சியோடு இருக்கிறேன்! நடந்து போனவற்றை எண்ணுவதாலேயே பிரச்சனைகள் உருவாகின்றன. எதையுமே பிரச்சனையாக்காதே! அதே போன்று இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் பற்றிச் சிந்திப்பதும், கவலைப்படுவதும் பிரச்சனைகளை உண்டு பண்ணும். அதனால் அவற்றைப் பற்றிச் சிந்திப்பதை முடிந்த அளவுக்கு தவிர்க்க வேண்டும். நிகழ்காலத்திலேயே இரு," என்று கூறிய பின் தொடர்ந்து "கடவுள் உன்னுள் இருக்கிறார். நீ உன் கண்களால் பார்க்கும் போது உண்மையில் பார்ப்பது யார்? யார் கேட்கிறார்? யார் உண்கிறார்? யார் ஜீரணம் செய்கிறார்? உன்னை உறங்க வைப்பது யார்? 'நம்முள்ளேயிருக்கும்' இந்த உன்னதமான சக்தியைத் தான் பகவான், 'கடவுள்' என்றழைத்தார். உண்மையில் உள்ளேயுறையும் இந்த சக்தியே நீ! மௌனத்திலும், 'நான் இருக்கிறேன்' என்ற உணர்விலும் நிலைத்து எப்போதும் ஆனந்தமாக இரு," என்று கூறினார். அவர் கூறிய மூன்றாவது உபதேசம். பகவானே ஸத்தியம். ஸத்தியத்திற்கு இலக்கணம் கூற முயற்சி செய்யாதே. மனதால் அதைச் செய்ய இயலாது. யாரும் இதுவரை செய்ததில்லை. 'நான் இருக்கிறேன்' என்ற உணர்விற்கு நீ சரணடைந்தால் "உண்மை" உன் இதயத்தில் தானாகவே ஒளிரும். ஆன்மீக ரீதியாக உனது உள்ளுணர்வால் நீ அதை உணர்வாய். என்னுடைய ஆசிகள்!" என்று கூறினார்.

1964-65-ல் முதலியாருடைய குடும்பத்தினர் தங்களோடு அவர் இருக்க வேண்டுமென்று விரும்பியதால் கடைசி நாட்களில் அவர் ஆச்ரமத்தை விட்டுச் செல்ல வேண்டியிருந்தது. நான் ஏற்பாடு செய்திருந்த பிரிவுபசார நிகழ்ச்சியில் பக்தர்களனைவரும் கலந்து கொண்டார்கள். அவர் காஞ்சிபுரத்தில் தனது குழந்தைகளுடன் பகவானுடைய நாமத்தை ஓதியபடி வாழ்ந்து



முன்னாளில் பழைய ஹால் (தெற்கு திசையில் இருந்து)

கொண்டிருந்தார். ஆச்ரமவாஸிகளைப் பேட்டி காண வந்த ஒரு பத்திரிகை *நிருபரிடம் காஞ்சிபுரத்தில்* வாழ்ந்து வரும் பக்தர்களின் மாணிக்கமாம் முதலியாரைப் *பற்றி* எடுத்துரைத்து அவரிடம் அனுப்பி வைத்தேன். நிருபர் தேவராஜ முதலியரிடம் கேட்ட கேள்விகளில் ஒன்று – "*அருணாசலத்தில்* உள்ள கல்லும், பறவையும், மரமும் முக்தி அடைகின்றன என்ற செய்தியை நீங்கள் தான் பகவானிடமிருந்து வரவழைத்தீர்கள். அவ்வாறு இருக்கும் போது அருணாசலத்தைவிட்டு காஞ்சிபுரத்தில் வந்து ஏன் தங்குகிறீர்கள்? இதே நிருபர் முதலியாருடைய பதிலைப் பிறகு என்னிடம் கூறினார். முதலியார் "நான் அருணாசலத்தை விட்டு வந்திருக்கிறேன் என்று நீங்கள் தான் கூறுகிறீர்கள் நான் எப்போதாவது அருணாசலத்தை விட்டு வந்ததாகக் கூறினேனா? தற்போது நான் காஞ்சிபுரத்தில் இருக்கிறேன் என்பதால் என்னில் ஏதாவது வித்யாசம் உள்ளதா? பகவான் என்னுடன் எப்போதும் இருக்கிறார். நான் எப்போதுமே அருணாசலத்தில் தான் இருக்கிறேன். எங்கெல்லாம் 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வு உள்ளதோ அங்கு அருணாசலம் இருக்கிறது." என்று முதலியார் கூறியதாக நிருபர் தெரிவித்தார். 'நான் இருக்கிறேன்' என்ற உபதேசம் இவ்வாறுதான் பிரசாரம் செய்யப்படுகிறது!

நான் முதலியாரிடம் "நீங்கள் ஏன் ரமணருடைய பெயரை ஜபித்த வண்ணம் இருக்கிறீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர் "நான் பகவானிடம் "பகவானே! நான் சில சமயம் உங்களைப் பற்றி நினைக்காமலேயே உங்கள் பெயரை ஜபிக்கிறேன். அது சரியா? எனக்கு அதற்கு மார்க் தருவீர்களா? அதற்கு, அதிகமாக இல்லாவிட்டாலும், ஒன்றிரண்டு மார்க்காவது கொடுப்பீர்கள் என்று நினைக்கிறேன். அப்படித் தானே பகவானே!" என்று கேட்டேன். பகவான் சிரித்துக் கொண்டு 'உமக்கு மார்க்குண்டு' என்றார். அதனால் நான் தொடர்ந்து 'ரமணா, ரமணா' என்று பூரண நம்பிக்கையோடு ஜபிக்கிறேன். முழுப் பரீட்சையில் எனக்கு அவர் கூறியபடி மார்க் தருவார் என்ற முழு நம்பிக்கை என்னிடம் உள்ளது." என்று முதலியார் கூறினார்.

தேவராஜ முதலியாருடைய இறுதி நாட்கள் மிகவும் அமைதியாக இருந்ததென்று அவருடைய உறவினர்கள் என்னிடம் தெரிவித்தனர். நினைவு தவறுவதற்கு முந்தைய நொடி வரை முதலியார், 'ரமணா ரமணா' என்று ஜபித்த வண்ணம் இருந்தார். 'ரமணா' என்று ஓதுவது ஒரு மந்திரமோ மீண்டும் மீண்டும் சொல்லப்படும் ஒரு வார்த்தையோ, அல்லது ஒரு சடங்கோ அல்ல. 'நினைவு கூர்வது' என்பது அந்தத் தெய்வீக இருப்பில் நிலைத்திருப்பது தான். ரமணா என்ற பெயரை ஓதும் போதே நீங்கள் சக்தி வாய்ந்த தூய்மையான 'நான் இருக்கிறேன்' என்ற அந்த இருப்பில் ஏற்கனவே நிலைத்து விட்டீர்கள்.



# 30 விஸ்வநாத ஸ்வாமி



பகவானுடைய தாய் அழகம்மாளின் சகோதரர் திண்டுக்கல்லில் வாழ்ந்து வந்தார். ஒரு மகன் பிறந்த உடனேயே அவருடைய மனைவி இறந்து போனார். தாயை இழந்த அந்தக் குழந்தை ராமஸ்வாமியை பகவானது பெற்றோர் தங்களுடைய வீட்டிற்குக் கொண்டு வந்து அன்போடு வளர்த்தார்கள். பகவான் பிறப்பதற்குச் சிறிது நேரத்திற்கு முன்பு அன்னை அழகம்மாள், மருத்துவம் பார்த்த பெண்ணிடம் "எனக்குப் பிறக்கப் போவது பெண்ணாக இருக்க வேண்டுமே என்று மிகவும் வேண்டிக்கொள்கிறேன். அப்போதுதான் அவளை என் சகோதரன் மகனுக்குத் கல்யாணம் பண்ணி வைக்க முடியும்" என்று கூறினார். அன்று இரவு திருச்சுழியில் பகவான் பிறந்தபோது மருத்துவம் பார்த்த பார்வையற்ற அந்தப்பெண் "அழகு! உனக்கு மகன் பிறந்திருக்கிறான். சந்தோஷப்படு. நான் பிரகாசமான ஒளி ஒன்றைக் கண்டேன். அழகு! ஆனந்தப்படு!" என்று உரக்கக் கூவினாள். ஆனால் பெண் பிறக்கவில்லையே என்று அழகம்மாள் ஏமாற்றமடைந்தார். அந்த ஏமாற்றத்தில் பார்வையற்ற மருத்துவப்பெண் பிரகாசமான ஒளியைக் கண்ட முக்கியமான விஷயத்தைக் கவனிக்கத் தவறிவிட்டார்.

வயது வந்த பின் ராமஸ்வாமி ஒரு வழக்கறிஞரான போது மிகவும் நேர்மையானவர் என்று பெயர் பெற்றார். சிறந்த ஒழுக்கங்களுடைய அவர் சமுதாயத்திற்கு ஆற்றிய தொண்டின் காரணமாகப் பெரிதும் மதிக்கப்பட்டார். அவரது மகன்களில் ஒருவரான விஸ்வநாதனும் சகோதரர்களைப் போலவே அறிவாளி என்பதோடு புத்திக் கூர்மையுடையவர். சுதந்திரப் போராட்டத்தில் தன் சகோதரர்களோடு அவரும் தீவிரமாக ஈடுபட்டார். ஆங்கிலேய அரசை எதிர்த்ததால் 1921-ல் அவர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போதே சிறைக்குச் சென்றார். பல்கலைக் கழகத் தேர்வுகள் நெருங்கிக் கொண்டிருந்ததால் அவருடைய தந்தை ஜாமீன் பெற்று அவரைச் சிறையினின்றும் வெளியே கொண்டு வர ஏற்பாடு செய்தார். விடுவிக்கப்பட்ட விஸ்வநாதன் திண்டுக்கல்லில் உள்ள தனது வீட்டிற்கு நேராகச் செல்லாமல் திருவண்ணாமலையில் இறங்கி ரமண மஹர்ஷி என்று அப்போது பிரபலமாகியிருந்த தன் தந்தையின் அத்தை மகன் வேங்கடராமனைக் காணச் சென்றார்.

பகவானுடைய அருட் பார்வையை முதன்முதலில் கண்டது பற்றி விஸ்வநாதன் இவ்வாறு கூறினார். "ஸ்கந்தாச்ரமத்தில் வெட்ட வெளியில் பகவான் நின்று கொண்டிருந்தார். என் பார்வை அவர் மீது பட்டபோது நான் ஏற்கனவே பார்த்தவர்கள் எல்லோரையும் விட வேறுபட்ட கவனத்தை ஈர்க்கவல்ல தனித்த சக்தி ஒன்று அவரிடம் இருப்பதைக் கண்டேன். அவரது உடம்பிற்கும் அவருக்கும் சம்பந்தமேயில்லாதது போன்று பற்றற்று தனித்து வாழ்ந்ததாகக் காணப்பட்டார். அவரது பார்வையும் புன்னகையும் சிறந்த ஆன்மீக அழகை வெளிப்படுத்தின. அவர் பேசிய போது வார்த்தைகள் எங்கோ வெகு ஆழத்திலிருந்து வருவது போல் தோன்றின. அவரிடமும் அவரது செயல்களிலும் அப்பழுக்கற்ற தூய்மையையும் பற்றின்மையையும் காண முடிந்தது. புனிதமானதும் உன்னதமானதும் பக்குவப்பட்டதுமான ஏதோ ஒன்று அவரிடம் இருப்பதை என்னால் உணர முடிந்தது. அவரருகில் இருந்த சக்தி மிகுந்த அமைதியும் எளிமையும் மனதின் எண்ணச் சிதறல்களைத் தடுத்து நிறுத்தக் கூடியதாக இருந்தன. அவருடைய ஸந்நிதியில் அபூர்வமான அமைதியினால் ஏற்படும் ஆனந்தத்தை நேரடியாக அனுபவித்தேன். ஸ்ரீ ரமண பகவானின் திவ்ய

ஸந்நிதி விசேஷத்தை 'ரமண லஹரி' என்றே கூறுவேன். இந்த அருட்பரவச நிலையில், ஒருவனது வியக்தித்வம் மறைந்து, எங்கும் வியாபித்து, அனைத்தையும் விழுங்கக்கூடிய பிரஹ்மாண்டமான ஏதோ ஒன்று மட்டும் விளங்குகிறது. தன் அருட் பிரகாசத்தால் இப்பிரபஞ்சம் முழுவதையும் விழுங்கவல்ல அருணகிரி பரமான்மாவே இது." இந்த ஆனந்த அனுபவத்திற்குப்பின்னர் விஸ்வநாதன், அங்கு மேலும் சில தினங்கள் தங்கியிருந்ததில் வியப்பேதுமில்லை.

அன்னை அழகம்மாளும் பகவானுடைய தம்பி சின்னஸ்வாமியும் அப்போது அங்கு இருந்தனர். சிறு வயதிலிருந்தே விஸ்வநாதனை அவர்களுக்குத் தெரியும். அவர் இளமையிலேயே ஸம்ஸ்க்ருத பண்டிதராக இருந்ததையும் அவர்கள் அறிவர். அதனால் தெய்வீகமான ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்கள் சிலவற்றைக் கூறும்படிச் சொன்னார்கள். அவர் கூறி முடித்ததும் பகவான் மெதுவாக விஸ்வநாதனிடம் தன் கவனத்தைத் திருப்பி "நீ இவ்வளவெல்லாம் படித்திருக்கிறாய். ஆனால் என் விஷயம் அப்படி இருக்கவில்லை. இங்கு வருவதற்கு முன்னால் எனக்கு ஒன்றுமே தெரியாது. எதையும் நான் படிக்கவுமில்லை. ஏதோ ஒரு இனம் புரியாத சக்தி என்னை ஆட்கொண்டு என்னை முழுமையாக மாற்றியது. இவ்வாறு எனக்கு நடக்கப் போகிறது என்று யாருக்குத் தெரியும்? உன் தந்தை இளைஞராக இருந்த போதே ஹிமாலயத்திற்குச் சென்று தவம் செய்ய எண்ணினார். ஆனால் ஒரு பெரும் குடும்பத்திற்குத் தலைவரானார். ஒன்றும் தெரியாத நானோ இங்கு இழுக்கப்பட்டு இங்கேயே இருக்க வைக்கப்பட்டுள்ளேன். நான் என்னுடைய பதினேழாம் வயதில் வீட்டைவிட்டு வந்த போது பெரும் வெள்ளத்தில் சிக்கிய இலையைப் போன்று இங்கு அடித்து வரப்பட்டேன். எனக்கு என் உடம்பும் தெரியவில்லை, இந்த உலகமும் தெரியவில்லை, இரவா பகலா என்பதும் விளங்கவில்லை. என் கண்களைத் திறப்பது கூட கஷ்டமாகயிருந்தது. என்னுடைய இமைகள் பசையினால் ஒட்டி வைக்கப்பட்டது போன்றிருந்தன. என் உடம்பு எலும்புக் கூடாக மாறியது. என்னைப் பார்க்க வந்தவர்கள் நான் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறேன் என்பதை உணராததால் என் நிலையைக் கண்டு பரிதாபப் பட்டார்கள். பல ஆண்டுகளுக்குப் பின் என்னிடம் கொண்டு வரப்பட்ட வேதாந்த நூல்கள் சிலவற்றைப் படித்தபோது தான் 'பிரஹ்மம்' என்ற வார்த்தையையே தெரிந்து கொண்டேன். இந்த அனுபவம் தான் ப்ரஹ்மானுபவமா! என்று வியந்து என்னையே கேட்டுக் கொண்டேன்," என்றுரைத்தார்.

விஸ்வநாதன் கிளம்ப வேண்டிய வேளை வந்தது. அவர் பிரிந்து போக மனமின்றி விடை பெற்றுக் கிளம்பும் போது பகவான் 'ரமண கீதை' என்ற நூலின் ஒரு பிரதியை அவரிடம் அளித்தார். (காவ்யகண்டரும் அவரது சீடர்களும் கேட்ட வினாக்களுக்கு பகவான் அளித்த விடைகள் அடங்கியது இந்த நூல். ஸாதகர்களுக்கு இன்றியமையாததும் ஆகும்) "இதை உன் தந்தையிடம் கொடுத்து அவரைப் படிக்கச் சொல்."



விஸ்வநாத ஸ்வாமி
அவரது பலாக்கொத்து குடிலில்

என்று பகவான் கூறி அனுப்பினார். திண்டுக்கல் சென்றபின் விஸ்வநாதன் அதை முழுமையாகப் படித்தார். புத்தகத்தை ஆழ்ந்து படித்தபோது முக்கியமாக பகவானுடைய பெருமைகள் மிக அழகான ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்களில் எடுத்துரைக்கப்பட்டிருந்த பதினெட்டாவது அத்யாயத்தில் மூழ்கியே போவார். இந்தப் பகுதி விஸ்வநாதனின் மனதில் மிக ஆழமாகப் பதிந்து அவரை உருக்கிவிட்டதால் உலகப் பற்றை விட்டு பகவானது புனிதப் பாதங்களில் சரணடைந்து அங்கேயே தங்கி விடுவதென முடிவெடுத்தார்.

பெற்றோரிடம் தெரிவிக்காமல் 1923 ஜனவரியில் திருவண்ணாமலைக்குத் திரும்பிச் சென்றார். இதற்குள் பகவான் தற்போதுள்ள ரமணாச்ரமத்திற்கு வந்துவிட்டார். அவரைப் பார்த்தவுடன் பகவான் கேட்ட முதல் கேள்வி "வருவதற்கு முன் கடிதம் ஏதாவது எழுதி வைத்துவிட்டு வந்தாயா? அல்லது அப்பா அம்மாவிடம் சொல்லிவிட்டு வந்தாயா?" என்பது தான். இல்லையென்று தலையசைத்தார் விஸ்வநாதன். "நான் வீட்டைவிட்டு வந்த போது அப்படித்தான் செய்தேன். நீ ஏன் செய்யவில்லை?" என்று கேட்டு "உடனே உன் பெற்றோருக்குக் கடிதம் எழுதி நீ இங்கு க்ஷேமமாக உள்ளதாகத் தெரிவி" என்று அறிவுறுத்தினார். அதன் பிறகு அங்கு தங்குவதற்கு அனுமதியளித்தார். பகவானுடைய சக்தியும், ஸந்நிதி விசேஷமும் பலமாக இருந்ததால், தான் எந்த வித சம்ப்ரதாயமான ஸாதனைகளும் புரிய வேண்டிய அவசியமில்லை என்று உணர்ந்து கொண்டார். ஆயினும் பகவான் எழுதிய நூல்களை முழுமையாகப் படித்ததோடு உள் உணர்வைத் தூண்டக் கூடிய பகவானின் ஸாந்நித்யம் நிறைந்த ஆச்ரமத்தில் பணி செய்தார். பகவானது உபதேசங்களைப் படிக்கப் படிக்க அவரோடு வாழ்வது, ஆன்மீக உயர்வு தரக் கூடிய அவருடைய திவ்ய ஸந்நிதி ஆகியவை மட்டுமே ஒருவருக்குப் போதுமானது என்ற உறுதியான நம்பிக்கை அவருக்கு உண்டாயிற்று. உள்ளது நாற்பது அனுபந்தத்தில் உள்ள ஒரு பாடலைப் படித்த போது இந்த நம்பிக்கை மேலும் உறுதிப்பட்டது. குளிர்ந்த தென்றல் வீசும்போது எவ்வாறு விசிறி தேவையில்லையோ அதே போன்று ஒரு ஞானியின் ஸங்கத்தில் இருக்கும் போது எந்த விதமான சமய ஆன்மீக ஸாதனைகளும் ஒருவருக்குத் தேவையில்லையென்று அப்பாடலில் கூறப்பட்டிருந்தது.

சில நாட்களுக்குப் பின் எவ்விதமான ஆன்மீக ஸாதனையில் ஈடுபடுவதற்கு விஸ்வநாதன் தயாராக இருக்கிறாரென்று பகவான் அவரிடம் கேட்டார். விஸ்வநாதன், இந்து மதப்படி மந்திரங்களில் புனிதமான காயத்ரி மந்திரத்தில் சிறு வயதிலிருந்தே தனக்கு ஈடுபாடு உள்ளதென்றும் அதை ஜபித்து வந்ததாகவும் தெரிவித்தார். "அது மிகவும் நல்லது. ஆனால் அதைத் தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் முழுமையாக ஈடுபட்டு மனப்பூர்வமாக ஜபிக்க வேண்டும்." என்று பகவான் பதிலளித்தார். பின்னர் ரமணாச்ரமத்திற்குப் பின்னால் மலையிலிருந்த ஒரு குகைக்கு விஸ்வநாதனை பகவான் அழைத்துச் சென்றார். அங்கு அமர்ந்தால் ஒருவர் அருணாசலத்தின் கிழக்கு மேற்கு பாகங்களை வெயிலின் பாதிப்பின்றிப் பார்க்க முடியும். "குறிப்பிட்ட ஒரே நேரத்தில் நீ ஜபம் செய்ய வேண்டும். நீ செய்யும் ஸாதனையைக் கண்காணிக்க நான் வருவேன். அதனால் ஒழுங்காகவும் கவனமாகவும் அதில் ஈடுபடு." என்று பகவான் கூறினார். விஸ்வநாத ஸ்வாமி என்னை அந்த குகைக்கு அழைத்துச் சென்று "அவர் வெறும் பேச்சுக்கு அப்படிச் சொல்லவில்லை. அவர் உண்மையாகவே வந்து என்னைக் கண்காணித்தார்." என்று கூறியபோது நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். கொடுத்த வேலையை ஒழுங்கு தவறாமல் செய்யக் கூடியவர் விஸ்வநாதன் என்பதை உறுதி செய்யும் பொருட்டு பகவான் பலமுறை குகைக்கு வந்தபோது, ஆழ்ந்த ஜபத்தில் ஈடுபட்டிருந்ததால் பகவான் வந்ததை அவர் அறியவில்லை.

1923 முதல் 1927 வரை விஸ்வநாதன் கடுமையான ஸாதனைகள் செய்து கொண்டு பகவானோடு வாழ்ந்தார். ஒளி பொருந்தியதும், முழுமனதுடன் செய்யவேண்டியதுமான இந்த ஸாதனைக் காலத்தில் முயற்சி செய்யும் போது, குரு தன் அருளைப் பொழிகிறார். விஸ்வநாதனுக்கு, தான் எவ்வளவு தூரம் முன்னேறி இருக்கிறோம் என்பதை உணர்ந்து கொள்ள இயலவில்லை. "தற்போது என்னிடமுள்ள மிருக உணர்ச்சிகளிலிருந்து நான் எப்படி விடுபட்டு உயர்வடைவேன்? என்னுடைய முயற்சிகள் அனைத்தும் பயனற்றுப் போய்விட்டன. மாபெரும் சக்தி ஒன்றே என்னில் மாற்றம் வரவழைக்க முடியும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்," என்று விஸ்வநாதன் தெரிவித்தார். பகவான் கருணையோடு "ஆம் நீ சொல்வது உண்மைதான். புலன்கள், மனது இவற்றை விடப் பெரிய ஒரு சக்தியை எழுப்பினால் மட்டுமே அவற்றைக் கட்டுப்படுத்த முடியும். உன்னுள் இருக்கும் அந்த உயர்ந்த சக்தியை எழுப்பி கவனமாக வளர்த்தால் மற்றவை எல்லாம் அற்புதமான விதத்தில் தானாகவே தெளிவாகும். நீரோட்டம் போன்ற இடைவிடாத தியானத்தினால் அந்த சக்தியை நிலைநிறுத்த முடிய வேண்டும். மிதமான ஆகாரம் மற்றும் அதைப்போன்ற கட்டுப்பாடுகள் இவற்றை சிரத்தையோடும் புத்திசாலித்தனமாகவும் கடைப்பிடித்தால் அந்தச் சாந்தி ஸ்திரமாகும். அமைதியை நிலைநிறுத்தப் பெரிதும் உதவியாக இருக்கும்," என்று கூறிய பகவான் மேலும் "விஸ்வநாதா! இங்கு வருபவர்களோடு எல்லாம் அதிகமாகப் பழகாதே. உலக விவகாரங்களிலும், லௌகீகமான சம்பாஷணைகளை வளர்த்துப் பற்றுக்களை அதிகமாக்குவதிலும் நேரத்தை வீணாக்காதே; எதிலும் பற்றுக் கொள்ளாதே. அவசியமாகும் போது மட்டும் பேசு." என்று பகவான் அறிவுரைகள் வழங்கினார். விஸ்வநாத ஸ்வாமி பகவானுடைய வார்த்தைகளைப் பக்தியோடு கடைப்பிடித்தார். அதனால் அவர் பேசுவது மற்றவர்கள் காதில் கூட விழாது. பிக்ஷைக்காக நகருக்குள் செல்வதைத் தவிர வேறு இடங்களுக்குச் செல்வதைத் தவிர்த்தார். பிற்காலத்தில் விஸ்வநாத ஸ்வாமியின் சுபாவமான தாழ்ந்த குரலில் பேசுவது, வெளியில் அதிகமாகச் செல்லாதது, இவை குறித்து மூத்த பக்தர்கள் என்னிடம் கூறியுள்ளனர்.

அவரது வாழ்க்கையில் முக்கியமான இந்தக் கட்டத்தில் நடந்த ஒரு சுவையான நிகழ்ச்சியை விஸ்வநாத ஸ்வாமி என்னிடம் கூறினார். விஸ்வநாதன் பகவானிடம் வந்து நான்கு மாதங்களான பின்பு அவரது தந்தை வரப் போவதாகத் திண்டுக்கல்லிலிருந்து ஒரு கடிதம் வந்தது. இந்தக் கடிதத்தை விஸ்வநாத ஸ்வாமி காட்டியபோது மிகுந்த கருணையோடு "விஸ்வநாதா! உன் குடும்பத்தினர் வருகிறார்கள். அவர்களை வரவேற்பதற்கு ரயில்வே ஸ்டேஷன் போ. ஆனால் நான் இல்லாத போது உன் தந்தையிடம் எதுவும் பேச வேண்டாம். அவர்களை வரவேற்று நகருக்குள் அவர்கள் தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் வீட்டில் கொண்டுவிடு. நீ உனது குகைக்குத் திரும்பிச் சென்று ஜபம் செய். நான் உனக்குச் சொல்லி அனுப்புகிறேன். அப்போதும் நீ உன் தந்தையிடம் பேசாதே. நீ வந்து ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய். எனக்கல்ல, உன்னுடைய தந்தைக்கு; பின் மௌனமாக நின்று கொண்டிரு. நான் மற்றவற்றைப் பார்த்துக் கொள்கிறேன்." என்று பகவான் கூறினார். பகவானுடைய ஆன்மீக நிலை குறித்து விஸ்வநாதனின் தந்தை ராமஸ்வாமிக்கு எதுவும் தெரியாது. வீட்டைவிட்டு ஓடிவந்து துறவு பூண்ட உறவினன் வேங்கடராமன் என்பது மட்டும் தெரியும். அந்தச் சமயத்தில் ரமணாச்ரமத்தில் உள்ள பழைய ஹால் கட்டப்பட்டுக் கொண்டிருந்தது. அதனால் பகவானும் மற்றவர்களும் சாலையின் எதிர்புறமிருந்த ஒரு மண்டபத்தில் தங்கியிருந்தனர். மண்டபத்திற்கு வந்து பகவானைப் பார்த்தபோது விஸ்வநாதனின் தந்தையாரால் பகவானின் உயர்ந்த ஆன்மீக நிலையை உணர முடிந்தது. அடுத்த வினாடி வியப்போடும் பக்தியோடும் அவர்முன் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார்



விஸ்வநாத ஸ்வாமி – ரமண பாதாநந்தர் மற்றும் சோமசுந்தரம் பிள்ளை குடும்பத்தினருடன்

தான் கூறிய படியே விஸ்வநாதனுக்குப் பகவான் சொல்லியனுப்பினார். ஏற்கனவே பகவான் அறிவுறுத்தியபடி விஸ்வநாதன் வந்து தந்தையை ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து கையைக் கட்டியபடித் தலை குனிந்து தந்தை அருகே நின்று கொண்டார். ராமஸ்வாமி மிகவும் கோபமாக இருந்தார். விஸ்வநாதனைப் பார்த்து "இதெல்லாம் போதும். இப்போது மூட்டையைக் கட்டிக் கொண்டு என்னோடு வா. திண்டுக்கல்லிற்குத் திரும்பிக் கூட்டிச் செல்வதற்குத்தான் நாங்கள் வந்திருக்கிறோம்," என்று கூறினார். மண்டபத்தில் கலைக்க முடியாத பேரமைதி நிலவியது. பகவான் ராமஸ்வாமியைப் பார்த்து "விஸ்வநாதன் தான் சுத்தனாவதற்காக சரணாகதி என்ற மார்க்கத்தைப் பின்பற்றுகிறான்," என்று கூறினார். ராமஸ்வாமிக்கு முழுமையாகத் திருப்தி ஏற்படவில்லை. பகவான் காரணத்தை விளக்கி "விஸ்வநாதன் இங்கே இருப்பதற்கு அனுமதியுங்கள். அது அவனுக்கு நன்மையைத் தரும்!" என்று கூறினார். இந்தச் சொற்கள் அதிசயிக்கத்தக்க விதத்தில் வேலை செய்து ராமஸ்வாமியை உருக வைத்தது. தந்தை என்ற உணர்வோடு பகவானைப் பார்த்து "பகவான்! நீங்கள் அவனுடைய ஆன்மீக நிறைவிற்குப் பொறுப்பு ஏற்பதாக இருந்தால் அவனை இங்கே விட்டுச் செல்வதில் எனக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை," என்று பணிவோடு கேட்டுக் கொண்டார். மீண்டும் அதே முழு அமைதி. விஸ்வநாதன் இதை எதிர்பார்க்கவில்லை. எல்லோரும் பகவானை நோக்கினர். பகவான் கருணையோடு திரும்பி நோக்கி "ஆம் விஸ்வநாதனுடைய ஆன்மீக வளர்ச்சிக்கு நான் ஜவாப்தாரி." என்று அனைவருக்கும் கேட்கும் படியாக அறிவித்தார். சின்னஸ்வாமி விஷயத்தில் பகவான் தன் தாய்க்கு முன்னால் மட்டுமே அவரது பொறுப்பை ஏற்றுக் கொள்வதாக உறுதி கூறினார். ஆனால் விஸ்வநாதன் விஷயத்தில் பலருக்கும் முன்னால் அதை அறிவித்தார். ஆனாலும் இவையிரண்டும் தனித்தனியான நிகழ்ச்சிகள் அல்ல. நாம் ஆத்மார்த்தமாக ஸாதனைகள் பழகுவோமானால் இப்போதும் கூட பகவான் ஒவ்வொருவருடைய ஆன்மீக நிறைவிற்குமே முழுப் பொறுப்பும் ஏற்றுக் கொள்வதாக உறுதியளிக்கிறார் என்று கொள்ள வேண்டும். பகவானின் புனிதமான சொற்களை நினைவில் கொள்ளுங்கள் - "ஒரு ஸாதகனுடைய முயற்சியும் குருவினுடைய அருளும் வேறுவேறல்ல. இரண்டும் ஒன்றாகவே செயல்படுகின்றன." நம்முடைய பங்கு முயற்சி செய்வது மட்டுமே.

விஸ்வநாத ஸ்வாமிக்கு பரம சந்தோஷம். அவருடைய தீவிர ஸாதனைகள் துவங்கின. பகவான் நடக்கச் செல்லும் போது அவரைக் கூடவே அழைத்துச் சென்று, தான் ஞானம் மற்றும் பக்தி குறித்து இயற்றிய செய்யுட்களை விளக்கிக் கூறினார். அவரை முழுமையாக பகவான் கவனித்துக் கொண்டார். விஸ்வநாத ஸ்வாமி பிற்காலத்தில் "நான் பகவானோடு தனியாக இருந்ததும் அவரது பாடல்களின் விளக்கத்தை அவர் எனக்கு மட்டுமே அளித்ததும் அவர் எனக்குத் தந்த மிகப் பெரிய வரமாகும்." என்று என்னிடம் கூறினார். ஒரு நாள் பகவானும் விஸ்வநாத ஸ்வாமியும் காய்கறிகள்

அரிந்து கொண்டிருந்த போது பகவான் "மிகவும் அற்பமானதைக் கூட உனக்கு உபயோகிக்கத் தெரியனும். அதே சமயம் பிரபஞ்சம் முழுவதையும் அற்பமானதாகக் கருதி விலக்கவும் முடியனும்," என்று விஸ்வநாதரிடம் கூறினார்.

குருவிற்கும் சீடனுக்குமுள்ள உறவு வலுவடைந்து வந்தது. அச்சமயத்தில் காவ்யகண்ட முனி மலை மேல் வசித்து வந்தார். விஸ்வநாதனுக்கு ஆழமான சாஸ்திர ஞானம் தேவையென்று பகவான் கருதியதாலோ என்னவோ 1927-ல் சாஸ்திரங்களைக் கற்பதற்காக விஸ்வநாதனை காவ்யகண்டரிடம் அனுப்பினார். காவ்யகண்டர் 1929-ல் பலாக்கொத்தில் தங்கியிருந்த போது பகவான் விஸ்வநாதனிடம் "பலாக்கொத்தில் நாயனா ஒரு குடிசையில் தங்கியிருக்கிறார். அவரோடு தங்கி அவருக்குச் சேவை செய்து கொண்டு அவரிடமிருந்து கற்றுக் கொள்," என்று பிரத்தியேகமாக அறிவுறுத்தினார். தினமும் நாயனாவின் குடிசைக்குச் சென்று பகவான் "நாயனா! விஸ்வநாதன் எப்படி இருக்கிறான்?" என்று விசாரிப்பது வழக்கம்.

குரு தன்னுடைய ஆசிரியரைச் சுட்டிக் காட்டியதால் விஸ்வநாதனுக்கு உற்சாகம் ஏற்பட்டது. ஸம்ஸ்க்ருத ஆன்மீக நூல்களைக் கற்றதன் விளைவாக அவர் ஒரு ஆசுகவியானார். ஒரு முறை ஐந்து ஸ்லோகங்களை எழுதி பகவானுடைய பாதாரவிந்தங்களில் ஸமர்ப்பித்தார். பகவான் அவற்றைப் படித்துப் பார்த்துப் பாராட்டும் வகையாக "ரொம்ப நன்றாக இருக்கு. நீ ஏன் தொடர்ந்து எழுதக் கூடாது? ஆனால் முதலில் நாயனாவிடம் கொடுத்துச் சரி பார்க்கச் சொல்" என்றார். விஸ்வநாதனும் காவ்ய கண்டரும் இணைந்து செயல்பட்டு 'ஸ்ரீ ரமண அஷ்டோத்திரம்' என்று பகவானுடைய 108 நாமங்களைத் தொகுத்தனர். இந்தப் பிரார்த்தனையின் அழகு என்னவென்றால் அது விஸ்வநாதன், நாயனா இவர்களின் இதயத்திலிருந்து வெளிப்பட்டதோடு இதயமேயான பகவானால் ஏற்றுக் கொள்ளப்பட்டதால் என்றும் நிலைத்து நிற்கும். வாடாத புனிதமலரான அந்த ஆராய்ச்சி நூலைப் பற்றி பின்னர் விஸ்வநாத ஸ்வாமி என்னிடம் கூறியபோது "இதை பகவானின் திருப்பாதங்களில் ஸமர்ப்பிக்கும் பேறு பெற்றேன்," என்று கூறினார். விஸ்வநாத ஸ்வாமி ஸாதனைகளைத் தொடர்ந்தார். வருடங்கள் உருண்டோடின. ஸத்தியத்தையே தன் வாழ்க்கையில் கடைபிடிக்கும் ஒருவர் எப்போதுமே ஸத்தியமாக விளங்கும் நிகழ்காலத்தில் வாழ்வதுடன் நிரந்தரமான நிகழ்காலமாகவே இருக்கிறார். காலம் என்பது வெறும் தோற்றம் மட்டுமேயென்பதால், இப்படிப்பட்ட ஒருவருக்கும் அதைப் பற்றிய கவலை ஏதுமில்லை. காலத்தைக் கடந்த பரவசத்தில் விஸ்வநாதன் இருந்தார்.

பகவானின் உடல் நலம் குன்றி அறுவை சிகிச்சை செய்யப்பட வேண்டிய நிலையிலிருந்தது விஸ்வநாதனுக்குப் பெரும் அதிர்ச்சியாக இருந்தது. அதனால் அவர் மிகவும் வேதனைக்கு உள்ளானார். பகவானிடம் சென்று "பகவானே! இரவும் பகலும் தங்களுக்கு சேவை செய்து கொண்டு தங்களுடனேயே இருப்பதற்கு எனக்கு அனுமதி தாருங்கள்," என்று அவர் கேட்டுக் கொண்டார். பகவான் அவரை நோக்கி "உனக்கு வேறு வேலை உள்ளது," என்று கூறி மென்மையாக அவருடைய வேண்டுகோளை நிராகரித்தார். பகவானுடைய வாழ்க்கையின் இறுதி நாளில் நானும் மற்றும் சிலரும் அவரது அறைக்குள் இருந்தோம். ஆத்மாவான அருணாசலத்தின் மீது பகவானால் இயற்றப்பட்ட, உள்ளத்தை உருக்கும் அக்ஷரமணமாலைப் பாடல்களை வெளியில் பக்தர்கள் ஓதிக் கொண்டிருந்தனர். பகவான் தன்னை உட்கார வைக்குமாறு தனது உதவியாளர்களிடம் ஏற்கனவே சொல்லியிருந்தார். 'அருணாசலசிவ' 'அருணாசலசிவ' என்ற ஒலி மேலும் மேலும் உரக்க ஒலித்த போது, பரவசத்தில் பகவான் பெருக்கிய கண்ணீரும் அதிகரித்தது. விஸ்வநாத ஸ்வாமி அந்த உன்னதமான ஆன்மீகக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார். திடீரென்று பகவானது பார்வை

தன்மீது விழுவதை அவர் உணர்ந்தார். தன்னுள்ளே பளிச்சென மின்னல் போன்ற ஓர் ஒளிக்கீற்று பிரகாசிப்பதை உணர்ந்தார். அவரது இதய குகை திறக்கப்பட்டது. தனது இதயத்திற்குள் பகவான் அருள்மழை பொழிவதை உணர்ந்தபோது பரவசத்தால் தன்னை மறந்தார். அடுத்த நொடியில் விஸ்வநாதன் அனுபவித்த அந்த நிலையே உன்னதமான உண்மையான நிலை என்பதை உணர்த்துவது போன்று பகவான் புன்னகை பூத்துத் தலையசைத்தார். பகவான் ராமஸ்வாமிக்குக் கொடுத்த வாக்கின்படி அவரது மகனிடம் பூரணமான ஆன்மீக விழிப்புணர்வை ஏற்படுத்தினார். அந்த அனுபவத்தைப் பற்றி விஸ்வநாத ஸ்வாமி கூறிய போது "அந்த அருட் பார்வை பெற்ற பிறகு பகவானின் அருகே இதுவரை எனக்கு ஏற்பட்ட எல்லா ஆன்மீக அனுபவங்களுக்கும் சிகரம் வைத்தது போன்ற அந்த உயர்ந்த நிலை அவரது கடைசி நிமிடங்களில் எனக்கு நிகழ்ந்தது. அந்தச் சிறிய அறையில் நான் நின்று கொண்டிருந்தபோது எல்லாமே நிழல் போன்று தோற்றமளித்தது; கண்ணுக்குப் புலப்படாத எப்போதும் இருக்கும் அந்த ஒரே ஒரு உண்மையான தூய்மையான இருப்பு அங்கு சூழ்ந்திருந்தது. பகவானைப் பிரியப் போகிறோம் என்றோ, அவர் இறந்து விடப்போகிறார் என்றோ, சிறிது கூட நான் வேதனைப் படவில்லை. அதற்கு மாறாக ஆத்மாவின் இயல்பு நிலையான ஆனந்தமும் ஆக்க பூர்வமான பரவசமும் மட்டுமே அங்கு இருந்தது."

பகவானுடைய மஹா நிர்வாணத்திற்குப் பிறகு திண்டுக்கல்லிலிருந்து விஸ்வநாத ஸ்வாமிக்கு அவர் தாயார் உடல் நலமில்லாமல் படுக்கையிலிருப்பதாகத் தகவல் தெரிவித்து, அங்கு வரும் படி அழைப்பு வந்தது. அவரது தாயாரைக் கவனிப்பதற்கு யாருமில்லாத நிலையாக இருந்தது. விஸ்வநாத ஸ்வாமி அங்கு சென்று தாயாருக்கு உணவு அளிப்பதற்குக் கூட அங்கு யாருமில்லையென்பதைக் கண்டார். ஆகாரம் சமைத்து, குளிப்பாட்டித் தேவையான தொண்டுகளையும் மாதக் கணக்கில் செய்தார். இரவும் பகலும் அவரைக் கவனித்துக் கொண்டார். "உனக்கு வேறு வேலையுள்ளது," என்று முன்பு பகவான் கூறியது அந்தச் சமயத்தில் அவருக்கு நினைவுக்கு வந்தது. அவருடைய தாயார் பிரத்தியேகமாக சிறிய நோட்டுப்புத்தகம் ஒன்றை வைத்திருந்தார். மரணத்தைத் தழுவுவதற்கு முன் பகவான் தன்னுடைய சிறிய அழகான கையெழுத்தில் அதில் எழுதியிருந்த ஸ்ரீ ரமண அஷ்டோத்திரத்தைத் திறந்து பார்த்தார். அந்த நாமங்களைத் தினமும் பாராயணம் செய்திருந்த அவரது தாயார், "விஸ்வநாதா! உனக்கு என்னுடைய ஆசீர்வாதங்கள்," என்று கூறி அதை விஸ்வநாதனிடம் தந்தார். இதற்குப் பின் விஸ்வநாதன் தொடர்ந்து திண்டுக்கல்லில் இருந்த ஒரு சமயம் "விஸ்வநாதா! நீ ரமணாச்ரமத்திற்கு வந்து விடு," என்று பகவான் கூறியதாக ஒரு கனவு கண்டார். அவர் அங்கு சென்றபோது சின்னஸ்வாமி நோய்வாய்ப்பட்டிருந்ததைக் கண்டார். அடுத்த ஆறு மாதங்களுக்கு அவரை விஸ்வநாதன் இரவும் பகலும் கவனித்துக் கொண்டார். 1953-ல் சின்னஸ்வாமியின் மரணத்திற்குப் பின் ரமணாச்ரமத்திலிருந்து விஸ்வநாத ஸ்வாமி எங்கோ சென்று விட்டார்.

1960-ல் நான் ரமணாச்ரமத்திற்கு வந்த பின் விஸ்வநாத ஸ்வாமியின் பெருமையை அறிந்து அவரைத் தேடிக் கொண்டேயிருந்தேன். ஆனாலும், அவர் இருந்த இடத்தை என்னால் கண்டு பிடிக்க முடியவில்லை. ஒரு நாள் சென்னையில் ஒரு வீதியில் நடந்து கொண்டிருந்த போது எனது பழைய நண்பனைக் கண்டேன். அவன் மிகவும் சந்தோஷத்தோடு "கணேசண்ணா! நான் இப்போதுதான் விஸ்வநாத ஸ்வாமியை சந்தித்து விட்டு வருகிறேன். எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது." என்றான் எனக்கும் எல்லையற்ற மகிழ்ச்சி. "விஸ்வநாத ஸ்வாமி இங்குதான் இருக்கிறாரா?" என்று நம்பமுடியாமல் கேட்டேன். என் நண்பன் விலாசம் கொடுக்கவே நான் உடனே அங்கு சென்றேன் விஸ்வநாத ஸ்வாமி அங்கு அவருடைய சகோதரருடைய வாடகை வீட்டில்

தங்கியிருந்தார். நான் உள்ளே சென்றபோது அவர் குடும்பத்தினருக்காக சமையல் செய்து கொண்டு சமையலறையில் இருந்தார். அங்கேயே நான் அவரை ஸாஷ்டாங்கமாக வணங்கினேன். "ஸ்வாமி உங்களுக்குச் சமையலா வேலை? நீங்கள் பகவானுடைய இடத்திலல்லவா இருக்க வேண்டும்? ரமணாச்ரமம் உங்களுடைய வீடல்லவா?" என்று அழுதபடிக் கேட்டேன். அதற்கு அவர் "கணேசா! சமையல் செய்வதில் என்ன தவறு உள்ளது? ஏதோ சிறிது உணவுதான் நம் வயிற்றுக்குத் தேவை. இங்கு வேலை செய்வதால் அது எனக்குக் கிடைத்து விடுகிறது. ஆத்மாவிற்கு வேண்டிய உணவை பகவான் ஏற்கனவே கொடுத்து விட்டார்," என்று பதிலளித்தார். நான் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட பிறகு ஆச்ரமத்திற்குத் திரும்பி வர இசைந்தார்.

விஸ்வநாத ஸ்வாமிக்குப் பணிவிடை செய்தது என் வாழ்க்கைக்கு மிகுந்த நிறைவைத் தந்தது. அவருடைய ஸாந்நித்தியத்தால் ஆச்ரமம் மேலும் சிறப்பாக இருந்தது. மெல்ல மெல்ல மற்ற பக்தர்களும் வந்து சேர்ந்தனர். பெரிய 'ஹால்' கட்டப்படுவதற்கு முன்பு, திறந்த முற்றத்துடன் கூடிய சிறிய குடிசையில் தான் பகவானின் ஸமாதி இருந்தது. நான் முற்றத்தில் தரையில் ஒரு பாயை விரித்து உறங்குவது வழக்கம். சில இரவுகளில் யாரோ கம்பால் குத்துவது போன்று உணர்வேன். நான் எழுந்து பார்த்தால் விஸ்வநாத ஸ்வாமி என் அருகில் நின்று அவரைத் தொடருமாறு ஜாடை செய்வதை அறிந்து கொள்வேன். பிரதக்ஷிணப் பாதையில் ஆச்ரமத்திலிருந்து 2 கி. மீ. தொலைவிலுள்ள யமலிங்கத்திற்கருகில் இருந்த மயானத்திற்கு மௌனமாக என்னைக் கூட்டிச் செல்வார். இறந்த சடலங்கள் புதைக்கப்படும் அல்லது எரிக்கப்படும் இடத்திற்கு முன்னாலிருந்த உயரமான மேடையில் நாங்கள் இருவரும் அமர்ந்து கொள்வோம். என் கவனத்தை அவர் மலை மீது திருப்புவார். இரண்டு மூன்று மணி நேரம் அங்கு அமைதியாக இருந்து விட்டுப் பின்னர் நாங்கள் திரும்பி நடந்து வருவோம். இம்மாதிரிச் சில தினங்கள் நிகழ்ந்தது. பின்னர்தான் இந்த ஞானியினுடைய தீர்க்க தரிசனம் பற்றி நான் அறிந்தேன். இப்போது என்னுடைய வீடாகவுள்ள 'ஆனந்த ரமணா' யமலிங்கத்திற்குப் பக்கத்திலிருக்கிறது. மயானத்தை நோக்கி நடந்த அந்நிகழ்ச்சிகள் 1970-களில் நடந்தவை. 1986-ல் இந்த வீடு எனக்குத் தரப்பட்டது. 1995 முதல் அதில் நிரந்தரமாக நான் வாழத் தொடங்கினேன். பகவான் விஸ்வநாத ஸ்வாமியைக் கவனித்துக் கொண்டது போல, என்னையும் என் ஆன்மீக ஸாதனைகளையும் விஸ்வநாத ஸ்வாமி கவனித்துக் கொண்டார். அவர் பல ஸாதகர்களுக்கு உதவியது போன்று பகவானது அருள் பெற்ற மற்ற பக்தர்களும் கணக்கற்ற ஸாதகர்களுக்கு உதவி செய்துள்ளனர். இவ்வாறுதான் அழகான அருட்சங்கிலி நித்திய ஸத்யமான பகவானுடன் நம்மை இணைக்கிறது.

விஸ்வநாத ஸ்வாமி எளிமையைக் குறிக்கும் ஒரு அடையாளமாக இருந்தார். அதனால்தான் அவரை 'எளிமையான மாமனிதர்' என்று நான் குறிப்பிடுகிறேன். என்னுடைய இளவயதில் மனநிலை பாதிக்கப்பட்டவர்களோ புத்தி சுவாதீனமில்லாதவர்களோ ஆச்ரமத்திற்கு வருவதுண்டு. அவர்களிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்பது எனக்குத் தெரியாது. விஸ்வநாத ஸ்வாமி அவர்களைக் கவனித்துக் கொள்ளத் தானாகவே முன் வருவார். பலமுறை மலைக்கோ மலையைச் சுற்றியோ அல்லது கோயிலுக்கோ அவர்களைத் தனியாகவே அழைத்துச் சென்று மென்மையாகப் பேசி அவர்களுக்குப் பிரச்சனைகளேயில்லாதபடி செய்து விடுவார். ஸத்தியத்தின் இயல்பை அவர் முழுமையாக போதித்தார். உபதேசம் பெற்றவர்கள் மனம், உடம்பு இவற்றின் குறைகளை உணர்ந்து கொண்டு அவற்றைக் கடக்குமாறு செய்து விடுவார்.

நான் அப்போது `பைபிள்` படித்துக்கொண்டிருந்த காலம். அதைப் பற்றி ஒரு நண்பரிடம் பேசிக் கொண்டிருந்தேன். அதில் `மோசஸ்` தனது கம்பினால் ஒரு பாறையைத் தொட்டபோது அதன் நடுவிலிருந்து தண்ணீர் வந்ததாகக் கூறப்பட்டிருந்தது. அந்தக் கதையை நான் *ரசிக்கவில்லை*. "மோசஸ் தரையைத் தொட்டார்; தண்ணீர் பீறிட்டு வந்தது என்றாவது எழுதியிருக்கலாம். பாறையிலிருந்து எப்படித் தண்ணீர் வரும்?" என்று நான் கேட்ட அந்தக் கணமே என் கையை இன்னொரு கை பற்றியது. அது விஸ்வநாத ஸ்வாமியின் கரம். என்னை நேராக 'ஸ்கந்தாச்ரமம்' அழைத்துச் சென்று அங்கு இரண்டு பாறைகளுக்கு நடுவே கையை வைத்துப் பார்க்கச் சொன்னார். அங்கு இயற்கையான ஒரு ஊற்றிலிருந்து தண்ணீர் வருவதை உணர்ந்தேன். "பகவான் என்னை அழைத்து வந்து என் கையைப் பாறைக்கடியில் வைத்து தண்ணீர் வருவதைக் காட்டினார். பகவான் இந்தப் பாறையைத் தொட்டதால் அதிலிருந்து வற்றாமல் தண்ணீர் வந்து கொண்டிருக்கிறது. ஒரு ஞானியினுடைய சொற்களையோ செயல்களையோ ஒரு போதும் சந்தேகிக்காதே. பாறையிலிருந்து தண்ணீரை வரவழைக்கக் கூடிய சக்தியை பகவானருளால் மோசஸ் பெற்றிருக்கலாம் அல்லவா? நீ எப்படி சந்தேகிக்க முடியும்? கணேசன்! ஜாக்கிரதையாக இரு!" என்று அவர் கூறினார். அவரது சொற்கள் என்னுடைய ஆன்மீக எண்ணங்களைத் திருத்தி அமைத்தன. ஏனெனில் என்னை மனதிலிருந்து அவர் மீண்டும் இதயத்திற்குக் கூட்டி வந்து விட்டார். மனத்திடம் சென்றால் புத்தி ஆராய்ந்து பார்த்து பாறையிலிருந்து எப்படித் தண்ணீர் வரும்? என்று தோன்றி சந்தேகம் தீரவே தீராது. இப்போதும் கூட ஸ்கந்தாச்ரமத்திற்குச் சென்றால், தற்போது மறைவாக இருந்தாலும் கூட நம் கையைப் பாறைக்கடியில் வைத்தால் பாறையிலிருந்துதான் தண்ணீர் ஊற்று வருகிறது; தரையிலிருந்து அன்று என்பதை உணரலாம். அது மட்டுமன்றி அந்தப் பாறைக்கடியில் தட்டையான வேறு ஒரு பாறை உள்ளது.

ஆர்தர் ஆஸ்போர்ன் ஆறு ஆண்டுகளாக `தி மவுண்டன் பாத்` (The Mountain Path) என்ற பத்திரிகையைத் தன்னந்தனியாகவே நடத்தி வந்தார். நான் அதன் நிர்வாக ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். 1970-ல் ஆஸ்போர்ன் திடீரென்று காலமானார். எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. உடனே அவரது மனைவி தானாக முன் வந்து "கணேசா! கவலைப் படாதே! நான் அதைக் கவனித்துக் கொள்கிறேன்." என்று கூறினார். இரண்டு ஆண்டுகளுக்கு அந்தப் பொறுப்பை அவர் ஏற்றுக் கொண்டார். ஆனால் உடல் நலக்குறைவாலும் மற்ற பிரச்சனைகளாலும், அந்தப் பொறுப்பை ஏற்கத் தகுதி வாய்ந்த வேறு யாராவது ஒருவரைத் தேர்ந்தெடுக்குமாறு என்னை மிகவும் கேட்டுக் கொண்டார். முழுமையாக சரி பார்க்கப்படாத கட்டுரைகளைக் கட்டுக்கட்டாக எனது மேஜையில் கொண்டு வைத்தார். எனக்குத் தலைகால் புரியவில்லை. மறுதினம் விஸ்வநாத ஸ்வாமி எனது அலுவலகத்திற்குள் வந்து என்னை அழைத்தார். அவர் அதிகம் பேசவில்லை. என்னை ஆச்ரமத்திற்குப் பின்னாலிருந்த காட்டிற்குள் அழைத்துச் சென்று மீண்டும் திரும்பி அழைத்து வந்து அவருடைய அறைக்குக் கூட்டிச் சென்றார். என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே "உனக்கு உதவி செய்யுமாறு பகவான் எனக்கு உத்தரவு பிறப்பித்துள்ளது போன்று எனக்குத் தோன்றுகிறது. நான் பத்திரிகைப் பதிப்பாசிரியராகப் பொறுப்பேற்றுக் கொள்கிறேன். கணேசா! உண்மையைக் கூறப் போனால் பத்திரிகைப் பதிப்பு என்ற நுண்ணிய கலை எனக்குத் தெரியாது. ஆனால் அதைப் பற்றி நீ கவலைப் பட வேண்டாம். நான் அதைக் கற்றுக் கொண்டு விடுவேன். சிறந்த பத்திரிகையாளரான பேராசிரியர் ஸ்வாமிநாதனுக்கு சரி பார்க்கப்படாத எல்லா கட்டுரைகளையும் அனுப்பி வை. அவர் சிவப்பு மையால் அவற்றைத் திருத்தங்கள் செய்து தருவார் திருத்தப்பட்ட கட்டுரைகள் வந்தபின்னர் படித்துப் பார்த்து

அவற்றிலிருந்து நான் திருத்தக் கற்றுக் கொண்டு விடுவேன்.'' என்றார். தன்னையறிந்து கொண்டவராதலால் சிறிதும் கால தாமதமின்றி மிக எளிதாக அக்கலையை அவர் கற்றுக் கொண்டு விட்டார். சிறந்த ஒரு பத்திரிகையின் ஆசிரியரான பேராசிரியர் ஸ்வாமிநாதன் ''விஸ்வநாத ஸ்வாமி தனது பதிப்பாசிரியர் பணியை மெச்சத் தகுந்த வகையில் செய்து வருகிறார்.'' என்று குறிப்பிட்டுள்ளார்.

சிறு வயதிலேயே நிரந்தரமாக ஆச்ரமத்திற்கு வந்ததால் பகவானது பழைய பக்தர்களிடம் நெருக்கமான தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவர்கள் அருகாமையில் இருந்தபடியால் நான் எவ்வாறு ஆன்மீக நலனைப் பெற்றேன் என்பது புரியாத போதும் எல்லா விதத்திலும் என்னால் பக்குவம் அடைய முடிந்தது. அவர்களுக்குப் பணிவிடை செய்வதன் மூலமே ஞானமாகிய சொத்தை நான் மிக எளிதாகப் பெற்றேன். 'சாஸ்திரங்களைப் படிப்பதாலோ மற்ற ஒழுக்கங்களாலோ பெற முடியாத ஆன்மீக நலன்களை மஹாத்மாக்களுக்கு சேவை செய்வதால் மட்டுமே அடைய முடியும் என்ற சாஸ்திரங்களின் கூற்று எத்துணை உண்மையானது?' அதை விட நான் பெற்ற பெரும் பேறு என்னவென்றால் அவர்கள் அருகாமையில் இருந்ததால் பழைய நினைவுகளை எழுதும்படி அவர்களைத் தூண்டுவதற்கான ஒரு வாய்ப்புக் கிட்டியது. ஆனால் விஸ்வநாத ஸ்வாமியை இசைய வைக்க முடியவில்லையென்றபோதும் பகவானுடைய 'Talks with Sri Ramana Maharshi' என்ற நூலைத் தமிழில் 'வசனாம்ருதம்' என்ற பெயரில் மொழிபெயர்த்துத் தர ஒப்புக் கொண்டார். எனக்கு அது மிகுந்த திருப்தியைத் தந்தது. நான் என் கோரிக்கையை அவரிடம் அழுத்தமாக முன் வைத்த காரணம் என்னவென்றால் பகவான் தன்னால் தேர்ந்தெடுக்கப்பட்டப் பல ஸம்ஸ்க்ருத நூல்களைத் தமிழாக்கம் செய்யுமாறு விஸ்வநாத ஸ்வாமியிடம் ஏற்கனவே கூறியிருக்கிறார் என்பது தான். இவ்வாறுதான் 'பகவத் வசனாம்ருதம்' என்ற நூலின் முதற்பகுதி 1970-ல் வெளியிடப்பட்டது. அது உடனேயே பயனளித்தது. சிறிது காலத்திற்குப் பின் அதன் விரிவான பதிப்பும் வெளியிடப்பட்டது. இந்த நூலின் முக்கியத்துவம் என்னவென்றால் ஸம்பாஷணைகள் நடந்தபோது விஸ்வநாத ஸ்வாமியும் உடனிருந்ததால் பகவான் உபயோகித்த தமிழ் வார்த்தைகளையே அவரும் தனது மொழிபெயர்ப்பில் அநேகமாக உபயோகித்துள்ளார்.

1980-ல் கொண்டாடப்பட இருந்த பகவானின் 'ஜன்மதின நூற்றாண்டு நிறைவு விழாவில்' அவருடைய நேரடி உபதேசங்களை மட்டுமே எடுத்துக் கூறும் பத்திரிகையாக வெளியிட வேண்டும் என்று 1979-ல் நானும் விஸ்வநாத ஸ்வாமியும் திட்டமிட்டோம். துரதிருஷ்டவசமாக விஸ்வநாத ஸ்வாமி கடும் வெயிலினால் பாதிக்கப்பட்டார். அவர் எனது அலுவலகத்திற்கு வந்து ''எனக்கு உடல் நலமில்லை. என்னுடன் அறைக்கு வா,'' என்று கூறிய போது நானும் அவருடன் அங்கு சென்றேன். அங்கு அவர் நடந்து கொண்ட விதம் கவலை தருமளவிற்கு அசாதாரணமாக இருந்தது. சாவியால் முடுக்கி விடப்பட்ட பொம்மையைப்போன்று அமைதியின்றி எழுந்து நிற்பதும் உட்காருவதுமாக இருந்தார். என்ன செய்வதென்றே விளங்காமல் நான் கவலைக்கும் அதிர்ச்சிக்கும் உள்ளானேன். ''என் உடம்பின் மீது கவனம் செலுத்தாதே. நான் உள்ளே ஆனந்த நிலையில் இருக்கிறேன். எனது அந்த நிலையைக் கவனி.'' என்று எனக்கு உபதேசித்துப் பின் ''என் சகோதரருக்கு ஒரு தந்தி அனுப்பி வை. நீ நீண்ட நாட்கள் எனக்குத் தொண்டு செய்யும் விதமாக நான் உன்னைத் தொந்தரவு செய்யமாட்டேன். இன்றிலிருந்து இரண்டாவது நாள் என் உடம்பை நான் விட்டு விடுவேன். எளிய முறையில் என்னை அடக்கம் செய்து விடு. எவ்விதச் சடங்குகளும் தேவையில்லை. மாலை நான்கு மணிக்கு இங்கு வா. உனக்கு ஒரு செய்தி கூற வேண்டும்.'' என்றார் விஸ்வநாத ஸ்வாமி. நானும் குறிப்பிட்ட நேரத்திற்கு அவரிடம் சென்றேன்

வெளித் தோற்றத்தில் உட்காருவதும் எழுந்திருப்பதுமாக அமைதியற்றவர் போன்று தோன்றிய விஸ்வநாத ஸ்வாமி மீண்டும் "என் உடம்பில் கவனம் செலுத்தாதே. நான் சொல்வதைக் கவனமாகக் கேள்!" என்று கூறி, இன்றும்கூட மிகவும் சக்தியோடு என்னை வழிநடத்தும் ஒரு செய்தியை உரைத்தார். "என் உடம்பு பாதிக்கப்பட்டுள்ளது. ஒரு வேளை மனமும் பாதிக்கப்பட்டிருக்கலாம். ஆனால் ஆத்மா - இதயம் பாதிக்கப்படவில்லை. அதுதான் என் மூலம் பேசிக் கொண்டிருக்கிறது. இவ்வுலகில் எத்தனையோ குழப்பங்களும், வன்முறைகளும், துன்பங்களும் காணப்பட்டாலும் அவையனைத்தும் மனதின் எல்லைக்குட்பட்டவை. அதாவது அஞ்ஞான நிலையிலுள்ள மனம் - காண்பவனாகவும் காணப்படும் பொருளாகவும் பிரிந்து இரண்டாக நிற்பதே இதற்குக் காரணம். வாழ்க்கையில் அனுபவங்கள் அனைத்தும் எவ்வித உண்மையான இருப்புமின்றி நிழல் போன்றிருக்கும் அனுபவிப்பவனைப் பொறுத்ததே. ஒரு மனிதனுள் உண்மையாக இருப்பது காண்பவன், காணப்படும் பொருள் என்று எப்போதுமே பிளவுபடாத 'நான் இருக்கிறேன்' என்ற தூய உணர்வு மட்டுமே. அது ஒன்றே முக்கியமானது. அகங்காரத்தையும் அதற்கேற்படும் அனுபவங்களையும் நிழலாட்டம் என்று ஒதுக்கினால் இறுதியில் என்றுமுள்ள மெய்ப்பொருள் மட்டும் தானாகவே விளங்கும். இந்த உண்மையை ஒருவர் புத்திபூர்வமாக முழுமையாக ஏற்றுக் கொண்டால் கூட அவர் பற்றின்மையையும் மன அமைதியையும் பெறுவார். இடையிடையே நாம் தனித்து நின்று ஒன்றேயானதும், நித்தியமானதும், சிதைக்க முடியாததும் மாசற்றதுமான 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வைக் கவனித்து அனுபவிக்க வேண்டும். பலதரப்பட்ட படைப்புகள் தரும் அனுபவங்கள் அனைத்தையும் விட 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வே கவனிக்கப்பட வேண்டியது. நமது இருப்பின் தன்மையான உண்மையை உறுதி செய்யும் சின்னங்களாக விளங்குபவர்கள் புத்தர், இயேசுநாதர், ஆதிசங்கரர், பகவான் ரமணர் முதலியோர். இந்த ஞான தீபங்களைச் சிந்தித்தாலே இந்த உண்மை நமக்கு விளங்கும் என்பதோடு மனதால் புரிந்து கொள்ள முடியாத பரம்மசாந்தியும் வந்தமையும். எல்லைக்குட்பட்ட மனதையும், 'நான்' என்ற அகங்காரத்தையும் விலக்கி என்றுமுள்ள



விஸ்வநாத ஸ்வாமி ஆச்ரமத்திலேயே தங்கி, ஸ்ரீ பகவானின் நேரடி உபதேசங்களால் ஆன்மீக சாதகர்களுக்கு வழிகாட்டினார்

எல்லையற்ற 'நான் இருக்கிறேன்' என்ற மெய்ப் பொருளில் இரண்டறக் கலக்க வேண்டும் கணேசா! உனக்கு என் ஆசிகள்," என விஸ்வநாத ஸ்வாமி கூறி முடித்தார்.

ஸ்ரீ பகவானின் அளவிடற்கரிய கருணையால் அருணாசலத்தை வந்தடைந்தவரும் அவரால் ஆசீர்வதிக்கப்பட்டவருமான விஸ்வநாத ஸ்வாமியை ஸாஷ்டாங்கமாக வணங்கினேன். பகவானது ஸாந்நித்தியமென்னும் இதமான ஞான ஒளியை அனுபவித்ததுடன் 'நான் இருக்கிறேன்' என்ற ஆத்ம ஞானத்தையும் பெற்றவர் அவர். ஆர்வமுள்ள ஸாதகர்கள், ஆத்ம விசாரத்தின் முலம் அந்த ஞானத்தைப் பெற வழிகாட்டவும் செய்தார். சில புத்தகங்களைப் படித்து அவற்றில் கூறப்பட்ட கருத்துக்களைப் புத்தி பூர்வமாகப் புரிந்துகொண்டால் மட்டும் போதாது என்பதை நான் அவரிடமிருந்து கற்றுக்கொண்டேன். அவை கூறும் அறிவுரைகள் வாழ்வில் சுயமாக அனுபவிக்க வேண்டிய ஆழ்ந்த மன அமைதியும் ஆனந்தமுமென அறிந்து, அவற்றை அனுபவித்தலும் அவசியம் என உணர்ந்தேன்.

பகவானைப் போற்றி வணங்கும் 'ஸ்ரீ ரமண அஷ்டோத்திரத்தை' சிந்தித்து அதை இயற்றிய விஸ்வநாத ஸ்வாமிக்கு நம் மரியாதையைச் செலுத்துவோம்.

॥ ஸ்ரீரமணாஷ்டோத்தரஶதநாமாவளீ ॥

ஓம் மஹாஸேநமஹோம்ஶேநஜாதாய நம: ।
ஓம் ஸ்ரீரமணாய நம: ।
ஓம் கு3ரவே நம: ।
ஓம் அக2ண்ட3ஸம்விதா3காராய நம: ।
ஓம் மஹௌஜஸே நம: ।
ஓம் காரணோத்3ப4வாய நம: ।
ஓம் ஜக3த்3தி4தாவதாராய நம: ।
ஓம் ஸ்ரீ பூ4மிநாத2ஸ்த2லோத்தி2தாய நம: ।
ஓம் பராஶரகுலோத்தம்ஸாய நம: ।
ஓம் ஸுந்த3ரார்யதப:ப2லாய நம: । 10 ।

ஓம் கமநீயஸுசாரித்ராய நம: ।
ஓம் ஸஹாயாம்பா3ஸஹாயவதே நம: ।
ஓம் ஶோணாசலமஹோலீநமாநஸாய நம: ।
ஓம் ஸ்வர்ணஹஸ்தகாய நம: ।
ஓம் ஸ்ரீமத்3த்3வாத3ஶாந்தமஹாஸ்த2லே லப்3த4வித்3யோத3யாய நம: ।
ஓம் மஹாஶக்திநிபாதேநப்ரபு3த்3தா4ய நம: ।
ஓம் பரமார்த2விதே3 நம: ।
ஓம் தீவ்ராய நம: ।
ஓம் பித்ருபதா3ந்வேஷிணே நம: ।
ஓம் இந்து3மௌலிநாபித்ருமதே நம: । 20 ।

ஓம் பிதுராதே3ஶத ஶோணஶைலம்ப்ராப்தாய நம ।
ஓம் தபோமயாய நம ।
ஓம் உதா3ஸீநாய நம ।

ஓம் மஹாயோகி3நே நம: ।

ஓம் மஹோத்ஸாஹாய நம: ।

ஓம் குஶாக்3ரதி4யே நம: ।

ஓம் ஶாந்தஸங்கல்பஸம்ரம்பா4ய நம: ।

ஓம் ஸுஸந்த்3ருஶே நம: ।

ஓம் ஸவித்ரே நம: ।

ஓம் ஸ்தி2ராய நம: । 30 ।

ஓம் தப:க்ஷபிதஸர்வாங்கா3ய நம: ।

ஓம் பு2ல்லாம்பு3ஜவிலோசநாய நம: ।

ஓம் சந்த்3ரிகாஸிதஹாஸஶ்ரீமண்டி3தாநந மண்ட3லாய நம: ।

ஓம் சூதவாட்யாம்ஸமாஸீநாய நம: ।

ஓம் சூர்ணிதாகி2லவிப்4ரமாய நம: ।

ஓம் வேத3வேதா3ந்ததத்த்வஜ்ஞாய நம: ।

ஓம் சிந்முத்3ரிணே நம: ।

ஓம் த்ரிகு3ணாதிகா3ய நம: ।

ஓம் விரூபாக்ஷகு3ஹாவாஸாய நம: ।

ஓம் விராஜத3சலாக்ருதயே நம: । 40 ।

ஓம் உத்3தீ3ப்தநயநாய நம: ।

ஓம் பூர்ணாய நம: ।

ஓம் ரசிதாசலதாண்ட3வாய நம: ।

ஓம் க3ம்பீ4ராய நம: ।

ஓம் பரமாசார்யாய நம: ।

ஓம் ஸுப்ரஸந்நாய நம: ।

ஓம் அப4யப்ரதா3ய நம: ।

ஓம் த3க்ஷிணாஸ்யநிபா4ய நம: ।

ஓம் தீ4ராய நம: ।

ஓம் த3க்ஷிணாபி4முகா2ய நம: । 50 ।

ஓம் ஸ்வராஜே நம: ।

ஓம் மஹர்ஷயே நம: ।

ஓம் ப4க3வதே நம: ।

ஓம் ஈட்3யாய நம: ।

ஓம் பூ4மவித்3யாவிஶாரதா3ய நம: ।

ஓம் விமலாய நம: ।

ஓம் தீ3ர்க4த3ர்ஶிநே நம: ।

ஓம் ஆப்தாய நம: ।

ஓம் ருஜுமார்க3ப்ரத3ர்ஶகாய நம: ।

ஓம் ஸமத்3ருஶே நம: । 60 ।

ஓம் ஸத்யத்3ருஶே நம: ।

ஓம் ஸத்யாய நம: ।

ஓம் ப்ரஶாந்தாய நம: ।

ஓம் அமிதவிக்ரமாய நம: ।

ஓம் ஸுகுமாராய நம: ।
ஓம் ஸதா3நந்தா3ய நம: ।
ஓம் ம்ரு'து3பா4ஷிணே நம: ।
ஓம் த3யார்ணவாய நம: ।
ஓம் ஶ்ரீஶோணாசலஹ்ரு'த்3பூ4தஸ்கந்தா3ஶ்ரம நிகேதநாய நம: ।
ஓம் ஸத்3த3ர்ஶநோபதே3ஷ்ட்ரே நம: । 70 ।

ஓம் ஸத்3ப4க்தவ்ரு'ந்த3பரீவ்ரு'தாய நம: ।
ஓம் க3ணேஶமுநிப்4ரு'ங்கே3நஸேவிதாங்க்4ரிஸரோருஹாய நம: ।
ஓம் கீ3தோபதே3ஶஸாராதி3க்3ரந்த2ஸஞ்சி2ந்நஸம்ஶயாய நம: ।
ஓம் வர்ணாஶ்ரமமதாதீதாய நம: ।
ஓம் ரஸஜ்ஞாய நம: ।
ஓம் ஸௌம்யாய நம: ।
ஓம் ஆத்மவதே நம: ।
ஓம் ஸர்வாவநிமதஸ்தா2நமாராத்4யாய நம: ।
ஓம் ஸர்வஸத்3கு3ணிநே நம: ।
ஓம் ஆத்மாராமாய நம: । 80 ।

ஓம் மஹாபா4கா3ய நம: ।
ஓம் மாத்ரு'முக்திவிதா4யகாய நம: ।
ஓம் விநதாய நம: ।
ஓம் விநுதாய நம: ।
ஓம் விப்ராய நம: ।
ஓம் முநீந்த்3ராய நம: ।
ஓம் பாவகோஜ்ஜ்வலாய நம: ।
ஓம் த3ர்ஶநாத3க4ஸம்ஹாரிணே நம: ।
ஓம் மௌநேந ஸ்வாத்மபோ3த4காய நம: ।
ஓம் ஹ்ரு'ச்சா2ந்திகரஸாந்நித்4யாய நம: । 90 ।

ஓம் ஸ்மரணாத்3ப3ந்த4மோசகாய நம: ।
ஓம் அந்தஸ்திமிரசண்டா3ம்ஶவே நம: ।
ஓம் ஸம்ஸாரார்ணவதாரகாய நம: ।
ஓம் ஶோணாத்3ரீஶஸ்துதித்3ரஷ்ட்ரே நம: ।
ஓம் ஹார்த3வித்3யாப்ரகாஶகாய நம: ।
ஓம் அவிச்யுதநிஜப்ரஜ்ஞாய நம: ।
ஓம் நைஸர்கி3கமஹாதபஸே நம: ।
ஓம் கமண்ட3லுத4ராய நம: ।
ஓம் ஶூப்4ரகௌபீநவஸநாய நம: ।
ஓம் கு3ஹாய நம: । 100 ।

ஓம் த3ண்ட3பாணயே நம: ।
ஓம் க்ரு'பாபூர்ணாய நம: ।
ஓம் ப4வரோக3பி4ஷக்3வராய நம: ।
ஓம் ஸ்கந்தா3ய நம: ।

ஓம் தே³வதமாய நம: ।
ஓம் அமர்த்யாய நம: ।
ஓம் ஸேநாந்யே நம: ।
ஓம் புருஷோத்தமாய நம: । 108 ।

இதி ஶ்ரீவிஶ்வநாத²ஸ்வாமீரசிதம்
ஶ்ரீரமணாஷ்டோத்தரஶதநாமாவளீ ஸமாப்தா ।

வெளிப்படையாகப் பார்த்தால் பகவானைப் போற்றுவதற்காக இவை அமைந்துள்ளன என்றாலும் அவற்றின் உட்கருத்து இதயத்தில் 'நான் இருக்கிறேன்' என்பதை அறிந்து கொள்ளும் பாதையில் செல்ல வேண்டும் என்பது தான். 'இந்த 108 ஸ்துதிகளையும் வைத்து சரித்திரத்தையே எழுதி விடலாம்'' என்று பகவானே கூறியுள்ளார்.

விஸ்வநாத ஸ்வாமி தான் குறிப்பிட்டபடியே இரண்டாவது நாள் முழு உணர்வோடு அமைதியாக உடலை நீத்தார். ஆச்ரமத்தினுள் அருணாசலத்தினருகில் அமைந்துள்ள இவரது ஸமாதி அவர் வாழ்ந்து கொண்டிருக்கும் போது வெளிப்படுத்திய அதே பேரமைதியை இன்றும் பரப்புகிறது.



# 31 அண்ணாமலை ஸ்வாமி



அக்னி என்பது சிறப்பான ஒரு அடையாளம். இதன் தன்மை இருவிதமாக உள்ளது. ஒன்று சூடு. இதனால் அழிக்க முடியும். மற்றொன்று ஒளி. இதன் பிரகாசத்தால் விளக்கிக் காட்ட முடியும். பகவானோ ஞானாக்னி; ஞான அக்னியான அவர், நமது விதியை அடியோடு நாசம் செய்வதுடன், நம் ஒவ்வொருவரிடமும் ஏற்கனவே அமைந்துள்ள ஞான ஒளியை வெளிப்படுத்துகிறார். இந்த இரண்டு தன்மைகளை உடைய பகவானின் அருளை செல்லப்பெருமாள் என்ற குறிப்பிடத்தக்க இந்த பக்தரின் வாழ்க்கையில் நாம் தெள்ளத் தெளிவாகக் காணலாம்.

அவர் பிறந்த போது அவரது தந்தை அவரது ஜாதகத்தைக் கணித்தார். அதில் செல்லப்பெருமாள் குடும்ப வாழ்க்கையில் ஈடுபட மாட்டார் என்றும் துறவு மேற்கொள்வார் என்பதாகவும் குறிப்பிடப்பட்டிருந்தது. இதைத் தடுக்க வேண்டும் என்று அவருடைய தந்தை விரும்பினார். அதனால் செல்லப்பெருமாளைப் பள்ளிக்கு அவர் அனுப்பவில்லை. எழுத்தறிவிருந்தால் ஏதாவது ஆன்மீக நூலைப் படிக்க நேரிட்டு அதன் விளைவாக துறவு மேற்கொண்டு விடுவாரென்ற பயம். அவர் எதையும் படித்துவிடக் கூடாது என்ற ஒரே குறிக்கோளுடன் விவசாயியான தந்தை தனது மகனை வயலுக்கு அழைத்துச் சென்று தன்னுடனேயே வைத்துக் கொண்டிருந்தார். ஆனால் செல்லப்பெருமாளுக்குப் படிப்பில் ஆர்வம் மிகவும் அதிகமாக இருந்ததால் மெதுவாக சொற்களை எழுத்துக் கூட்டிப் படிக்கத் தானாகவே கற்றுக் கொண்டார். தோல்வியினால் தளர்ந்து போகாமல் விடாமுயற்சியுடன் செயல்படும் தன்மை அவரிடம் இறுதி வரையிலிருந்தது.

ஒரு நாள் தந்தையோடு சென்று கொண்டிருந்த போது வழியில் காவியணிந்த சில ஸாதுக்களைக் கண்டார். அவர்களால் மிகவும் வசீகரிக்கப்பட்டதால் இரகசியமாக அவர்களில் ஒருவரிடம் சென்று ஆன்மீக நூல்களைக் கற்கத் துவங்கினார். அத்துடன் அருகிலிருந்த கிராமம் ஒன்றிலிருந்த ஒரு பெண்மணியின் பக்தி அவரை ஈர்த்தது. இந்தப் பெண்மணி அவரைத் தன் இல்லத்திற்கு அழைத்துச் சென்று அத்வைத நூலான 'கைவல்ய நவநீதம்' போன்ற தமிழ்ப் புத்தகங்களை அவருக்கு அளித்தார். அவரால் படிக்க இயலாதபடியால் செல்லப்பெருமாளிடம் அவற்றைப் படித்து விளக்குமாறு கேட்டுக் கொண்டார். வேதாந்தம் பற்றிய முன் அறிவு செல்லப்பெருமாளுக்கு இல்லாதிருந்த போதும் புத்தகங்களைப் படிக்க ஆரம்பித்த போது அவர் உள்ளிருந்த ஏதோ ஒரு சக்தி அதைப் புரிந்து கொள்ளச் செய்து அவருக்குத் தெரிந்த விதத்தில் குழந்தைத்தனமாக விளக்க வைத்தது.

பின்னர், தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் தந்தைக்குத் தெரியாமல் வீட்டை விட்டு ஓடிப்போய் அந்தப் பெண்மணியின் வீட்டிற்குச் சென்று, ஏதாவது ஒரு ஆன்மீக புத்தகத்தைப் படித்து அதை விளக்குவார். அவருடைய இந்த ஆன்மீக விளக்கங்கள் அந்தப் பெண்மணியின் அண்டை வீட்டாரையும் ஈர்க்கத் துவங்கியது. ஒரு சில மாதங்களுக்குள் இவருடைய விளக்கங்கள் எல்லோராலும் விரும்பப்பட்டதால் அவரைத் தன்னுடனேயே தங்கும்படியாக அந்தப் பெண்மணி அழைத்தார். அடுத்த ஆறு ஆண்டுகள் தந்தையை பிரிந்து இருந்த செல்லப் பெருமாளுக்கு, அதுவே பொற்காலமாக அமைந்தது. அவர் விபூதி, ருத்ராக்ஷம் இவற்றை அணிந்து தெய்வத்

திருஉருவங்களை வணங்கி பாரம்பரியமான சமய ஸாதனைகளை மிகவும் கவனத்தோடு பழகினார். ஒருநாள் அவர் ஆன்மீக விளக்கங்கள் கொடுத்துக் கொண்டிருந்த போது, யாருக்கும் தெரியாமல், அவருடைய தந்தை உள்ளே வந்தார். தன் மகனுடைய ஆன்மீக முன்னேற்றத்தைக் கண்டு மிகவும் ஆச்சரியமடைந்த போதிலும் அவரை அதில் ஊக்குவிக்கவில்லை.

இருந்த போதிலும் செல்லப்பெருமாள் துறவு மேற்கொள்வது என்ற தீர்மானத்திற்கு வந்திருந்தார். இளைஞராக இருந்த போதும் ஸந்நியாசம் ஏற்றார். பாரம்பரிய முறையில் ஸந்நியாச தீக்ஷை பெற வழி தென்படாததால் தனக்குத் தானே தீக்ஷை அளித்துக் கொண்டார். கிராமத்திற்குத் திரும்பி வந்தபோது, அவரது பெருமையை உணர்ந்த சில கிராமவாசிகள் அவருக்கு உதவி செய்ய முன் வந்தனர். சமீபத்தில் வாழ்ந்த இராமலிங்க ஸ்வாமிகள் என்ற புகழ் பெற்ற மஹான் ‘மனிதகுலத்திற்குச் சேவை செய்ய வேண்டும்’ என்று கூறியபடி கோடை காலங்களில் யாத்ரிகர்களுக்கு குளிர்ந்த மண்பானை நீரை அவர் அளிக்க ஆரம்பித்தார். கிராம மக்களின் உதவியோடு கட்டப்பட்ட சிறிய குடிசையில் இருந்து கொண்டு, ஏழைகளுக்குக் கஞ்சி ஊற்றவும் துவங்கினார். பிறருக்கு உதவுவதில் மனம் ஈடுபட்டிருந்த போதும் சமயஸாதனைகளை விடாமல் செய்து வந்தார். ஒரு நாள் காஞ்சி மடத்திலிருந்து சங்கராச்சாரியர் பக்கத்து கிராமத்திற்கு வருவதாகக் கேள்விப்பட்டார். செல்லப்பெருமாள் அவரை சந்திக்க முயற்சி செய்தபோது ‘அடுத்த கிராமத்திற்கு வா. அங்கு உன்னைச் சந்திக்கிறேன்’ என்று அவர் கூறிவிட்டார். அவர் கூறியபடி பக்கத்து கிராமத்திற்குச் சென்று ஆன்மீகத்தில் வழி நடத்த வேண்டும் என்று அவரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். சங்கராச்சாரியர், அவருக்கு ‘சிவாய நம:’ என்ற மந்திரத்தை அளித்து அதை ஒரு லட்சம் முறை ஜபம் செய்யும் படி கூறினார்.

இதைத் தொடர்ந்து ஒரு பரிவ்ராஜக ஸந்நியாசி — ரமண பகவானுடைய உபதேசங்களைத் தமிழில் கூறும் 30 பாடல்கள் அடங்கிய ‘உபதேச உந்தியார்’ என்ற புத்தகத்தை அவருக்குக் கொடுத்தார். இப்புத்தகத்திலிருந்த பகவானது படத்தைக் கண்டதும் அவரே தனது குரு என்று செல்லப்பெருமாள் உறுதியாக உணர்ந்தார். அவருக்கு ரமண மஹர்ஷியைப் பற்றி எதுவும் தெரியாது. அத்துடன் ‘உபதேச உந்தியாரையும்’ புரிந்து கொள்ள முடியவில்லை; ஆனாலும் பகவானே தனது குரு என்பதை உணர்ந்தார். அதனால் கிராமத்தில் எல்லோரிடமும் “என் குருவை நான் கண்டுபிடித்து விட்டேன். அவர் திருவண்ணாமலையில் இருக்கிறார். நான் அவரிடம் செல்ல வேண்டும்,” என்று பார்ப்பவர்களிடமெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார். துறவியானதால் அவரிடம் பணமேதும் இல்லை என்பதை அறிந்த கிராமத்து மக்கள் திருவண்ணாமலைக்குச் செல்வதற்குப் பணஉதவி செய்தனர். கிளம்புவதற்குச் சற்று முன்னால் அருகிலுள்ள ஒரு கிராமத்திற்குக் காஞ்சி சங்கராச்சாரியர் மீண்டும் வருவதாகக் கேள்விப்பட்டார். இதற்குள், இதே சங்கராச்சாரியர் தான் பால் ப்ரண்டனை ரமண மஹர்ஷியிடம் அனுப்பினார் என்ற தகவல் செல்லப்பெருமாளுக்குத் தெரிய வந்தது. அவர் சங்கராச்சாரியரிடம் சென்று வணங்கி “நான் ரமண மஹர்ஷியிடம் போகிறேன். என்னை ஆசீர்வதியுங்கள்,” என்று கூறினார். அவர் அபிஷேக விபூதியையும், பதினொன்று வெள்ளி நாணயங்களையும் கொடுத்து “நீ ஒரு நல்ல காரியத்திற்காகப் போகிறாய். சென்று வா,” என்று ஆசீர்வதித்து அனுப்பினார்.

இவ்வாறாக 1928-ல் தனது 21-வது வயதில் செல்லப்பெருமாள் திருவண்ணாமலைக்கு வந்து சேர்ந்தார். அவர் ரமணாச்ரமம் வரும் வழியில் ஒரு சிறிய மண்டபத்தைச் சுற்றி பெரிய கூட்டம் ஒன்று நிற்பதைக் கண்டார். இந்த கூட்டம் எதற்காக அங்கு சேர்ந்துள்ளது என்று ஒருவரிடம் கேட்டபோது

அவர் "மண்டபத்தினுள் ஸித்த புருஷரான சேஷாத்ரி ஸ்வாமிகள் இருக்கிறார். இந்தக் கூட்டம் ஸ்வாமிகள் வெளியே வந்து, தங்களை ஆசீர்வதிப்பதற்காகக் காத்து நிற்கிறது; நீயும் கூடப் போய் அவரைப் பார்த்து ஆசி பெறலாம்." என்று கூறினார். செல்லப்பெருமாள் கூட்டத்திற்கு இடையே எட்டிப் பார்த்த போது அங்கு நடுவில் கையில் ஒரு லட்டுவுடன் சேஷாத்ரி ஸ்வாமி நிற்பதைக் கண்டார். ஸ்வாமியிடம் பயபக்தியோடு கூடிய மரியாதை காரணமாக அவரை நெருங்குவதற்குக் கூட்டத்தினர் அஞ்சினர். சேஷாத்ரி ஸ்வாமியின் பெருமை குறித்து செல்லப்பெருமாளுக்கு எதுவும் தெரியாத காரணத்தினால் அவர் உள்ளே சென்று ஸாஷ்டாங்கமாக வணங்கினார். ஸ்வாமிகள் தன் கையிலிருந்த லட்டுவைத் தனது வாயருகே எடுத்துச் சென்று பின்னர் அதை கூட்டத்திற்குள் விட்டெறிந்தார். அவர்கள் அதைப் பிரசாதமாக எடுத்துக் கொண்டனர். பிறகு செல்லப்பெருமாளை நோக்கி "முட்டாள்! ஏன் அருணாசலத்திற்கு வந்திருக்கிறாய்? எதற்காகத் திருவண்ணாமலைக்கு வந்திருக்கிறாய்? இங்கு உனக்கு என்ன வேலை இருக்கிறது?" என்று திட்டினார். ஸ்வாமிகள் தன்மீது திடீரென்று பாய்ந்ததால் அவர் அதிர்ச்சியுற்று அவசரமாகப் பின்வாங்கினார். செல்லப்பெருமாளின் நல்லகாலம், கூட்டத்திற்கு வெளியில் நின்ற ஒரு ஸாது அவருக்குத் தைரியத்தைக் கொடுக்கும் வகையில் "சேஷாத்ரி ஸ்வாமி ஒரு ஸித்த புருஷர், இயேசுவதாலேயே ஒருவருக்கு அருள் புரிபவர். 'ஏ! முட்டாள் நீ எதற்கு அருணாசலத்திற்கு வந்தாய்?' என்று அவர் கேட்டால் நீ எத்தனை பெரிய மனிதன், நீ அருணாசலத்திற்கு வருவதற்குக் கொடுத்து வைத்திருக்கிறாய் என்றும் 'நீ எதற்காக இங்கு வந்திருக்கிறாய்' என்று கேட்டால், அதற்கு 'நீ வந்துள்ள உனது நோக்கம் நிறைவு பெறும்' என்பதாகவும் அர்த்தம்." என்றும் கூறினார். சேஷாத்ரி ஸ்வாமியின் வசைமொழிகளாக வந்த அருள் மொழிகளைக் கேட்டு உறுதியான மனத்தோடு செல்லப்பெருமாள் ரமணாச்ரமத்திற்கு வந்து சேர்ந்தார்.

அவர் ஆச்ரமத்திற்குள் நுழைந்தபோது பகவான் மலையிலிருந்து இறங்கி பழைய ஹாலுக்குச் செல்வதைக் கண்டார். கால்களைக் கழுவிய பின்னர் ஹாலினுள் நுழைந்தார். செல்லப்பெருமாள் மெய்சிலிர்த்துப் போனார். காரணம் அவர் தனது கிராமத்தை விட்டுக் கிளம்புமுன் இதே காட்சியைக் கனவில் கண்டிருந்தார். எளிமையான அந்த மனிதரை பகவான் ஆட்கொண்ட விதம்தான் எத்தனை அழகு! செல்லப்பெருமாள் ஹாலுக்குள் சென்றபோது தானும் பகவானும் தனித்து இருப்பதை உணர்ந்தார். பகவானுக்கு என்று தான் எடுத்து வந்திருந்த உலர்ந்த திராட்சைப் பொட்டலத்தை, உணர்ச்சிகள் பொங்கிவர கண்ணீருடன் பகவான் முன் வைத்து ஸாஷ்டாங்கமாக வணங்கினார். அவர் எழுந்த போது பகவான் அந்த திராட்சையை எடுத்து உண்பதைக் கண்டார். சிவபெருமானே



ஸ்ரீ பகவான் – கால்களைக் கழுவுதல்

தன்னுடைய காணிக்கையை ஏற்றுக் கொண்டு விட்டதாகச் செல்லப்பெருமாளுக்குத் தோன்றியது. அதன் பின்னர் 15 நிமிடங்களுக்கு பகவான் தன் அருட்பார்வையை செல்லப்பெருமாளின் மீது செலுத்த அவரது உடல் சிலிர்த்தது. பல வருஷங்களுக்குப் பின் அந்தச் சந்திப்பைக் குறித்து, அது எவ்வாறு இருந்தது என்று நான் கேட்ட போது "கடும் வெயிலின் தாக்கத்திற்குப்பின் குளிர்ந்த பொய்கையில் மூழ்கும் போது ஒருவர் உணரக்கூடிய அற்புதமான குளிர்ச்சிக்கு ஈடான ஒன்று என் உடல் முழுவதும் பரவியதை நான் உணர்ந்தேன்," என்றார் அவர். பகவானுடைய முதல் அருட்பார்வையின் அனுபவம், செல்லப்பெருமாள் பின்னர் ஆச்ரமத்தில் கடும்வெயிலில் செய்ய வேண்டியிருந்த வேலையோடு தொடர்புடையதாக இருந்தது. அதன் பின்னர் ஸர்வாதிகாரியான சின்னஸ்வாமியிடம் சென்று தனக்கென ஒரு வேலையைக் குறிப்பிட்டுக் கூற வேண்டும் என கேட்டுக் கொண்டார். செல்லப்பெருமாள் பகவானுக்கு உதவியாளராக இருக்கும் பொருட்டு ஹாலுக்குள் செல்லும்படிக் கூறி அனுப்பப்பட்டார். இவ்வாறு பகவானுடன் இருப்பதைத் தவிர அவருக்குத் தொண்டு செய்யக்கூடிய தனிப்பட்ட பேற்றையும் அவர் பெற்றார்.

பகவானே அவருக்கு 'அண்ணாமலை ஸ்வாமி' என்று பெயர் சூட்டியது முக்கியத்துவம் வாய்ந்தது. பகவானுடைய சகோதரரின் செல்லப் பெயர் 'பிச்சை' என்பது. அவர் துறவு ஏற்றபோது 'நிரஞ்ஜனானந்தர்' என்று பெயர் மாற்றப்பட்ட போதிலும் பகவான் அவரை 'பிச்சை' என்றே தொடர்ந்து அழைத்து வந்தார். விஸ்வநாத ஸ்வாமியை 'விஸ்வநாதா' என்றும் குஞ்சு ஸ்வாமியை 'குஞ்சு' என்றும் பகவான் அழைத்து வந்தார். அதுபோல் 'கேசவ ஸ்வாமி' என்ற பெயரோடு யாராவது வந்தால் அவரை அந்தப் பெயராலேயே அழைப்பதற்கு பகவான் தயங்க மாட்டார். ஆனால் அவர் செல்லப்பெருமாளுக்கு மட்டுமே 'அண்ணாமலை ஸ்வாமி' என்ற மறுபெயரைக் கொடுத்தார். இது எவ்வாறு நேர்ந்தது என்று நான் அவரிடமே கேட்டேன். அதற்கு அண்ணாமலை ஸ்வாமி இவ்வாறு கூறினார், "நான் பகவானிடம் வந்த மறுதினமே முன்பு தனக்கு ஸ்கந்தாச்ரமத்தில் உதவியாக இருந்த அண்ணாமலை ஸ்வாமி என்பவரை நினைவு படுத்தும் வகையில் நான் இருந்ததாக யதேச்சையாக பகவான் கூறினார். அந்த அண்ணாமலை ஸ்வாமி 1920-ல் காலமாகிவிட்டார். அவர் நினைவாக என்னை அந்தப் பெயரால் பகவான் அழைக்கத் துவங்கினார். இதைக் கேட்ட மற்ற பக்தர்களும் என்னை அண்ணாமலை ஸ்வாமி என்றே அழைத்தனர். சில தினங்களுக்குள் அந்தப் பெயரே எனக்கு நிலைத்து விட்டது," எனத் தெரிவித்தார். அண்ணாமலை ஸ்வாமியின் சரணாகதி முழுமையாக இருந்ததால் பகவானும் முழுமையான கவனத்தை அவர் மீது செலுத்தினார். ஒரு ஞானி கண்ணாடியைப் போன்றவர்; நீ எவ்வாறு அவரை அணுகுகிறாயோ அதற்கேற்றவாறே அவரது அணுகுமுறையும் அமையும். நீ முழுமையாக சரணடைந்தால் அவரது அனுக்கிரஹமும் பூரணமாக இருக்கும்.

ஒரு நாள் அண்ணாமலை ஸ்வாமி பகவானை அணுகி, தனக்கு உபதேசம் அளிக்குமாறு கேட்டுக் கொண்டார். "உள்ளே செல். ஆத்மாவை விடாது இரு. உடலோடும் மனதோடும் தன்னை ஒன்றுபடுத்திக் கொள்வதால் துன்பமே ஏற்படுகிறது. அமைதி, இருப்பு இவற்றின் பிறப்பிடமான இதயத்தில் ஆழ்ந்து மூழ்கு. இவ்வாறு உனது இருப்பிலேயே நிலையாக நில்." என்று பகவான் கூறினார். அண்ணாமலை ஸ்வாமிக்கு பகவான் அளித்த முதல் உபதேசத்தைக் கவனியுங்கள். அது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனென்றால் அவரே பிற்காலத்தில் "கணேசா! அந்தச் சமயத்தில் இந்த வார்த்தைகளுடைய முக்கியத்துவம் எனக்குத் தெரியாது. இந்த முதல் உபதேசத்தை அடிப்படையாகக் கொண்டே என்னுடைய வாழ்க்கை முழுவதும் அமைந்தது. இந்த உபதேசத்தின் முக்கியமான கருத்து எனக்குத் தெரியாது. கிரஹித்துக் கொள்ளவும் இல்லை. என்னுடைய

வாசனைகள் எழும்பியதால் ஆரம்ப கட்டத்தில் பகவானைச் சுற்றியிருந்தவர்கள் மீது என் கவனம் சென்றது. அவர்கள் எல்லாம் வம்பு பேசிக் கொண்டிருந்தது எனக்குப் பிடிக்கவில்லை. வாசனைகளுடைய. அதாவது. அடங்கிய நிலையிலுள்ள சுபாவங்களின் சக்தி எவ்வளவு என்பதைக் கவனியுங்கள்! பகவான் பெரிய மஹான்தான். அதில் சந்தேகமில்லை. ஆனால் அவரைச் சுற்றியுள்ளவர்கள் என்னுடைய கவனத்தைத் திருப்பிக் கொண்டேயிருக்கிறார்கள் என்பதால் நான் இங்கு தங்கப் போவதில்லை. பதிலாக வேறு எங்காவது சென்று என் ஆன்மீக ஸாதனைகளைச் செய்யலாம் என்ற தீர்மானத்திற்கு வந்தேன்." என்று அவர் கூறினார்.

பகவானிடம் கூடச் சொல்லாமல் ஆச்ரமத்தை விட்டு வெளியேறினார். இருபது மைல்கள் கடந்தபின் களைப்பும் பசியும் அவரை வாட்டியது. அவர் இருநூறு வீடுகளில் பிக்ஷையெடுத்தும் ஒரு பிடி அன்னம் கூட அவருக்குக் கிடைக்கவில்லை. யாரை அணுகுவது. எங்கே செல்வது என்று புரியாமல் திகைத்து நின்றபோது ஒருவர் வந்து "ஏய் நீ ஏன் துன்பப்படுகிறாய்? எங்கிருந்து



அண்ணாமலை ஸ்வாமி – இட து பக்க ஓரத்தில் மேஜர் சாட்விக் அருகில் அமர்ந்திருப்பவர்

வருகிறாய்?" என்று கேட்டார். 'திருவண்ணாமலையிலிருந்து' என்று அவர் பதில் கூறிய போது 'திருவண்ணாமலையில் எங்கிருந்து?' என்று மறுமொழி வந்தது. 'ரமணாச்ரமத்திலிருந்து' என்று அண்ணாமலை ஸ்வாமி கூறியபோது. அவரை நன்றாகத் திட்டி "ரமணாச்ரமத்திலிருந்து இங்கு வந்து திண்டாடிக் கொண்டிருக்கிறாயா? முட்டாள்! அங்கேயே திரும்பிச்செல்." என்று அந்த நபர் பதிலளித்தார்.

'முட்டாள் திரும்பிச் செல்' என்ற சொற்கள் காதில் விழுந்த உடனேயே பகவானிடம் மீண்டும் செல்வதென்று தீர்மானித்தார் அண்ணாமலை ஸ்வாமி. அடுத்த கணமே அனைத்தும் அற்புதமாக மாறி அமைந்தது. ஒரு ஹோட்டல்காரர் கூப்பிட்டு உணவு கொடுத்தார். பின் அண்ணாமலை ஸ்வாமி டிக்கெட் இல்லாமல் இரயில் ஏறி திருவண்ணாமலை வந்தார். டிக்கெட் பரிசோதகர் இவரைத் தவிர மற்ற எல்லோரிடமும் டிக்கெட் உள்ளதா என்று சோதித்தார். இதைப் போன்ற பல நிகழ்ச்சிகள்

திருவண்ணாமலைக்கு அவர் திரும்பி வரும் வழியில் நடந்தது. பகவானது பாதாரவிந்தங்களில் வீழ்ந்து நமஸ்கரித்து விஷயங்களைக் கூறி தன்னை மன்னிக்குமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். இதற்கு பகவானது அருமையான பதில் என்னவென்று தெரியுமா? "இங்கிருந்து உன்னால் தப்பிக்க முடியுமா என்ன? உனக்கு இங்கே வேலையிருக்கிறது. உனக்கென்று விதிக்கப்பட்ட வேலைகளைச் செய்யாமல் போக முயற்சி செய்தால் உன்னால் எங்கு போக முடியும்? பேசாமல் இங்கேயே இரு," எனக்கூறிய பகவானை அண்ணாமலை ஸ்வாமி மீண்டும் வணங்கி, "பகவானே! நீங்கள் என்ன சொல்கிறீர்களோ அதன்படி செய்கிறேன், இனி உங்கள் ஸந்நிதியை விட்டு நான் போக மாட்டேன்," என்று கூறினார்.

மறுநாளே, பகவானுக்கு அண்ணாமலை ஸ்வாமி தொண்டு செய்து கொண்டிருந்த போது, பகவான் அவரை நோக்கி "அண்ணாமலை! தண்ணீர் தொட்டியின் அருகே சுவர் ஒன்று கட்டப்பட்டு வருகிறது. கொத்தனார் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று பார்," என்று கூறினார். என்ன நடக்கிறது என்ற விஷயத்தைப் பகவான் அறிந்து கொள்ள விரும்புகிறார் என்று அண்ணாமலை ஸ்வாமி நினைத்தார். அதனால் கொத்தனாரிடம் சென்று "என்ன நடக்கிறது?" என்று கேட்டார். "நான் இந்தச் சுவர் கட்டிக் கொண்டிருக்கிறேன்," என்று அவர் பதிலளித்தார். அண்ணாமலை ஸ்வாமியும் அந்த பதிலை பகவானிடம் தெரிவித்தார். என்ன நடக்கிறது? என்பதைத் தெரிந்து கொண்டு வருவதற்காக ஐந்து முறை அண்ணாமலை ஸ்வாமி அனுப்பப்பட்டார். மீண்டும் மீண்டும் ஒரே கேள்வியை இவர் கேட்டது கொத்தனாருக்கு எரிச்சலை மூட்டியது. "நீ என்ன முட்டாளா! உனக்கு புத்தியில்லையா? நான் சுவரைக் கட்டிக் கொண்டிருக்கிறேன் என்று எத்தனை தடவை சொல்ல வேண்டும்?" என்று ஏசினார். பிறகு அண்ணாமலை ஸ்வாமி விழித்துக் கொண்டார். பகவான் என்னை ஏன் திரும்பத் திரும்ப அனுப்புகிறார்? ஒரு வேளை நான் அந்த வேலையைக் கண்காணிக்க வேண்டும் என்று விரும்புகிறாரோ? என்று யோசித்தார். முதலில், தனக்கு ஆச்ரமத்தில் வேலையிருப்பதாக பகவான் கூறிய போது சுலபமான வேலை ஏதோ செய்ய வேண்டுமெனக் கூறுவதாகத் தவறாக எண்ணிவிட்டார். ஆழ்ந்து சிந்தித்த போது பெரிய அளவில் தொடர்ந்து கடினமான வேலை தனக்காகக் காத்திருக்கிறது என்பதை அவர் உணர்ந்தார். தனிமனிதன் தனது சுயமுயற்சியால் சாதிக்க முடியாத வகையில் பல பணிகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து சேர்ந்தன. ஆனால் அண்ணாமலை ஸ்வாமி வியக்கத் தக்க பிரம்மாண்டமான கட்டுமானப் பணிகளைச் செய்து முடித்தார். இன்றும், ரமணாச்ரமத்திற்குச் செல்பவர்கள் தனிமனிதனாக, அண்ணாமலை ஸ்வாமி சாதித்த பணிகளைக் கட்டட உருவில் காண முடியும்.

தேகத்தை வருத்தக் கூடிய வேலைகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்தன. சுண்ணாம்புக் காளவாயிலிருந்து வெளிப்பட்ட உஷ்ணம் ஒருபுறம்; மற்றொருபுறம் உஷ்ணப்ரதேசமான திருவண்ணாமலையில் கோடை வெயிலின் கடுமை; இந்தச் சூழ்நிலையில் அவர் நீண்ட நேரம் நிற்க வேண்டியிருந்தது. அவரைச் சுற்றியிருந்த மக்கள் அவரைப் பாராட்டவில்லை. பதிலாக, அவர்களின் வசை மொழிகளும், கேலிப் பேச்சுக்களும், அவமதிப்புக்களும் ஏற்கனவே அவரின் வேதனைகளை மேலும் அதிகப்படுத்தின. பகவான் அவருடைய பணிகளைக் கவனிக்க வரும் சமயங்களில் மட்டுமே அவருக்குச் சற்று ஆறுதல் கிடைத்தது. "அண்ணாமலை! நீங்கள் உடம்பு அல்ல, மனதும் அல்ல, எங்கும் நிறைந்துள்ள சுத்தமான உணர்வே," என்று ஒவ்வொரு முறை வரும்போதும் பகவான் அவருக்கு உபதேசம் செய்வார். "இதை வேலையில் ஈடுபட்டிருக்கும் போதும் மற்ற நேரங்களிலும் கவனத்தில் வைத்துக் கொள்," என்றும் கூறுவார். இவ்வளவு உடம்பை வருத்தும் பணியை அண்ணாமலை ஸ்வாமியிடம் பகவான் ஏன் ஒப்படைத்தார்? முன்பு ஆச்ரமத்திலுள்ள சிலரிடம்

அதிருப்தி ஏற்பட்டதால் ஆச்ரமத்தை விட்டே ஓடுவதற்கு அவர் முனைந்தார். ஆனால் "நீ செய்ய வேண்டிய வேலைகள் உள்ளன." என்று பகவான் கூறியிருந்த படியால் அவர் மீண்டும் ஆச்ரமத்திற்குத் திரும்பி வர வேண்டியிருந்தது. இது வெளிப்படையாக கட்டுமானப் பணிகளை மட்டும் குறிப்பிடவில்லை. அது வினைப் பயன்களைக் கழுவிக் களையக் கூடிய உண்முகமான பணியாகவும் அமைந்தது. ஒவ்வொருவருடைய விதியும் அவரவராலேயே நிச்சயிக்கப்படுகிறது. அவற்றை நாமே தான் சுத்தம் செய்யவும் முடியும். பிறர் எத்தனை வருந்தினாலும் அவர்களால் இந்த விஷயத்தில் எதுவும் செய்ய முடியாது. விதியை வெல்வது மிகவும் முக்கியமானது. ஏனென்றால் அவற்றோடு இணைந்துவரும் வாசனைகள் நம்மை வெகுவாகப் பாதிக்கின்றன. அதனால் அண்ணாமலை ஸ்வாமி பிறருடைய விமர்சனத்தாலும், அவர்களுடைய ஒத்துழையாமையாலும் மன அமைதியை இழந்தபோதெல்லாம் பகவான் அங்கு சென்று அழுத்தமாக "இந்த உடம்பு அல்ல மனமும் அல்ல எங்கும் நிறைந்த பரிசுத்தமான உணர்வே நீ. அதில் கவனம் வை. பணியில் ஈடுபட்டிருக்கும் போதும் அதைக் கவனத்தில் வை." என்று அறிவுறுத்தினார். பிறருடைய விமர்சனங்கள் அவரை வெகுவாக பாதித்த போதிலும் அவருடைய விதிக்கும் பகவானுடைய அருளுக்கும் இடையே நடந்த போராட்டத்தில் பகவானுடைய 'எங்கும் நிறைந்த உணர்வே நீ' என்பதையும் 'பணியில் ஈடுபட்ட போதும் அதை மனதில் நிறுத்து' என்ற பகவானுடைய அமுத மொழிகளையும் அவர் விடாப்பிடியாகப் பிடித்திருந்தார்.

ரமணாச்ரமத்தில் நான் இருக்கும்போதெல்லாம், பகவானின் வழிகாட்டுதலின் பேரில் அண்ணாமலை ஸ்வாமியால் கட்டப்பட்ட கட்டடங்களின் சுவரில் தலை சாய்ந்து நிற்பதை பெரும் பேறாகக் கருதுவேன். அண்ணாமலை ஸ்வாமியால் முதன்முதலில் எடுத்துக் கொண்ட கட்டடவேலை ஆச்ரமத்திற்குப் பின்னால் கட்டப்பட்ட பாதுகாப்புச் சுவராகும். "நீ கட்டப் போகும் சுவர் சீனப்பெரும் சுவர் போல் இருக்கட்டும்." என்று பகவான் அவரிடம் கூறினார். மலையிலிருந்து பெருகி வரக்கூடிய மழை நீரை ஆச்ரமத்திற்குள் புகாதபடி தடுக்கும் அகலமும் நீளமும் கொண்ட பெரும் கற்சுவராகும் அது. அந்தப் பணி முடிந்ததும் உக்கிராண அறையைக் கட்டும்படியாக பகவான் உத்தரவு



ஸ்ரீ பகவான் – அண்ணாமலை ஸ்வாமி கட்டிய கோசாலை நுழை வாயிலில்

கொடுத்தார். நாம் அண்ணாமலை ஸ்வாமி கட்டிய பல இடங்களையும் காண வேண்டும் - கோசாலை, பகவானுடைய குளியல் அறை, வள்ளி என்ற மானின் ஸமாதி, ஜாக்கி என்ற நாயின் ஸமாதி, பெரிய பழைய உணவுக் கூடம், சமையல் அறை, வேதபாட சாலை, ஆச்ரம குளத்தின் கற்படிகள், மேஜர் சாட்விக்கின் அறை, கடைசியாக ஆச்ரம மருத்துவசாலை. என்னிடம் 'இந்த கட்டடங்கள் எல்லாம் சிமெண்ட் இல்லாமல் எப்படிக் கட்டப்பட்டன? எவ்வாறு அது சாத்தியமாயிற்று?', என்று கேட்பவர்கள் அநேகம். இவை அனைத்தும் படிப்பறிவு இல்லாத ஒரு கிராமத்து மனிதரால் கட்டப்பட்டன. என்பதை அவர்களால் நம்ப முடியவில்லை. பிற்காலத்தில் அண்ணாமலை ஸ்வாமி ஹாலுக்குள் வரும் போது "நீ உள்ளே வரும் போது கட்டடங்கள் என்னை நோக்கி வருவதாக எனக்குத் தோன்றுகிறது." என்று பகவான் நகைச்சுவையோடு கூறுவார். உடலாலும் மனதாலும் எத்தனை வேதனைகளை அண்ணாமலை ஸ்வாமிகள் அனுபவித்து இருப்பார், என்று நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். சுற்றிலும் உள்ளவர்களுடைய ஏச்சுப் பேச்சுக்கள், நம்பிக்கைத் துரோகம், கிண்டல்கள் இவற்றிற்கிடையே, கொளுத்தும் வெயிலில் அவர் எவ்வாறு தன் பணியில் ஈடுபட்டிருக்க வேண்டும்! பகவானுடைய முதல் உபதேசமான "நீ உடம்பு அல்ல, நீ மனமும் அல்ல, நீ ஆத்மா." என்பதனை உறுதியாகப் பிடித்துக் கொண்டதால், உடம்பும் மனதும் விதிப்படி அனுபவிக்க வேண்டியவற்றை அனுபவிக்க வைத்து, வினைப்பயன்களை பகவான் கழுவுகிறார் என்பதை அவர் உணர்ந்தார். 1938-ல் இந்தப் பணிகள் எல்லாம் நிறைவேறிய பின் பகவான் அவரை நோக்கி, "நீ இப்போது ஒரு சுதந்திர புருஷனாகி விட்டீர்கள். உன்னுடைய கர்மங்கள் எல்லாம் முடிந்து விட்டன." என்று கூறினார். நன்றி கலந்த கண்ணீர் பொங்க அண்ணாமலை ஸ்வாமி பகவானை வணங்கினார். யோகி ராமய்யா என்ற மற்றொரு பக்தர் பகவானை நோக்கி "அண்ணாமலை ஸ்வாமி கடுமையாக உழைத்திருக்கிறார். அவருடைய உடல்நலம் வெகுவாகக் குன்றியுள்ளது. அவரை ஓய்வு எடுத்துக் கொள்ளுமாறு கூறலாமே." என்று கூறினார். பகவான் அதற்கு இசைந்து அவருக்கு ஓய்வு கொடுத்ததோடு அண்ணாமலை ஸ்வாமியை ஆரத் தழுவிக் கொண்டார். இவ்வாறு பகவான் இதற்கு முன்னும் பின்னும் யாரையும் தழுவிக் கொண்டதில்லை. இவ்வாறாக அவர் தழுவிக் கொண்டதால் அண்ணாமலை ஸ்வாமியின் வாழ்க்கை முழுவதுமாக மாறியது. விதியை அருளாக மாற்றி விதிக்கு ஒரு முற்றுப் புள்ளியும் வைத்தார் பகவான்.

வாழ்க்கையையே மாற்றி அமைத்த பகவானுடைய தழுவல் பற்றி அண்ணாமலை ஸ்வாமியிடம் பல வருடங்களுக்குப் பிறகு நான் கேட்ட போது அவர் கூறியது, "ஒரு நாள் காலையில் பகவான் குளிப்பதற்கு உதவி செய்யும் பொருட்டு அவருடைய குளியலறைக்குச் சென்றேன். மாதவ ஸ்வாமியும் நானும் வழக்கம்போல் பகவானுக்கு எண்ணெய் தேய்த்து விட்டோம். பகவான் குளித்த பின்பு மாதவ ஸ்வாமி பகவானிடம் "பகவானே! கஞ்சா லேகியம் (ஆயுர்வேத மருந்து) உண்பவர்கள் அனுபவிக்கும் ஆனந்தத்தின் இயல்பு யாது? அதுவும் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள ஆனந்தமும் ஒன்று தானா?" எனக்கேட்க, பகவான் அதற்குப் பதிலாக "கஞ்சா உண்பது மிகவும் கெட்டப்பழக்கம்." என்று குறிப்பிட்டார். உரக்கச்சிரித்தபடி "ஆனந்தம்! ஆனந்தம்! ஆனந்தம்! ஆனந்தம்! என்று கூவிக்கொண்டே, இவ்வாறுதான் கஞ்சா உண்பவர்கள் நடந்து கொள்வார்கள் என்றும் கூறி என்னை இறுகக் கட்டிக் கொண்டார். குறுகிய நேரத்திற்கு மட்டும் அல்லாமல் இரண்டு நிமிடங்களுக்கு இறுக்கமாக என்னை பகவான் தழுவிக் கொண்டதாக மாதவ ஸ்வாமி என்னிடம் பின்னர் தெரிவித்தார். முதல் சில நொடிகளுக்குப் பின், என் உடம்பைப் பற்றியும் உலகைப் பற்றியுமான உணர்வை முழுவதுமாக இழந்தேன். ஆரம்பத்தில் ஒருவித ஆனந்த உணர்வை அனுபவித்தேன். பின்னர் அந்த நிலை மாறி உணர்ச்சிகளோ அனுபவங்களோ அற்ற நிலையை அடைந்தேன்

ஆனால் நான் என் உணர்வை இழக்க வில்லை. என்னைச் சுற்றிலும் நடந்த எதையும் நான் அறிந்து கொள்ள வில்லை. கிட்டதட்ட பதினைந்து நிமிடங்கள் அந்த நிலையிலிருந்தேன். நான் சுயநினைவை அடைந்த போது குளியலறையில் நான் மட்டும் தனியாக இருந்தேன். மாதவ ஸ்வாமியும் பகவானும் காலைச் சிற்றுண்டி உண்பதற்காக எப்போதோ போயிருந்தனர். அவர்கள் இருவரும் கதவைத் திறந்ததையோ வெளியில் போனதையோ நான் உணரவில்லை; அதுமட்டுமின்றி சிற்றுண்டிக்கான மணி அடித்ததும் கூட என் காதில் விழவில்லை. இந்த அனுபவம் என்னுடைய வாழ்க்கையை முற்றிலுமாக மாற்றியது. ரமணாச்ரமத்தில் என்னுடைய பணிகள் முடிந்துவிட்டன என்று நான் உணர்ந்தேன். அப்போதிலிருந்து ஆச்ரமத்திற்கு வெளியே தங்கி என்னுடைய நேரத்தை முழுமையாக தியானத்தில் கழிப்பேன் என்பதை அறிந்துகொண்டேன். மறுதினமே பகவானிடம் "என்னை ஆசீர்வதியுங்கள். நான் பலாக்கொத்தில் போய் வாழ்கிறேன்." என்று அனுமதி கேட்டேன்.

பகவான் அண்ணாமலை ஸ்வாமியை நெருங்கி வந்து அவரை லேசாக அணைத்துக் கொண்டு ஆசிகளை வழங்கினார். பலாக்கொத்தில் அவர் தங்கப் போகும் இடம், அவரது குடிசையின் அமைப்பு, அவரது அன்றாட வாழ்க்கை மற்றும் அங்கு நடப்பவை இவற்றைக் குறித்து பகவானிடம் அவர் தினமும் தகவல் கொடுத்து வந்தார். பகவானும் அவருடைய இடத்திற்குச் சென்று ஆன்மீக ரீதியாக அறிவுரைகளை வழங்கி வந்தார். பின் ஒரு குறிப்பிட்ட காலத்தில் அண்ணாமலை ஸ்வாமி முழுமையாக ஆத்மானுபவத்தில் லயித்திருக்க வேண்டும் என்று பகவான் எண்ணியதால், அண்ணாமலை ஸ்வாமியிடம் "நீ மன அமைதியை அடைந்துவிட்டாய். அதனால் தரிசனத்திற்காகக் கூட ரமணாச்ரமத்திற்கு வர வேண்டிய அவசியமில்லை." என்று கூறியவர் "பலாக்கொத்தில், உனது இடத்திலிருந்து சாலை பக்கமாகக் கூடச் செல்ல வேண்டாம். மலையில் எங்கு வேண்டுமானாலும்



அண்ணாமலை ஸ்வாமி பகவானின் மஹிமையை அனுராதாவிற்கு விளக்குகிறார்

போகலாம்," என்று அறிவுரை வழங்கினார். ஒரு முறை அண்ணாமலை ஸ்வாமிக்கு உணவு கிடைக்காத போது, காட்டிற்குள் சென்று ஒரு குறிப்பிட்ட செடியின் இலைகளை வேக வைத்துக் குழம்பு செய்து சாதத்துடன் கலந்து உண்ணுமாறு கூறினார். அவருக்குத் தேவையான அரிசி அவ்வப்போது வழங்கப்பட்டு வந்தது. இதை உண்ணலாம், இதை உண்ணக் கூடாது என்ற அறிவுரையை பகவான் யாருக்குமே வழங்கியது இல்லை. அண்ணாமலை ஸ்வாமிக்கு மட்டுமே இந்த மாதிரியான தனிப்பட்ட அறிவுரைகள் வழங்கப்பட்டன. பகவானுடைய சகோதரர் உட்பட பல பக்தர்களுக்கும் எந்தத் தெருவிற்குச் சென்று பிக்ஷை எடுக்க வேண்டும் என்பது கூட பகவான் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறார். ஆனால் அண்ணாமலை ஸ்வாமியிடம் அவர் அவ்வாறு கூறவில்லை. நமது சாஸ்திரங்கள் இரண்டு விதத்தில் வாழ்க்கையை வகுத்துக் கொள்ளும்படிக் கூறியுள்ளன. ஒன்று தேனீயைப் போன்று ஒவ்வொரு பூவாகச் சென்று உணவை சேகரிப்பது அல்லது மலைப் பாம்பைப் போன்றிருக்கும் இடத்திலேயே இருந்து கிடைக்கும் உணவை உண்ண வேண்டும் என்பதாகும். அண்ணாமலை ஸ்வாமிக்கு மட்டுமே இரண்டாவது வழியைக் குறிப்பிட்டுக் கூறினார். அண்ணாமலை ஸ்வாமியை பிக்ஷை எடுப்பதற்கு அனுமதிக்கவில்லை. அதற்குப் பதிலாக அவர் இருந்த இடத்திலேயே அவருடைய தேவைகள் கிடைக்குமாறு செய்தார் பகவான்.

ஆத்மாவில் நிலைத்துவிட்ட அண்ணாமலை ஸ்வாமி ஆத்ம விசாரம் குறித்து பிறருக்குப் போதிக்க ஆரம்பித்தார். 'ஆத்ம விசாரம் என்பது பண்டிதர்களுக்கும் அறிவாளிகளுக்கும் மட்டுமானது; பாமரர்களுக்கு அதற்கான ஆற்றலோ, விழிப்புணர்வோ கிடையாது,' என்ற தவறான கருத்து நிலவி வந்தது. அண்ணாமலை ஸ்வாமி, சாதாரண கிராமத்து ஜனங்களுக்குக் கூட ஆத்ம விசாரத்தைப் போதனை செய்து வந்தார். அவர் போதித்த விதம் மிகவும் ஆச்சரியகரமாக இருந்தது. "நீ யார் என்பதை நீ மறந்து விட்டதாகக் கூறுவதால் அந்த நிலைக்குத் திரும்பி செல்வதுதான் ஒரே வழி. விளக்கு எரிந்து கொண்டே இருந்தால் 'இருட்டு' அறைக்குள் வரமுடியாது. அறையைத் திறந்து வைத்துக் கொண்டு அழைத்தாலும் கூட இருட்டு உள்ளே வரவே முடியாது. இருட்டு என்பது வெளிச்சம் இல்லாத நிலை. அதேபோன்று மனமானது ஆத்மாவின் ஒளி புகமுடியாதவாறு நம்மால் வேண்டுமென்றே செய்யப்பட்டிருக்கும் ஒரு இடம். அதனால் உன்னிடமே நீ மீண்டும் செல்." என்று அவர் உபதேசித்தார். ஒருவர் "ஆத்ம விசாரம் என்பது பழகுவதற்குக் கடினமாக இருப்பதால் பக்தி, கர்மம் போன்ற வேறு வழிகளைப் பழகிய பின்பு ஆத்ம விசாரத்திற்குச் செல்வது நல்லதா?" என்று கேட்டார். அதற்கு அண்ணாமலை ஸ்வாமி, "உனக்கு ஆத்ம விசாரத்தில் ஈடுபாடு உள்ள பட்சத்தில் உன்னால் சிறப்பாக அதைச் செய்ய முடியாத போதும், அதைக் கடைப்பிடிப்பதே நல்லது. ஆத்ம விசாரத்தை சரியான முறையில், பயன்தரும் விதத்தில் பழக விரும்பினால் அந்த வழியையே பின்பற்ற வேண்டும். மற்ற வழிகள் தனிப்பட்ட முறையில் நல்லவையாக இருந்த போதிலும் ஆத்ம விசாரத்திற்கு உன்னைத் தயார் செய்யாது. நீ நன்கு வயலின் வாசிக்க வேண்டும் என்று விரும்பினால் சரியான ஆசானிடம் அதைப் பயின்று, இயன்ற வரையில் அதைப் பழகவும் வேண்டும். அதில் ஏதாவது கஷ்டங்களைச் சந்திக்கும் போது கிளாரினெட் வாசிப்பதற்கு முயற்சி செய்ய மாட்டாய் அல்லவா? நீயாக தேர்ந்தெடுத்த அந்த வாத்தியத்தையே தொடர்ந்து வாசித்துப் பழகித் தேர்ச்சி பெற முயற்சி செய்து கொண்டிருப்பாய்." என்று திட்டவட்டமாகக் கூறினார். எத்தனை எளிமையான, ஆனால் தெளிவான உதாரணத்தை எவ்வாறு உபயோகித்துள்ளார் அண்ணாமலை ஸ்வாமி என்பதைக் கவனிக்க வேண்டும். ஆத்ம விசாரத்திற்குத் தயார் செய்து கொள்வதற்குச் சிறந்த வழி ஆத்ம விசாரத்தைப் பழகுவது தான். இப்போதும் கூட அவரால் வழி நடத்தப்பட்ட கிராமத்து மக்கள் ஆத்ம விசாரத்தைப் பழகி வருகிறார்கள்.

நான் ரமணாச்ரமத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது குஞ்சு ஸ்வாமியோடு காட்டிற்குள் நடப்பதற்குச் செல்வது வழக்கம். பலசமயங்களில் சுற்று வழியில் அண்ணாமலை ஸ்வாமியின் ஆச்ரமத்திற்குச் சென்று அவருடைய ஸாந்நித்தியத்தை அனுபவித்துள்ளோம். அவர் கொடுக்கும் இஞ்சி டீயை நாங்கள் மிகவும் ரசித்துக் குடிப்போம். ஒவ்வொரு முறை செல்லும் போதும் அவரை ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வேன். வணங்கி எழுந்திருக்கும் முன் அவர் என்னுடைய தலையைத் தன் கையால் கோதிவிட்டுப் பிறகு தன் தலையை என் தலைமீது வைப்பார். அவர் என்னை வரவேற்கும் விதமாக அவ்வாறு செய்வதாக எண்ணினேன். சில நாட்களுக்குப் பிறகு என் தோழி அனுராதாவுடன் நான் சென்றிருந்தபோது அவர் ஏன் அவ்வாறு செய்கிறார் என்று அவரிடமே கேட்டார் அனுராதா. "1938-ல் வெங்குட்டுவின் குடும்பம் நிரந்தரமாக திருவண்ணாமலைக்கு வந்து விட்டது. அப்போது அவரது இரண்டாவது மகனான இந்த கணேசன், தவழும் பருவத்தில் இருந்தான். பகவானுடைய ஹாலிற்குள் வந்ததுமே பகவானுடைய சகோதரியின் மடியிலிருந்து இறங்கி பகவானை நோக்கித் தவழ்ந்து சென்று சோபாவின் மீது ஏறுவதற்கு முயற்சி செய்வான். பகவானுடைய அணுக்கத் தொண்டரான கிருஷ்ணஸ்வாமி கணேசனைத் தடுத்து, எவ்விதமான குடும்ப உறவும் இங்கு கிடையாது பையா," என்று கூறியவாறு அவனை சகோதரியின் மடியில் மீண்டும் வைப்பார். ஒரு நாள் கிருஷ்ணஸ்வாமியை ஏதோ ஒரு வேலையாக பகவான் வெளியே அனுப்பியிருந்தார். குழந்தை கணேசன் வேகமாக சோபாவிற்குத் தவழ்ந்து சென்று அதன் மேல் ஏறிவிட்டான். குழந்தை கீழே விழுந்து விடாத வண்ணம் பகவான் தனது இடது காலால் சோபாவோடு அவனைச் சேர்த்துப் பிடித்தபடி வலது காலை அவனது உச்சந்தலைமீது வைத்து காலால் தலையை கோதினார். அனுராதா! என் குருநாதனுடைய புனிதபாதம் அங்கு பட்டிருக்கிறது. நான் கணேசனின் தலைமீது என் தலையை வைக்கவில்லை; என் குருநாதனின் பாதங்களின் மீது என் தலையை வைக்கிறேன்," என்று அண்ணாமலை ஸ்வாமி கூறினார். அப்போது அனுராதா "ஸ்வாமி, வேறு ஏதாவது கதை சொல்லுங்களேன்," என்று கேட்ட போது அவர் "வேண்டாம். இன்று கணேசனுடைய கதை மட்டும் தான்" என்று பதில் கூறினார்.

மீண்டும் தொடர்ந்து "கணேசனுக்கு அப்போது இரண்டு வயது. வெண்ணெய்யை உருட்டியது போல் கொழுகொழுவெனப் புஷ்டியாக இருப்பான். நான் அவனுடைய வாகனம். செல்லுமிடமெல்லாம் - கட்டட வேலையை மேற்பார்வை செய்யும் போது கூட — அவனைச் சுமந்தபடியே செல்வேன். ஆச்ரமத்தில் போட்டோ ஆல்பங்களைப் புரட்டிப் பார்த்தால் சில இடங்களில் நான் கணேசனைத் தூக்கிக் கொண்டிருப்பதை நீ பார்க்க முடியும்," என்றார். அன்று பேசும் மனநிலையோடு அவர் இருந்தபடியால் மேலும் தொடர்ந்தார். "எனக்கு அந்தக் குழந்தையிடம் விசேஷமான பிரியம் இருந்தது. அவன் குழந்தை என்பதனால் மட்டுமன்று; பகவான் அவனிடம் அதிகக் கவனம் செலுத்தினார் என்பதால்தான். அப்போது கணேசனுக்கு ஆறு வயது இருக்கும். நான் மருத்துவமனையைக் கட்டும் பணியை மேற்பார்வை செய்து கொண்டிருக்கும் போது என்னைப் பிடித்து கொண்டு அவன் நின்றிருந்தான். அன்று, அருகிலிருந்த ஒரு பெரிய பாறையில் பகவான் வந்து அமர்ந்து கொண்டார். பகவானிடம் ஓடிச்சென்று அவருடைய முட்டு மீது சாய்ந்தபடி அவன் நின்றான். இதைக் கண்டவுடன் என்னுடைய 'தொண்டர் வாசனை' எனக்கு வந்து விட்டது. பகவானை யாரும் தொடாதபடி தொண்டர்கள் கவனித்துக் கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டிருந்தனர்." (சம்பவம் நடந்த சமயத்தில் அவர் தொண்டராக இல்லாத போதும் கூட, பூர்வ வாசனை தன்னைப் பாதித்ததாக அவர் அனுராதாவிடம் நகைச்சுவையோடு கூறிக்கொண்டிருந்தார்). "அதனால் உடனே பகவான் மீது சாய்ந்திருந்த கணேசனை விலக்க

முற்பட்டேன். உடனே பகவான் தன் இரு கால்களுக்கு இடையிலும் குழந்தையைப் பிடித்துக் கொண்டு "உனக்கு என்ன வந்தது? அண்ணாமலை! உனக்கு என்ன வந்தது? போய் உன்னுடைய வேலையைப் பார்," என்று கூறினார். அதனால்தான் இந்தக் குழந்தையின் மீது எனக்கு தனிப்பட்ட பிரியம் இப்போதும் உள்ளது. இந்த ஸம்பாஷணை நடந்தபோது குழந்தை கணேசனுக்கு 60 வயது!

1995-ல் நான் ஆச்ரம நிர்வாகத்திலிருந்து ஓய்வு பெற்ற போது என்னால் கடைசியாக வெளியிடப்பட்ட 'தி மௌண்டென் பாத்' (The Mountain Path) இதழ் ஒன்றை அண்ணாமலை ஸ்வாமியின் ஆச்ரமத்திற்கு எடுத்துச் சென்றிருந்தேன். மாடியில் மூலிகை இலைகளை உலர்த்திக் கொண்டிருந்த அண்ணாமலை ஸ்வாமியிடம் அந்த இதழைக் கொடுத்தேன். பின், "ஸ்வாமி! ஆச்ரம நிர்வாகத்திலிருந்து முழுமையாக ஓய்வு பெறுவதற்கு அனுமதி தந்து ஆசீர்வதிக்க வேண்டும்," என்று



அண்ணாமலை ஸ்வாமி கணேசனை ஆசீர்வதிக்கிறார்

கேட்டுக் கொண்டேன். அவர் துள்ளியெழுந்து என்னை அணைத்துக் கொண்டார். முன்பு பகவான் அண்ணாமலை ஸ்வாமியை தழுவிக் கொண்டார். இப்போது அண்ணாமலை ஸ்வாமி என்னைத் தழுவிக் கொள்கிறார். இதனால் புளகாங்கிதம் அடைந்த நான் பெற்ற பேற்றினை உணர்ந்தேன். "நீ என்னை சந்தோஷத்தில் ஆழ்த்தி விட்டாய். பகவானுக்கு நீ செய்யக் கூடிய மிகப்பெரிய சேவையே இதுதான் கணேசா! இதுவரை நாம் நண்பர்களாகவே இருந்தோம். இன்று முதல் நாம் சகோதரர்கள். என்னுடைய ஆசீர்வாதங்கள் உனக்கு எப்போதும் உண்டு." என்று கூறி மீண்டும் என்னை ஆரத்தழுவிக் கொண்டு, தனது தலையை என் தலைமீது வைத்தார். நான் வெளியில் சென்ற போது என் இதயம் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கியிருந்தது. அண்ணாமலை ஸ்வாமி மிகுந்த மகிழ்ச்சியோடு இருந்ததால் தான் செய்து கொண்டிருந்த வேலையை நிறுத்திவிட்டு மாடியிலிருந்து என்னோடு

இறங்கி வந்தார். இருவாட்சி (Bauhinia Tomentosa) என்ற மருந்துச் செடியின் கன்றுகள் சிலவற்றை எனக்குத் தந்தார். பின்னர் "காட்டில் இந்தச் செடியைச் சுட்டிக்காட்டி இதன் இலைகளையும் பூக்களையும் சாதத்தோடு சேர்த்துச் சாப்பிடும்படி பகவான் என்னிடம் கூறியிருந்தார். நான் அன்று முதல் அவ்வாறு செய்து வருகிறேன். இப்போது நான்கைந்து கன்றுகளை உனக்குப் பிரஸாதமாகத் தருகிறேன்," என்று கூறினார். 'ஆனந்த ரமணா' என்ற என் வீட்டுத் தோட்டத்தில் இந்தச் செடிகள் இப்போது பெரிய மரமாக வளர்ந்துள்ளன.

அண்ணாமலை ஸ்வாமி உடலை நீத்த போது அவருடைய ஆச்ரமத்திலேயே ஸமாதி கட்டப்பட்டது. இத்தனை பெரிய ஒரு பக்தருடைய ஸமாதி ரமணாச்ரமத்தினுள் அமையவில்லையே என்று நான் வருந்தினேன். பல பழைய பக்தர்களுடைய ஸமாதிகளை ரமணாச்ரமத்தினுள் கட்டும் பேற்றை நான் பெற்றிருந்தபோதும் அண்ணாமலை ஸ்வாமியினுடைய ஸமாதி உள்ளே அமையவில்லை. அது எனக்குப் பெரிய வேதனையை அளித்தது. ஆனால் பகவானுடைய கருணையைப் பாருங்கள்! தற்போது அண்ணாமலை ஸ்வாமியினுடைய ஆச்ரமமும் மற்றும் ஸமாதியும் ரமணாச்ரமத்தோடு இணைக்கப்பட்டுவிட்டன. குழந்தைத்தனமாக இருந்தாலும் மனப்பூர்வமான என்னுடைய ஆசையை பகவான் நிறைவு செய்து விட்டார். இந்த உன்னதமான பக்தரின் ஸமாதியும் ஆச்ரமத்திற்குள் வந்து விட்டது. இந்தக் கட்டட மேதை அண்ணாமலை ஸ்வாமியும் ஸத்குருவின் திருப்பாத தூளியாகவே நிரந்தரமாக வந்து விட்டார்.

விதியை அழிப்பதற்கு புத்தி சாதுர்யம் மிகவும் முக்கியமானது. இதயம் உருகுவது என்பது அதற்கும் அடுத்தபடி. ஞானம் என்ற புஷ்பம் மலர வேண்டுமானால் இதயம் உருகுவது இன்றியமையாதது. அதன்பின் வருவது சரணாகதி. அண்ணாமலை ஸ்வாமி செய்தது போன்று 'நான்' என்ற அஹங்காரத்தை முழுமையாக பகவானிடம் அர்ப்பணம் செய்ய வேண்டும். அவருடைய சரித்திரத்தைப் படிக்கும் போது தனது குருவின் சொற்களை அவர் எவ்வாறு ஒவ்வொரு நிமிடமும் சிரமேற்கொண்டு செயல் புரிந்தார் என்பதைக் காண முடியும். இவ்வாறு கொத்தனாராக இருந்த அவர் வாழ்க்கையின் இறுதி லட்சியத்தை அடைந்தார். நமக்கு இதுவே ஒரு பெரிய பாடம். இதயம் உருகுவது என்றால் தரையில் அழுது புரள்வது என்று பொருள் இல்லை. 'சரணாகதி' என்பது அறிந்து, மனப்பூர்வமாக, எவ்வித சிரமமும் இன்றி 'நான்' என்ற அஹங்காரத்தை குருநாதனுக்கு அர்ப்பணித்தலாகும். அவ்வாறு செய்வதில்தான் எத்தனை ஆனந்தம்!"



# 32 முருகனார்



புகழ்பெற்ற பக்தர்களான ஞானசம்பந்தர், மீராபாய், ஆண்டாள் இவர்களுடைய உலக வாழ்க்கை இறைவனுடைய ஞானச்சுடருடன் ஒன்றுபட்டதோடு நிறைவுற்றதாக சரித்திரம் கூறுகின்றது. ஆனால் பகவானுடைய பக்தர்களில் ஒருவரும், அற்புதமான கவிஞருமான ஒருவருடைய ஆன்மீக வாழ்க்கை 1923-ல் ரமணாச்ரமத்தில் அவர் தனது குருவை முதன்முதலில் சந்தித்த போது பெற்ற பெரிய ஜோதி தரிசனத்தோடு துவங்குகிறது. அதைத் தொடர்ந்து, அவர் பார்த்தபோதெல்லாம் பகவானைச் சுற்றி ஒளி வெள்ளம், அந்தத் திவ்ய ரூபத்தை சூழ்ந்திருப்பதாகக் கண்டார். தமிழ் சமுதாயத்தினரால் பெரிதும் மதிக்கப்பட்ட தமிழ் கவிஞர் முருகனாரே இந்த பக்தர்! தமிழாசிரியர், பண்டிதர் என்று பெயர் பெற்றிருந்த முருகனார் பல பகுதிகள் கொண்ட முதல் தமிழ் அகராதி தயார் செய்யும் கடினமான வேலையில் ஈடுபட்டிருந்த பண்டிதர் குழுவோடு இணைந்து செயலாற்றினார்.

முருகனார் சிவபெருமானிடம் மிகுந்த பக்தி உடையவர். எழுநூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த மாணிக்கவாசகர் என்ற சிவபக்தரால் எழுதப்பட்ட ஆனந்த அனுபவங்களின் வெளிப்பாடாகிய 'திருவாசகம்' என்னும் செய்யுட்களால் ஆன நூலைப் படிப்பதில் பெரும்பான்மையான தனது பொழுதைக் கழித்தார். சிவபக்தியினால் மாணிக்கவாசகர் பெற்ற ஆனந்த அனுபவத்தைத் தானும் பெற வேண்டும் என்ற ஏக்கம் அந்த நூலைப் படிக்கும் போதெல்லாம் அவருக்கும் ஏற்படுவதுண்டு. இந்த சமயத்தில் தான் அவருடைய மாமனார் தண்டபாணி ஸ்வாமி பகவானால் எழுதப்பட்ட — ஞானமார்க்கத்தைப் பற்றியதான "நான் யார்" என்ற நூலையும் பக்தி வெள்ளத்தில் தோய்த்து எடுக்கப்பட்ட பாடல்களின் தொகுப்பாகிய அருணாசல ஸ்துதி பஞ்சகம் என்ற நூலையும் அவருக்கு அன்பளிப்பாகக் கொடுத்திருந்தார். அவர் மீண்டும் மீண்டும் அவற்றைப் பலமுறைப் படித்தார்.

சமீப காலத்தில் கேட்டு அறியப்படாத ஞானநிலையில் பகவான் மூழ்கியிருந்ததாக முருகனார் தனது நண்பர்கள் மூலம் விரைவிலேயே அறிந்துகொண்டார். அவர் இந்த ஸாதுவை நேரில் கண்டு அவருக்குத் தொண்டு செய்து இறையின்பம் என்ற அனுபவத்தை அவரது அருள் உருவில் பெற விழைந்தார். பின்னர் திருவண்ணாமலை சென்ற அவர் அருணாசலேச்வரர் கோயிலில் இருந்தவாறு, பிரயத்தனம் ஏதுமின்றி தானாகவே வெளிப்பட்ட பதினோறு பாடல்களை எழுதி பகவானைச் சிவனாகக் கருதி வழிபட்டார். 1923 செப்டம்பரில் ஒரு சில குடிசைகளோடு மட்டுமே விளங்கிய ரமணாச்ரமத்திற்கு அதன்பின் சென்றார். சுபகாரியங்களின் வரவை நல்ல சகுனங்கள் எடுத்துக் காட்டுவதைப் போன்று, முருகனார் உள்ளே செல்லும் முன் பகவானே வெளியே வந்தார்.

தான் பெற்ற முதல் தரிசனத்தை முருகனார் இவ்வாறு வர்ணிக்கிறார். "நான் நுழைவாயிலை கண்ணுற்ற போது என் பார்வையை மறைத்த மிகப்பெரிய ஜோதிப் பிழம்பு ஒன்றை அங்கு கண்டேன். பரவச நிலையில் நான் எழுதியிருந்த பாடல்களைப் படிக்க முயன்றேன். ஆனால் கண்களில் ஆறாகப் பெருகிய கண்ணீர் அதைத் தடுத்தது. பிறகு அந்த ஒளிப்பிழம்பிலிருந்து ஒரு மனித உருவம் - பகவான் வெளிப்பட்டார். என் கையிலிருந்த காகிதத்தைக் கேட்டுப் பெற்றுக் கொண்டார் அவர்.

தேசிகப்பதிகம் என்ற பெயரில் இயற்றப்பட்ட அப்பாடல்களில், இரண்டு பாடல்கள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளது :

பார்வளர் கயிலைப் பருப்பதம் நீங்கிப்
பண்ணவர் சூழலை விட்டு
வாரொளி மணிபோல் வாசகர் வாக்கை
வளர்செவி மடுத்திட விரும்பி
ஏர்வளர் பெருந்தண்டுறை அடைந்தாற் போல்
இழிசினேன் புன்சொலும் வேட்டுச்
சீர்வளர் அருணை செழும்பதி சேர்ந்தாய்
தேசிக ரமண மாதேவே (1)
தெருக்கடை அலைந்து திரியும் நாய் போலத்
தேர்ந்ததே தேர்ந்ததே தேர்ந்து
பெருக்குடை எல்லாப்பிறப்பினும் பிறந்து
பெருந்துயர் இடும்பைகள் உழந்து
கருக்கடை கதியாக் காத்து நிற்பேனைக்
கடைகணித்து யான் எந்து என்னும்
செருக்கற ஒழித்துத் திருப்பதம் அளிப்பாய்
தேசிக ரமண மாதேவே (11)

பகவான் அந்தப் பாடல்களை உரக்கப் படித்து `இவை திருவாசகத்தைப் போன்றே உள்ளன. மாணிக்க வாசகரைப் போன்றே நீரும் தொடர்ந்து எழுதலாமே!` என்று ஆசீர்வதித்தார். பின்னர்



முருகனார் (இடது பக்க ஓரத்தில்) - தமிழ் அகராதி ஆலோசனைக் குழு உறுப்பினர்களுடன்

பகவான் என்னைக் கூர்ந்து நோக்கினார். சிறிது நேரத்திற்குப்பின் நான் என் இயல்பு நிலைக்குத் திரும்பினேன். இதயத்தில் பக்தி உணர்வுகள் பொங்க, சந்தோஷமாகவும், நன்றிப் பெருக்கோடும் நான் பகவானை நோக்கினேன். அவருடைய அருட்பார்வை என்னை ஊடுருவித் துளைத்து அதுவரை நான் அனுபவித்திராத ஒரு ஆனந்த நிலைக்கு என்னை அழைத்துச் சென்றது. பகவானுடைய அந்தப் பார்வை என் இதயத்தில் ஆனந்த ஊற்றாகப் பாடல்களைத் தோற்றுவித்தது. அப்போதுமுதல் நூற்றுக்கணக்கான பாடல்கள் என்னிடமிருந்து பொங்கி வந்தன. நான் அவற்றை பகவான் முன் ஸமர்ப்பித்தேன். அவர் அவற்றைச் சரி பார்த்துக் கொடுப்பார்." என்று குரல் தழுதழுக்க என்னிடம் கூறினார். (அன்று எனக்கு அது ஒரு உன்னத ஆன்மீக அனுபவமாக இருந்தது). தொடர்ந்து "அந்த நிமிடமே பகவான் எனக்குக் குருவும் தெய்வமும் ஆனார். சிவனுடைய அவதாரமே பகவான் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இருக்கவில்லை. என்னைத் தன் உடைமையாக்கிக் கொண்ட அவருக்கு என் கண்களும் மனமும் சொந்தமாகின. நெருப்பின்முன் மெழுகு உருகுவதைப் போன்று, பகவானைக் கண்ட மாத்திரத்தில் என் மனம் கரைந்து தன் தனித்தன்மையை இழந்தது. தாயைக் கண்ட கன்றைப் போன்று பகவானுடைய திருப்பாதங்களில் என் இதயம் இன்பத்தில் ஆழ்ந்தது. பௌர்ணமி இரவில் பொங்கும் கடலைப் போன்று இதயத்தில் பக்தி பொங்கியது." என்று முருகனார் கூறினார். ஞான ஒளி பரப்பிய குருவிற்கும் புகழ்பெற்ற சீடருக்கும் இடையே இருந்த புனிதமான உறவு இறைவனால் அன்று நிறைவு செய்யப்பட்டது என்பதை அறிந்து ஆன்மீக ஸாதகர்களாகிய நாம் பூரிப்படைய வேண்டும். தரிசனமாத்திரத்தில் நிறைவைப் பெற்ற முருகனாருடைய ஆன்மீக வாழ்க்கை மிக உயர்ந்த நிலையில், அன்றிலிருந்து துவங்கியது.

சென்னையில் தனது தாயார், மனைவி இவர்களின் பொருட்டு ஆசிரியர் பணியில் ஈடுபட்டிருந்த முருகனார் மீண்டும் பணிக்குச் செல்ல வேண்டிய வேளை வந்தது. மூன்று மாதங்களுக்குப் பின் அவர் சென்னையிலிருந்து திரும்பிய போதும் பகவானைப் பார்த்த போது அவருக்கு ஒளி வெள்ளத்தால் சூழப்பட்ட பகவானுடைய காட்சி மீண்டும் கிடைத்தது. பகவானுடைய அருட்கடலில் அவர் முழுமையாக மூழ்கி இருந்தார். ஆனால் அவருடைய பொறுப்புக்கள் காரணமாக அருணாசலத்திற்கும் சென்னைக்குமான பிரயாணத்தை அவர் அடிக்கடி மேற்கொள்ள வேண்டியிருந்தது. அவர் தனது தாயிடம் பேரன்பு பூண்டிருந்தார். குருபக்திக்கும் தாய்ப்பாசத்திற்கும் இடையே தான் மிகவும் அல்லலுற்றதாக முருகனார் ஒருமுறை என்னிடம் கூறினார்.

பரவச நிலையிலிருந்த முருகனார், சரியான நேரத்தில் இரயிலைப் பிடித்துச் சென்னைக்குச் செல்வது என்பது மிகவும் கடினமான காரியமே. சில சமயங்களில் பின்னோக்கி ஆச்ரமத்தைப் பார்த்தபடியே கண்களில் ஆனந்தக் கண்ணீர் வழிய மூன்று மைல்கள் நடந்து ரயில் நிலையத்தை அடைந்து ப்ளாட்பாரத்தில் நடந்து கொண்டிருப்பார். அவர் செல்ல வேண்டிய இரயில் வந்து மீண்டும் புறப்படுவதைக் கூட அவர் அறிய மாட்டார். போர்ட்டர் அல்லது ஸ்டேஷன் மாஸ்டர் இவர்களில் யாராவது இவரிடம் வண்டி சென்று விட்டது, என்று கூறியவுடன் பரவச நிலையில் அழுத படியே பகவானிடம் திரும்பி வருவார். இதைப் போன்று பலமுறை நிகழ்ந்த காரணத்தால் பகவான் குஞ்சு ஸ்வாமி அல்லது விஸ்வநாத ஸ்வாமி இவர்களை முருகனாருடன் அனுப்பி "இவரை ரயிலேற்றி விட்டு வண்டி போன பிறகு திரும்பி வாருங்கள்." என்ற உத்தரவோடு அனுப்புவார்.

1924-ம் ஆண்டு முருகனாருடைய தாயார் இறைவனடி சேர்ந்தார். அவர் ஈமக்கடன்களை முடித்து அஸ்தியின் ஒரு பகுதியைக் கொண்ட கலயத்தோடு பகவானிடம் வந்தார். ஆழ்ந்த துயரில் மூழ்கியிருந்த முருகனாரைப் பார்த்த பகவான் "இந்த நிலையில் எப்படி உம்மால் ஈமச்சடங்குகளைச்

செய்ய முடிந்தது?" என்று கேட்ட போது முருகனார் பகவானுக்குத் தன்மீதுள்ள அக்கறையை எண்ணி மனம் உருகி அழுதார். அப்போது யாரோ ஒருவர் அஸ்தி கலசம் ஆச்ரமத்திற்கு வெளியே உள்ளது என்று குறிப்பிடவும் பகவான் முருகனாரை ரமணாச்ரமத்திற்கு அடுத்து உள்ள அக்னி தீர்த்தத்திற்கு அதை எடுத்துச் சென்று கரைக்குமாறு கூறினார். பகவானுடைய கருணையைப் பற்றி என்னிடம் கூறும்போது முருகனார் மிகவும் உணர்ச்சிவசப்பட்டார். 1926-ம் ஆண்டு தனது வேலையை ராஜினாமா செய்து உலகபந்தங்கள் அனைத்தையும் முழுமையாக அறுத்து எரிந்து பூரணமாக பகவானைச் சரணடைந்தார். பகவான் முழுமனதோடு அவரை வரவேற்றார். முருகனாருடைய வாழ்க்கையில் புதியதொரு அத்தியாயம் அன்று தொடங்கியது.

அன்றாட ஆச்ரம அலுவல்களில் தன்னால் இயன்ற உதவியைச் செய்ய முருகனார் முயற்சி செய்தார். உலகக் கடமைகளை நன்கு நிறைவேற்ற அவர் விரும்பிய போதும் அவரது மனம் உண்முகப்பட்டு ஆன்மீக ஸாதனைகள் பழகுவதிலேயே இருந்தது. உலகக் கடமைகளை நிறைவேற்றத் தகுதியற்றிருந்த தான் ஆச்ரமத்தை விட்டு வெளியில் சென்று தனியாக வாழ்வது நல்லதோ என்ற எண்ணம் அவருக்கு உதித்தது. அவர் தன்னுடைய அபிப்ராயத்தைத் தெரிவித்தபோது பகவானும் அதற்கு இசைந்து அருகிலுள்ள பலாக்கொத்தில் தங்குமாறு கூறினார். அன்று முதல் உலகக் கடமைகளிலிருந்து விடுபட்டு, கண்டிப்போடு கூடிய எளிமையான வாழ்க்கையை மேற்கொண்டு பகவானுடைய பாதங்களில் தன் பெரும்பான்மையான காலத்தைக் கழித்தார்.

ஒரு நாள், "நான் உணவுக்காகப் பிக்ஷை தான் எடுக்க வேண்டும்," என்று முருகனார் கூறினார். பகவான் அவருடைய அபிப்ராயத்திற்கு அழகாகவும், யதார்த்தமாகவும் ஒப்புதல் அளித்தார். முருகனார் விஷயத்தில், "சரி, நீர் போய் பிக்ஷையெடும்," என்று சொல்லாமல் எந்தத் தெருவில் போய் பிக்ஷை எடுக்கலாம், எந்த தெருவில் பிக்ஷை எடுக்கக் கூடாது என்பதை அவரிடம் கூறினார். முருகனார் பரவச நிலையை அடைந்தார். பிக்ஷை எடுத்து அந்த உணவைப் பலாக்கொத்திற்கு எடுத்து வருவார். மிகவும் சுத்தம் விரும்பும் முருகனார் பிக்ஷை எடுத்து வந்த உணவை துணியில் கட்டி மரத்தில் தொங்கவிட்டு வந்து, அருகில் இருந்த குளத்திற்குச் சென்று திருப்தி ஏற்படும் வரை கை கால்களைக் கழுவுவார். பல நாட்கள் அவருடைய உணவை குரங்குகள் அபகரித்துவிடும்; அவர் பட்டினியாக இருப்பார். இருந்தும் அவர் குறையேதும் கூற மாட்டார். பதிலாக ஆனந்தமாகப் பட்டினி கிடப்பார். பகவானுடைய ஸாந்நித்தியத்தால் அவருள் புதைந்து கிடந்த புலமை மலர்ந்தது. பகவான் ஊக்குவித்து அறிவுறுத்தியபடி திருவாசகத்தைப் போன்ற நூற்றுக்கணக்கானப் பாடல்களை அவர் இயற்றினார். மற்ற பக்தர்கள் இந்தப் பாடல்களைத் தொகுத்து 'ரமண சந்நிதி முறை' என்ற தனிப்பட்ட ஒரு நூலாக வெளியிட்டனர். இதிலுள்ள 1850 பாடல்களையும் பகவான் பார்த்து, திருத்தம் செய்து தலைப்பும் கொடுத்தார் என்பது இந்த நூலின் சிறப்பு.



**முருகனார் – கடும் தவ வாழ்க்கை**

பகவான் தம்மை ஒரு கருவியாகக்கொண்டு தாமே ரமண சந்நிதி முறையைப் பாடி முடித்தார் என்பதை பல பாடல்களின் மூலம் தெளிவு படுத்தியிருக்கிறார். அவற்றில் ஒன்று

பொங்குமான் மானுபூதியெங்கே என்று
இசைத்தேனிசைத்தும் எய்த்தேன் எய்த்தலும்
அசைத்தே மதியை யருளா லலர்த்தி
என்னிதயத்தே யிலங்கவ் இறைவன்
என்னது செய்கை யிலாதே ரமண
சந்நிதி முறை நூல் சாற்றினன்
தன்னது வாய்மை தழைத்தோங்கிடவே

இந்த நூலின் முக்கியத்துவம் என்ன என்று முருகனாரே கூறுகின்றார். "ரமண சந்நிதி முறையின் குறிக்கோள். வாரிவழங்கும் குரு ரமணரின் பாதங்களை உறுதியாகப்பற்றி அகங்காரம் என்னும் அஞ்ஞான இருளை அவருடைய அருள் ஒளியால் விலக்குவது தான்" என்று கூறியுள்ளார்.

அகங்காரத்தை கொலை செய்யும் வித்தையை எங்குக் கற்றீர் என்று முருகனார் பகவானைப் பார்த்து நயம்பட வினவும் பாடல் பின்வருமாறு

பயிலுந்தலம் எதுவோ கொலை பயில்வித்தவர் எவரோ
தயையின் சொருபந்தாங்கும் அந்தணர் தம் பெருமரபான்
உயலின் உளம் உடையோர் உயிர் ஒழியப்பிறிது உகவான்
இயலுங்குரு பரவேங்கடனிடம் உய்ந்திடலாமே (உயிருண்ணி - சந்நிதி முறை)

பகவானிடம் முருகனார் வந்த போது அவர் வேதாந்த நூல்களைப் படித்திருக்கவில்லை என்பதால் பகவானுடைய உபதேசங்களை. குறிப்பாக பகவானுடைய ஆத்ம விசாரத்தை. உள்வாங்கிக் கொண்டு சுலபமாகக் கிரஹித்துக் கொள்ள அவரால் முடிந்தது. பக்தர்களுடைய கேள்விகளுக்கு பகவான் அளித்த விடைகளை முருகனார் தனது குடிலுக்கு வந்த உடனேயே பாடல்கள் உருவில் பதிவு செய்து வைப்பார். நூற்றுக்கணக்கான பாடல்களால் உருவான அந்த வினாவிடைகள் தொகுக்கப்பட்டு `குருவாசகக் கோவை' என்ற பெயரில் அச்சிடப்பட்டது. இந்த நூலிலும் கூட ஒவ்வொரு பாடலும் பகவானால் திருத்தப்பட்டு தலைப்பும் கொடுக்கப்பட்டு பகவானால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இந்த இரு புத்தகங்களுமே ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. குரு வாசகக் கோவையில் கூறப்பட்டுள்ள கருத்து என்ன என்பதை அதில் உள்ள ஒரு பாடலே இதை விளக்குகின்றது: `சக்தி எதுவும் இல்லாத இந்த உடம்பு நீ அன்று.' உள்ளே இருக்கும் நிரந்தர ஆனந்த ஸ்வரூபமான ஆத்மாவில் தொடர்ந்து கவனம் செலுத்து; நீ என்று எண்ணிக் கொண்டிருக்கும் இந்த உடம்பு உண்மையானது அல்ல; அது நீயும் அல்ல; உண்மையான நீ என்பது உன்னுள் இருக்கும் மெய்ப்பொருளே; அதைக் கவனமாக விசாரம் செய்து அறிந்து கொள். பொய்மையிலிருந்து ஸத்தியத்திற்குச் செல்' என்று கூறுகிறது.

முருகனார் ஸ்ரீ ரமண தேவமாலை. ஸ்ரீ ரமண சரணபல்லாண்டு. ஸ்ரீ ரமண அனுபூதி. ஸ்ரீ ரமண ஞானபோதம் போன்ற பல அருமையான நூல்களைத் தொடர்ந்து எழுதினார். அவர் எழுதிய நூல்களின் ஆன்மீகக் குறிக்கோள்களை `பிரார்த்தனைகளும் புகழ்மாலைகளும்'. `புனிதமான நேரிடையான உபதேசங்கள்'. `ஆன்மானுபவத்தின் பேரானந்தம்' என்ற மூன்று தலைப்புகளில் பிரிக்க முடியும். இவற்றைச் செயல்படுத்துவதற்காகவே அவருக்கு பாடல்கள் எழுதும் திறனைக் கொடுத்து பகவான் அனுக்கிரஹம் செய்தார். "ஸத்தியமேயான பகவான் என்னுடைய இதயத்தை முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டு விட்டார். அதனால் அவரைப்பற்றியும் எனக்கு அவர்மீது இருந்த

பரவசமூட்டும் பக்தியைக் குறித்தும், அவருடைய நேரடி உபதேசங்களைக் குறித்தும் மட்டுமே அந்தப் புத்தகங்களில் எழுதினேன். இந்தப் புத்தகங்களை எழுதும் போது வேறு எந்தவிதமான சிந்தனையும் எனக்கு இருக்கவில்லை," என்று முருகனார் கூறியுள்ளார்.

முருகனாரின் முதல் நூலான ரமண சந்நிதி முறை வெளியிடப்பட்டபோது அதற்கு எதிர்மறையான விமர்சனங்களும் மிகுந்த எதிர்ப்பும் இருந்தன. இதன் காரணமாக அந்தப் புத்தகத்தை விநியோகிப்பதையே நிறுத்தி விட்டனர். ஆச்ரம நிர்வாகத்தினரின் பலமான எதிர்ப்புக்குக் காரணமாக இருந்தது அந்தப் புத்தகத்திலிருந்த ஒரு பாடல் : "அவருடைய அருட்பார்வையை ஒரே ஒரு முறை தீவிரமாக என் மீது செலுத்தி, பகவான் ரமணர் என் ஆணவத்தை அடியோடு அழித்து, பதிலாகத் தன்னுடைய ஆனந்த நிலையை எனக்கு அருளினார்," என்பதாகும். எந்தப் பிரயத்தனமுமின்றி தானாகவே வெளிவந்த பாடல் இது. இந்தப் பாடல் சர்ச்சையை கிளப்பியதற்குக் காரணம் அதை எதிர்த்தவர்கள் முருகனார் தனது ஆணவத்தால் தன்னை பகவானுக்கு சமமாகக் குறிப்பிட்டுக் கொள்கிறார் என்று அவர்கள் எண்ணியதே.

ஒரு நாள் விஸ்வநாத ஸ்வாமி பகவானுடைய ஸந்நிதியில் ஹாலில் அமர்ந்திருந்த போது முருகனார் பக்தியில் தன்னை மறந்து பகவானுடைய அன்பை விழுங்கி விடுவது போன்று பரவச நிலையில் அவரைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்ததைக் கவனித்தார். இந்த காட்சி விஸ்வநாத ஸ்வாமியின் மனதைத் தொட்டது. "முருகனார் எத்தனையோ ஏமாற்றங்களை எதிர்கொண்டிருந்த போதும் அவற்றிற்கு அப்பால் சென்று பகவானைப் பார்த்தபடி அவரது பக்தியில் மூழ்கியிருக்கிறாரே," என்று வியந்தார். தான் என்ன செய்கிறோம் என்பதே புரியாமல் விஸ்வநாத ஸ்வாமி முருகனாரின் புனைப்பெயரான முகவாபுரி முருகன் என்பதை மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருந்தார். இதைச் செவிமடுத்த பகவான் திரும்பி அவரைப் பார்த்து "விஸ்வநாதா! அவருடைய பெயரை மீண்டும் மீண்டும் சொல்வதால் என்ன லாபம்? அந்த இரண்டு பதங்களையும் உபயோகித்து நீ ஏன் ஒரு பாடல் எழுதக் கூடாது?" என்று கேட்டார். பகவானுடைய உத்தரவுப்படி ஒரு காகிதத்தை எடுத்து அந்த இரு வார்த்தைகளையும் வைத்து ஒரு பாடலை இயற்ற முற்பட்டார் விஸ்வநாத ஸ்வாமி. எத்தனை முயற்சி செய்தும் அந்த இரு சொற்களுக்கு மேல் அவரால் எதுவும் எழுத முடியவில்லை. பல முயற்சிகள் பயனற்றுப்போன பின் எழுதுவதைக் கைவிட்டார். அந்த இரண்டு பதங்கள் எழுதப்பட்ட காகிதத்தை பகவான் முன் வைத்து விட்டு ஹாலை விட்டு வெளியே சென்று விட்டார்.

விஸ்வநாத ஸ்வாமி திரும்பி வந்து பார்த்தபோது அந்தப் பாடலை நிறைவு செய்து, விஸ்வநாதன் எதையும் எழுதாத போதும் அவருடைய பெயரை அடியில் குறிப்பிட்டு இருந்தார் பகவான். முருகனார் பேசுவது போன்று பகவான் அந்தப் பாடலை அமைத்திருந்தார்.

அகத்தாமரை மலர் மீதுறை அருணாசல ரமணன்
நகைத்தான் உற விழித்தான் அறச்செகுத்தானெனதுயிரை
மிகத்தான் அருள் சுரந்தானென முகவாபுரி முருகன்
செகத்தாருய வகுத்தான் முறை திருவாசக நிகரே.

"நம் இதயத் தாமரையில் உறையும் அருணாசல ரமணன் என் ஆணவத்தை எள்ளி நகைத்து தனது ஒரே ஒரு அருட்பார்வையினால் அழித்தார். இவ்வாறு முகவாபுரி முருகனான எனக்கு அருள் பாலித்து திருவாசகத்துக்கு ஈடான எனது ரமண சந்நிதி முறை என்ற நூல் மூலம் உலகம் முழுவதற்கும் ஞான ஒளியைப் பரப்புமாறு செய்தார்" என எழுதப்பட்டிருந்தது. இந்தச் செய்யுள் பகவானால் எழுதப்பட்டது என்பதால் தனி மஹத்துவம் வாய்ந்தது. யாரும் கேட்காமலேயே இந்தப்

பாடலில் தன்னுடைய உண்மையான பெயர் அன்றும் இன்றும் எப்போதும் அருணாசல ரமணன் என்பதே என்று பகவான் தெளிவு படுத்தியுள்ளார். அதோடு பகவான் ஒவ்வொருவருள்ளும் உறைவதோடு அவரவருடைய `நான்` என்று ஒரே விதத்தில் விளங்குவதாக உறுதி அளித்துள்ளார். புகைப்படத்தின் மூலம் வெளிப்படும் அவரது அருட்பார்வைக்குக் கூட அகங்காரத்தை அடியோடு கரைக்கக்கூடிய சக்தி உள்ளது. அத்துடன் குறிப்பிட்ட சீடர்களுக்கு மட்டுமல்லாமல் மனிதகுலம் முழுவதுமே ஆத்மாவில் மீண்டும் நிலைபெற வேண்டும் என்பதற்காகவே தான் அவதரித்துள்ளதை பகவான் வெளிப்படுத்தியுள்ளார். இந்தப் பாடல் அதைத் தெளிவுபடுத்துகிறது என்பதால் மிகவும் முக்கியமான பாடலாகும்.

முருகனார் முதல் முறை பகவானைப் பார்த்தபோதே அவருடைய அருள் பார்வையைப் பெற்று பரவச நிலையை அனுபவித்தார். என்றாலும் இத்தகைய பரவசநிலை காலப் போக்கில் மட்டுமே உறுதிப்படும் என்பதைத் தீவிர ஸாதகர்கள் என்ற நிலையில் நாம் மனதில் கொள்ள வேண்டும். இந்தப் பாடல் எழுதி முடித்தபோது பகவான் மீண்டும் அவரை நோக்கினார். இதன் விளைவாக அவர் அனுபவித்த நிலையில் நூற்றுக்கணக்கான பாடல்கள் அவரிடமிருந்து தாமாகவே வெளிப்பட்டன. அந்தப் பரவச நிலையில் மூழ்கி இருக்கவே முருகனார் விரும்பினார். ஏற்கனவே குருவோடு இருக்கும் நேரத்தைத் தவிர தனியாக அவருடன் இருந்து உரையாடி இறையின்பத்தில் நிரந்தரமாக மூழ்குவதற்குப் பிரார்த்தித்தார். இந்த தனது ஆழ்ந்த விருப்பத்தை யாரிடமும் பகவானிடம் கூட அவர் தெரிவிக்கவில்லை.

ஆச்ரமத்தில் அந்த நாட்களில் சில பக்தர்கள் காட்டிற்குள் சென்று ஒரு சில குறிப்பிட்ட மரங்களிலிருந்து தையல் இலை தைப்பதற்கான இலைகளைப் பறித்து வருவது வழக்கம். ஒரு நாள் காலை சிலர் அம்மாதிரி காட்டிற்குச் செல்லத் திட்டமிட்டிருந்தனர். பகவான் முருகனார் மீது அர்த்தமுள்ள கூரிய பார்வையைச் செலுத்தினார். அதன் உள்அர்த்தத்தைப் புரிந்து கொண்ட முருகனார் பகவானைத் தொடர்ந்து வேகமாக ஹாலிலிருந்து வெளியே வந்தார். இலை பறிக்க கிளம்பியவர்களும் பகவானைத் தொடர்ந்தனர். ஆனால் பகவான் அடர்ந்த காட்டுப் பகுதிக்குள் வேகமாக முருகனாரைக் கூட்டிச் சென்று விட்டதால் மற்றவர்கள் பின்தங்கிவிட்டார்கள். பகவான் வெட்டப்பட்ட பெரிய மரத்துண்டு ஒன்றில், தான் அமர்ந்து கொண்டு முருகனாரையும் அருகில் உட்காரும்படி ஜாடை செய்தார். இருவரும் பேசிக் கொள்ளவில்லை. பகவான் அவரை ஊடுருவிப் பார்த்து அகமுகமான ஆனந்தநிலையில் இருத்தினார். முருகனார் கண்ணைத் திறந்த போது, பொழுது சாய்ந்துவிட்டதையும் தான் தனியாக இருப்பதையும் உணர்ந்தார். அவர் அந்தப் பரவச நிலையில் பல மணி நேரங்கள் இருந்திருக்கிறார். அப்போதிலிருந்து ஆழ்ந்த அமைதியிலும் பேரானந்த நிலையிலும் மூழ்கி இருந்தார். முருகனாருடைய இந்த அனுபவத்தை அவரது பின்வரும் பாடலில் காணலாம்.

வட்டிற்கு இலைபறிக் கெனவனத் தெனைக்கொடு போகி
உலைவறக் கண்ணோக்கு உவகையின் உதவியும்
உகண்டவென் னுயிருணர் வொடுக்கிநள் ளியாமத்து
அகண்ட சிவானுபவ வாலறி வளித்தும் (கீர்த்தித் திருவகவல் - சந்நிதி முறை)

"அஹங்காரத்தினால் தூய்மையற்ற இந்த உடம்பே `நான்` என்று எண்ணியதால் அதளபாதாளத்தில் விழுந்துவிட்டேன். இப்போது தூய்மையான தெய்வீக ஞானமே உருவான குரு என்னை விழிப்படையச் செய்ததால், அமைதியும், இயல்பான உணர்வுநிலையுமான பூரணசுத்த ஆத்மா என்ற உன்னதமான நிலையை அடைந்து அதில் திளைக்கிறேன். எழும்பும் அஹங்காரம்

அழிக்கப்பட்டபோது ஆன்மானுபவம் என் இதயத்தை நிறைத்தது. ரமணகுரு தனது அருட்பார்வை என்னும் ஒளியால் என்னை ஆனந்தமாகவே மலரச் செய்து முட்டாளாகிய என்னை புத்தராகவே வாழவைத்தார்," என்று முருகனார் கூறுகிறார்.

பண்டுதொட்டு தங்கள் ஞானம், பக்தி இவற்றின் காரணமாக தேவதேவியரைப் போற்றி தமிழ்மொழியில் பலவித சந்தங்களில், நடைகளில் ஞானியரும் ஸாதுக்களும் எழுதியுள்ளனர். ஆனால் தனது குருவான ரமணமஹர்ஷியின் பேரில் மட்டுமே நாற்பதாயிரம் பாடல்களைத் தூய தமிழில் பலவித சந்தங்களில் முதன்முதலாகத் தனி மனிதனாக இயற்றிய பெருமை கவிஞர் முருகனாரையே சேரும். இது ஆன்மீக உலகில் ஒரு அதிசயம்.

பகவானுடைய வாய்மொழியாகவே அவருடைய நேரடி உபதேசங்களைக் கேட்டவர் என்பதால் இந்த கவிஞரான ஞானியை நாம் மேலும் வணங்குகிறோம். ஆத்ம விசாரத்தையும், ஆத்ம ஸாக்ஷாத்காரத்தையும் பற்றிக் கூறும் நவீன உபநிஷத்துக்களாக விளங்கும் பகவானது நேரடி உபதேசங்களை மூன்று சிறப்பான ஆராய்ச்சி நூல்களாக நாம் பெறுவதற்கு முருகனாரது முயற்சியே காரணம். அந்த மூன்று தத்துவ நூல்கள் முறையே உள்ளது நாற்பது, உள்ளது நாற்பது அனுபந்தம் மற்றும் உபதேச உந்தியார் ஆகியவை. இந்த மூன்று நூல்களும் எல்லையற்ற ஆத்மாவை எவ்வாறு அனுபவிப்பது என்று நமக்கு வழிகாட்டுகின்றன. இவற்றைத் தவிர பகவானுடைய ஆத்ம வித்யா கீர்த்தனம் என்ற ஞானம் பற்றிக் கூறும் பாடலும் நமக்குப் பெரும் உதவியாக உள்ளது.

இந்த தத்துவ நூல்களின் தோற்றம் மிகவும் சுவையானது. 1926-ல் முருகனார் வரும் வரை பகவான் பல தனிப்பாடல்களை எழுதியிருந்தார். ஆனால் அவை தொகுக்கப்பட்டுப் பாதுகாத்து வைக்கப்படவில்லை. முருகனாருக்கு இயல்பாகவே கவிதையின் மீது இருந்த ஈர்ப்பினால் பகவானுடைய பாடல்களை ஆராய்ச்சி செய்து அதில் 21 பாடல்களைத் தேடி எடுத்தார். ஆனால் அவற்றை ஒன்று சேர்த்தபோது அவை ஒரே பொருளைப் பற்றியதாக இருக்கவில்லை என்பதைக் கண்ட போது பகவானுடன் அமர்ந்து அந்த பாடல்களின் பொதுவான கருத்துகளை ஆராய்ந்து பார்த்தார். மெய்ப்பொருள், அதன் ஸ்வரூபம், அதன் அனுபவம் இவற்றைப் பொருளாக முருகனார் தேர்ந்தெடுத்தார். ஏனெனில் பகவானுடன் புனிதமான ஆன்மீக வாழ்க்கையை வாழ்ந்து வந்ததால் வாழ்க்கையில் ஸத்தியமாகவே வாழ்வதன் முக்கியத்துவத்தை அவர் அறிந்திருந்தார். அதனால் மெய்ப்பொருள் பற்றியும் நடைமுறையில் அதோடு இணைவதற்கான வழிகள் பற்றியும் பகவான் எழுத வேண்டும் என்று அவர் விரும்பினார். சில பாடல்கள் இந்தக் கருத்தோடு ஒத்துப் போகவில்லை ஒத்துப் போகாதவற்றை ஒதுக்கிவிட்டு



பகவானின் உபதேசங்களை முருகனார் தனது பாடல்களால் விளக்குதல்

அவற்றிற்கு பதிலாக பகவான் தனது அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டு புதிய பாடல்கள் சில எழுதித் தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இந்தப் பணி 20 நாட்களுக்கு தொடர்ந்தது. தமிழ் இலக்கியப்படி ஒரு குறிப்பிட்ட வடிவத்தில் ஒரு கருத்தை 40 பாடல்களில் கூற வேண்டும் என்ற நியமம் உள்ளது. இவ்விதிகளைப் பின்பற்றி பகவான் பாடல்களை எழுத வேண்டும் என்று முருகனார் கேட்டுக் கொண்டார். பகவானே அந்தத் தொகுப்பிற்கு 'உள்ளது நாற்பது' என்று பெயரும் தந்தார். மேற்கூறிய செய்யுட்களை சரி பார்க்கும் போது ஒதுக்கப்பட்ட சில பாடல்களையும் காப்பாற்றி வைக்க வேண்டும் என்று எண்ணினார் முருகனார். அதற்காக மேலும் சில பாடல்களை பகவானை இயற்றுமாறு வேண்டி நாற்பது பாடல்கள் கொண்ட 'உள்ளது நாற்பது அனுபந்தம்' என்ற நூலைத் தொகுத்தார்.

மற்றொரு சமயம் ரமணரையே தேவதேவியராகப் பாவித்துத் தங்கு தடையின்றி பாடல்கள் எழுதி கொண்டிருந்தார். அவர் ரமண சந்நிதிமுறை என்ற அந்த நூலில் 70 பாடல்களை எழுதி முடித்திருந்தார். வனத்தில் தவம் செய்து கொண்டிருந்த முனிவர்களிடையே சிவபெருமான் ஆன்மீக உபதேசங்களைக் கூற வேண்டி வந்தபோது முருகனாரால் தொடர்ந்து எழுத இயலவில்லை. அப்போது அவர் பகவானை நோக்கி, "நீங்களே சிவபெருமான். நான் எழுத இயலாமல் நிற்கும் இந்த நிலையில் நீங்கள் அருளிய உபதேசங்களை தொகுத்து மேலும் 30 பாடல்களைப் பாடி அருள வேண்டும்." என்று ரமணமஹர்ஷியை வேண்டிக் கொண்டார். அவர் வேண்டுகோளிற்கு இணங்க முப்பது பாடல்களை கொண்டதும் ஸத்தியமாகவே எவ்வாறு இருப்பது என்பதைப் படிப்படியாக எடுத்துக் கூறுவதுமான 'உபதேச உந்தியார்' என்ற நூலை பகவான் அருளினார். ஒருவர் ரமண சந்நிதிமுறையைப் பற்றிக் கூறும் போது "நீங்கள் எழுதிய நூல்களில் இதுவே மிகவும் சிறந்தது." என்று முருகனாரைப் பாராட்டினார். "இந்தியாவில் மஹாபாரதம் மிகவும் சிறந்த இதிகாசம் என்று கூறப்படுகிறது. ஏனென்றால் பகவானுடைய நேரடி உபதேசம் பகவத்கீதையின் உருவில் அதில்தான் உள்ளது. என்னுடைய ரமண சந்நிதிமுறையை நீங்கள் சிறந்த நூலென்று கூறுவீர்களானால் அதற்குக் காரணம் பகவானுடைய உபதேச உந்தியார் அதனுள் அடங்கி இருப்பது தான்." என்று முருகனார் கண்ணீரோடு கூறினார்.

நூற்று ஐம்பது வருடங்களுக்கு முன்பு வாழ்ந்த ஒரு சிறந்த கவிஞரான கோபாலகிருஷ்ண பாரதி எழுதிய சில பாடல்களில், மனிதன் ஆத்மானுபவத்தை பெறுவதுதான் உலகில் மிகவும் கடினமான காரியம் என்று சொல்லப்பட்டிருந்தது. இதை முருகனாரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. 'அதுதான் மிகவும் சுலபமானதாக இருக்க வேண்டும். எவ்வாறு அது மிகவும் கடினம் என்று கூறலாம்?' என்று விவாதித்தார். பகவான் முன்னிலையில் "ஆன்மாவை அறிந்து கொள்வதுதான் மிகவும் சுலபமான காரியம்." என்று பொருள்பட எழுத ஆரம்பித்தார்.

"ஐயே! அதி சுலபம்! ஆன்மவித்தை
ஐயே! அதி சுலபம்"
என்னும் பல்லவியையும்
"நொய்யார் தமக்கும் உளங்கை ஆமலகக்கனி
பொய்யாய் ஒழிய மிகு மெய்யா உளது ஆன்மா"
என்னும் அனுபல்லவியையும் இயற்றினார்

இருந்த போதிலும் நம்பிக்கை ஊட்டும் விதத்தில் அதை மேற்கொண்டு எடுத்துக் கூற இயலாமல் போனதால் முருகனாரால் தொடர்ந்து எழுத முடியவில்லை. எழுதிய காகிதத்தை பகவானுடைய மஞ்சத்தில் வைத்துவிட்டு வெளியே சென்று விட்டார். அவர் திரும்பி வந்தபோது

ஆத்ம ஞானம் குறித்த சில பாடல்களைக் கொண்டதும், பகவானுடைய அனுபவ நிலை குறித்தும், அடைவதற்கு நமக்கும் அது எத்துணை எளிது என்பதையும் கூறும் ஆத்மவித்யா கீர்த்தனத்தை பகவான் எழுதி வைத்திருந்தார்.

ஆத்மவித்யா கீர்த்தனம் :

மெய்யாய் நிரந்தரம் தான் நையாது இருந்திடவும்
பொய்யாம் உடம்பு உலகம் மெய்யாய் முளைத்து எழும் பொய்
மையார் நினைவு அணுவும் உய்யாது ஒடுக்கிடவே
மெய்யார் இதயவெளி வெய்யோன் சுயமான்மா —
விளங்குமே; இருள் அடங்குமே; இடர் ஒடுங்குமே;
இன்பம் பொங்குமே. (ஐயே) (1)

ஊன் ஆர் உடல் இதுவே நான் ஆம் எனும் நினைவே
நானா நினைவுகள் சேர் ஓர் நார் எனும் அதனால்
நான் ஆர் இடம் எது என்று உட்போனால் நினைவுகள் போய்
"நான் நான்" எனக்குகையுள் தானாய்த் திகழும் ஆன்ம —
ஞானமே; இதுவே மோனமே; ஏகவானமே; இன்பத்தானமே. (ஐயே) (2)

தன்னை அறிதல் இன்றிப் பின்னை எது அறிகில் என்
தன்னை அறிந்திடில் பின் என்னை உளது அறிய
பின்ன உயிர்களில் அபின்ன விளக்கு எனும் அத்
தன்னைத் தனில் உணர மின்னும் தனுள் ஆன்ம —
ப்ரகாசமே; அருள் விலாசமே; அகவிநாசமே; இன்பவிகாசமே. (ஐயே) (3)

கன்மாதி கட்டவிழ சென்மாதி நட்டம் எழ
எம்மார்க்கம் அதனினும் இம்மார்க்கம் மிக்கு எளிது
சொல் மானத தனுவின் கன்மாதி சிறிதின்றிச்
சும்மா அமர்ந்திருக்க அம்மா அகத்தில் ஆன்ம —
சோதியே; நிதானுபூதியே; இராது பீதியே; இன்ப அம்போதியே. (ஐயே) (4)

விண் ஆதிய விளக்கும் கண் ஆதிய பொறிக்கும்
கண்ணாய் மனக்கணுக்கும் கண்ணாய் மனவிணுக்கும்
விண்ணாய் ஒரு பொருள் வேறு எண்ணாது இருந்தபடி
உள் நாடு உளத்து ஒளிரும் அண்ணாமலை என் ஆன்மா
காணுமே; அருளும் வேணுமே; அன்பு பூணுமே; இன்பு தோணுமே. (ஐயே) (5)

பலவீனமானவர்களுக்கும் கூட ஆத்மா மிகவும் உண்மையானது. அதோடு ஒப்பிடும் போது கையில் உள்ள நெல்லிக்கனிகூட மாயை என்று கூறலாம். ஒரு மாலையில் நூல் எவ்வாறு மணிகளை ஒன்று சேர்க்கின்றதோ அதே போன்று 'நான் உடம்பு' என்ற எண்ணமே எல்லா எண்ணங்களையும் இணைக்கிறது. நான் யார்?' எங்கிருந்து வந்தேன்?' என்று உள்ளே ஆத்மவிசாரத்தில் மூழ்கும் போது மற்ற எண்ணங்கள் அனைத்தும் மறைந்து 'ஆத்மா' 'நான்' 'நான்' 'நான்' என்று இதயகுகையில் தானாகவே பிரகாசிக்கிறது. இத்தகைய தன்னுணர்வே சுவர்க்கம் அமைதி. ஆனந்தத்தின் இருப்பிடம்.

பகவானுக்கும் முருகனாருக்கும் இடையேயிருந்த உறவை நாம் ஆராயும் போது ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைவது உண்மையாகவே மிகவும் எளிது என்பதை உணரலாம். முருகனாரைப் பொறுத்த வரையில் பகவானைத் தவிர அவருக்கு வேறு கடவுள் இல்லை; ஆத்ம விசாரத்தைத் தவிர வேறு பாதை இல்லை; மௌனத்தில், ஆத்மாவில் நிலைத்திருப்பதைத் தவிர வேறு குறிக்கோளும் இல்லை. அவருடைய பெருமைக்கெல்லாம் மகுடம் வைத்தது போன்று விளங்கியது அவரது புத்தகங்களோ அல்லது பகவானிடமிருந்து உண்மைகளைச் செய்யுள் வடிவில் வரவழைத்ததோ அன்று; தான் எழுதிய ஒவ்வொரு வார்த்தையையும் தனது வாழ்க்கையில் வாழ்ந்து காட்டியதே அது.

அவருடைய கவிதைத் திறனின் சிறப்பை உணர்ந்த அரசர்கள் தங்களது அரச சபைக்கு அவர் வரும் பட்சத்தில் செல்வத்தையும் ஆடம்பர வாழ்க்கையையும் அவருக்கு அளிப்பதற்குத் தயாராக இருந்தனர். ஆனால் உண்மையையே வாழ்வாகக் கொள்ள விரும்பிய அவர் பகவானது நிழலில் திருவண்ணாமலைத் தெருக்களில் பிக்ஷுவாக இருப்பதைத் தேர்ந்தெடுத்தார். பகவானது உபதேசங்களை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மணியும் ஒவ்வொரு நிமிடமும் கடைப்பிடித்து வாழ்ந்தார். அவர் 24 மணிநேரமும் பகவானுடன் இருந்ததால் 'பகவானது நிழல்' என்ற பட்டப் பெயரைப் பெற்றார். இந்து சாஸ்திரங்களில் மிகச்சிறப்பாக கூறப்படும் 'குரு-சிஷ்ய உறவுக்கு நடைமுறையில் எடுத்துக்காட்டாக விளங்கியது முருகனாருக்கும் பகவானுக்கும் இடையே இருந்த உறவு. இந்து சாஸ்திரங்கள் அனைத்துமே வினா-விடை உருவத்தில் எழுதப்பட்டுள்ளன. அதில் தர்ம சாஸ்திரங்கள் உட்பட அனைத்து விஷயங்களிலும் சீடன் கேட்கும் கேள்விக்கு குரு பதிலளிப்பதாக உள்ளது. இந்து பண்பாட்டில் 'குரு சிஷ்ய உறவு' எத்தனை அழகாக விளக்கப்பட்டுள்ளது என்பதை முருகனாரின் எஞ்சிய காலத்தை வெகு விரைவில் நாம் ஆராயும் போது காண்போம்.

முருகனார் முழு நேரமும் பகவானின் திவ்ய ஸந்நிதியிலேயே இருந்தார். பகவானுக்குப் புத்தக அறிவு அவ்வளவாக இருக்கவில்லை. ஆனால் முருகனார் தமிழ் இலக்கியத்தை விரிவாகப் படித்திருந்தார். சில சமயம் முருகனாருடன் தனியாக இருக்கும் போது ஒரு புத்தகத்தின் ஸாரத்தை எடுத்துரைக்கும்படி அவரிடம் பகவான் கேட்பார். ஒரு நாள் முருகனார் பரவச நிலையில் சில உயர்ந்த புத்தகங்களின் ஸாரத்தை பகவானிடம் பகிர்ந்து கொண்டார். மிகக் கவனமாகக் கேட்குமியல்புள்ள பகவானுடன் அன்று பல புத்தகங்கள் விவாதிக்கப்பட்டன. பிறகு அவர் முருகனாரைப் பார்த்து "முடிவாக, இந்தப் புத்தகங்கள் அனைத்தின் ஸாரமும் ஸத்தியம் ஒன்றே என்பதை காட்டுகின்றது. அடைய வேண்டிய லட்சியம் ஒன்றே; ஆனால் வழிகளும் வழிகாட்டும் படங்களும் மிகவும் வேறுபட்டவை. அனேக பாதைகள், சாஸ்திரங்கள், புத்தகங்கள், விளக்கங்கள், உதாரணங்கள், படங்கள் இவை இருந்த போதிலும் ஒரு உண்மையே அவற்றின் ஸாரம்" எனக் கூறினார். முருகனார் புளகாங்கிதமடைந்து ஆர்வத்தோடு "ஆம் பகவானே! அது உண்மைதான்! அத்தனை புத்தகங்களையும் படித்தது காலவிரயம்தான் என்பதை இப்போது நான் உணர்கிறேன்" என்றார். "நீர் அப்படி நினைக்க வேண்டாம். அந்தப் புத்தகங்களையெல்லாம் படித்ததால் தான் அவை அனைத்தின் ஸாரமும் 'உண்மை ஒன்றே' என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம். அவற்றையெல்லாம் நாம் படிக்காமல் விட்டிருந்தால் வேறு ஏதாவது புத்தகங்களில் புதிய கருத்துக்கள் கூறப்பட்டிருக்கலாம் என்ற எண்ணத்தை நம் மனம் எழுப்பி, அவற்றைப் படிக்க நம்மைத் தூண்டிக் கொண்டேயிருக்கும். அதனால் படிப்பதிலும் ஒரு அர்த்தம் உள்ளது. பலவிதமான சடங்குகளையும் பூஜைகளையும் செய்வது ஒரேயொரு எளிய உண்மை மட்டுமே உள்ளது என்பதைப் புரிந்து கொள்வதற்காக மட்டுமே. அவை ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு முக்கியமானவை அல்ல என்றாலும் அவற்றைக் கடைப்பிடிப்பது மிகவும் அவசியம்.

மற்றொரு நாள் ஹாலில் நுழைந்த முருகனார் சரஸ்வதி பூஜைக்காக மாலைகளால் அலங்கரித்து அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்களை பகவான் முன்னால் பார்த்தார். முருகனார் பகவானை நமஸ்கரித்து குறும்புத்தனமாகச் சிரித்தார். 'எதற்காகச் சிரிக்கிறீர் ஓய்?' என்று கேட்பது போல் முகத்தில் கேள்விக்குறியோடு பகவான் முருகனாரைப் பார்த்தார். "பகவான்! எனக்கு மிகவும் வேடிக்கையாக இருக்கிறது" பின் பகவானைச் சுட்டிக் காட்டி, "அந்த மெய்ப்பொருளே இங்கு வீற்றிருக்கும் போது இந்தப் புத்தகங்கள் அனைத்தும் 'உமி'க்கு ஸமானம். ஸாரத்தைப் பூஜை செய்வதற்குப் பதிலாக உமிக்குப் பூஜை செய்துள்ளார்கள்" என்று கூறினார். கவிஞரானதால் அவர் கீழ்க்காணும் உதாரணத்தையும் கூறினார் - "பகவானே! சற்று எண்ணிப் பாருங்கள். சிறந்த கரும்புகளைப் பிழிந்து சாறெடுத்துச் சர்க்கரையாக்கி அந்தச் சர்க்கரையால் ஒரு மனித உருவம் செய்யப்பட்டது என்றால் நீங்கள் தான் அந்தச் சர்க்கரை. இந்த புத்தகங்களோ கரும்புச் சக்கைக்கு ஈடானவை. சர்க்கரையே ஆன உங்களுக்கு மரியாதை செய்யாமல் சக்கையான புத்தகங்களுக்கு மரியாதை செய்துள்ளனரே!" என்ற போது முருகனார், பகவான் இருவருமே சிரித்தனர்.

முருகனாருக்கும் பகவானுக்கும் நெருக்கமான உறவு இருந்தபடியால் முருகனாருக்காக பகவான் காத்திருப்பார். அவர் உள்ளே நுழைந்த மறுகணமே, அவர் வணங்குவதற்குக் கூட நேரமளிக்காமல் பகவான் ஒரு கேள்வி கேட்பார். முருகனாருடைய புலன்களும் அவருடைய கவனமும் பகவானிடமும் பகவானுடைய வார்த்தைகளிலும் முழுமையாக லயித்திருக்கும். பகவானுடைய கேள்வியைக் காதில் வாங்கிக் கொண்டு நமஸ்காரம் செய்யும் போதே, பச்சோந்தியை போன்று தலையைத் தூக்கி பதில் கூற ஆரம்பித்து விடுவார். பக்தர்கள் இந்த ஸம்பாஷணைக்குப் பல்லிப் பேச்சு என்று பட்டப்பெயர் கொடுத்திருந்தார்கள். சில சமயங்களில் இத்தகைய ஸம்பாஷணை நீண்ட நேரம் நடக்கும் என்றும் 'தரையில் படுத்த வண்ணம் பேசிக் கொண்டிருக்கிறேன்' என்பதையும் தான் உணரவில்லை என்று முருகனார் என்னிடம் கூறியிருக்கிறார். தன்னை குதூகலிக்கச் செய்த இந்த பல்லிப் பேச்சைத்தான் பழைய ஹாலுக்கு வந்த போதாவது நிறுத்திக் கொள்ள வேண்டும் என்று விஸ்வநாத ஸ்வாமி முருகனாரிடம் கேட்டுக் கொண்டார். "ஜனங்கள் இந்த வேடிக்கையை குதூகலமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்பது எனக்குத் தெரியும். அதே சமயத்தில் பகவானை வணங்கும் போது பகவானுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்வதில் நான் முழுமையாக ஆழ்ந்திருப்பேன் என்ற காரணத்தினால் நான் தரையில் படுத்திருப்பதையே உணரமாட்டேன். படுத்துக் கொண்டு பேசுவதால் நான் பேசுவது பகவானுக்குத் தெளிவாகப் புரியாது என்பதால் சிரமப்பட்டு அதை கவனிப்பார். இவை ஒன்றையுமே நான் பொருட்படுத்தவில்லை ஏன் என்றால் என்னைப் பொருத்தவரையில் பகவான் கேட்ட கேள்விக்கு நான் பதில் கூறியாக வேண்டும் என்ற ஒரே சிந்தனையைத் தவிர வேறு எதுவுமே இருக்க வில்லை" என்று முருகனார் நினைவு கூர்ந்தார்.



"ப்ரஹ்மானந்தத்தில் மூழ்கி இருத்தல்"

சில சமயங்களில் பகவான் முன் அமர்ந்திருக்கும் போது முருகனாருக்குக் கவிதைகள் பொங்கி வந்து கொண்டிருக்கும் பகவான் மலைமீது நடப்பதற்காகவோ அல்லது மாட்டுக் கொட்டிலிற்கோ

சென்று திரும்பி வருவார். அப்போதும் முருகனார் அங்கேயே உட்கார்ந்து எழுதுவதில் முழுமையாக மூழ்கியிருப்பார். சில சமயங்களில் பகவான் அவரிடம் ஒரு கேள்வியைக் கேட்டு விட்டு பதிலுக்காகக் காத்திருப்பார். எழுதுவதில் தீவிரமாக ஈடுபட்டிருக்கும் முருகனார், அருகிலேயே பகவான் நின்று கொண்டிருக்கிறார் என்பதைக் கூட உணராமலேயே அவரது கேள்விக்குப் பதிலளிப்பார். 'குரு நிற்கும் போது சீடன் அமர்ந்திருந்தால் அது மரியாதையன்று' என்பது இந்து சம்பிரதாயம். அது மட்டுமின்றி பாதாள லிங்க அனுபவங்களுக்குப் பிறகு, பகவானால் அதிக நேரம் நிற்க முடியாது என்பதால் மற்றவர்கள் இவர் நடந்து கொள்ளும் முறையைக் கண்டு அதிர்ச்சியுற்றனர்.

ஆச்ரமத்திலேயே தங்குபவர்களோ அல்லது அங்கு உணவு எடுத்துக் கொள்பவர்களோ ஏதாவது ஒரு விதத்தில் சேவை புரிய வேண்டும் என்று நிர்வாகத்தினர் வற்புறுத்தியதால் முருகனார் ரமணாச்ரமத்தின் நிர்வாகத்திற்குத் துணை நிற்க முயற்சி செய்தார். ஸாதனையில் முழுமையாக மூழ்கியிருந்த முருகனார் இயன்றவரை முயற்சி செய்த போதும் அதில் தோல்வியே அடைந்தார். அதனால் ஆச்ரமத்தை விட்டு வெளியேறி அருகிலிருந்த பலாக்கொத்தில் ஒருவருடைய வீட்டு வராந்தாவில் தங்கி உணவுக்காகப் பிக்ஷை எடுத்துத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய நிலை உருவாயிற்று. பகவான் எப்போதுமே முருகனார் மீது தன் அருளைப் பொழிந்த போதும், ஆச்ரம நிர்வாகத்தில் அவர் குறுக்கிடவேயில்லை.

கவிதை எழுதுவதற்கு அவரது உள்ளுணர்வு தீவிரமாக அவரைத் தூண்டிய பல நாட்களில் தான் உண்ணவில்லை என்பதையும், பிக்ஷைக்குப் போகும் நேரம் வந்துவிட்டது என்பதையும் அவர் மறந்து விடுவார். ஒரு முறை, ஒருநாள் முழுவதுமே உண்ணாதபோதும் அதை அவர் உணரக்கூட இல்லை. 24 மணிநேரம் விரதம் அனுஷ்டிக்கும் மஹாசிவராத்திரிக்கு மறுநாள் பகவானிடம் சென்றார். தன்னைப் பின் தொடர்ந்து வருமாறு சமிக்ஞை செய்துவிட்டு பகவான் கிரிவலத்திற்குப் புறப்பட்டார். முருகனாரும் ஆர்வத்துடன் பகவானைப் பின் தொடர்ந்தார். ஆனால் தொடர்ந்து இரண்டு நாட்கள் உணவு உண்ணாத காரணத்தால் வெகுவிரைவிலேயே அவர் தளர்ந்து போனார். சிறிது தூரம் சென்றபின் முருகனாரின் வாடிய முகத்தைக் கண்ட போது "நேற்று நீர் சாப்பிடவில்லையா? அல்லது சிவராத்திரி என்று விரதம் இருந்தீரா?" என்று கருணையோடு கேட்டார் பகவான். முந்தைய தினம் சிவராத்திரி என்பதே முருகனாருக்கு அப்போது தான் நினைவிற்கு வந்தது. உடனே 'ஆம் பகவானே! நான் சாப்பிடவில்லை" என்று பதில் கூறினார். கிரிவலம் முடிந்தபிறகு முருகனாரிடம் தன்னைத் தொடருமாறு கூறி ரமணாச்ரமத்தில் வந்து நன்றாகச் சாப்பிடுமாறு பகவான் கூறினார். தன்னுடைய தொண்டர்களில் ஒருவரை அனுப்பி முருகனாருக்கு நல்ல முறையில் வயிறு நிறையத் தேவையான உணவு அளிக்கப்படுகிறதா என்பதையும் கவனித்துக் கொள்ளச் சொன்னார். இந்த அன்பின் கரிசனத்தை சந்நிதி முறையில் குறிப்பிடுகிறார்.

திருநாட் சிவராத்திரி எனத் தெரியாது
ஒரு நாள் பட்டினி யிட்டெனை மறுநாள்
விசர்ப்புற வலம்புரிவித்து அருணந்தனைப்
பசிப்பதம் அறிந்து ஊண் பரிந்தளிப்பித்தும் (கீர்த்தித் திருவகவல் - சந்நிதி முறை)

முருகனார் என்னிடம் இந்த நிகழ்ச்சியை பற்றிக் கூறிய போது பகவான் தன்மீது காட்டிய அக்கறையை நினைவு கூர்ந்து உணர்ச்சிவசப்பட்டுக் கண்ணீர் சிந்தினார். ஆனந்தக் கண்ணீர் என்பது இந்த ஒப்புவமையில்லாத பக்தரின் ஒரு அங்கமாகவே ஆகிவிட்டது.

எனினும் இது வழக்கமான நிகழ்வன்று. இதற்கு முற்றும் வேறுபட்ட பல நிகழ்ச்சிகளும் நடந்துள்ளன. ஒரு நாள் T. P. ராமசந்திர ஐயரும் சப்-ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயரும் பகவான் அருணாசலத்தின் மீது எழுதிய அஷ்டகத்தில் ஆறாவது செய்யுளுக்கு விளக்கம் கேட்டனர். ஒரு நாள் சப்-ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயர் அதைப்பற்றி என்னிடம் கூறினார். ஆச்ரமம் வெளியிட்ட ஒரு கட்டுரையிலும் இது குறிக்கப்பட்டிருந்தது. அவர்கள் புத்தகமும் கையுமாக ஹாலுக்குள் நுழைந்தபோது பகவானை ஸாஷ்டாங்கமாக வணங்கிவிட்டு ஊருக்குள் சென்று பிக்ஷை எடுப்பதற்காக முருகனார் விடைபெற்றுக்கொள்வதைக் கண்டனர். "மதிய உணவோடு பரிமாறுவதற்குத் தேவையான இனிப்பு செய்யும் பொருட்டு பலாப்பழத்தை இப்போதுதான் அரைத்துக் கொடுத்தோம். முருகனாருடைய தாயின் திதி இன்று என்பதால் அவர் பிக்ஷைக்காகப் பணம் கொடுத்துள்ளார். முருகனார் இன்றும் நகருக்குள் போய் பிக்ஷை எடுக்க வேண்டியுள்ளதே என்று நாங்கள் மிகவும் வேதனைப்படுகிறோம்" என்று ஒரு தொண்டர் தெரிவித்தபோது பகவானுடைய முகபாவம் மாறியது. "சரிதான். ஆனால் முருகனாரைத் தங்குமாறு அழைத்து நம்மோடு உணவு உட்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்வது யாருடைய பொறுப்பு? அது நிர்வாகத்தினருடைய கடமை அல்லவா? என்று பகவான் சற்றும் பதட்டமின்றிக் கூறினார். இதற்குப் பின்னரும் முருகனார் பிக்ஷை எடுப்பதற்குக் கிளம்பினார். ஆச்ரம நிர்வாகம் கடுமையாக நடந்து கொண்டதைச் சுட்டிக் காட்டுவதற்காக இது இங்கு கூறப்படவில்லை. பகவான் முருகனாருடைய ஆன்மீக முன்னேற்றத்தில் மட்டுமே அக்கறை காட்டினார் என்பதைத் தெளிவுபடுத்துவதற்கே கூறப்பட்டது. அவர் உணவு உண்டாரா இல்லையா என்பதைப் பற்றியோ அல்லது அவருக்கு உடலுக்குத் தேவையான வசதிகள் உள்ளனவா என்பதை அவர் நிர்வாகத்திற்கு விட்டுவிட்டார். பகவானுடைய முழு கவனமும் முருகனார் ஸத்தியத்தில் நின்று தீவிரமான தவ வாழ்க்கையில் ஈடுபடுகிறாரா என்பதில் மட்டுமே இருந்தது.

ஸத்தியமேயான பகவானையும் அஞ்ஞானத்தில் உழலும் நம்மையும் இணைக்கும் பாலமாக முருகனார் திகழ்கிறார். பகவானது உபதேசங்களை முருகனார் வாழ்ந்து காட்டியிருக்கவில்லை என்றால் புத்தர், இயேசுநாதர் இவர்களைப் போன்று பகவானும் அடைய முடியாத ஒரு லட்சியம் என்றே நாம் எண்ணியிருப்போம். வாழ்க்கை முழுவதும் எளிமை, தூய்மை, ஆத்ம ஞானம் என்பவற்றை முருகனார் தன் வாணாள் முழுவதும் ஆத்ம விசாரத்தின் மூலம் வாழ்ந்துகாட்டியிருக்கவில்லை என்றால் நேர் பாதையான நான் யார்? என்ற பகவானது உபதேசத்தைப் புத்தியால் மட்டும் புரிந்து கொள்ள முயற்சி செய்திருப்போமேயன்றி அதன் மையக் கருத்தை நாம் தவற விட்டிருப்போம்; நம்மைப் போன்று சாதாரணமான ஒருவராக இருந்த போதும் பகவானுடைய உபதேசங்களை வாழ்ந்து காட்டி தன்னை முழுமையாக அர்ப்பணித்து புனிதமான வாழ்க்கையை வாழ்வது ஸாத்தியமான ஒன்று என்பதை முருகனார் நமக்கு எடுத்துக் காட்டியுள்ளார். பகவான் அவர்மீது அருளைப் பொழிந்திருக்கிறார்.

பகவானுக்கும் முருகனாருக்கும் இடையேயான நெருக்கத்தை விளக்கும் நிகழ்ச்சிகள் மேலும் சில உள்ளன. அவர்களுடைய உறவில் கடுமையான ஒழுக்கங்கள் மட்டுமின்றி நகைச்சுவைக்கும் குறைவில்லை. முருகனாரும் பகவானும் மற்ற ஸாதுக்களோடு சேர்ந்து காலையில் காய்கறிகள் நறுக்குவார்கள். ஒரு நாள் அவர்கள் கீரையை நறுக்கிக் கொண்டிருந்தார்கள். பகவான் மிகவும் கவனத்தோடு வேரைத் தனியாக வெட்டி எறிந்து தண்டிலிருந்து இலைகளைப் பிரித்து எடுத்தார். இரண்டையும் தனித்தனியே சமைத்து எதுவும் வீணாகாதபடி பார்த்துக் கொண்டார். பகவான், தான் மலையில் வசித்த நாட்களைப்பற்றி நினைவு கூறும் போது முக்கியமாக அங்கேயே வசித்த, உலக

இன்பங்களை எல்லாம் துறந்த 'கீரைப் பாட்டியை' பற்றிக் கூறினார். அவர் பலவிதமான கீரை வகைகளைச் சமையலுக்காகச் சேகரித்து வந்தார் என்பதால் அவருக்குக் 'கீரைப் பாட்டி' என்று பெயர் வந்தது. மலையிலிருந்த ஒவ்வொரு மூலிகை பெயரையும் அதன் தன்மைகளையும் அதனால் ஏற்படும் நலன்களையும் அவர் அறிந்திருந்தார் என்று பகவான் கூறினார். பகவான் கீரை அரிவதை முடித்த பின்னர் முருகனார் கீரையைத் தாறுமாறாக அரிந்து வைத்திருந்ததைப் பார்த்து, முகத்தைச் சுளித்த வண்ணம் 'நீர் எவ்வளவு அழகாகக் குடித்தனம் நடத்தினீரோ அதே போல் உள்ளது நீர் கீரை அரிந்திருக்கும் விதம்' என்று கிண்டலாகக் கூறினார். முருகனார் குடும்பத்தை விட்டு ஓடிவந்திருந்ததால் பகவானுடைய சொற்கள் அவர் மனதைச் சற்றே பாதித்தன. உடனே அவர் ஒரு கவிதையை எழுதி பகவான் முன் வைத்தார்.

நக்கராகி நயந்து ரமணரே
புக்குப்பிகைஷ புலம்பித் திரிவதேன்
தக்கவாறொரு தையல் உதவியாற்
சிக்கெனக் குடிவாழ்க்கை செலுத்துமே (செவிலியிரங்கல் -- சந்நிதி முறை)

வேடிக்கையாக எழுதப்பட்ட அதைப் படித்த பகவான் மிகவும் ரசித்தார். பார்த்துக் கொண்டிருந்தவர்கள் பகவான் ஏன் சிரித்தார் என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்தினால் அவரிடமே அதைப்பற்றி வினவினர். பகவான் அந்தச் செய்யுளைப் படித்துக் காட்டினார். 'ஓ ரமணா! நீங்கள் அசாதாரண திறமையுள்ள ஒரு மனிதர் அவ்வாறு இருக்கும் போது உங்களுக்குச் சமமான திறமையுள்ள ஒரு இளம் பெண்ணைப் பார்த்துத் திருமணம் செய்து கொண்டு குடித்தனம் நடத்த வேண்டியது தானே'? கோவணாண்டியாக உணவிற்காகப் பிக்ஷை எடுத்துத் துறவியாக அலைவதற்குப் பதிலாக எளிதாக ஒரு லட்சிய குடும்பத்தை நடத்தியிருக்கலாமே!" என்று எழுதியிருந்தது. பகவான் மனம் விட்டுச் சிரித்தார். மற்றவர்களும் அவரது ஆனந்தத்தில் பங்கு கொண்டனர்.

ஒரு முறை ஆச்ரமத்தில் மூலிகை எண்ணெய் தயாராகிக் கொண்டிருந்தது. அது பக்குவமான பின் ஒரு பெரிய பாத்திரத்தின் மேல் துணியை விரித்து வடிகட்டப்பட வேண்டியிருந்தது. துணியைத் தான் பிடித்துக் கொண்டு, ஒரு கரண்டியால் எண்ணெய்யைத் துணியின் மேல் ஊற்றுமாறு முருகனாரிடம் பகவான் கூறினார். பகவான் இந்த மூலிகைகளைப் பற்றி பேசிக் கொண்டிருந்த போது, ஒருவரை ஒரு இடத்தில் மறையச் செய்து மற்றொரு இடத்தில் தோன்ற வைக்கக் கூடிய சக்தியுள்ள ஒரு சில மூலிகைகளைப் பற்றியும் குறிப்பிட்டார். பகவான் கூறியவற்றில் முருகனாருடைய மனம் முழுமையாக ஈடுபட்டதால் எண்ணெய் பாத்திரத்தில் நிரம்பி வழிவதையும் கவனிக்காமல் எண்ணெய்யை வடிகட்டுவதற்காக ஊற்றிக் கொண்டு இருந்தார். செய்யும் பணியைச் சிறப்பாகவும் கவனத்தோடும் செய்யக் கூடிய பகவான் "நிறுத்தும் ஓய்! என்ன செய்து கொண்டிருக்கிறீர்? எண்ணெய் வழிந்து ஓடுகிறது" என்று முருகனாரைக் கடிந்து கொண்டார். பிறகு அவரைச் சமாதானம் செய்யும் விதமாக "பாரும் ஓய்! வழிந்து போன எண்ணெய்யைத் தலையில் நன்றாகத் தடவிக் கொள்ளும். உமக்கு இத்தனை விலை உயர்ந்த மூலிகை எண்ணெயை யார் கொடுக்கப் போகிறார்கள்? வாரும் தலையில் நன்றாகத் தேய்த்துக் கொள்ளும்" என்றார் பகவான். முருகனாருடைய கவனம் ஆணி அடித்தாற்போல் பகவானிடம் இருந்தது. அதன் பயனாக எண்ணெயை எடுப்பதற்குப் பதிலாக தரையிலிருந்து மண்ணை எடுத்துத் தடவிக் கொண்டார் அவர். பகவான் "ஓய்! நிறுத்தும். தலையில் எண்ணெயைத் தான் தேய்த்துக் கொள்ளச் சொன்னேன். மண்ணை அல்ல" என்றார். குருவிற்கும் சீடருக்கும் இருக்க வேண்டிய உறவு இது தான்.



**முருகனாருக்கு மிகவும் பிடித்த பகவானது புகைப்படம்**

குருவினுடைய அருள் உயர்ந்த ஞானத்தைத் தூண்டுவதாக மட்டுமல்லாமல் பக்தர்களுடைய நலனையும் கண்காணிப்பதாக உள்ளது.

1926-ல் ரமணாச்ரமத்தில் சேர வந்த போது முருகனார் தனது மனைவி மீனாக்ஷியை சென்னையில் விட்டு வந்திருந்தார். கபடு, சூதுவாது அறியாத சாதுவான படிப்பறிவில்லாத பெண்மணியாக மீனாக்ஷி இருந்தாள். தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அவளுக்கு எந்த வழியும் இருக்கவில்லை. உலகை எவ்வாறு சமாளிப்பது என்பது புரியாமல் தன் தந்தையோடு சில காலம் தங்குவாள். பின் திருவண்ணாமலைக்கு வந்து தன்னுடன் வாழும்படியாக முருகனாரைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்வாள். இம்மாதிரி சமயங்களில் முருகனார் மலைமேல் சென்று எங்காவது மறைந்து

கொள்வார். பகவானுக்கும் கூட அவரைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினமான காரியமாக இருக்கும். ஒவ்வொரு முறையும் அவரைத் தேடுவதற்கு நான்கு பேரை அனுப்பி மூன்று நாட்கள் அவர்கள் தேடிய பிறகே அவரைக் கண்டுபிடிக்க முடியும். கடைசியில் மீனாக்ஷி சொல்வதைக் கேட்கும்படி முருகனாரிடம் பகவான் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். மிகவும் பிடிவாதமாக இருந்த அவர் மீண்டும் மலைக்கு ஓடிச் சென்று விட்டார். அதனால் பகவான் வேறு விதத்தில் மீனாக்ஷியை சமாதானம் செய்ய முற்பட்டார். பகவான் அவரிடம் தனிப்பட்ட அக்கறை காட்டினார். நான் மீனாக்ஷி அம்மாளைப் பார்த்த போது பகவானிடம் தனக்கு ஏற்பட்ட நேரடி அனுபவங்கள் பலவற்றை என்னோடு பகிர்ந்து கொண்டார். அந்த அனுபவங்களை எழுத்து வடிவில் அமைக்கும் படி நான் வேண்டிக் கொண்டபோது அவர் தமிழில் எழுதிக் கொடுத்தார். அவர் எழுதிக் கொடுத்த அந்த நோட்டுப்புத்தகம் தற்போது ஆச்ரமத்தின் ஆவணக்காப்பகத்தில் உள்ளது.

அதில் குறிப்பிடப்பட்டிருந்த ஒரு நிகழ்ச்சி என் இதயத்தைத் தொட்டது. ஒரு நாள் பகவான் மீனாக்ஷியைப் பார்த்து "மீனாக்ஷி! உனக்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார். மீனாக்ஷி அவள் அணிந்திருந்த கிழிந்த புடவையைக் காட்டி "பகவானே! என் புடவையைப் பாருங்கள். எனக்கு என்ன வேண்டும்? உண்ண உணவும் உடுக்க உடையும் தான் தேவை. என் கணவர் என் மீது அக்கறை கொள்ளாததால் எனக்கு அவை கிடைப்பதில்லை" என்று கூறினார். இதைக் கேட்ட பகவான் மிகவும் மனம் நெகிழ்ந்து போய், "மீனாக்ஷி உணவுக்கும் உடைக்கும் உன் வாழ்நாள் முழுவதும் கஷ்டமில்லாதவாறு நான் நிச்சயமாகப் பார்த்துக் கொள்கிறேன்" என்று பதிலிறுத்தார். பகவான் வெறும் வாய் வார்த்தையாக மட்டும் இதைக் கூறவில்லை. உடனே, குஞ்சு ஸ்வாமியை ஊருக்குள் இருந்த ஈசான்ய மடத்திற்கு அனுப்பி ஒரு புடவையைக் கேட்டு வாங்கி வருமாறு அனுப்பி வைத்தார். ஒரு பக்தருடைய மனைவிக்குப் புடவை யாசிப்பதற்காக தனக்கென எதையும் பிறரிடம் யாசிக்காதவரும் கோவணாண்டிகளுக்குத் தலைவருமான பகவான் ஒரு ஸந்நியாசியை இன்னொரு ஸந்நியாசியிடம் அனுப்பி வைத்தார்! குஞ்சு ஸ்வாமி வாங்கி வந்த புடவையை மீனாக்ஷியிடம் கொடுத்து, "மீனாக்ஷி! நீ சந்தோஷமாக இருப்பாய் உன் வாழ்நாள் முழுவதும் உனக்கு உடையும் உணவும் அளிக்கப்படும்," என்று மீண்டும் உறுதி அளித்தார்.

1960-ல் இந்தச் செய்தியை குஞ்சு ஸ்வாமி மூலம் கேட்ட பின்னர் நான் அவரை கவனித்துக் கொள்ள ஆரம்பித்தேன். ஆண்டுதோறும் இரண்டு புடவைகளை அவருக்கு அனுப்பி வைப்பேன். அவருக்கு ஆன்மீக நாட்டமில்லாத காரணத்தால் அவரால் ரமணாச்ரமத்தில் தங்க முடியவில்லை. சென்னையில் தங்குவதே உசிதம் என்று நினைத்தார். அதனால் வாரத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவர் வீட்டிலிருந்து அவருக்கு உணவு அளிப்பதற்கு ஏழு வீடுகளில் ஏற்பாடு செய்திருந்தேன். அவர் மரணப் படுக்கையிலிருந்த போது அவரோடு இருப்பதற்குச் சென்னைக்குச் சென்றேன். அவர் என் மீது ஆசிகளைப் பொழிந்தார். "மீனாக்ஷி அம்மா! நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?" என்று நான் கேட்டேன். அவருடைய வயிறு வீங்கியிருந்தது. அப்போதும், தான் மிகவும் சந்தோஷமாக இருப்பதாக அவர் கூறினார். அவருடைய வார்த்தைகளை என்னால் நம்ப முடியவில்லை. அவர் தொடர்ந்து "பகவான் எப்போதும் என்னுடனேயே இருக்கிறார். அவர் எனக்களித்த உறுதி மொழிகளை உன் மூலமாக நிறைவேற்றியுள்ளார். எனக்கு உணவுக்கும் உடைக்கும் பஞ்சமேயில்லை. கணேசா! ரமணபகவானே இறைவன்" என்றார். முருகனாரின் மனைவி என்ற விதத்தில் அவருக்கு சந்தோஷமான வாழ்க்கை அமையவில்லை. ஆனால் பகவானின் செல்லக்குழந்தை என்ற விதத்தில் தனது இறுதி நிமிடங்கள் வரை எப்போதுமே சந்தோஷமாக

இருந்தார். அவரோடு தொடர்பு கொண்டு சிறிதளவாவது அவருக்குச் சேவை செய்ய முடிந்தது நான் பெற்ற பேறு.

*பகவானுடைய இறுதி நாட்களில்* "பகவான் நீங்கள் நூறு ஆண்டுகள் வாழ வேண்டும் என்னும் பதத்தோடு முடியும் பாடல்களைத் தினமும் ஒன்றாக முருகனார் எழுதினார். பத்மா வெங்கட்ராமன் என்ற பக்தைக்கு அவற்றைப் பாடுவதற்கு பயிற்றுவித்து, தினம் மாலையில் பகவான் முன்னிலையில் பாடும்படி செய்திருந்தார். ஒரு நாள் பத்மா அவர்கள் என்னிடம் 'சரியான உச்சரிப்பிலும் அவர் உபயோகித்த வார்த்தைகளையே பாடுவதிலும் முருகனார் கண்டிப்பாக இருந்தார்' என்று குறிப்பிட்டார். ஒரு முறை அவர் பாட வேண்டிய பாட்டில் 'ஞான பண்டார நாயகா' என்ற சொற்கள் இருந்தன. 'ஞான பண்டார நாயகா' என்றால் ஞான பொக்கிஷத்தை பாதுகாப்பவன் என்று பொருள். உணர்ச்சி வேகத்தில் அவர் 'பண்டார' என்ற சொல்லிற்குப் பதிலாகப் 'பொக்கிஷம்' என்று பாடினார். அந்தப் பாடல் முடிந்த உடன் அருகிலிருந்த

தொண்டரை அழைத்து "அவளிடம் சென்று 'அந்த வார்த்தையைத்தான் முருகனார் எழுதினாரா?' என்று கேட்டுவரும்படியாக பகவான் அனுப்பி வைத்தார். முருகனாருடைய பாணி பகவானுக்கு நன்றாகவே தெரியும் என்பதால் 'பொக்கிஷம்' என்ற சொல்லை அந்த இடத்தில் உபயோகித்திருக்க மாட்டார் என்று அவர் திண்ணமாக அறிந்திருந்தார். முருகனாரைப் போன்றே எழுதப்பட்ட வார்த்தையையே உபயோகப்படுத்த வேண்டும் என்பதற்கு பகவானும் முக்கியத்துவம் கொடுத்தார்.

பகவான் விரைவில் உடலை விடப் போகிறார் என்பதால் பக்தர்கள் அனைவரும் மிகவும் கலங்கிப் போயிருந்தார்கள். தங்கள் முன் பகவான் இல்லையென்றால் தங்களது கதி என்ன என்ற கேள்வி இருந்தது. முருகனார் தலைமையில் சிலரை அனுப்பித் தங்களுக்கு ஒரு செய்தி அளிக்குமாறு பகவானை வேண்டிக்கொண்டனர். அவர்கள் என்ன கேட்கிறார்கள் என்று பகவானுக்குத் தெரியாதா என்ன? "உபதேசங்களைக் கடைப்பிடியுங்கள்" என்பதே அவரது இறுதிச் சொற்களாக இருந்தன. பகவானுடைய நேரடி ஞான உபதேசங்கள் விளக்கப்பட்டுள்ள முன்கூறிய மூன்று நூல்களையும், முக்கியமாக பகவானுடைய இறுதிச் செய்தியான 'உபதேசங்களைக் கடைப்பிடியுங்கள்' என்பதையும் பகவானிடமிருந்து வரவழைத்தது முருகனாரே. 'நான் தேகமன்று' என்பதைக் குறித்து முருகனார் பல பாடல்கள் எழுதியுள்ளார். இருந்த போதும் பகவான் உடலை நீத்த போது அவரைத் தேற்ற முடியாத அளவிற்கு அவர் துயரத்தில் ஒடிந்து போனார்.

1956 முதல் முருகனாரும் நானும் மேலும் நெருக்கமாக இருந்தோம். நான் பட்டப்படிப்பை முடித்தபின் இரண்டாண்டுகளாக ஆச்ரமத்தில் இருந்தேன். அப்போது முருகனார், தேவராஜ் முதலியார், முனகால வேங்கடராமையா இவர்களையும் சப்-ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயர் போன்ற சில பழைய பக்தர்களையும் நான் உன்னிப்பாகக் கவனித்து வந்தேன். அவர்களுடைய தூய வாழ்க்கை என்னை வெகுவாகக் கவர்ந்தது. 1960-ம் ஆண்டு நான் மீண்டும் ஆச்ரமம் வந்தபோது இந்தப் பழைய பக்தர்களுக்கு சேவை செய்வதற்கு அது உதவியாக இருந்தது. அவர்களுடைய அறிவின் ஆழத்தை நான் மெதுவாக உணரத் தொடங்கினேன். நகருக்குள் செல்லவில்லை என்றாலும் அப்போதும் முருகனார் பிக்ஷை எடுத்துக் கொண்டுதான் இருந்தார். உணவு நேரத்தில் ஆச்ரம சமையலறை வாயிலில் நின்று தனது மேல் துண்டை விரித்துக் காட்ட சமையல்காரர்கள் ஏதாவது உணவை அதிலிடுவார்கள். அவருடைய செயல் மிகவும் அமைதியாகவும் அற்புதமாகவும் இருந்தது. அம்மாதிரியான ஒரு சமயத்தில் என்னிடம் ஒரு கேமரா இருந்தது 'சுவாமி' என்று நான்

அழைத்தேன். அவர் என்னைத் திரும்பிப் பார்த்த போது அவரை போட்டோ பிடித்தேன். முருகனார் என்னை ஆசீர்வதித்து விட்டு பின்னர் மீண்டும் இந்த மாதிரிச் செய்யாதே என்று கடிந்து கொண்டார். பெரிய ஞானிகளுடைய கடுமையான சொற்கள் அவர்களுடைய ஆசிகளை விட சக்தி வாய்ந்தவை. என்று விஸ்வநாத ஸ்வாமி என்னிடம் கூறினார்.

பகவானுடைய ஸமாதியில் முருகனாரைக் காண்பது நம்மை மேன்மையுறச் செய்யும் ஒரு காட்சி. நடப்பவர் இல்லாமலேயே நடை நிகழ்வது போன்று – பூஜிப்பவரின்றி பூஜை நிகழ்வது போன்று இருந்தது அது. ஒருமுறை நான் அவரிடம் "முருகனார் ஸ்வாமி! இங்கு வந்து நீங்கள் வணங்கும் போது உங்கள் மனோநிலை என்னவாக உள்ளது?" என்று கேட்டேன். "பகவான் மட்டுமே இருக்கிறார் வேறு எதுவுமே இல்லை" என்பதாக இருந்தது அவருடைய பதில். முருகனாரைப் பொறுத்தவரையில் அங்கு முருகனாரோ ரமணாச்ரமமோ அல்லது நமஸ்காரமோ எதுவுமே இல்லை. பகவான் மட்டுமே இருந்தார். எல்லாமே பகவான். வேறு எதுவும் அங்கு இல்லை.

முருகனார் சில சமயங்களில் சென்னையில் தங்குவார். அவரிடம் பக்தி பூண்ட அன்பர் ஒருவர் "பகவானுடைய முக்கியமான பக்தரான நீங்கள் ரமணாச்ரமத்தை விட்டு எவ்வாறு சென்னையில் தங்கியிருக்கிறீர்கள்?" என்று கேட்ட போது "இதோ பாருங்கள். நான் எங்கு இருக்கிறேனோ அதுவே ரமணாச்ரமம்" என்று அவர் பதில் கூறினார்.



மும்மூர்த்திகள் – விஸ்வநாத ஸ்வாமி, முருகனார், குஞ்சு ஸ்வாமி

பகவானால் சரிபார்க்கப்பட்டு ஒப்புக் கொள்ளப்பட்ட ரமண சந்நிதிமுறை, குருவாசகக் கோவை ஆகிய பிரமிக்கத்தக்க இரண்டு நூல்களைப் பற்றியும் எனக்கு எதுவும் தெரியாது. முருகனாரை ஆச்ரமத்திற்கு அழைத்து வந்து சில நண்பர்கள் உதவியோடு அவரை கவனித்துக் கொண்டிருந்தேன். என்னுடைய சகோதரி அவருடைய பாடல்களைச் சில சமயம் பாடும் போது ரமண சந்நிதி முறையிலிருந்து சில பாடல்களைப் பாடச்சொல்லிக் கேட்பார். அவற்றைக் கேட்கும் போது தாரை தாரையாகக் கண்ணீர் வடிப்பார். அவரிடம் 'கண்ணீர் வடிக்கக் காரணம் என்ன?' என்று கேட்ட போது "ஒரு பெண் குழந்தையை பகவான் மிகவும் உன்னிப்பாக கவனித்தார். 'பகவானே உங்களுடைய அருளுக்கும் ஆசிக்கும் ஆளாகியுள்ள இந்தக் குழந்தை யார்?' என்று அவரிடம் கேட்டேன். அதற்கு பகவான் 'உனக்குத் தெரியாதா. இது நம்ம லக்ஷ்மி' என்று பதிலிறுத்தார்" எனக் கூறிய முருகனார் மீண்டும் கண்ணீர் விடத் தொடங்கினார். மீண்டும் கண்ணீர் விட்ட படியே, "'நம்ம' என்று பகவான் குறிப்பிட்டால் அது நாங்கள் ஒன்றாகப் பகிர்ந்துகொண்ட ஆன்மீக அனுபவம் என்று பொருள்படும்" என முருகனார் விளக்கினார்.

ரமண சந்நிதி முறை பற்றி மேலும் கூறுமாறு அவரிடம் கேட்டேன். "தனிப்பட்ட முறையில் அது வெளியிடப்பட்ட போது ஆச்ரம நிர்வாகத்தினர் அதை ஆச்ரமத்தில் விற்க மறுத்து விட்டனர். பலவிதமான எதிர்ப்புகள் இருந்தன. அதையெல்லாம் பற்றி நீ அறிந்து கொள்ளாதது நல்லதாயிற்று. ஆனால் ஒன்று மட்டும் நான் கூற விரும்புகிறேன். ஒரு நாள் மிகவும் வேதனையோடு பகவானை வணங்கி எழுந்தேன். பகவான் உடனே 'கவலைப்பட வேண்டாம். ஆச்ரமத்திலேயே அதை வெளியிடுவோம்' என்று கூறி என்னை சமாதானம் செய்தார்!" என்று முருகனார் கூறி முடித்ததும் நான் உடனே அலுவலகத்திற்குச் சென்று ரமண சந்நிதி முறை பிரதி ஒன்று கிடைக்குமா என்று தேடிப் பார்த்தேன். ஆனால் அது கிடைக்கவில்லை. நூலகத்திலும் அது கிடைக்கவில்லை. பின் சென்னையிலுள்ள பக்தர்களிடம் பேசி ஒரு பிரதியைப் பெற்று புத்தகத்தை வெளியிடவும் செய்தேன். ஒரு பிரதியை முருகனாரிடம் கொடுத்த போது அவரது கண்களில் நீர் சுரக்க "பார்த்தாயா கணேசா! பகவான் தீர்க்க தரிசனத்தோடு கூறியதை, நிறைவேற்றி விட்டார்!" என்று முருகனார் கூறினார். இந்நிகழ்ச்சி அவர் மறைவதற்குச் சில வாரங்களுக்கு முன் நடந்தது. இதன் பிறகு குருவினுடைய உபதேசங்கள் அடங்கிய குருவாசகக் கோவை பற்றி அவர் கூறினார். அந்நூலை பகவான் சரி பார்த்ததோடு பெயரும் சூட்டினார், என்று அறிந்தபோது ஆச்ரமத்திற்குப் பெருமை சேர்க்கக் கூடிய அந்நூல் மிகுந்த ஆர்வத்தோடு வெளியிடப்பட்டது. 'நாமே அதை வெளியிடுவோம்' என்று பகவான் கூறிய அந்த வார்த்தைகள் வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டதால் என் மனம் ஆனந்தத்தில் துள்ளியது. முருகனார் மரணத் தறுவாயில் மயக்கநிலையில் இருப்பதாக மருத்துவர்கள் கூறினார்கள் 'எந்த நிமிடமும் அவருடைய மூச்சு நின்று விடக்கூடும். அதனால் விரைவாக வரவும்" என்று டாக்டர் ஹ்யுகோ மேயர் செய்தி அனுப்பினார். காலை மணி மூன்று. நான் முருகனார் அருகில் நின்று கொண்டிருந்தேன. "அவர் கோமாவிலிருக்கிறார்; உனக்கு அவர் பதிலளிக்க மாட்டார்" என்று ஹ்யுகோவும் மற்ற டாக்டர்களும் என்னிடம் கூறினர். நான் "இல்லை இல்லை. நான் அருணாசல அக்ஷரமணமாலையைப் பாட போகிறேன்" என்று உறுதியோடு கூறினேன். மருத்துவர்கள் தொடர்ந்து எதிர்ப்புத் தெரிவித்த போதும் நான் முருகனாருடைய காதருகில் சென்று "சுவாமி! நான் அக்ஷரமணமாலையைப் பாட விரும்புகிறேன்" என்று கூறினேன். உடம்பில் எந்த விதமான அசைவுமில்லாத போதும் அவரது புருவங்கள் உயர்த்தப்பட்டன. இதை ஹ்யுகோவும் மற்ற டாக்டர்களும் பார்த்தனர். அவர்கள் கூறியபடி உடல் மயக்கத்தில் இருந்திருக்கலாம். ஆனால் ஆன்மீக பரவச நிலையிலிருந்த இதயம் கருணையினால் புருவத்தை உயர்த்தியது தொடர்ந்து

அக்ஷரமணமாலையை எல்லோருமாகப் பாடினோம். ஆன்மீக பரவச நிலையில் முருகனார் அருணாசலத்தோடு கலந்தார். அவரது உடலை வெளியே எடுத்துச் சென்று ஒரு ஞானிக்கு ஏற்ற ஸமாதியில் அடக்கம் செய்தோம். பகவானுடைய பழைய ஹாலுக்கும் அருணாசலத்திற்கும் இடையே முருகனாருடைய ஸமாதிக் கோயில் அமைந்துள்ளது. அவரது ஸமாதி தினத்தன்று வழிபாடுகள் செய்து பக்தர்கள் அக்ஷரமணமாலையையும் ரமண சந்நிதி முறையிலிருந்து சில பாடல்களையும் பாடுகிறார்கள்.

யாரை முருகனாரால் ஒரு கணமும் மறக்க முடியாதோ, யாருடைய உபதேசங்களை வாழ்நாள் முழுவதும் பாடி மகிழ்ந்தாரோ, அந்த அவருடைய ஒரே குருவும் தெய்வமுமான பகவானைப் போன்றே இருந்த முருகனாருடைய முடிவற்ற கதையும் என்றும் நிலைத்து நிற்கும்.

புனர்வசு வண்ணம் என்ற பெயரில் பகவானின் ஜென்ம நக்ஷத்திர தினத்தின் வைபவங்களை கூறும் பாடல்களில் ஒன்று:

பொருளின் வண்ணம் புகழின் வண்ணம் பொலி வண்ணம்
தெருவின் வண்ணம் திருவின் வண்ணம் திகழ் வண்ணம்
இருளின் வண்ணம் இலையாம் வண்ணம் ரமணன்கூர்
அருளின் வண்ணம் புனர்வசு நன்னாள் அது வண்ணம்





ஸ்ரீ பகவான், ஜகதீச சாஸ்திரி, அவர் மனைவி

# 33 ஜகதீச சாஸ்திரி



பகவான் மிருகங்களையும் செடிகொடிகள், அனைத்து ஜீவராசிகள் எல்லாவற்றையுமே எப்போதும் மரியாதையுடன் தான் குறிப்பிடுவார். பகவான் அனேகமாக பக்தர்களை அவர்களது பெயர் கூறியோ, அல்லது பழக்கத்தினால் அழைக்கப்படும் பெயரையோ வைத்து அழைப்பதில்லை. இருப்பினும் இதில் சில விதி விலக்குகள் இருந்தன. அதில் ஒன்று ஜகதீச சாஸ்திரியைக் கூப்பிடும் விதம். ஜகதீச சாஸ்திரி என்று அவரை அழைக்காமல் 'ஜகதீசா' என்றே அழைப்பார் பகவான். அவர் தன்னுடைய இளம் வயதிலேயே பகவான் விருபாக்ஷ குகையில் தங்கியிருந்த காலத்தில் அவரிடம் வந்து சேர்ந்தார். பகவானுக்கு அவரை மிகவும் பிடிக்கும்.

பகவான் ஜகதீச சாஸ்திரி இவர்கள் சம்பந்தப்பட்ட குறிப்பிடத்தக்கதும் நாம் கற்றுக் கொள்ள வேண்டியதுமான இரண்டு முக்கிய நிகழ்வுகள் உள்ளன. அவரும் அவருடைய மனைவியும் ரமணாச்ரமம் முன்பு ஒரு குடிலை அமைத்துக் கொண்டு சந்தோஷமாக வாழ்ந்து வந்தனர். அச்சமயம் வயிற்றில் அவருக்கு முற்றிப்போன நிலையில் புற்றுநோய் இருப்பதாக மருத்துவர்கள் கண்டுபிடித்தனர். அவருக்கு வரப்போகும் இறுதி முடிவைத் தவிர்க்க முடியாத குடும்பத்தினர் அமைதியாக ஏற்றுக் கொண்டனர். பகவானுடைய பக்தரான உள்ளூர் மருத்துவர் கூட அவரது முடிவு சில மணி நேரங்களில் வரலாம் என்று கணித்திருந்தார். இறுதி நேரத்தில் ஜகதீச சாஸ்திரி பகவானை பிரார்த்தனை செய்தார்.

அவர் ஒரு ஸம்ஸ்க்ருத கவிஞரானதால் ஸத்குரு என்ற நிலையில் பகவானின் பெருமையையும் புகழையும் எடுத்துக் கூறுவதாக பின்வருமாறு ஸ்லோகம் புனைந்தார்.

ஆவர்தபுர்யாம் ஜனிதம் ப்ரபத்யே
பாண்ட்யேசதேசே விஹ்ருதம் ப்ரபத்யே ।
சோணாசலப்ரஸ்தசரம் ப்ரபத்யே
பிக்ஷும் தப:க்லேசஸஹம் ப்ரபத்யே ॥ 1 ॥

இவ்வாறு தொடங்கும் எட்டு ஸ்லோகங்களைக் கொண்ட 'பிரபத்தி அஷ்டகம்' (சரணாகதி செய்வதாக அமைந்த எட்டு செய்யுட்கள்) என்ற ஸ்துதியை பகவானது அருள் வேண்டிப் பாடினார்.

அந்த ஸ்துதியைக் கேட்டு மனம் நெகிழ்ந்த பகவான் அவரது உயிரைக் காப்பாற்றினார். இது 1945-ம் ஆண்டு நடந்தது. ஜகதீச சாஸ்திரி பழுத்த பழமாக 89 வயது வரை வாழ்ந்து 1983-ம் வருடம் உடலை நீத்தார்.

இரண்டாவது நிகழ்வு சில வருடங்களுக்குப் பிறகு நிகழ்ந்தது. மேல்நாட்டவர் ஒருவரின் நிலத்தின் ஒரு பகுதியில் ஜகதீச சாஸ்திரியின் குடில் அமைந்திருந்தது. துரதிருஷ்டவசமாக நிலத்திற்குச் சொந்தமான மேலை நாட்டவருக்குப் பணக்கஷ்டம் ஏற்படவே அந்நிலத்தை விற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. குடிலை அமைப்பதற்கு ஆன செலவை தான் கொடுப்பதாகக் கூறி நிலத்தைத் தனக்குத் திருப்பி அளிக்குமாறு ஜகதீச சாஸ்திரியை அவர் கேட்டார். அருணாச்சலத்தில் அவருக்கு வேறு இடம் ஏதும் இருக்கவில்லை என்பதால் ஜகதீச சாஸ்திரி மனம் ஒடிந்து போனார். அந்த இடத்தைவிட்டுச் செல்வதாக இருந்தால் தான் அருணாசலத்தைவிட்டே போக வேண்டி வரும் என்பதை ஜகதீச சாஸ்திரி உணர்ந்திருந்தார். நிலத்தின் சொந்தக்காரர் அளித்த பணத்தை எடுத்துக்



அண்ணாமலை, அருணாசலேஸ்வரர் கோயில், ஐயன் குளம் – ஜகதீச சாஸ்திரியால் பெரிதும் போற்றப்பட்டவை

கொண்டு ஆச்ரமத்திற்கு ஓடிய சாஸ்திரி, பகவானது மடியில் அதைப் போட்டுவிட்டு ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரைப் போன்று ஸந்நியாச வாழ்க்கையை ஏற்ற பிறகு, பணத்தை உண்ண முடியாது என்ற காரணம் காட்டி, பகவான் அதைக் கையால் தொடவில்லை. ஆனால் தனது பக்தர் மீதிருந்த கருணையினால் ஜகதீச சாஸ்திரி சற்று சமாதானம் அடையும் வரை பகவான், அதைத் தன்னிடமே வைத்திருந்தார்.

ஸம்ஸ்க்ருதத்தில் நல்ல பாண்டித்யம் இருந்ததாலும் பகவானிடம் நெருங்கிப் பழகியதாலும் அவருடைய 'உபதேச ஸாரம்', 'அருணாசல ஸ்துதி பஞ்சகம்' ஆகிய நூல்களுக்கு ஸம்ஸ்க்ருதத்திலேயே தெளிவான விளக்கவுரையை சாஸ்திரியால் எழுத முடிந்தது. ஆத்மாவில் நிலை நிற்பது எவ்வாறு என்பதன் ஸாராம்சத்தைப் படிப்படியாக விளக்கும் முக்கிய நூலாகும் 'உபதேச ஸாரம்'. ஐந்து ஸ்லோகங்களைக் கொண்ட 'அருணாசல ஸ்துதி பஞ்சகமோ', தானாகவே பகவானின் இதயத்தில் எழுந்த அருணாசல புகழாகும். ஆயிரம் நாமங்களால் பகவானைப் புகழ்ந்துபாடும் 'ரமணஸஹஸ்ர நாமம்' என்ற ஸ்துதியையும் ஜகதீச சாஸ்திரி எழுதினார். இதை விட முக்கியமாக பகவானது உபதேசங்களை வெளிப்படுத்தக் கூடிய ஸம்ஸ்க்ருத ஸ்லோகம் ஒன்றை பகவான் எழுதுவதற்கு ஜகதீச சாஸ்திரி கருவியாக இருந்தார். இது எதிர்பாராத விதத்தில் நடந்தது. ஒரு முறை 'ஹ்ருதய குஹர மத்யே', என்ற சொற்களோடு துவங்கும் ஸ்லோகத்தை எழுதவேண்டும் என்ற எண்ணத்தோடு அந்தச் சொற்களை ஜகதீச சாஸ்திரி முணுமுணுத்தவாறே இருந்தார். ஆனால் அவரால் அதை எழுத இயலாத போது அந்தச் சொற்களை மட்டும் எழுதி பகவான் ஹாலிலிருந்து

வெளியே சென்றிருந்த சமயத்தில் அவருடைய சோபாவில் வைத்துவிட்டு சாஸ்திரி வெளியே சென்று விட்டார். அவர் திரும்பி வந்த போது அந்த ச்லோகத்தை எழுதி முடித்துக் கீழே 'ஜகதீசன்' என்று கையெழுத்திட்டு வைத்திருந்தார் பகவான். சாஸ்திரி திரும்பி வந்து அதைப் படித்து மிகவும் சந்தோஷப்பட்டார். ஆனால் அடியில் 'ஜகதீசன்' என்று தனது பெயர் ஆசிரியராகக் குறிப்பிடப்பட்டிருந்தது அவருக்கு ஒரு கேள்விக்குறியாக இருந்தது. இருப்பினும் அவர் பகவானைப் பார்த்து ஜகதீசன் என்ற அப்பெயர் பகவானுக்கும் பொருந்தும் என்ற அர்த்தத்தில் "நீங்கள் ஜகதீசன் தானே, உலகனைத்திற்கும் ஈஸ்வரன் அல்லவா?" என்று கேட்டார். புதிய ஹாலில் பகவானுடைய உருவச்சிலைக்குப் பின்னால் பொறிக்கப்பட்டுள்ள ஸ்லோகமிதுவே.

தவிர்க்க முடியாத குடும்பச் சூழ்நிலை காரணமாக ஜகதீச சாஸ்திரி சென்னைக்கு இடம் பெயர வேண்டி வந்தது. அவ்வாறு இருந்தும் தனது எஞ்சிய காலத்தைப் புராதனமான ஸம்ஸ்க்ருத பாஷ்யங்களின் மூலம் வேதாந்தத்தைக் கற்பிப்பதில் கழித்தார். ஆத்ம ஞானத்தை பரப்புவதில் அவர் ஆற்றிய தொண்டிற்காக காஞ்சி பரமாச்சாரியார் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அவருக்கு 'ஆத்ம வித்யா பூஷணம்' என்ற பட்டத்தை அளித்து கௌரவித்தார். தத்துவசாஸ்திரத்தில் நான் முதுநிலை பட்டப்படிப்பு படித்துக் கொண்டிருந்த போது ஜகதீச சாஸ்திரியை 1956-ம் ஆண்டில் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது. பகவானுடைய சிறந்த பக்தரான டாக்டர். T. M. P. மஹாதேவன் அவர்கள் பல்கலைக்கழகத்தில் என்னுடைய பேராசிரியராக இருந்தார். ஒருமுறை பகவான் ரமணரின் பிறந்த தினத்தைச் சென்னையில் அவருடைய இல்லத்திலேயே கொண்டாடினார். மூன்று நாட்களுக்கு அந்த விழா நடைபெற்றது. பல பெரியோர்கள் அங்கு உபன்யாசம் செய்தனர். ஜகதீச சாஸ்திரியுடைய சொற்பொழிவு அதில் ஒன்றாக இருந்தது. பகவானுடைய பெருமையையும் தனித்தன்மையையும் விளக்குவதாக இருந்த அந்த உபன்யாசம் கேட்போரை மெய்மறக்கச் செய்தது. அது சாஸ்திரங்கள் கூறியதை விளக்குவதாக மட்டுமின்றி, பகவான் நம்மிடமெல்லாம் எவ்வளவு அக்கறை கொண்டிருந்தார் என்பதை தெளிவுபடுத்துவதாகவும் நாமும் ஆன்மாவுடன் நம்மை இணைத்துக் கொள்வது ஸாத்தியமே என்பதையும் விளக்குவதாக இருந்தது. அன்று ஜகதீச சாஸ்திரி நமது சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள சஞ்சிதம், ஆகாமி, பிராரப்தம் ஆகிய மூன்று வித கர்மாக்களின் உண்மையை விளக்கிக் கூறினார். சஞ்சித கர்மா என்பது முந்தைய ஜன்மங்களில் நாம் சேகரித்து வைத்தவை ஆகும். ஆகாமி என்பது இந்தப் பிறவியில் நாம் புதிதாகச் செய்யப் போகும் கர்மங்களைக் குறிப்பதாகும். பிராரப்தம் என்பது இந்த ஜென்மத்தில் அனுபவித்துத் தீர்க்க வேண்டியவையாகும். சாஸ்திரங்கள், ஒரு ஞானிக்கு ஆகாமி கர்மமும், சஞ்சித கர்மமும் இல்லாமல் போய்விடும் என்றும் ஆனாலும் பிராரப்த கர்மத்தை அனுபவித்தே தீர்க்க வேண்டும் என்றும் கூறுகின்றன. ஆனால் வேடிக்கையான ஒரு உதாரணத்தின் மூலம் பகவான் இதை மறுத்திருக்கிறார். "மனதிற்கும் உடலிற்கும் அப்பாலுள்ள நிலைக்குச் சென்ற பின் இரண்டு வித கர்மங்கள் மட்டும் அழிந்துவிடும், மற்றொன்று அழியாது என்று கூறுவது மூன்று மனைவிகளை உடைய ஒருவன் இறந்தால் இரண்டு மனைவிகள் விதவையாவார்கள். ஒரு மனைவி மட்டும் விதவையாகமாட்டாள். என்று கூறுவது போல் உள்ளது" என்று பகவான் விளக்கினார்.

"மேற்கூறிய உதாரணத்தில் உள்ள மனிதன் இறந்தபோது அவனது மனைவிகள் மூவருமே விதவையாவதிலிருந்து தப்ப முடியாது என்பது போன்று, செய்பவனே இல்லாத நிலையில் மூன்றுவித கர்மாக்களுமே அழிந்துவிடும்," என்கிறார் பகவான்.





ஸ்ரீ பகவான்  வைராகர்

# 34 தைவராதர்



மதன்மோஹன் மாளவியா, வினோபா பாவே, டாக்டர். ராதாக்ருஷ்ணன் இந்தியாவின் முதல் ஜனாதிபதி டாக்டர். ராஜேந்திர பிரஸாத் போன்றவர்களால் தைவராதர், தேவகால ரிஷியாகவும் குருவாகவும் மதிக்கப்பட்டு வந்தார். வேதங்கள் குறித்து சந்தேகம் எழுப்புகின்றவர்களை வினோபா பாவே, தைவராதரிடம் அனுப்பி வைப்பது கூட உண்டு.

பகவான் ஸ்கந்தாச்ரமத்தில் இருக்கும் போது தைவராதர் அங்கு வந்து தங்க ஆரம்பித்தார். பகவான் அவரிடம் மிகுந்த பிரியம் கொண்டிருந்தார். தைவராதர் எளிமையும் கண்டிப்பும் மிக்க துறவியாதலால் பகவானோடு தங்கியிருந்த போதும் அன்றாட உணவிற்காக நகருக்குள் சென்று பிக்ஷையெடுத்து வந்தார். அவ்வாறு கிடைக்கும் உணவு எதுவானாலும் ஸ்கந்தாச்ரமத்திற்கு எடுத்து வந்து பகவான் முன் வைத்து "இந்த்ராய ஸ்வாஹா" — 'தேவலோகத்தின் தலைவனுக்கு என்னுடைய இன்றைய அர்ப்பணிப்பாக இதை அளிக்கிறேன்.' என்று கூறுவார். பகவான் அதிலிருந்து சிறிதளவு எடுத்து உண்ட பின்னர் எஞ்சியுள்ளதையே, தான் உண்பார்.

1917-ம் ஆண்டில் ஒரு நாள் காவ்யகண்ட முனிவரோடும் மேலும் ஆறு பண்டிதர்களோடும் ஸ்கந்தாச்ரமத்தில் பகவான் முன் தைவராதர் அமர்ந்திருந்தார். அவர்கள் பகவானை நோக்கிச் சிறந்த ஆன்மீகக் கேள்விக் கணைகளைத் தொடுத்தனர். இவ்வாறு அவர்கள் கேட்ட கேள்விகளும் பகவானது பதில்களும் தொகுக்கப்பட்டு 'ரமணகீதை' என்ற பெயரில் வெளியிடப்பட்டுள்ளது. தைவராதர் சிக்கலான ஒரு கேள்வியை எழுப்பி அதற்கு சந்தேகத்திற்கு இடமளிக்காத விடை வேண்டும் என்று வற்புறுத்தினார். ஒரு ஸாதகரின் மிகவும் முக்கியமான கடமை எது என்று வினவினார். "ஒருவர் தன்னுடைய உண்மை சொரூபத்தைத் தேடி உணர்ந்து கொள்வதே மிகவும் முக்கியமான கடமை." என்று பகவான் பதிலிறுத்தார்.

சிறு வயது முதலே பஜனைப் பாடல்கள் பாடுவதில் தைவராதருக்கு ஈடுபாடு இருந்தது. பாடிக்கொண்டே ஆடவும் செய்வார். அந்த நாட்களில் பக்தர்களோடு பகவான் கிரிவலம் செல்வது வழக்கம். வலம் வரும் போது பகவான் எப்போதெல்லாம் தைவராதரைப் பார்க்கிறாரோ, அப்போதெல்லாம் மிகவும் உன்னிப்பாகத் தன் பார்வையை அவர் மீது செலுத்துவார். உடனே தைவராதர் சாலையில் குறுக்கும் நெடுக்குமாக நடனமாடிக் கொண்டே பாடவும் ஆரம்பித்துவிடுவார். பக்தர்களும் அவரோடு சேர்ந்து ஆடிப்பாடி மகிழ்வர். பகவானுடைய அழகினால் கவரப்பட்ட தைவராதர் பின்னர் அது பற்றி எழுதும் போது "அன்பும் அமைதியும் நிறைந்த அப்பழுக்கற்ற தூய ஒளியால் பகவானுடைய கண்கள் எப்போதும் ஜ்வலிக்கும். தேவதேவியரைப் போன்று பகவானுடைய கண்களும் இமைப்பதில்லை. பகவானுடைய கண்கள் நன்கு அகன்று விரிந்திருந்தபோதும் அவை அசைவின்றி உண்முக நாட்டத்தோடு இருந்தன. அவருடைய முகத்தை நிலையாகப் பார்த்துக் கொண்டிருப்பதே ஒரு வழிபாடு ஆகும் எனலாம். பகவானுடைய தரிசனத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள் அவருடைய தெய்வீக முன்னிலையிலிருந்து அகல விரும்புவதில்லை." என்று கூறியுள்ளார்

பகவானுடைய குரலை தைவராதர் மட்டுமே வர்ணித்துள்ளார். அந்தக் குரலின் தன்மையைப்பற்றி வேறுயாரும் குறிப்பிட்டதில்லை. "மஹர்ஷியினுடைய குரல் ஒரு குழந்தையின் குரலைப் போன்று மிகவும் மென்மையாகவும் இனிமையாகவும் இருந்தது. சில சமயங்களில் காதுக்கு இனிய அந்தக் குரல் மிகவும் மெல்லியதாக இருந்ததால் உன்னிப்பாகக் கேட்டாலன்றி காதில் விழுவதே கடினம். பகவானது குரலைக் கேட்கும் போது ஏதோ ஒரு தெய்வீகமான நுட்பமான குரல் எங்கோ வான்வெளியிலிருந்து வருவது போன்ற உணர்வு நமக்கு ஏற்படும். வேதங்களால் புகழப்படும் தெய்வீக வாக்கின் உருவமாகவே பகவான் திகழ்ந்தார்," என்று வர்ணிக்கிறார்.

தைவராதரின் இயற்பெயர் கணேச சாஸ்திரி கோசாய் மணி என்பதாகும். அவர் கணேசன் என்றும் சில சமயங்களில் கஜானன் என்றும் அழைக்கப்பட்டார். அவருக்கு தைவராதர் என்ற பெயர் வந்ததே ஒரு சுவாரஸ்யமான கதை. இந்து கலாசாரப்படி ரிஷிகள் காட்டிய வழியில் நாம் வாழ்ந்து வருகிறோம். கஜானன், யதேச்சையாக உஜ்ஜயினிலிருந்து வந்த ஒரு ஞானியிடம் பக்தி மார்க்கத்தில் தீக்ஷை பெற்றார். சில தினங்களுக்குப் பின் மற்றொரு துறவி ஹடயோகத்தில் அவருக்குப் பயிற்சி அளித்தார். தன் வாழ்நாள் முழுவதுமே பக்தியையும் யோகத்தையும் பிரசாரம் செய்தார். இதையடுத்து கஜானன், காவ்யகண்ட முனிவரைச் சந்தித்தார். சிறந்த ஸம்ஸ்க்ருத பண்டிதரான காவ்யகண்ட முனிவரால் கஜானன் இயற்கையாகவே ஈர்க்கப்பட்டார். காவ்யகண்டர், "உனது பெயர் என்ன?" என்று கேட்டார். தனது பெயர் கணேச சாஸ்திரி கோசாய் மணி என்றும் சாதாரணமாக கஜானன் என்று அழைக்கப்படுவதாகவும் கூறிய போது இன்று முதல் உன் பெயர் 'தைவராதர்' என்று காவ்யகண்டர் பதிலளித்தார். பெயர்களை மாற்றுவதில் காவ்யகண்டர் மிகவும் திறமை வாய்ந்தவர். ஏற்கனவே பகவானுடைய வேங்கடராமன் என்ற பெயரை 'பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷி' என்று மாற்றியது அவரே. ஸ்கந்தாச்ரமத்திற்கு 'தைவராதரை' அழைத்து வந்ததும் காவ்யகண்டரே. நான்கு வேதங்களாலும் புகழப்படும் ஆத்மானுபவத்தில் இயற்கையாகவே மூழ்கியிருந்த பகவானைப் பார்த்த அக்கணம் முதல் தைவராதர் அவரால் காந்தம் முன் இரும்பு போல் ஈர்க்கப்பட்டார். தைவராதர், மலைமேல் காவ்யகண்டரோடு தங்குவதற்கு பகவான் அனுமதி கொடுத்திருந்தார். அதனால் காவ்யகண்டரை எப்போதுமே பின் தொடர்ந்து சென்று கொண்டிருந்தார் அவர்.

ஒருமுறை படைவீடு ரேணுகாம்பா கோயிலில் காவ்யகண்டரோடு தைவராதர் தங்கியிருந்தார். அங்கு தேவியின் முன் கடும் தவம் செய்து வந்தார். ஒரு நாள் அவருடைய இச்சையின்றி அவரது உதடுகள் சில பாடல்களை வெளிப்படுத்தின. இது இரண்டு நாட்களுக்குத் தொடர்ந்து நடந்த போது காவ்யகண்டர் அவை ரிக்வேதத்தில் வரும் சந்தங்கள் என்பதை உணர்ந்தார். கிடைக்காமலிருந்த ரிக்வேத மந்திரங்கள் சிலவற்றை தைவராதர் கூறுகிறார் என்பதைக் காவ்யகண்டர் அறிந்து கொண்டார். பரவச நிலையில் தைவராதர் இருந்தபடியால் அவர் கூறியவை தெளிவாக இருக்கவில்லை. இருந்தும் காவ்யகண்டர் அவற்றை அனேகமாக எழுதியெடுத்துக் கொண்டார். இந்தப் பாடல்களும் அவற்றின் விளக்கமும் பின்னர் காவ்யகண்டரால் 'சந்தோதரிசனம்' என்ற பெயரில் வெளியிடப்பட்டது.

1936-ல் காவ்யகண்டர் இறைவனடி சேர்ந்தார். தனது ஆசானின் மறைவிற்குப் பிறகு தைவராதர் நேபாளத்திற்குச் சென்றுவிட்டார். அங்கு வேதங்களில் கூறப்பட்டிருக்கும் ஞானத்தைப் பூரணமாகப் பெற முடியும் என்று நம்பினார். மேலும் நேபாள அரசர் அவருக்கு வேத ஞானத்தைப் பெறுவதில் இருந்த தாகத்தைத் தீர்ப்பதற்கு உதவியதால் அவர் அங்கு சௌகரியமாக இருந்தார். எங்கு இருந்தாலும் கடிதங்கள் மூலமாக பகவானோடு தொடர்பை வைத்துக் கொண்டிருந்தார்

அவரது கடிதத்திற்காக பகவான் காத்திருப்பார். அத்துடன் அவற்றிற்குத் தன் எண்ணங்களாலோ கடிதம் எழுதுவதாலோ அல்லது ஆசிகளைத் தெரிவிப்பதாலோ பதில் அளிப்பார். தைவராதர் எழுதிய ஒவ்வொரு கடிதத்தின் முடிவிலும் 'எப்போதும் பகவானின் புனிதத் திருவடிகளில்' என்ற சொற்களுடனேயே முடிப்பார்.

1960-ம் ஆண்டு ஸ்ரீ ரமணாச்ரமத்தில் இந்தப் புனித புருஷரை வரவேற்கும் பேறு பெற்றேன். முதல் பார்வையிலேயே இவர் "வேதகாலத்து ரிஷியை ஒத்தவர்" என்பதை என் உள் உணர்வு கூறியது. அந்தச் சமயத்தில் அவருமே 'மஹர்ஷி' என்று அழைக்கப்பட்டார் என்றாலும் ரமணாச்ரமத்தில் இருக்கும் போது அந்தப் பெயரை அவர் உபயோகிக்கவில்லை. இருப்பினும் அவர் ஒரு மஹர்ஷியே என்பதை என்னால் உணர முடிந்தது. அவருடைய தேவைகள் மிகவும் குறைவு என்றபோதும் அவருக்கு சேவை செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அவர் தீவிர இந்துவாக இருந்ததால் பசுக்களை வழிபட்டதோடு கோ மூத்திரத்தையும் பிரஸாதமாகக் குடிப்பது வழக்கம். சில வேப்பிலைகளையும் ஒரு கிண்ணம் கோ மூத்திரத்தையும் சாப்பிட்டு விட்டு அநேக நாட்கள் அவரால் சந்தோஷமாக வாழ முடிந்தது. இது போன்ற விரதங்களை அனுஷ்டித்ததால் அவரது தவத்தைப் பற்றி பகவானே சிறப்பாகக் கூறியுள்ளார்.

இளம் வயதிலேயே உலக வாழ்க்கையிலிருந்து விலகி விட்டதால் பகவானைப் பற்றி மேன்மேலும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தோடு நான் இருந்தேன். குழந்தையைப் போன்றிருந்த தைவராதர் என்ற இந்த மஹானை சுலபமாக அணுகி என்ன வேண்டுமானாலும் கேட்டு அறிந்து கொள்ள முடியும். அதனால் அவரை அணுகி "ஸ்வாமி! பகவானைப் பற்றிய எல்லா விஷயங்களையும் எனக்கு நீங்கள் கூற வேண்டும். பகவானை மனிதனாகவும் தெய்வமாகவும் தாங்கள் எவ்வாறு அனுபவித்தீர்கள் என்பதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்," என்று கேட்டுக்கொண்டேன். அவர் என்னைப் பார்த்துப் புன்னகை செய்தார். என் அஞ்ஞானத்தை எண்ணி அவர் சிரித்திருக்கலாம். பின் ஒரே வார்த்தையில் பதில் இறுத்தார். "மனித உருவில் வாழ்ந்த ஈஸ்வரனே பகவான்" என்று கூறி ஒரே ஒரு வாக்கியத்தில் என் கேள்விக்கு விடையளித்து விட்டார்.

பகவானிடம் எல்லையற்ற சக்திகள் இருந்ததாகவும் ஆனால் அவர் அவற்றை மறைத்து வைத்திருந்ததாகவும் தொடர்ந்து கூறினார். நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்பதை விளக்கும் விதமாக ஒரு உதாரணத்தைக் கூற முடியுமா? என்று உடனே நான் கேட்டேன். அதற்கு "என்னால் கூற முடியும். ஆனால் உன்னால் புரிந்து கொள்ள முடியுமா? என்று தைவராதர் பதில் கேள்வி விடுத்தார். "கூறுங்கள்! நான் புரிந்து கொள்ள முயற்சி செய்கிறேன்! என்று பதில் அளித்தேன். அப்போது தைவராதர் "பகவான் பின்னோக்கிக் கடந்த காலத்திற்குச் சென்று அதை மாற்றி அமைக்கும் சக்தியும் படைத்தவர்!" என்று அவர் கூறியபோது "நீங்கள் கூறியது எனக்குப் புரியவில்லை என்பது மட்டுமல்ல நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்பதையே என்னால் கிரஹித்துக் கொள்ள முடியவில்லை" என்று பதில் அளித்தேன். அவருக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கருணையோடு என்னோடு பகிர்ந்து கொண்டார். தைவராதர் அது பற்றிக் கூறும்போது "1940-ம் ஆண்டு ஒரு சமயம் தியானத்தில் மூழ்கியவாறு இமயத்தின் பனிச் சிகரங்களில் நான் அலைந்து கொண்டிருந்தேன். திடீரென்று என்னுடைய கண்களிலிருந்து கண்ணீர் வடிவதைக் கண்டு காரணம் அறிய விழைந்தேன். என் இதயத்தில் உறைந்த ஒரு சக்தி 'பகவானுடைய பிரிவே இதற்குக் காரணம்' என எனக்கு உணர்த்தியது. அடுத்த கணமே, எவ்வித ஏற்பாடுமின்றி, அருணாசலத்தை நோக்கிப் புறப்பட்டேன். அருணாசலத்தை அடைவதற்கு 15 நாட்கள் ஆயின. அங்கு வந்த உடன் பகவானிடம்

சென்று அவர் முன் ஆனந்தக் கண்ணீரோடு நின்றேன். என்னைப் பார்த்த உடனே அவர்! 'சற்று முன் தான் உங்களை நினைத்தேன். உங்களைக் காண வேண்டும் என்ற மிகுந்த ஆர்வம் என்னுள் எழும்பியது. இப்போது நீங்களே என் முன் நிற்கிறீர்கள்!" என்று பகவான் கூறியதாக தைவராதர் தன் அனுபவத்தை எடுத்துரைத்தார். 'என் பெயரையே கொண்டவனே! நான் கூறியது புரிந்ததா'? என்று என்னிடம் கேட்டார். 'இல்லை, எனக்கு விளங்கவில்லை' என்று பதில் கூறினேன். 'இப்போது தான் உங்களை நினைத்தேன்' என்று பகவான் சொன்ன போதும் 15 தினங்களுக்கு முன்பே அவரது எண்ணம் என்னை நோக்கிப் பயணித்து, இமயத்தில் இருந்த என்னை சக்தியோடு அருணாசலத்தை நோக்கி உந்தித் தள்ளியது. அது மட்டுமல்லாமல் கண்களில் வடிந்த கண்ணீர் மூலமாக பகவான் என்னை அழைக்கிறார் என்பதை எனக்கு உணர்த்தவும் செய்தது. தொடர்ந்து பகவான் மலை மீது நடப்பதற்குச் சென்றார். நானும் பின் தொடர்ந்தேன். 'இதயத்தில் உறுதியாக நில். இதயமே அருணாசலம் என்பதை எப்போதும் நினைவில் கொள்!' என்று பகவான் என்னிடம் கூறினார். பகவான் தனது இறுதி அறிவுரையை எனக்கு வழங்குவதற்காகவே, என்னை இமயத்திலிருந்து வரவழைத்தார். அன்றிலிருந்து பகவான் என் இதயத்தில் அருணாசலமாக என்றும் உறைகிறார்" என்று தைவராதர் கூறினார்.


பலாக்கொத்து குளம்





ஸ்ரீ பகவான் – பலாக்கொத்தில்



# 35 K. லக்ஷ்மண சர்மா (யார்)



காவ்யகண்ட கணபதி முனி, ஜகதீச சாஸ்திரி, கபாலி சாஸ்திரி. தைவராதர் ஆகிய சிறந்த ஸம்ஸ்க்ருத கவிகள் ஸ்ரீ ரமண மஹர்ஷியின் பக்தர்களாக இருந்தனர். அதே போன்று சென்ற ஆயிரமாண்டுகளில் மிகச்சிறந்த தமிழ்ப் புலவராக விளங்கிய முருகனாரும் பகவானின் பக்தர். இவர்களைப் போன்றே, புலமையும் பாண்டித்யமும் பெற்ற ஒருவர் பகவானின் பக்தரானார். மிகவும் புகழ்பெற்றவர் என்பதால் அவர் பெருமை பெறவில்லை. ஆனால் புகழையே துறந்தார் என்பதால் பெருமைக்குரியவரானார். முற்றிலும் தன்னை மறைத்துக் கொள்ள விரும்பியதால் அவர் பகவானுடைய ஆத்மவிசாரத்தை விளக்கும் 'மஹாயோகம்' என்ற சிறந்த நூலை 'யார்' என்ற புனைப் பெயரில் எழுதினார். சமீபகால பதிப்புகளில் மட்டுமே 'லக்ஷ்மண சர்மா' என்ற அவருடைய பெயர் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

வக்கீலும் இயற்கை மருத்துவருமான 'லக்ஷ்மண சர்மா' 1928-ல் ரமணாச்ரமம் வந்தார். பகவானது பார்வை ஒன்றே அவரை ஆட்கொண்டு விட்டது. 'உள்ளது நாற்பது' படித்திருக்கிறீர்களா? என்று பகவான் ஒரு நாள் அவரிடம் கேட்டார். நாற்பது பாடல்களைக் கொண்ட 'உள்ளது நாற்பது' பகவானால் எழுதப்பட்ட ஒரு ஆன்மீக நூல் - அந்த நூல் 'மெய்ப்பொருள்' பற்றிய பகவானது உபதேசங்களையும் அதில் நிலைத்து நிற்பதற்கான வழியையும் உள்ளடக்கியது. 'நான் இதுவரை படித்ததில்லை' என்று கூறியதோடு தனக்கு இலக்கியத் தமிழ் புரியாது என்றும் லக்ஷ்மண சர்மா கூறினார். தீவிர பக்தரும், புத்திசாலியான ஸாதகருமானதால் 'பகவான் கற்பித்தால் நான் கற்றுக் கொள்கிறேன்' என்று உடனடியாகத் தனது எண்ணத்தைத் தெரிவித்தார். அவர் முயற்சி செய்ய முடிவெடுத்து முதல் அடி எடுத்து வைக்கிறார் என்பதை அவரது பதில் தெளிவுபடுத்தியது. "நாம் இறைவனை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்தால் இறைவன் 99 அடி நம்மை நோக்கி வருவான்" என்ற ஸத்திய வாக்குப்படி, பகவான் லக்ஷ்மண சர்மாவிற்குத் தனிப்பட்ட முறையில் இலக்கியத் தமிழைக் கற்பித்தார். தமிழ் மொழியில் உள்ள நுணுக்கங்களை பகவான் அவருக்கு விளக்கியபோது லக்ஷ்மண சர்மா அவற்றை மிகவும் எளிதாகப் புரிந்து கொண்டார். விரைவிலேயே 'உள்ளது நாற்பது', 'உள்ளது நாற்பது அனுபந்தம்' — இவ்விரண்டையும் பகவான் அவருக்கு விளக்க ஆரம்பித்தார். குருவிற்கும் சீடனுக்கும் இடையே இருந்த உறவு அசாதாரணமானது. ஏனெனில் சீடன் அறியாத எதையும் குரு புதிதாகக் கற்பிப்பதில்லை. சீடனுக்கு 'அவனே ஆத்மா' என்பதை உணர்த்துகிறார் குரு. இந்த உண்மையையே 'உள்ளது நாற்பது' வெளிப்படுத்துகிறது.

பகவான் மிகவும் கருணையுள்ளவராதலால் லக்ஷ்மண சர்மாவின் தினசரி வகுப்புகள் நீண்டும் ஆழ்ந்தும் இருந்தன. பிற்காலத்தில் இந்த வகுப்புகள் புத்தக உருவில் கொண்டு வர வேண்டும் என்ற உத்தேசம் லக்ஷ்மண சர்மாவிற்கு இல்லாத போதும் அவை புத்தக உருப்பெற்றன. அதில் தனக்கு பகவான் போதித்த விதத்தையும் தான் எவ்வாறு அவற்றைப் புரிந்து கொண்டார் என்பதையும் விளக்கியுள்ளார். அவ்வமயம் லக்ஷ்மண சர்மா 'பலாக்கொத்தில்' ஒரு குடிசையில் வசித்து வந்தார். அவர் ஸம்ஸ்க்ருத பண்டிதரானதால் இரவு தனது குடிசைக்குத் திரும்பிய பின் பகவானிடம் கற்றுக் கொண்ட விஷயங்களை ஸம்ஸ்க்ருத ஸ்லோகமாக வடிவமைத்தார் மறுதினம் அந்த ஸ்லோகத்தை பகவானிடம் காண்பித்த போது பகவான் அதை வாசித்துத் திருத்தியும் கொடுப்பார் சில சமயங்களில்

பகவானது முகத்தில் அவ்வப்போது அதிருப்தி வெளிப்படும். அப்போது லக்ஷ்மண சர்மா அதை மாற்றி அமைப்பார். பகவான் பிறருடைய குறைகளை விமர்சனம் செய்வதோ, சுட்டிக்காட்டுவதோ வழக்கமில்லை. ஆனால் அவரிடம் நெருக்கமாக இருக்கும் பக்தர்கள் அவரது கண்களிலோ அல்லது முகத்திலோ தோன்றும் மாறுபாடுகளிலிருந்து அவற்றை உணர்ந்து கொள்வார்கள். இந்தக் கடுமையான பயிற்சி சில நாட்களுக்கோ மாதங்களுக்கோ அல்லாமல் மூன்று ஆண்டுகளுக்குத் தொடர்ந்தது. இன்றைய கணினி யுகத்தில் ஸத்தியம் உட்பட அனைத்தையும் ஒரு பொத்தானை அழுத்துவதன் மூலம் பெற வேண்டும் என்று விரும்புகிறோம். ஸத்தியத்தை உணர்ந்து கொள்வதற்காக லக்ஷ்மண சர்மா எத்துணை கடுமையாக உழைத்தார் என்பதை நாம் பார்க்க வேண்டும்.

இது பற்றி லக்ஷ்மண சர்மா "பகவான் எனக்குக் கற்பிக்க ஆரம்பித்த போது நான் மெதுவாக ஒவ்வொரு செய்யுளாகக் கற்க வேண்டியிருந்தது. பகவான் கற்பித்ததை நான் முழுமையாகப் புரிந்து கொண்டேனா என்பதை நிச்சயித்துக் கொள்ள வேண்டியிருந்தது. அதனால் பகவான் கற்பித்தவற்றின் அர்த்தத்தை உள்ளடக்கிய ஸம்ஸ்க்ருத ஸ்லோகமாக எழுதி வைத்தேன். நான் எழுதிய ஸ்லோகத்தில் பகவான் கூறியவற்றைப் பிழையின்றி மொழிபெயர்த்துள்ளேனா என்பதை உறுதி செய்வதற்காக அதை அவரிடம் ஸமர்ப்பிப்பேன். அதன் பிறகே அடுத்த செய்யுளை எடுப்பார். நான் ஸமர்ப்பிப்பதை பகவான் எவ்வாறு ஏற்றுக் கொள்ள வேண்டுமென நினைக்கிறேனோ அவ்வாறு நிகழவில்லையானால் அவர் திருப்தியடையும் வரை அச்செய்யுளை மீண்டும் மீண்டும் மாற்றியமைப்பேன். இது போன்றே நான் எல்லாச் செய்யுட்களையும் கற்றுக் கொண்டு அவற்றை ஸம்ஸ்க்ருதத்தில் மொழிபெயர்த்தேன். 'உள்ளது நாற்பது' என்னை முழுமையாக ஆட்கொண்டு விட்டதால் முதல் மொழிபெயர்ப்பில் திருப்தியடையாமல் அதை மீண்டும் மீண்டும் திருத்தியமைக்க நிர்ப்பந்திக்கப்பட்டேன். நாற்பது செய்யுட்களையும் மொழிபெயர்த்த பின்பு மீண்டும் முதல் செய்யுளிலிருந்து அவற்றைத் திருத்தி அமைக்கத் தொடங்கினேன். என் மனதிலிருந்த முடிவான நிறைவை அடைவதற்கு, எவ்வளவு நேரமானாலும் எத்தனை உழைத்தாலும் மிகையாகாது என்று தோன்றியது" என்று கூறியுள்ளார். ஸம்ஸ்க்ருத மொழிபெயர்ப்புக்கு 'ஸத் தர்சனம்' என்று பெயர் கொடுக்கப்பட்டது. யாரொருவரைப் பற்றியும் அபிப்ராயம் கூறாத பகவான் அயராது உழைத்த லக்ஷ்மண சர்மாவைப் பற்றிக் கூறும் போது "லக்ஷ்மண சர்மாவுக்கு இம்மொழிபெயர்ப்பே ஒரு தவம். மீண்டும் மீண்டும் அதைத் திருத்தியமைத்து அதிலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறார்" என்று குறிப்பிட்டார். தவறுகள் ஏதும் இல்லாத, பூரணமான ஸம்ஸ்க்ருத மொழிபெயர்ப்பாக அதை அமைப்பதற்கு லக்ஷ்மண சர்மா கடுமையாக உழைத்து வெற்றியும் பெற்றார்.

லக்ஷ்மண சர்மா ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்களை அநேகமாக நிறைவு செய்யப்போகும் தறுவாயில் கபாலி சாஸ்திரியும் ஆச்ரமத்தில் இருந்தார். அந்தச் செய்யுட்களை வாசித்துப் பார்க்கும்படி அவரிடம் கூறியபோது கபாலி சாஸ்திரி "நான் என்னுடைய குருவான காவ்யகண்ட கணபதி முனிக்கு இவற்றை அனுப்புகிறேன். அவர் ஸம்ஸ்க்ருதம் சரியாக உள்ளதா என்பதைப் படித்துப் பார்த்து மாற்றங்கள் தேவைப்பட்டால் தனது அபிப்ராயத்தைத் தெரிவிப்பார்" என்று கூறினார். எனவே 'ஸிர்ஸி' என்னுமிடத்திலிருந்த காவ்யகண்டருக்கு அந்த செய்யுட்கள் அனுப்பப்பட்டன. 40 செய்யுட்களிலும் பொதிந்திருந்த பொருளின் கருத்தாழத்தைக் கண்ட காவ்யகண்ட முனி ஸ்தம்பித்துப் போனார். தன்னிகரற்ற ஆசுகவியான காவ்யகண்ட முனி லக்ஷ்மண சர்மா எழுதிய செய்யுட்களைத் திருத்துவதற்கு முற்படாமல் புதிதாகச் செய்யுட்களை இயற்றினார். அவருடைய பக்தர்கள் சிலர் இந்தப் புதிய செய்யுட்களைப் புத்தகமாக அச்சடித்து 'ஸத் தர்சனம்' எனப் பெயரிட்டு கபாலி சாஸ்திரிக்கு அனுப்பியபின் அவர் அதற்கொரு விளக்கவுரை எழுதினார்.

இது 1930-ம் ஆண்டில் நடந்தது. காவ்யகண்டர் எழுதிய ஸ்லோகங்களிலிருந்த கவிதை நயத்தை பகவான் பாராட்டினார் என்றாலும் பல இடங்களில் அந்த மொழிபெயர்ப்பு. மூலத்திலிருந்து மாறுபட்டிருந்ததை லக்ஷ்மண சர்மா கண்டார். இந்த விஷயத்தை பகவானிடம் எடுத்துக் கூறினார். மூன்று ஆண்டுகளாக தமிழ் மூலத்தையும் ஸம்ஸ்க்ருத மொழி பெயர்ப்பையும் அலசிப் பார்த்திருந்ததால் தான் கூறுவது முற்றிலும் சரியானது என்றறிந்திருந்தார் லக்ஷ்மண சர்மா. யாரிடமாவது அல்லது எதிலாவது தவறுகளிருந்தால் அவற்றைக் குறிப்பிட்டுச் சொல்வதை விட உண்மையை எடுத்துக் கூறுவது சிறந்தது என்பதுதான் எப்போதுமே பகவானுடைய கருத்து. "உங்களால் அந்த உபதேசத்தை உள்ளபடி பிழையின்றி விளக்க முடியுமானால் நீங்களே ஒரு விளக்கவுரையை ஏன் எழுதக் கூடாது?" என பகவான் லக்ஷ்மண சர்மாவிடம் கூறினார். பகவானது கேள்வி அவரை ஊக்குவித்ததனால் பகவான் அளித்த விளக்கங்களுக்குத் தான் எழுதி வைத்திருந்த விரிவான குறிப்புக்களின் அடிப்படையில் விளக்கவுரை எழுத அவர் முனைந்தார்.

ஒரு தமிழ் மாதாந்தர பத்திரிகையின் பதிப்பாசிரியர் அந்த விளக்க உரைகளைத் தொடர் கட்டுரைகளாகப் பிரசுரிக்க விரும்பினார். ஒவ்வொரு முறையும் பத்திரிகை வந்த உடனே பகவான் விளக்க உரை அச்சிடப்பட்டிருந்த பக்கங்களை மிகுந்த அக்கறையுடன் வெட்டி எடுத்து ஒரு 'ப்ரௌன் பேப்பரில்' அவற்றை ஒட்டிப் பாதுகாத்து வைப்பார். விளக்க உரைகள் முற்றிலும் பிரசுரிக்கப்பட்ட பின் அந்தப் பக்கங்களை ஒரு புத்தகமாகத் தானே தைத்து வைத்தார். அந்த விளக்க உரையில் பகவானுக்கு இருந்த சிரத்தையைக் கவனித்த பக்தர்கள் அதைத் தாங்களே அச்சிடத் தீர்மானித்தனர். ஆனாலும் ஏதோ ஒரு காரணத்தால் ஆச்ரமத்தால் அதை அச்சிட இயலவில்லை.



பகவான் – கண்ணாடி
அணிந்து "உள்ளது நாற்பது"
புத்தகப்பிரதியை சரி பார்த்தல்

அதனால் லக்ஷ்மண சர்மாவே தனிப்பட்ட முறையில் 'உள்ளது நாற்பது உரை' என்ற பெயரில் அதைப் புத்தகமாகப் பதிப்பித்தார். அவர் அவ்வாறு செய்ததற்குச் சொந்தக் காரணங்கள் ஏதுமில்லை. பகவானுக்கு அதில் இருந்த அக்கறை காரணமாகவே லக்ஷ்மண சர்மா அந்தப் பணியை மேற்கொண்டார்.

விளக்க உரை பிரசுரமானதும் ஒரு சுவையான நிகழ்ச்சி நடந்தது. ஒரு நாள் பகவானது சகோதரரும் ஆச்ரம நிர்வாகியுமான சின்னஸ்வாமி, அலுவலகத்தில் ஆச்ரம சம்பந்தமான எழுத்து வேலைகளில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். சின்னஸ்வாமி தனது பணியில் ஆழ்ந்து மூழ்கியிருந்ததால் ஜன்னலுக்கு வெளியில் அவரது கவனத்தை ஈர்க்கும் பொருட்டு பொறுமையுடன் காத்து நின்ற பகவானை அவர் கவனிக்கவில்லை. பகவான் சின்னஸ்வாமியை சுலபமாகக் கூப்பிட்டிருக்கலாம். ஆனால் அவர் அம்மாதிரி ஒரு போதும் செய்ய மாட்டார். கிட்டத்தட்ட பதினைந்து நிமிடங்களுக்குப் பிறகு பகவானைப் பார்த்த வேறு யாரோ ஒருவர் சின்னஸ்வாமியிடம் "உங்கள் பின்னாலுள்ள ஜன்னலுக்கு வெளியே பகவான் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்" என்று கூறிய பின்னர் பகவான் "பிச்சை" என்று அழைத்தார் (தன் சகோதரரை அவரின் வீட்டுப்பெயரில் தான் அழைப்பார்.) "லக்ஷ்மண சர்மா எழுதிய உள்ளது நாற்பது விளக்க உரையே இதுவரை வெளியானவற்றில் எல்லாம் மிகச் சிறந்தது என்று எல்லோரும் பாராட்டுகிறார்கள். அந்த நூலை அவர் படித்தது போன்று வேறு யாரும் படித்ததில்லை. அதனால் அந்த விளக்க உரையை ஆச்ரமம் பிரசுரிப்பது பொருத்தமாக இருக்குமென்று நான் நினைக்கிறேன்." என்று பகவான் கூறியதன் குறிப்பறிந்து கொண்டு ஆச்ரமம் அந்த உரையை உடனே பிரசுரித்தது. சின்னஸ்வாமி தான் அதைப் படித்ததுடன் "தயவு செய்து உள்ளது நாற்பது உரையைப் படியுங்கள். பகவானது உபதேசங்களை உள்ளபடியே பிரதிபலிப்பது அது" என்று எல்லோரிடமும் சிபாரிசும் செய்தார். அந்த ஆண்டில் பிரசுரிக்கப்பட்ட நூல்களில் 'உள்ளது நாற்பது உரை' மிகச் சிறந்தது என்ற பாராட்டைப் பெற்றது. இன்றும் கூட அது ஒரு சிறந்த தமிழ் நூல் எனக் கருதப்படுகிறது.

ஒரு முறை முருகனார் "லக்ஷ்மண சர்மா உள்ளது நாற்பதாக வாழ்ந்தார்" என்று என்னிடம் கூறியபோது அந்தக் கூற்றின் பொருளென்ன என்று நான் வினவினேன். "உள்ளது நாற்பதின் மூலம் குருநாதன் எதை எல்லாம் அறிவித்துள்ளரோ அவற்றின் மையப் பகுதி உட்பட அனைத்தையும் லக்ஷ்மண சர்மா நடைமுறைப்படுத்தினார். அவரது வாழ்க்கை, மூச்சு, எண்ணம் இவையனைத்துமே அந்த அற்புதமான புனிதமான நாற்பது செய்யுட்கள் தான். அவர் ஆங்கிலம், தமிழ், ஸம்ஸ்க்ருதம் ஆகிய மொழிகளில் பண்டிதராக இருந்ததால் அந்தச் செய்யுட்களை இடையறாது மொழிபெயர்த்த வண்ணமிருந்தார்.

அவரது மொழிபெயர்ப்புக்களை அறிமுகப்படுத்த அவர் உபயோகித்துள்ள வாக்கியங்கள் பின்வருமாறு "பண்டைய ஞானத்தை வெளிப்படுத்திய உபநிஷதங்கள் கூறும் உண்மைகளை உறுதி செய்வதாக பகவான் ரமணரின் வாழ்க்கையும் உபதேசங்களும் உள்ளன. பகவான் தனது மேலை நாட்டு பக்தர்களுக்கும் கீழை நாட்டு பக்தர்களுக்கும் எழுத்து மூலமாகவும் வாய் மொழியாகவும் இந்த அடிப்படையான ஞானத்தையே கொடுத்தார். பகவானுடைய உபதேசங்களுடன் முழுமையாக ஒத்திருப்பதால் பண்டைய ஞானம் மதிப்புடையதாக உள்ளது. உபநிஷதங்கள் வெளிப்படுத்திய ஞானத்திற்கு முக்கியத்துவம் கொடுப்பவர்களின் கவனத்தை வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு ஞானியின் உபதேசங்கள் நிச்சயமாக ஈர்க்கும். இந்நூலில் முன்பும், தற்போதும் வெளிப்படுத்தப்பட்ட ஞானத்தை முறையாகத் தெளிவுபடுத்த முயற்சி செய்யப்பட்டுள்ளது." என எழுதியுள்ளார்.

இது அவருக்கு அவரது குருவான பகவானிடம் இருந்த அபாரமான அன்பையும் மதிப்பையும் வெளிப்படுத்துவதாக உள்ளது.

தமிழ் மூல நூலிலிருந்து ஆங்கில மொழியாக்கம் செய்யப்பட்ட அந்நூல் 'மஹாயோகம்' என அழைக்கப்பட்டது. பல ஆண்டுகளுக்கு பகவானுடைய உபதேசமான ஆத்ம விசாரத்தை விளக்கும் நம்பகமான ஆங்கிலப் பதிப்பாக விளங்கியது இந்த 'மஹாயோகம்' என்ற நூல் மட்டுமே. பகவானுடைய மஹா ஸமாதிக்குப் பின்னரே ஆர்தர் ஆஸ்போர்னுடைய புத்தகங்கள், முனகால வேங்கடராமைய்யாவின் 'பகவத் வசனாம்ருதம்' (Talks with Sri Ramana Maharshi) முதலியவை ஆங்கிலத்தில் வெளிவந்தன. ஆங்கில வாசகர்கள் பகவானது நேரடி உபதேசமான ஆத்ம விசாரம் பற்றி மேலும் பல விஷயங்களை அறிந்து கொள்ள இவை பெரும் வாய்ப்பளித்தன.

லக்ஷ்மண சர்மா 'மஹாயோகம்' என்ற பெயரைத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணம் என்ன? இந்தப் புத்தகத்தின் 'The Quest'(தேடல்) என்ற அழகான ஒன்பதாவது அத்தியாயத்தின் இறுதியில் இதற்கு விளக்கம் தரும் போது "பகவான் ஒரு முறை 'நான் யார்' என்னும் கேள்வியையே ஒவ்வொருவரும் அலசி ஆராய்ந்து பார்க்க வேண்டும்" என்றார். ஏனென்றால் எல்லா யோகங்களும் இந்த 'நான் யார்? என்னும் கேள்வியில் அடங்கிவிடுகின்றன. அதனால் இதற்கு 'மஹாயோகம்' எனப் பெயரிடப்பட்டது" என்று சர்மா கூறியுள்ளார். வழக்கம் போல பிரசுரிக்கப்பட்ட புத்தகத்தைப் பகவான் வாங்கவில்லை. "யாரிடம் அதற்கெல்லாம் பணம் இருக்கிறது?" என்று கூறி பிழை திருத்தம் செய்வதற்குக் கடைசியாக அனுப்பப்பட்ட கையெழுத்துப் பிரதிகளை ஒன்று சேர்த்துத் தனது வழக்கப்படி புத்தகமாக்கி வைத்துக் கொண்டார். ஏனெனில் பிழைகளைத் திருத்துவதற்குப் பல மணி நேரம் அவரே உழைத்திருந்தார். இந்தச் சமயத்தில் கூர்ம புராணத்தை அவர் படித்துக் கொண்டிருந்த போது ஒரு ஸம்ஸ்க்ருத ஸ்லோகத்தை அவர் கவனிக்க நேர்ந்தது. அதை ஒன்பதாவது அத்தியாயத்தின் அடியில் எடுத்து எழுதினார். அதன் பொருள் : 'எந்த ஒரு யோகத்தால் ஆத்மாவை ஒருவன் அறிந்து கொள்கிறானோ, எதைச் சிவபெருமான் 'அது நானே' என்று பிரகடனம் செய்கிறாரோ அந்தத் தூய, நித்ய ஆனந்தமே பரமாத்மாவிற்குரிய மஹாயோகம்' என்பதாகும்.

லக்ஷ்மண சர்மாவும் முருகனாரும் பகவானின் தீவிர பக்தர்கள் என்பதோடு நெருங்கிய நண்பர்களுமாவர். பெருமதிப்பிற்குரிய இவர்கள் வேதாந்தம் அல்லது அத்வைதம் குறித்த அறிவேதும் இன்றி பகவானிடம் வந்தார்கள். அதனால் பகவான் கூறியவை அனைத்தையும் முழுவதுமாக அவர்களால் கிரஹித்துக் கொள்ள முடிந்தது. முருகனார் இதற்குள் பகவானது உபதேசங்களை 'குரு வாசகக் கோவை' என்ற தமிழ் செய்யுட்களின் தொகுப்பாக எழுதியிருந்தார். முருகனாரும் லக்ஷ்மண சர்மாவும் சேர்ந்து அதிலிருந்து முன்னூறு செய்யுட்களைத் தேர்ந்தெடுத்தனர். லக்ஷ்மண சர்மா அவற்றை ஆங்கிலத்தில் உரை நடையில் மொழிபெயர்த்தார். 'குரு ரமண வசன மாலை' என அதற்குப் பெயரிட்டார். ஸம்ஸ்க்ருதத்தில் 'ஸ்ரீ ரமண ஹ்ருதயம்' என்ற நூலையும் சர்மா எழுதினார். பின்னர் அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து 'Revealation' என்ற புத்தகமாக வெளியிட்டார். ஆங்கிலம் மட்டுமே தெரிந்தவர்களுக்கு இந்த ஆங்கில நூல்கள் அனைத்துமே மிகவும் மதிப்பு வாய்ந்த வரபிரஸாதம் எனலாம். ஏனெனில் அவர்கள் பகவானது உபதேசங்களை அவற்றின் மூலம் நேரடியாகப் பெற முடியும். லக்ஷ்மண சர்மாவிடம் எல்லா நூல்களையும் எதற்காக 'யார்' என்ற புனைப் பெயரில் அவர் எழுதினார்? என்று யாரோ கேட்ட போது "இந்தப் புத்தகங்களில் உள்ளவை அனைத்துமே நான் என் குரு பகவானிடமிருந்தும், முருகனாரிடமிருந்தும் கற்றவை அப்படியிருக்கும் போது 'யார்' அவற்றை எழுதியது?" எனப் பதிலிறுத்தார்.

இயற்கை வைத்தியத்தில் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்த லக்ஷ்மண சர்மா, தனது கிராம மக்களுக்குச் சிகிச்சையளிக்க மீண்டும் அங்கு சென்று விட்டார். பகவானுக்கு அர்ப்பணிக்கப்பட்ட அவரது 'Nature Cure' (இயற்கை வைத்தியம்) என்ற நூல் அதிகார பூர்வமாக அந்த வைத்தியம் பற்றிக் கூறுவதாகப் பெயர் பெற்றிருந்தது. ஸம்ஸ்க்ருதத்திலும் 'ஸ்வாதீன ஸ்வஸ்த்ய மஹாவித்யா' என்ற பெயரில் இயற்கை வைத்தியம் பற்றி எழுதியுள்ளார். தென் இந்தியாவில் இயற்கை வைத்தியத்தின் தந்தையாகவே அவர் கருதப்படுகிறார். அவ்வாறிருந்தும் அவரது மனம் எப்போதும் பகவானது உபதேசங்களிலேயே இசைந்திருந்தது. 1950-ல் பகவான் மறைந்த பின்னரும் கூட பகவானது உபதேசங்களை 700 ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்களில் இயற்றி 'ஸ்ரீ ரமண பரவித்யோபநிஷத்' என்று அவற்றின் தொகுப்பிற்குப் பெயரிட்டார். அதன் ஆங்கிலப் பதிப்பான 'The Upanishad of supreme knowledge' என்ற நூலை ஆச்ரமம் வெளியிட்டுள்ளது. ரமண பக்தர்களுக்கு அது ஒரு வரபிரஸாதம். கீழ்க்கண்ட ரமண பராவித்யோபநிஷத ஸ்லோகங்கள் பகவானுடைய உபதேசங்களை மிக அழகாக எடுத்துரைக்கின்றன:-

1. 479-வது ஸ்லோகம்:

"எவ்வாறு அலைகள் என்பது, கடலைத் தவிர வேறொன்று மில்லையோ
எவ்வாறு கனவு உலகம், கனவு காண்பவனைத் தவிர வேறுபட்டதில்லையோ
அதே போன்று அகில உலகமும் 'என் ஆத்மாவைத் தவிர' வேறு எதுவுமில்லை.
உலகை ஆத்மாவில் இணைப்பது இந்தப் பார்வையே."

2. 504-வது ஸ்லோகம்:

"பழமையான பெரும்மொழியாகிய 'அது நீ' என்பது ஒருவரை, அவரை மறைத்திருக்கும் கோசங்களை (திரையை) விலக்கி அவரது உண்மையான ஆத்மாவில் இருத்துவதால் ஒருவர் எப்போதுமே அந்த பரமமான உண்மையே ஆவார். (உருவற்ற இருப்பே ஆவார்.) தனது ஆத்மாவைத் தேடுவதால் மட்டுமே, ஒருவர், தனது ஆத்மாவும் அந்த மிகவுயர்ந்த உண்மையும் (ப்ரம்மமும்) ஒன்றேயென்பதை அனுபவித்து உணர முடியும்."

3. 505-வது ஸ்லோகம்:

"ஆத்ம விசாரத்தினால் ஒருவர் எப்போது 'தான் இந்த உடம்பே' என்ற எண்ணத்தை விடுத்து ஆத்மாவைத் தேட முற்படுகின்றாரோ, அப்போது அவரது உண்மை இயல்பான இருப்பை – ஆத்மாவை முழுமையாக உணருகிறார். அவ்வாறு நிலைத்திருக்கும் ஒருவரின் இதயத்தில் பரமாத்மாவே அவரது ஆத்மாவாகப் பிரகாசிக்கிறார்."

4. 506-வது ஸ்லோகம்:

"ஆத்ம விசாரம் ஒன்றே ஆத்மாவின் உண்மை உணர்வை அறிவதற்குரிய நேரான மார்க்கம் இந்த ஆன்மீகத் தேடலில், தியானம் என்பது 'நான் இந்த சரீரம்' என்ற தடையைத் தாண்டுவதற்கு உதவும் அடிப்படை ஸாதனம் மட்டுமே."



# 36 முனகால வேங்கடராமையா



1896-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் மதுரையில் படித்துக் கொண்டிருந்த ஒரு இளம் பள்ளி மாணவன் தன் தாயிடம் "அம்மா பக்கத்து ஸ்கூலில் படித்துக் கொண்டிருந்த ஒரு பிராமணப் பையன் வீட்டைவிட்டு ஓடிப் போய்விட்டானாம்," என்று தகவல் கூறினான். அந்தச் சமயத்தில், தன் பெயரையே கொண்டிருந்த அந்த ஓடிப்போன பையனோடு விதி தன்னைப் பிணைக்கும் என்றோ எல்லோராலும் ஞானியாக ஏற்றுக் கொள்ளப்பட்டு ஸ்கந்தாச்ரமத்திலிருந்த அவரை 1918-ல் தான் சந்திப்போம் என்றோ 1930 முதல் வாழ்நாள் முழுவதும் அவருடனேயே இருப்போம் என்றோ அவன் சிறிதும் நினைத்திருக்க முடியாது. இந்த மாணவனுடைய பெயர் S. வேங்கடராமன். பிற்காலத்தில் முனகால வேங்கடராமையா என்று அழைக்கப்பட்ட இவர், கிறிஸ்தவர்களுக்கு 'பைபிள்' எப்படியோ அதே போன்று, பகவானின் பக்தர்களுக்குப் பரம பாவனமாக விளங்கும் 'ஸ்ரீ ரமண மஹர்ஷியின் வசனாம்ருதம்' (Talks with Sri Ramana Maharshi) என்ற ஆங்கிலப் புத்தகத்தைத் தொகுத்தவர்.

முனகால வேங்கடராமையா, சோழவந்தான் என்ற கிராமத்தைச் சேர்ந்தவர். அவரது மூதாதையர்களும், அவரது சகோதரர்களும் கூட அங்கு இருந்த வேதபாடசாலையில் வேதம் பயின்றனர். அவருக்கு ஸம்ஸ்க்ருதம் நன்கு தெரிந்திருந்தாலும், பக்கத்து நகரிலிருந்த ஆங்கிலப் பள்ளி ஒன்றில் படிக்க முற்பட்டார். தொடர்ந்து கல்லூரிக்கும் சென்று படித்தார். படித்துக் கொண்டிருக்கும் போதே அவருக்குத் திருமணம் நிறைவேறியது. ஆராய்ச்சியில் ஈடுபாடு இருந்ததால் மும்பையிலிருந்த ஆய்வுக்கூடம் ஒன்றில் அவர் வேலை தேடிக் கொண்டார். அவருக்கு ஒரு மகள் பிறந்தாள். மகள் மீது மிகுந்த பாசம் வைத்திருந்த போதும் தம் கவனம் முழுவதையும் தனது ஆராய்ச்சிப் பணியிலேயே செலுத்தினார். பத்து ஆண்டுகள் விரிவான ஆராய்ச்சியில் ஈடுபட்ட பின்னர் மீண்டும் கல்லூரியில் சேர்ந்து பிரஸிடென்ஸி கல்லூரியில் பட்டப்படிப்பை முடித்துத் தங்கப் பதக்கமும் பெற்றார். பிறகு 1912 முதல் 1918 வரை சென்னையில் பிரபலமான கல்லூரி ஒன்றில் பேராசிரியராகப் பணி ஆற்றினார். இந்தக் காலத்திலும் கூட அவர் தவ வாழ்க்கையே வாழ்ந்து வந்தார். கல்லூரி வளாகத்திலேயே பேராசிரியர்களுக்கு மிகப்பெரிய வீடுகள் ஒதுக்கப்பட்டிருந்தன. அந்தப் பெரிய வீட்டில் மனைவியையும் மகளையும் வாழச் செய்து வாட்ச்மேனுக்காக ஒதுக்கப்பட்டிருந்த சிறிய இல்லத்தில் அவர் வாழ்ந்தார். அவருடைய எளிமை அத்தகையதாக இருந்தது. அந்த நாட்களிலேயே ஆன்மீக வாழ்க்கையில் முனகால வேங்கடராமையாவிற்கு நாட்டமிருந்தது. அவர் சந்தித்த ஒரு மஹான் அவருக்குப் பத்து உபநிஷதங்கள், பகவத்கீதை, ப்ரஹ்ம ஸூத்ரம் இவற்றைப் போதித்தார். (தினமும் உபநிஷதங்களைப் படிக்குமாறு அந்த மஹாத்மா வேங்கடராமையாவிற்கு அறிவுறுத்தியிருந்தார். அவரும் தனது இறுதி நாட்கள் வரை அதைக் கடைப்பிடித்தார். அவரது மேஜையின் மேல் எல்லா உபநிஷதங்களையும் வைத்திருப்பார். விரும்பிய போதெல்லாம் அவர் அவற்றைப் படிப்பார்).

சிறிது காலத்திற்குப் பின் அவர் மிகவும் அன்பு செலுத்திய அவரது மகள் இறைவனடி சேர்ந்தாள். துயரத்திலிருந்து அவரால் மீளவே முடியவில்லை. அமைதியை நாடி ஓயாமல் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்தார். 1918-ல் அவர் அருணாசலத்திற்கு வந்தபோது

ஸ்கந்தாச்ரமத்தில் ஒரு ஞானி இருப்பதாகக் கேள்விப்பட்டு அங்கு சென்ற போது, தனது குழந்தைப் பருவத்தில் வீட்டைவிட்டு ஓடிய அந்த மாணவனே தற்போது பகவான் ரமண மஹர்ஷி என்ற பெயரோடு அங்கு ஞானியாக அருளொளி வீசுவதைக் கண்டார். இருந்த போதும் சென்னையின் அருகில் இருந்த ஒரு மஹாத்மாவிற்குத் தான் செய்து கொண்டிருந்த சேவையை நிறுத்த விரும்பாததால் திரும்பிச் செல்ல வேண்டியிருந்தது. 1922-ல் அந்த மஹாத்மா ஸமாதியானதால் வேங்கடராமையாவின் துயரம் மேலும் அதிகரித்தது. அவர் தனது சீடனுக்குக் கடைசியாகக் கொடுத்த அறிவுரை 'உபநிஷதங்களைத் தொடர்ந்து படிக்கவேண்டும்' என்பதே. முனகால வேங்கடராமையா தொடர்ந்து ஐந்து ஆண்டுகளுக்கு அந்த நூல்களைப் படித்தார். மீண்டும் 1927-ல் ரமணாச்ரமம் வந்து பகவானைச் சந்தித்தார். இந்த சந்திப்பின்போது ஸ்ரீ ரமணரே தன் ஸத்குரு என்பதை முழுமையாக உணர்ந்து கொண்டதால், அவர் ஆச்ரமத்திலேயே தங்கி விட்டார். "வாழ்க்கையில் மன வேதனையால், ஆழ்ந்த துயரத்தில் மூழ்கியிருந்த அந்தக் கஷ்டமான காலத்தில் ஒரு எளிய பக்தர் (என்று தன்னையே குறித்தவாறு) தனது மன நிம்மதிக்காக பகவான் ரமணரின் ஸாந்நித்தியத்தை நாடி, ஸ்வாமி நிரஞ்ஜனானந்தர் கனிவுடன் அளித்த அனுமதியோடு ஆச்ரமத்திலேயே வாழ முற்பட்டார்." என்று முனகால வேங்கடராமையாவே குறித்து வைத்திருந்தார்.

டெல்லியிலிருந்த ஆய்வுத் துறையின் தலைமைப் பொறுப்பை ஏற்கும் படி அழைத்து இந்திய அரசாங்கத்திலிருந்து ஒரு நாள் அவருக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தப் பதவி முனகாலருக்கு நல்ல வருவாயும், பெயரும், புகழும் கொடுக்க வல்லது. எழுதும் மை திடநிலை அடையாமல் இருப்பதற்கு உதவும் ஒரு வேதிப்பொருளை அவர் கண்டு-பிடித்திருந்ததை மதித்து அந்தப்பணி முனகாலருக்கு அளிக்கப்பட்டது. இந்தப் பொருளை அவர் கண்டுபிடிப்பதற்கு முன் எழுதுவதற்கு உதவும் மை, வெகு விரைவில் காய்ந்து போய்விடும் என்பதால் மக்கள் மிகவும் சிரமப்பட்டார்கள். வேலையை ஏற்குமாறு அரசாங்கம் அனுப்பிய கடிதத்தை பகவானிடம் அவர் காட்டியபோது அதில் பகவானுக்கு சம்மதம் இருப்பதாகத் தோன்றவில்லை. அதனால் அந்தப் பணியை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. பகவானது ஸாந்நித்தியத்திலும் அவரது வழிகாட்டுதலிலும் தீவிர ஸாதனையில் ஈடுபட்டார். பலாக்கொத்தில் வாழ ஆரம்பித்தார்.



பலாக்கொத்தில் தனது குடிலின் முன்னால் நிற்கும் முனகால வேங்கடராமையா. அருகில் அவர் தியானம் செய்த

வேங்கடராமையா தெலுங்கர் எனினும், அவர் ஆங்கிலத்திலும், தமிழிலும் சரளமாகப் பேசக் கூடியவர்.

அத்துடன் ஸம்ஸ்க்ருதத்திலும் நல்ல பாண்டித்யம் பெற்றிருந்தார். இருந்தபோதும் இலக்கியத் தமிழறிவு தேவை என்று அவருக்குத் தோன்றியதால் தமிழ்நூல்களை முக்கியமாக சைவ சமயத்தைச் சேர்ந்த ஞானியர் எழுதிய சைவ சித்தாந்தத்தை பகவான் அவருக்கு அறிமுகம் செய்து, தானே கற்பிக்கவும் செய்தார். பிற்காலத்தில் 'ஸ்ரீ ரமண மஹர்ஷியின் வசனாம்ருதம்' (Talks with Sri Ramana Maharshi) என்ற நூலைத் தொகுக்கப் போகும் ஒருவருக்கு இது தேவையாக இருந்தது. தன்னை முன்னிலைப் படுத்திக் கொள்ளாமல், ஒரு ஸாதகராகத் தன்னைக் குறிப்பிட்டு, "பகவானது இனிய, புத்துணர்ச்சியூட்டக் கூடிய, தெளிவூட்டும் விளக்கங்களை அவ்வப்போது குறித்து வைத்துக் கொண்டார். அகத்தூய்மைக்காக தானாகவே எடுத்துக் கொண்ட இந்தப் பணி, ஆழமானதும் நுணுக்கமானதுமான பகவானது சொற்களை நன்கு புரிந்து கொள்வதற்காகவும் மேற்கொள்ளப்பட்டது." என்று தான் அதில் சம்பந்தப்படாதவர் போன்று முனகாலர் எழுதி வைத்திருந்தார்.

பகவான் ஒரு ஸாதகருடைய கேள்விக்கு விடை அளிக்கையில் விடையிலிருந்த சொற்களின் எண்ணிக்கையால் அது சக்திபெறவில்லை. ஆனால் அதிலிருந்த ஆழ்ந்த கருத்துக்களே அவற்றிற்குச் சக்தி அளித்தன. அதனால் மொழி பெயர்க்க அதிக நேரம் தேவைப்பட்டது. சில சமயங்களில் ஸாதகர்கள் ஆங்கிலத்திலோ அல்லது வேறு மொழிகளிலோ கேள்வி எழுப்பும் போது அவற்றை பகவான் புரிந்து கொள்வதற்காக, தமிழில் மொழிபெயர்க்க வேண்டிய அவசியம் இருந்தது. அப்போதெல்லாம் பகவான் தமிழில் பதில் கொடுப்பார்; அதை முனகாலர் கேள்வி கேட்டவரின் பாஷையில் மொழி பெயர்த்துக் கூறுவார். பகவானது கூற்றிலிருந்து சற்றும் மாறுபடாத வகையில் அவர் மொழிபெயர்க்க வேண்டியிருந்தது.

முனகாலரின் 'ஸ்ரீ ரமண மஹர்ஷியின் வசனாம்ருதம்' (Talks with Sri Ramana Maharshi) என்ற நூலுக்கு டாக்டர் T. M. P. மஹாதேவன் முன்னுரை எழுதியுள்ளார். அதில் "1935 முதல் 1939 வரை நான்கு ஆண்டுகளில் பகவானுடன் நிகழ்ந்த உரையாடல்களைப் பதிவு செய்து வைத்ததற்கு முனகால வேங்கடராமையாவிற்கு நாம் எவ்வளவு நன்றி கூறினாலும் போதாது. மேலும் பகவானை அந்த சமயத்தில் காணும் பேறு பெற்ற பக்தர்கள் தங்கள் மனதில் பதிவு செய்து கொண்டிருந்த பகவானின் மொழிகளை மீண்டும் நினைவு கூர்வதில் மிக்க மகிழ்ச்சி அடைந்தனர். அருணாச்சலத்தில் வாழ்ந்த உயர்ந்த ஞானியான பகவான் பெரும்பாலும் மௌனத்தின் மூலமே கற்பித்தார் என்றபோதும் வாய்மொழியாகவும் அறிவுரைகள் வழங்கினார் என்பதும் உண்மையே. அவை கேட்போரை திகைப்படையச் செய்யாமலும் குழப்பத்தில் ஆழ்த்தாமலும் மிகத் தெளிவாக இருந்தன. அவர் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் பின்வரும் ஸந்ததியினரின் பயன் கருதி பாதுகாக்கப்பட வேண்டும் என்றே எல்லோரும் விரும்புவார்கள்," என்று எழுதியிருந்தார்.

மேஜர் சாட்விக் அந்த நூலிற்கு எழுதிய முன்னுரையில் "உரையாடல்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் அந்த நான்கு ஆண்டுகளில்தான் ஆச்ரமம் புகழின் உச்சத்தை எட்டியிருந்தது. மஹர்ஷியுடைய உடல்நலம் பொதுவாக நன்றாக இருந்தது. அவர் அமர்ந்திருந்த ஹால், வருபவர்களை வரவேற்கும் விதமாக இரவும் பகலும் திறந்தே இருந்தது. உலகின் ஒவ்வொரு மூலையிலிருந்தும் விருந்தினர்கள் குவிந்த வண்ணம் இருந்தார்கள். பகவானைக் காண்பதற்கு வராத நாட்டினரே இல்லை என்று கூடக் கூறலாம். பகவானுடைய வார்த்தைகளைப் புரிந்து கொள்ளாதவர்களும், ஏற்றுக் கொள்ளாதவர்களும் கூட சூரியனைப் போன்று ஒளி வீசிக் கொண்டிருந்த பகவானின் ஸந்நிதியினால் வசீகரிக்கப்பட்டு, அவர் முன்னிலையில் உயர்ந்த

அனுபவத்தைத் தாங்கள் பெற்றதாகக் கூறியுள்ளனர்." என்று குறிப்பிட்டுள்ளார். வசனாம்ருதம் மாற்றறியாத பசும் பொன் என்று அவர் வர்ணித்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருக்கு 'ம' (M) என்று அழைக்கப்பட்ட மஹேந்திரநாத் குப்தா என்ற பள்ளி ஆசிரியர் ஆங்கில மொழி பெயர்ப்பாளராக இருந்தார். பகவான் ரமணருக்கோ முனகாலர் 'ம' (M) ஆக இருந்தார். பகவானின் பொருட்டு, தான் மொழிபெயர்த்த அனைத்தையும் அவர் பதிவு செய்து வைத்திருந்தார். பின்னர் அந்த நோட்டுப் புத்தகத்தை பகவானிடம் எடுத்துச் செல்வார். பகவான் அதைச் சரிபார்த்துத் திருத்தியும் பதிப்பிற்குத் தயார் செய்தும் தந்தார். இவ்வாறுதான் நமக்கு 'ஸ்ரீ ரமண மஹர்ஷியின் வசனாம்ருதம்' (*Talks with Sri Ramana Maharshi*) என்ற நூல் கிடைத்துள்ளது. பகவானால் திருத்தப்பட்ட நோட்டுப் புத்தகங்களாக இருந்த அந்த கையெழுத்துப் பிரதிகளை நான் பார்த்திருக்கிறேன். அவற்றில் சில கையெழுத்துப் பிரதிகளை டைப்பிஸ்ட் கிட்டு, ரமாமணி போன்ற பக்தர்களோடு சேர்ந்து டைப் செய்யும் பேறும் எனக்குக் கிடைத்துள்ளது. டைப் செய்யப்பட்ட பிரதிகள் அனைத்துமே சென்னையில் இருந்த சில பக்தர்களுடைய குழுவின் பார்வைக்கு அனுப்பி வைக்கப்பட்டது. அவர்கள் திருத்தம் செய்து அனுப்பியவற்றை முனகாலரும் சாட்விக்கும் மீண்டும் சரிபார்த்தனர். அவ்வாறு திரும்பி வந்த பிரதிகளில் 'கூறியதே கூறப்பட்டுள்ளது' என்ற சொற்கள் சிவப்பு மையினால் பக்கங்களின் ஓரத்தில் ஆங்காங்கே எழுதப்பட்டதோடு, பல பக்கங்கள் அடிக்கப்பட்டுத் திருப்பி அனுப்பப்பட்டிருந்தன. பக்கம் பக்கமாக அடிக்கப்பட்டிருந்ததைக் கண்டு வேதனையடைந்த சாட்விக், கோபத்தோடு ஆச்ரம அலுவலகத்திற்கு வேகமாக வந்து உரத்த குரலில், "பகவானால் கூறப்பட்ட விஷயங்களை அடிப்பதற்கு இவர்களுக்கு என்ன அதிகாரம் உள்ளது? ஒரே கருத்தைப் பலவிதமாகக் கூறுவதற்கு பகவானுக்கு முக்கியமான காரணம் இருந்திருக்கிறது. ஒவ்வொரு ஸாதகருடைய கிரஹிக்கும் தன்மைக்கு ஏற்றவாறே அவர் விஷயங்களை எடுத்துரைத்தார். ஒரு வார்த்தையைக் கூட அதிலிருந்து நீக்கக் கூடாது. அவை அனைத்துமே பகவானால் சரிபார்க்கப்பட்டு ஏற்றுக்



முனகால வேங்கட ராமையா – மனைவி மற்றும் மகள் காமாக்ஷியுடன்

கொள்ளப்பட்டவை," என்று உரத்த குரலில் கூறினார். சாட்விக்கின் அறிவுரை ஏற்றுக் கொள்ளப்பட்டது. முழுமையான உரையாடல்கள் அடங்கிய அந்த நூலிற்கு நாம் சாட்விக்கிற்கு நன்றிக் கடன்பட்டுள்ளோம். முனகாலரின் உண்மையான திறமையை மேஜர் சாட்விக் மிகவும் மதித்ததால் அவர் வேடிக்கையாக 'முனகாலர் பகவானுடைய ஆங்கில வாய்' என்று கூறுவார்.

பகவான் தன் சீடரான முனகாலரின் புத்திக் கூர்மையையும் ஆர்வத்தையும் கண்டு புராதன நூல்களான திரிபுர ரஹஸ்யம், அத்வைத போத தீபிகா, கைவல்ய நவநீதம் முதலியவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்குமாறு அவரிடம் கூறினார். முனகாலர், திரிபுர ரஹஸ்யத்தை எவ்வாறு மொழிபெயர்த்தார் என்பது ஒரு சுவையான கதை. ஒரு முறை நேபாளத்தில் இருந்த தைவராதர், அரசு நூலகத்தில் தான் படித்த 'திரிபுர ரஹஸ்யம்' என்ற ஸம்ஸ்க்ருத நூலின் கையெழுத்துப் பிரதியை தானே கைப்பட எடுத்து எழுதி பகவானுக்கு அனுப்பியிருந்தார். அதைப் படித்த பகவான் மிகவும் மகிழ்ச்சியடைந்து, "இது ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டால் ஸம்ஸ்க்ருதம் தெரியாத ஸாதகர்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும்," என்று கூறவே முனகாலர், தானாக முன்வந்து அந்தப் பணியை ஏற்றுக் கொண்டார். அவருடைய ஆங்கில மொழிபெயர்ப்பைப் படித்த சாட்விக் மிகவும் சந்தோஷமடைந்ததால் அதை 'டைப்' செய்யத் தானே உதவி செய்வதாகவும், விசேஷமான கறுமை நிறத் தோலினாலான துணியால் 'பைண்ட்' செய்து தருவதாகவும் கூறினார். அது பின்னர் பகவானுக்கு அன்பளிப்பாகத் தரப்பட்டது. தனது சோபாவிற்கு அருகிலிருந்த சுழலும் நூலகத்தில் பகவான் அதை வைத்திருந்தார். அத்வைத நூல்களைப் படிக்க விரும்பும் தீவிர ஸாதகர்களுக்குப் படிப்பதற்காக அது அவ்வப்போது கொடுக்கப்பட்டது. முனகாலரின் ஆங்கில மொழிபெயர்ப்பை மிகவும் ரசித்த பகவான் தமிழில் இருந்த 'கைவல்ய நவநீதம்' என்ற நூலையும் ஸம்ஸ்க்ருதத்தில் இருந்த 'அத்வைத போத தீபிகா' என்ற நூலையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்குமாறு அவரிடம் கூறினார். அந்த நூல்களும் 'டைப்' செய்யப்பட்டு தோலினால் 'பைண்ட்' செய்யப்பட்டு பகவானுடைய சோபாவின் அருகிலிருந்த சுழலும் நூலகத்தில் வைக்கப்பட்டன. பிற்காலத்திலேயே அவை ஆச்ரமப் பிரசுரங்களாக வெளிவந்தன. டேவிட் மெக்ஐவருடைய (David McIver) ஒத்துழைப்புடன் பகவானுடைய உள்ளத்தை உருக்கும் 'அருணாசல ஸ்துதி பஞ்சகத்தை' முனகாலர் ஏற்கனவே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருந்தார். பிற்காலத்தில் ஆர்தர் ஆஸ்போர்னால் சரிபார்க்கப்பட்டு வெளிவந்த 'ஸ்ரீ ரமண நூற்றிரட்டு உரை' (Collected works of Ramana Maharshi) என்ற நூலுக்கு வித்தாகவும் அடிக்கல்லாகவும் இவை அமைந்தன. பகவானுக்கும் முனகாலருக்கும் இடையே இருந்த உறவு ஆழ்ந்த குரு சிஷ்ய உறவிற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

சாந்தி, அமைதி, ஆத்மானந்தம் இவற்றின் உருவமாகவே திகழ்ந்தார் முனகாலர். எதையும் ஏற்கும் இனிய புன்னகையுடன் திகழ்ந்தது அவருடைய அமைதியான முகம். சாதாரணமாக அவரை வெளியில் காண்பது அரிது. வணங்குவதற்காக பகவானின் ஸமாதிக்கு வரும்போது அல்லது உண்பதற்காக உணவுக் கூடத்திற்கு வரும்போது மட்டுமே அவரைப் பார்க்க முடியும். மற்ற நேரங்களில் தனது அறைக்குள் இருந்தவாறே உபநிஷதங்களைப் படித்துக் கொண்டிருப்பார். உபதேசம் செய்யாமல் தனது அமைதியான, ஆன்மீக வாழ்க்கையின் மூலமே பல ஸாதகர்களை அவர் ஊக்குவித்துள்ளார். அவரோடிருந்த நெருங்கிய தொடர்பினால், பின்பற்றத் தக்க அவரது சீரிய வாழ்க்கையிலிருந்து நான் புத்துணர்ச்சியும் ஊக்கமும் பெற்றுள்ளேன். 'உண்மை' பற்றிய உபதேசங்கள் அளிக்காமல் 'உண்மையாகவே' தங்கள் வாழ்க்கையை வாழ்ந்து காட்டி, இளம் தலைமுறையினரை ஊக்குவிக்கும் அற்புதமான ஆன்மீக குணம் எல்லா மூத்த பக்தர்களிடமும் இருந்ததை நான் கண்ணுற்றேன்

எனது வாழ்க்கையிலேயே நிகழ்ந்த இரு சம்பவங்கள், முனகாலர் இளம் ஸாதகர்களுக்கு எவ்வாறு வழிகாட்டியாக இருந்தார் என்பதை விளக்குவதாக உள்ளன. 1960-ல் நான் ரமணாச்ரமத்திற்கு வந்த பின்னர் சில மூத்த பக்தர்கள் காவ்யகண்டரைப் பற்றி என்னிடம் விமர்சித்து, "அவர் கூறும் பல விஷயங்களும் அவருடைய கற்பனையே." என்று குறை கூறினர். இதனால் மனவேதனையடைந்த நான், காவ்யகண்டரைப் பார்த்திராத முனகாலர், விருப்பு வெறுப்பின்றி அபிப்பிராயங்கள் தெரிவிக்கக் கூடுமென்பதால் அவரை அணுகி, "நன்கு படித்த பக்தர்கள் ஏன் காவ்ய கண்டர் கூறும் விஷயங்களை உண்மை என்று ஏற்க மறுத்து அவமதிக்கிறார்கள்?" என வினவினேன். "யாரையும் குறை கூறுவது உனக்கு நல்லதன்று; அதிலும் முக்கியமாக பகவானின் பக்தர்களிடம் குறை காண்பது சரியன்று. அந்த சிறந்த மனிதர் மீது குற்றம் சாட்டப்படுகிறது என்று உனக்கு எவ்வாறு தெரிந்தது? அவை பிறருடைய அபிப்பிராயங்கள் அல்லவா? அபிப்பிராயங்கள் என்பவை மனதிலிருந்து எழும்பக் கூடியவை. உண்மை, இதயத்திலிருந்து வெளிப்பட்டு பிரகாசிக்கக் கூடியது. எப்போதெல்லாம் உனக்குச் சந்தேகங்கள் எழுகின்றனவோ அப்போதெல்லாம் உன் கவனத்தைப் பகவானிடம் உடனே திருப்பி விடு. பிறரது அபிப்பிராயங்களைக் காதில் வாங்கிக் கொள்ளாதே. பகவான் உனக்கு வழி காட்டுவார். காவ்யகண்டருக்கு இருந்த அளவற்ற அறிவையும், ஸத்தியத்திற்குத் தன்னை அவர் அர்ப்பணித்துக் கொண்டுள்ளதையும் பகவான் பெருமையோடு கூறுவார். உதாரணமாகக் கூறினால் ஒரு நாள், சுமார் ஒரு மணி நேரத்திற்குக் காவ்யகண்டரைப் பகவான் பாராட்டிப் பேசினார் - அவர் உமா ஸஹஸ்ரம், ஹர ஸஹஸ்ரம் இவற்றை எழுதிய விதம், தனது சீடர்களுக்குப் புராதன ஆன்மீக நூல்களை எவ்வாறு கற்பித்தார், ஒப்பற்ற பண்டிதரானாலும் பயந்த ஸ்வபாவத்தோடும் பணிவோடும் அவர் நடந்து கொண்ட விதம், ஜபம் செய்வதில் அவருக்கு இருந்த நிஷ்டை, தான் அடைய வேண்டுமென எண்ணியவற்றைச் சிறப்பாக அடைந்த விதம், இவற்றை எல்லாம் குறித்து பகவான் விளக்கமாகக் கூறினார். இவை மட்டுமின்றி 1936-ல் காவ்யகண்டர் மறைந்த செய்தி வந்தபோது 'நாயனா போல ஒருவரை இனி நாம் எப்போது பார்க்கப் போகிறோம்?' என்றும் பகவான் கூறினார்." என்று முனகாலர் தெரிவித்த போது ஆன்மீக எழுச்சியூட்டும் விளக்கம் அளித்த முனகாலருக்கு என் இதய பூர்வமான நன்றியைத் தெரிவித்தேன்.



பலாக்கொத்தில் முனகாலர் – அனுதினமும் "ஆழ்ந்த மௌனத்தில்" மூழ்கி தீவிர ஸாதனை

ஒரு நாள் அன்னை ரமாதேவி என்ற பெண்துறவி, ரமணாச்ரமத்திற்கு வந்திருந்தார். அவரைப் பின்பற்றுபவர்கள் அனேகர் இருந்தனர். தெய்வீக பாடல்களைக் கேட்ட உடனேயே அவர் பரவச நிலைக்குப் போய் விடுவார். ஒரு நாள் மாலை முனகாலர் என் அறைக்கு வந்து ரமாதேவியின்

பஜனை நிகழ்ச்சிக்கு வருமாறு அழைத்தார். அவரிடம், "எனக்கு என்னுடைய பகவான் இருக்கிறார். அதுமட்டுமே எனக்குப் போதுமானது; பஜனை நிகழ்ச்சிகளில் எனக்கு ஈடுபாடு இல்லை." என்று கூறினேன். முனகாலர் கள்ளம் கபடமற்ற குழந்தையைப் போல் என்னைப் பார்த்து "நீ ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பற்றிய புத்தகங்களைப் படித்திருக்கிறாய் இல்லையா?" என்று அவர் கேட்ட போது, "ஆம் ஸ்வாமி" என்று பதிலளித்தேன். "பரமஹம்ஸர் பாவஸமாதி என்ற நிலைக்குப் போவார் என்பதையும் நீ படித்திருப்பாய், நாம் அதைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறோமே அன்றி அனுபவித்ததில்லை. ரமாதேவி அந்த நிலைக்குப் போவதாகத் தெரிகிறது. அது மனம் சம்பந்தப்பட்ட நிலை அன்று; தூய ஆன்மீக நிலை ஆகும். என்னுடைய அறிவிற்கும் பிறருடைய அறிவிற்கும் எட்டிய வரை ராமகிருஷ்ணருக்குப் பின்னர் அந்த நிலையை அன்னை ரமாதேவி மட்டுமே அடைய முடிகிறது," என்று கூறியபடி முனகாலர் என் கையைப் பிடித்து மெதுவாக அழைத்துச் சென்று ஹாலில் தன் அருகிலேயே அமரச் செய்தார். பஜனை நிகழ்ந்து கொண்டிருந்தது. ரமாதேவி ஆழ்ந்த ஸமாதியில் மூழ்கியிருந்தார். பஜனை நிகழ்ந்து கொண்டிருந்த போதே அவர் திடீரென்று எழுந்தார். என் அருகிலிருந்த முனகாலர், "ரமாதேவி பாவஸமாதிக்குச் சென்றுவிட்டார் அவரையே மிகுந்த மரியாதையுடன் கவனித்துக் கொண்டிரு," என்று என்னிடம் கூறினார். அம்பிகை அசுரனை அழிப்பதாக அமைந்திருந்தது. அப்போது பாடப்பட்ட பஜனைப் பாடல். ரமாதேவி தன்னைத் தேவியாக பாவித்து கையில் வாளேந்தி அசுரனை அழிப்பது போன்று நடித்து நடனமாடினார். பெரிய சரீரமுடைய ரமாதேவி வேகமாகச் சுழன்று அங்குமிங்கும் சென்றது ஆச்சரியப்படத் தக்கதாக இருந்தது. புராணங்களில் கூறப்படுவது போன்று அசுரனை மாய்த்த பின்னர் இறுதியாக அவர் ஸமாதியில் ஆழ்ந்தார். கற்பனையான அசுரனின் தலையை ஒருகையிலும் மற்றொரு கையில் வாளையும் ஏந்தியவாறு ஒற்றைக் காலில் நின்றார் ரமாதேவி. முனகாலர் என் காதில், "அத்தகைய உடம்போடு ஒற்றைக் காலில் நிற்பது என்பது உண்மையில் சாத்தியமே இல்லை. இறைவனேதான் அவரைத் தாங்கிக் கொண்டு அந்நிலையில் அவரை நிறுத்தி வைத்துள்ளார்," என்று கிசுகிசுத்தார். எனக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் எப்போதுமே ஈடுபாடு உண்டு. அதனால் பாவஸமாதி என்பது எவ்வாறு இருக்கும் என்பதைத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் இருந்தது. முனகாலர் மூலம் என்னுடைய அந்த விருப்பம் அன்று நிறைவேறியது. சற்று குழப்பத்தில் இருந்த என்னை அதிலிருந்து ரமாதேவி விடுவித்து விட்டார்.

முனகாலரின் அறைக்கு நான் போகும் போதெல்லாம் அவர் உபநிஷதங்களைப் படித்தவாறே இருப்பார். ஒரு நாள் அவரிடம், "நீங்கள் பகவானின் நேரடி சீடராக இருந்தும், அவர் கூறிய ஆத்மவிசாரத்தைப் பழகாமல் எப்போதும் சாஸ்திரங்களையே ஏன் படிக்கிறீர்கள்?" என்று நான் வினவினேன். மிகவும் நெகிழ்ந்த குரலில் முனகாலர், "இந்தப் பாராயணத்தைச் செய்யுமாறு என் குரு என்னிடம் கூறியுள்ளார். அதையே எனது ஸாதனையாகக் கொள்ள வேண்டுமா என்று பகவானிடம் நான் கேட்டபோது பகவான் அதை உறுதி செய்து தினமும் வாழ்நாள் முழுவதும் அவற்றைப் பாராயணம் செய்யும்படி கூறினார். தீவிர ஸாதகர்களுக்கு, உபநிஷத பாராயணம் என்பது சாஸ்திரங்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு ஸாதனையாகும். உபநிஷதங்களோடு வாழ்வது தூய்மையான ஆனந்தமாகும்." என்று அவர் பதில் கூறினார். (ஏற்கனவே அடையப்பட்ட ஆத்மாவை நினைவு கூர்வதற்காகச் செய்யப்படுவதே பாராயணம். பகவான் முனகாலருக்கு ஏற்கனவே ஸ்வயம் பிரகாசமான ஆத்மாவை வெளிப்படுத்தியிருந்தார்.)

முனகாலருக்கு காமாக்ஷி என்று மற்றொரு மகள் இருந்தார். சிறந்த ஸம்ஸ்க்ருத பண்டிதராக இருந்ததுடன் அவள் ஒரு குழந்தை மேதையாகவும் விளங்கினாள். ஒன்பது வயதிற்குள் பல சிறந்த



ஸம்ஸ்க்ருத நூல்களில் நல்ல புலமை பெற்றிருந்தாள். இருபது வயதை அடைவதற்கு முன்பே, தன்னம்பிக்கையுடன் தான் கற்றறிந்த விஷயங்களில் பண்டிதர்களுடன் உரையாடுவதோடு விவாதங்களில் ஈடுபட்டு அவற்றில் வெற்றியும் அடைவாள். இளம் வயதிலேயே வயதுக்கு மீறிய அறிவோடு விளங்கிய அவள் மீது கருணை கொண்ட பகவான், அவளது அறிவுத் திறனைப் பக்தி பூர்வமான ஞானமாக மாற்றினார். (ஒரு முறை, பக்தர் ஒருவர் "பகவானே! உங்கள் உபதேசம் புத்தி பூர்வமானது மட்டும் தானே?" என வினவியபோது அவர் "நான் பக்தியோடு கூடிய விசார மார்க்கத்தையே போதிக்கிறேன்," என்று பதிலிறுத்தார்). ஒரு நாள் அதிகாலையில் ஹாலுக்கு வெளியே சென்று கொண்டிருந்த காமாக்ஷியை, உள்ளே வரும்படி பகவான் அழைத்தார். பகவான் ஸ்ரீ கிருஷ்ணருடைய வாழ்க்கை உபதேசங்கள், பக்தியில் தோய்த்த உயர்ந்த ஞானம் இவற்றோடு கூடியதுமான 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற நூலை அவளிடம் கொடுத்து ஹாலில் ஒரு இடத்தைச் சுட்டிக்காட்டி, அங்கு அமர்ந்து அதைப் படிக்குமாறு கூறினார். ஹாலில் மக்கள் அதிகமாகக் கூட ஆரம்பித்த போது அவளை அழைத்து புத்தகத்தை வாங்கிக் கொண்டு அவள் படித்துக் கொண்டிருந்த பக்கத்திற்கு அடையாளம் வைத்துவிட்டு, மறுநாள் மீண்டும் வரும்படி கூறினார். பாகவதத்தில் கூறப்பட்டுள்ள ஞானபரமான பக்தியை அவள் மனதில் கிரஹித்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக புத்தகம் முடியும் வரை அவளைத் தினமும் வந்து படிக்குமாறு கூறினார்.

மற்றொரு நாள், அவளை அழைத்து ஒரு சீட்டைக் கொடுத்தார். அந்தச் சீட்டில் 'ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய' என்ற மந்திரம் எழுதப்பட்டிருந்தது. அவள் அந்த மந்திரத்தை தனது இனிய கம்பீரமான குரலில் படித்தபோது பகவான் அவளைக் கூர்ந்து பார்த்தார். அதனால் காமாக்ஷி "பகவானே, இந்த மந்திரத்தை நான் தினமும் ஜபிக்க வேண்டுமா?" என்று கேட்டாள். "எப்போதும் ஜபிக்க வேண்டும்," என்று கூறிய பகவான் அவர் கையிலிருந்த சீட்டைத் திரும்பப் பெற்று, தன் முன்னால் எரிந்து கொண்டிருந்த அடுப்பில் அந்தச் சீட்டைப் போட்டார். இந்தச் செயல் ஸத்தியம் செய்வதற்கு ஈடாகும். அதன்படி 'பகவான் கூறியதை நிச்சயமாகக் கடைப்பிடிப்பேன்' என்று காமாக்ஷி ஸத்தியம் செய்ததாகப் பொருள்படும். 'ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய' என்றால் பகவான் ஸ்ரீ ரமணருக்கு நமஸ்காரம் என்று பொருள். "பகவான் கருணையோடு கொடுத்த அந்த மந்திரம், பூரண நிலையை நோக்கிய தனது பக்தி பூர்வமான பயணத்தை நிறைவு செய்தது," என்று காமாக்ஷி என்னிடம் கூறினார். தனது வாழ்நாள் முழுவதும் அவர் அந்த மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருந்தார்.

ரமணநகரில் ஆச்ரமத்திற்கு எதிரில் ஆர்தர் ஆஸ்போர்னின் வீட்டிற்கு அருகில் காமாக்ஷிக்கு ஒரு நிலம் இருந்தது. அதில் ஒரு சிறிய வீடும் கட்டப்பட்டிருந்தது. பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக இருந்த அவருடைய கணவர் டாக்டர் ராமசந்த்ரையா ஓய்வு பெற்ற பிறகே அவரால் அந்த வீட்டில் வசிக்க முடிந்தது. அந்த வீட்டில் கணவரோடு வாழ்ந்த அந்தச் சில ஆண்டுகள் அவரது வாழ்க்கையிலேயே மிக ஆனந்தமாக இருந்த காலம். அதன் பின்னர் நோய்வாய்ப்பட்ட அவர், சிகிக்சைக்கு அழைத்துச் செல்லப்பட்டபோது அவருக்கு முற்றிய நிலையில் 'புற்றுநோய்' இருப்பதாகக் கண்டு பிடிக்கப்பட்டது. மருத்துவர்களின் ஆலோசனைப்படி, தொலைவிலிருந்த மருத்துவமனைக்குச் செல்வதைத் தவிர்த்து அருணாசலத்தின் காலடியில் தமது ஸத்குரு ரமணருடைய புனித ஸமாதியின் அருகில் இருந்த தனது இல்லத்திலேயே தன் இறுதி நாட்களைக்

கழிப்பது என்று முடிவு செய்தார். அவருடன் நான் தினமும் சில மணி நேரம் கழிப்பேன். கடுமையான மருந்துகளை உட்கொண்டதால் அவருடைய உடம்பு சுருங்க ஆரம்பித்தது. அழகிய பெண்மணியாக இருந்த காமாக்ஷி இறுதியில் அடையாளம் தெரியாமல் உருமாறி விட்டார். ஒருநாள் அவரது நிலையைக் கண்டு மனம் உடைந்து அழுது, "உங்களை ஏன் பகவான் காப்பாற்றவில்லை?" என்று நான் கேட்டபோது அவர் "நீ என் அமைதியான மனநிலையைக் கவனிக்காமல் எனது வெளித்தோற்றத்தில் கவனம் செலுத்துகிறாய். 'நான் இந்த உடம்பு இல்லை.' என்று உன்னிடம் எத்தனையோ முறை கூறியுள்ளேன். பகவானை நான் முதல்நாள் தரிசித்தபோதே அவர் என்மீது பொழிந்த அருள் பார்வை என்னை ஆத்மாவில் நிலை நிறுத்திவிட்டது. நான் மனதோடும் உடம்போடும் ஐக்கியப்படுத்திக் கொள்வது மிகவும் அபூர்வமாகத்தான். உடம்பு வந்துள்ளது: அதனால் அது போய்த்தான் ஆக வேண்டும். நான் எப்போதுமே ஆத்மாதான். இந்த உடம்பை உண்மை என்று எண்ண வைக்கும் மாயையிலிருந்து உன்னை விடுவித்துக் கொள். நான் எப்போதும் ஆனந்தமாக இருக்கிறேன்." என்று கூறிய காமாக்ஷி கருணையோடு புன்னகை பூத்து "நான் உன்னை ஆசீர்வதிக்கிறேன். பகவானிடம் சரணடைந்து விடு. அவர் உன்னை வழி நடத்துவார்." என்று கூறினார். சில தினங்களில் காமாக்ஷி மறைந்தார். அவரது உடலை சுடுகாட்டிற்கு எடுத்துச்சென்று நெருப்பிற்கெல்லாம் நெருப்பான அருணாசலத்திடம் அர்ப்பணிக்கும் பேறு பெற்றேன்.

லக்ஷ்மண சர்மா, முனகால வேங்கடராமையா ஆகிய இருவரும் தங்களைப் பற்றிய விளம்பரத்தை அறவே ஒதுக்கியதோடு மிகவும் பணிவுடன் இருந்த தனித்தன்மை வாய்ந்தவர்கள். 'யார்' என்ற புனைப் பெயரில் லக்ஷ்மண சர்மா தன்னை மறைத்துக் கொண்டார் என்றால் முனகால வேங்கடராமையாவோ பகவானுடைய மஹா ஸமாதி வரை தனது நூல்கள் எதையும் வெளியிடவில்லை. பகவானது மஹா ஸமாதிக்குப் பல ஆண்டுகளுக்குப் பின்னர், தான் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த 'திரிபுர ரஹஸ்யம்' என்ற நூலின் கையெழுத்துப் பிரதியை என்னிடம் காட்டி "இவற்றைப் பார்த்திருக்கிறாயா?" என்று முனகாலர் என்னிடம் கேட்டார். அதைப் பிரசுரிக்க வேண்டும் என்ற வேண்டுகோள் அந்தக் கேள்வியில் இருக்கவில்லை. மேற்கூறிய இருவரும் தங்களது அகந்தையை முழுவதுமாக மாய்த்து அழித்துவிட்டார்கள். பின்னர் இந்தப் புத்தகம் வெளியாகும் தருணத்தில் அந்தப் புத்தகத்தின் தலைப்பின் பொருள் விளங்கவில்லை என்று நான் அவரிடம் கூறினேன். "தலைப்பின் பொருள் தெளிவாகத்தானே உள்ளது." என்று அவர் கூறிய போதும். எல்லோருக்குமே அதன் அர்த்தம் விளங்காது. என்று நான் எடுத்துரைத்தேன். அப்போது அவர், "இதைத்தான் நான் பகவானிடம் காண்பித்தேன். அதன் பின்னர் இதில் எவ்வாறு மாற்றம் செய்ய முடியும்?" என்று வினவினார். "வாசகர் நலன் கருதி அதில் மாற்றம் செய்வது நல்லது." என்று நான்



கூறினேன். அதனால் 'Mystery beyond the Trinity' (ஜகத், ஜீவன், ஈஸ்வரன் என்ற முப்புடிகளுக்கு அப்பாற்பட்ட ரகசியம்) என்ற உபதலைப்பை முனகாலர் சேர்த்தார்.

பகவானின் ஸமாதிக்குப் பிறகு, முனகால வேங்கடராமையா ஆச்ரமத்தை விட்டு வெளியேறி தனது குழந்தைகளுடன் தங்கினார். மீண்டும் ஆச்ரமத்திற்கு வரும்படி அவர் அழைக்கப்பட்டார். 1955-ம் ஆண்டு துறவை மேற்கொண்ட அவர் 'ஸ்வாமி ரமணானந்த சரஸ்வதி' என்ற பெயரை ஏற்றார். 1963-ல் அவர் அருணாசலத்தோடு இணைந்தபோது அவரது விருப்பப்படி, மகள் காமாக்ஷியின் வீட்டு வளாகத்திற்குள்ளேயே அடக்கம் செய்யப்பட்டார். அருணாசல ரமணன் என்னும் கொழுந்து விட்டெரியும் ஞானாக்கினியில் ஒளி வீசும் தீச்சுடராக முனகால வேங்கடராமையா என்றென்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.



# 37 K. K. நம்பியார்



1932-ம் ஆண்டில் அரசுப் பணியாற்றிக் கொண்டிருந்த K. K. நம்பியார் என்ற கேரளாவைச் சேர்ந்த சிவில் என்ஜினியர் திருவண்ணாமலையில் சாலைகள் அமைக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். இவர் தான் ஆஸ்பத்திரிக்கும் ரமணாச்ரமத்திற்கும் இடையே இருந்த சாலையை மாற்றி முதன் முதலாகத் தார்சாலை அமைத்தவர். தான் செய்த பணியை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளுமா? ஏற்காதா? என்று கவலைப்படாமல் அதை நிறைவேற்றும் அளவுக்கு அவருடைய பக்தி இருந்தது.

1932-ல் ரமணாச்ரமத்திற்கு வருவதற்கு முன் 'நான் யார்' என்னும் புத்தகத்தின் மலையாளப் பதிப்பு ஒன்று அவருக்குக் கிடைத்தபோது 'வாழ்ந்து கொண்டிருக்கும் மஹர்ஷி' என்ற சொற்றொடர் அவர் கண்களில் பட்டது. மஹர்ஷிகள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவர்கள் என்று அவர் எண்ணம் கொண்டிருந்ததால் வாய் விட்டு உரக்கச் சிரித்தார். புத்தகத்தில் எழுதப்பட்டிருந்த விஷயம் உண்மையாக இருக்காது என்று அவருக்குத் தோன்றியது. அதனால் அதை நம்ப மறுத்ததுடன் புத்தகத்தில் இருந்த விஷயங்களைக் குறித்து ஏளனமாகப் பேசினார். ஆனால் மறுதினமே ஒரு நண்பரைச் சந்தித்தபோது அவர், "நீங்கள் தவறாக கணக்கு போட்டு விடாதீர்கள். நானே அவரை நேரில் பார்த்திருக்கிறேன். அவர் உண்மையாகவே மஹர்ஷிதான். நாம் அவரிடம் சென்று வருவோம்," என்று கூறி அழைத்து வந்ததால்தான் நம்பியார் பகவானிடம் வந்தார். பகவான் தனது அருட்பார்வையை அவர் மீது செலுத்திய அந்தக்கணமே நம்பியார் பகவானால் கவரப்பட்டார். ஒரு மணி நேரத்திற்கு ப்பிறகு அவர் ஆச்ரமத்திலிருந்து கிளம்பும் போது, "நான் ஆச்ரமத்தை விட்டு புறப்படும் போது சக்தி வாய்ந்த தெய்வீகமான காந்தம் என் இதயத்தைக் கவர்ந்து மனித உருவிலிருந்த அந்த இறைவனிடம் என்னை இழுப்பது போன்று உணர்ந்தேன்," என்று கூறியுள்ளார். கிராண்ட் டஃப் (Grant Duff) என்பவருக்கு இத்தகைய அனுபவம் இதற்கு முன்னர் ஏற்பட்டிருந்தது என்றாலும் அதைப் பற்றி நம்பியார் படித்ததில்லை. அவரது சொந்த அனுபவத்திலிருந்து இவ்வாறு கூறினார்.

குருவின் அருளால், அப்போது முதல், நம்பியார் அடிக்கடி பகவானை தரிசிக்கும் பேறு பெற்றார். நம்பியாரின் சகோதரியின் கணவர் (பல் டாக்டர் P. C. நம்பியார்) அரசாங்க மருத்துவராகத் திருவண்ணாமலைக்கு மாற்றப்பட்டிருந்ததைத் தனக்கு சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு அவ்வப்போது அவர் பகவான் தரிசனத்திற்கு வந்தார். P. C. நம்பியார் ஒரு நாஸ்திகர். ஸாதுக்களை அயோக்கியர்கள் என்றும், சோம்பேறிகள் என்றும் அழைப்பார். அவ்வாறிருந்தும் அருள் எவ்வாறு பெருக்கெடுத்து ஓடுகிறதென்று பாருங்கள்! நாள் பகவானுக்குப் பல் வலியாக இருந்தபோது, அன்று மருத்துவமனையைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு டாக்டர் P. C. நம்பியாருடையதாக இருந்தபடியால் பகவானுக்கு அவரே சிகிச்சையளிக்கும்படி நேர்ந்தது. அப்போதும் நோயாளி என்ற முறையிலேயே பகவானுக்குத் தன்னால் சிகிச்சையளிக்க முடியும் என்று உறுதியாகக் கூறியிருந்தார். டாக்டர் P. C. நம்பியாரை நான் பிற்காலத்தில் தொடர்பு கொண்ட போது "கணேசா! அன்று பகவானிடம் கர்வமாகவும் மரியாதையின்றியும் நடந்து கொண்டேன். அவரது நோயுற்ற பல்லைப் பிடுங்க வேண்டிய நிலையில் "பகவான்! வாயத் தொற!" என்று ஏக வசனத்தில் கூறினேன். ஆனால்

பகவானைத் தொட்ட போது பெரியதொரு மாற்றம் நிகழ்ந்தது. இந்த நாஸ்திகன் முற்றிலுமாக மாற்றப்பட்டு பக்தனாகி விட்டான்." என்று தெரிவித்தார்.

1936-ல் K. K. நம்பியாரும் திருவண்ணாமலைக்கு மாற்றப்பட்டார். இதற்குள் பகவானுக்கும் அவருக்கும் இருந்த பந்தம் எல்லா விதத்திலும் ஆழமானதாகவும் பலமானதாகவும் ஆயிற்று. ஆச்ரமத்தில் ஒரு விழாவன்று பகவானுடைய முன்னிலையிலேயே தான் உண்ண வேண்டுமென்று விரும்பினார். 'பகவான் உண்ணும் போது அவரைக் காண வேண்டும்' என்று தனக்குள் கூறிக்கொண்டே இருந்தார். அன்று சாப்பிட வந்தவர்களின் வரிசை மிகவும் நீண்டதாக இருந்தது. பக்தனுடைய தீவிர ஆர்வமும் பகவானுடைய அருளும் அத்துணை சிறப்பாக இருந்ததால் யதேச்சையாக பகவானுக்கு எதிரிலேயே அமர்ந்து உண்ணுமாறு ஆயிற்று. சாதம் பரிமாறப்பட்ட போது தனது பிரார்த்தனை பலனளித்தது குறித்து அவரால் பெருமைப்பட்டுக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை. தனக்குள்ளேயே பூரித்துப் போனார். ரமணாச்ரமத்தில் பெரிய பாத்திரத்தில்தான் சாதம் எடுத்து வந்து பரிமாறுவார்கள். தனது பிரார்த்தனையைப் பற்றி நம்பியார் எண்ணிய அதே நேரத்தில் அவருக்குப் போடுவதற்காக வைத்திருந்த சாதத்தில் இருந்து உருண்டை ஒன்று தட்டிலிருந்து உருண்டு இலையில் விழுந்து விட்டது. அதைக் கவனித்த பகவான் நம்பியாரை நோக்கி, "அது தானா விழுந்தது! தானே விழுந்தது." என்று கூறினார். தனது பிரார்த்தனையின் காரணமாக தான் நினைத்தபடி நிகழ்ந்தது என்று தற்பெருமை கொள்வது கூடாது. என்பதை நம்பியாருக்கு உணர்த்த எண்ணியே பகவான் அவ்வாறு கூறினார். "பகவான் 'அது தானாகவே விழுந்தது' என்று கூறிய அக்கணத்திலிருந்து என் வாழ்க்கையில் தொடர்ச்சியாகப் பல அற்புதங்கள் நிகழத் துவங்கின. எல்லாமே கனவைப் போன்று இருந்தது." என்று நம்பியார் என்னிடம் கூறினார்.



அது தானா விழுந்தது – தானே விழுந்துடுத்து

ஒரு நாள் அவரது கனவில் பகவான் தோன்றி, கறுப்புத் துணியால் பைண்டு செய்யப்பட்ட ஒரு நோட்டைக் காண்பித்து அதன் கனம், அளவு, எத்தனை பக்கங்கள் கொண்டது என்பதையெல்லாம் தெளிவாகக் காட்டினார். பின் "இந்த நோட்டுப் புத்தகம் எனக்கு வேண்டும்." என்றும் கூறினார். நம்பியார் சட்டென எழுந்து தனது மேஜை டிராயரைத் திறந்து பார்த்த போது அதே மாதிரியான நோட்டுப் புத்தகம் ஒன்று அங்கிருப்பதைக் கண்டார். உடனே பகவானிடம் ஓடிச் சென்று "பகவான்! நீங்கள் என் கனவில் தோன்றி இந்த நோட்டுப் புத்தகம் வேண்டும் என்று கேட்டீர்கள்." என்று கூறி அதைக் கொடுத்தார். பகவான் தனது உதவியாளரைப் பார்த்து "நான் இதே அளவில், இத்தனைப் பக்கங்கள் கொண்ட நோட்டுப் புத்தகம் வேண்டும் என்று மூன்று நாட்களாக உன்னிடம் கேட்டுக் கொண்டிருக்கிறேன். இதோ பார்' நம்பியார் இதைக் கொண்டு வந்து விட்டார்." என்று கூறினார். காவ்யகண்டரின் ரமண கீதையை மலையாள லிபியில் (எழுத்தில்) எழுதுவதற்காகவே அந்த

நோட்டுப் புத்தகத்தைத் தொண்டரிடம் கேட்டிருந்தார் பகவான். அதிசயிக்கத்தக்க விதத்தில் அது நம்பியார் மூலம் கிடைத்தது. ஆனால் 'அது தானா விழுந்தது' என்ற பகவானின் சொற்கள் நம்பியாரின் நினைவிற்கு உடனே வரவும், அதைக் கூறவும் செய்தார். யதேச்சையாக அது நிகழ்ந்ததேயன்றி அதை ஒரு அற்புதம் என்று கொள்ளக் கூடாது. அருளால் நிகழ்ந்ததே அது!

மற்றொரு முறை நம்பியாருக்கு வந்த கனவு அவரது முந்தைய கனவை விடத் தெளிவாக இருந்தது. பகவான் பழைய ஹாலில் அமர்ந்திருந்த சமயத்தில், ஸ்ரீதர் என்ற யோகி, பிராணாயாமம் செய்து கொண்டிருந்ததாகக் கனவு கண்டார். யோகி மிகவும் ஒருமுகமாகிப் பிராணாயாமம் செய்து கொண்டிருந்ததால் அவரது உடலில் இருந்தும் தலையிலிருந்தும் கூடக் கனல் பொறிகள் தெறித்தன. இதனால் அவர் கடுமையாக அவதியுற்றார். பகவான் ஸ்ரீதரைப் பார்த்தபோது "பகவான்! நான் கஷ்டப்படுகிறேன். தயவு செய்து எனக்கு உதவி செய்யுங்கள்." என்று அவர் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். "இந்த உடற்பயிற்சி எல்லாவற்றையும் நிறுத்திவிட்டு ஆத்ம விசாரத்தைப் பழகுங்கள். ஸத்தியத்தை உணர்வதற்கு எளிமையானதும் பாதுகாப்பானதும், மிகவும் நேரானதும், சக்தி வாய்ந்த வழியும் அதுவேயாகும்." என்று பகவான் கூறி முடித்த போது நம்பியாரின் கனவு கலைந்து விடவே, எழுந்து ரமணாச்ரமத்துக்குச் சென்று பழைய ஹாலுக்குள் ஓடிப்போய் பகவானை வணங்கினார். ஹாலில் யோகி ஸ்ரீதர் அமர்ந்திருப்பதைக் கண்டு அவருக்கு சமிக்ஞை செய்து அழைத்துத் தான் கண்ட கனவைப் பற்றிக் கூறினார். நன்றிப் பெருக்குடன் அவர் "உங்களுக்கு மிகவும் நன்றி. நான் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தேன். பகவானிடம் அதைப் பற்றிக் கேட்க விரும்பினேன் என்றாலும் கேட்கத் தைரியம் எனக்கு வரவில்லை. அது மட்டுமின்றி, அப்பேற்பட்ட நிலையிலும் அப்போது நான் இருக்கவில்லை. மீண்டும் நன்றி". என்றார். அற்புதங்களை நாடிச் செல்லாமல் நேர் வழியான ஆத்ம விசாரத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதை நம்பியார் தனது கனவுகளின் மூலம் உணர்ந்து கொண்டார்.

ஒருவரது இதயத்தில் கடவுள் அமர்ந்திருக்கிறார் என்று அவரது உள்ளுணர்வு நம்பியாருக்கு உணர்த்தியதால் அவரது ஆத்ம பலம் வளர்ந்தது. இந்த உள்ளுணர்வு வரும்போதெல்லாம் அவர் ஸதாசிவ ப்ரம்மேந்திரரின் ஒரு பாடலை நினைவு கூர்வார். "பகவானே! நான் புதிதாக ஒன்றையும் உன்னிடமிருந்து கேட்டுப் பெற விரும்பவில்லை. நீ புதிதாக ஒன்றையும் தர வேண்டாம். எனக்குச் சொந்தமான ஆனந்த நிலையை மட்டும் கொடுத்தால் போதும்." என்று பொருள்படும் அப்பாடலை ஓயாது ஓதியபடி இருப்பார். இதன் விளைவாக அவருக்கு ஸத்ஸங்கத்தில் நாட்டம் அதிகமாயிற்று. ரமணாச்ரமத்தில் இருந்த போதெல்லாம் பழைய பக்தர்களான சாட்விக், T. P. ராமச்சந்திரய்யர், முனகால வேங்கடராமையா, குஞ்சு ஸ்வாமி, விஸ்வநாத ஸ்வாமி போன்றவர்களுடன் தனது நேரத்தைக் கழிப்பார். தன்னுடன் சென்னைக்கு வரும்படி கூட அவர்களைத் தூண்டுவார்.

பகவானது சகோதரர் நிரஞ்ஜனானந்த ஸ்வாமி ஆச்ரம நிர்வாகத்திற்கு நம்பியாரின் உதவியை நாடுவதுண்டு. பகவானிடம் அனுமதி பெற்றுக் கொண்ட பின்னர், ஆச்ரம அலுவலகப் பணிகளில் அவர் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். ஆத்ம விசாரம் பழகிய அதே வேளையில் உலக விஷயங்களிலும் அவரால் ஈடுபட முடிந்தது. தொழில் ரீதியாக அவர் மிகவும் தாழ்ந்த நிலையில் ஆரம்பித்து முன்னேறி உயர் பதவியை அடைந்தவர். சக ஊழியர்கள், மேலதிகாரிகள், தனக்குக் கீழ் பணியாற்றுபவர்கள், அரசியல்வாதிகள், அரசாங்க அதிகாரிகள் இவர்களோடு எல்லாம் தொடர்பு கொள்வதற்கு, அவருக்கு பெரும் சக்தியும் முயற்சியும் தேவைப்பட்டிருக்கும், மற்றும் பல போராட்டங்களையும் எதிர்கொள்ள வேண்டியிருந்திருக்கும். எனினும், ஓய்வின்றி உலக

அலுவல்களில் ஈடுபட்டிருந்தாலும் ஆத்ம விசாரத்தையும் தவறாமல் செய்ய முடியும் என்பதை நம்பியார் நிதர்சனமாக நடைமுறையில் வாழ்ந்து காட்டினார். பகவான், பால் பிரண்டனிடம் கூறியது போன்று "நம்பியாருக்குக் கர்மம், ஞானம் இவற்றிற்கிடையே எவ்வித முரண்பாடும் இல்லை".

நம்பியார் வாழ்க்கையின் ஒவ்வொரு நொடியிலும் பகவானைச் சார்ந்தே இருந்தார். "பகவான்தான் என்னைப் பார்த்துக் கொள்கிறார்," என்று தனது நண்பர்களிடம் அவர் கூறுவதுண்டு. உலக மகாயுத்தம் நடந்து கொண்டிருந்த போது அவர், குடும்பத்தோடு சென்னையில் இருக்க வேண்டியிருந்தது. படை வீரர்கள் அங்குமிங்கும் சென்று கொண்டிருந்ததால் ரயில்கள் எப்போதும் நிரம்பி வழிந்தன. வெளியூரிலிருந்து சென்னைக்குத் திரும்பி வருவதற்கு, அரசு அதிகாரியான நம்பியாருக்கே மிகவும் கஷ்டமாக இருந்தது. ரயிலில் முன்பதிவும் செய்ய முடியாத நிலை இருந்தது. நம்பியாரின் நண்பர்களில் ஒருவர், "நீங்கள் எவ்வாறு சென்னைக்குத் திரும்பிச் செல்வீர்கள்? ரயில் முழுவதுமே நிரம்பி வழிகிறதே!" என்று நம்பியாரிடம் சவால் விடுத்தார். சிறிது கூடத் தயக்கமின்றி மிகவும் உறுதியாக "என் பகவான் என்னைப் பார்த்துக் கொள்வார்," என்று நம்பியார் பதிலிறுத்ததைக் கேட்ட நண்பர் பரிகாசத்தோடு, "உங்கள் குழந்தைகள் உட்பட நீங்கள் ஐந்து பேர் இருக்கிறீர்கள். ஒருவர் என்றால் எப்படியாவது அவரை ரயில் பெட்டிக்குள் தள்ளி விட்டு விடலாம்," என்று கேள்விக்குறியோடு கூறினார். ஆனால் நம்பியார், "என் பகவான் என்னைப் பார்த்துக் கொள்வார்; கவலைப்படாதீர்கள்," என்று கூறிக் கொண்டே இருந்தார். விழுப்புரம் வரை பிரயாணம் செய்து விரைவு ரயிலுக்காகக் காத்திருந்தனர். எக்ஸ்பிரஸ் வண்டி வந்தது. ஆனால் எள் போட்டால் விழாத அளவுக்கு அபரிமிதமான கூட்டமாக இருந்தது. ரயிலேற்றி விடுவதற்காக உடன் வந்திருந்த நண்பர், "நான் உங்களிடம் அப்போதே கூறினேன் அல்லவா!" என்று தனது சந்தேகத்தை வெளிப்படுத்தினார். அப்போதும் உறுதி தளராமல் "உங்களுக்குப் பகவானைப் பற்றித் தெரியாது," என்று கூறியபடி நேராக என்ஜினை நோக்கி நடந்தார் நம்பியார். என்ஜினுக்கு அடுத்த படியாக, புதிய முதல் வகுப்புப் பெட்டி பூட்டப்பட்டிருந்தது. நம்பியார் அரசு அதிகாரியானதால் ஸ்டேஷன் மாஸ்டரிடம் பெட்டியைத் திறக்குமாறு கேட்டுக் கொண்டார். நம்பியாரின் குடும்பத்தினர் எல்லோரும் அந்தப் பெட்டியில் ஏறிக் கொண்டனர். இந்த நிகழ்ச்சியைப் பற்றி என்னிடம் கூறும் போதெல்லாம் அவரது முகம் பொலிவுடன் காணப்பட்டு, கண்களில் நீர் சுரக்கும். "உலக விஷயங்களுக்காக – ரயிலில் இடம் கிடைக்க வேண்டுமென்றாலும் கூட பகவானை முழுமையாக நம்பு. கணேசன்! இது அற்புதமோ, அதிசயமோ அன்று; பூரணமான நம்பிக்கையும் புனிதமான கருணையுமே ஆகும்," என்றார்.

அலுவலக ரீதியாக K. K. நம்பியார் இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளுக்குப் பயணம் மேற்கொண்டபோதும் பகவானே அவரை வழி நடத்தியுள்ளார். அங்கெல்லாம் இருந்த பகவானது பக்தர்களை நம்பியார் சந்தித்துள்ளார். 'The Guiding Presence of Sri Bhagavan' (வழி நடத்தும் ஸ்ரீபகவானது ஸாந்நித்தியம்) என்ற அவரது புத்தகத்தில் மிகவும் சுவையான இந்த சம்பவங்களை நினைவு கூர்ந்து எழுதியுள்ளார். அமெரிக்காவிலிருந்து திரும்பி வரும் போது சினிமா எடுக்கும் கேமரா (Movie Camera) ஒன்றைக் கொண்டு வந்திருந்தார். 1940-ல் இந்தியர்களுக்கு அது மிகவும் அதிசயமான ஒரு பொருள். அதிசயமான பொருள் என்பதோடு அது வரப்பிரசாதமாகவும் அமைந்தது. ஏனென்றால் அதன் உதவியோடு அவரால் பகவானைச் சினிமா எடுக்க முடிந்தது. நாம் தற்போது பகவான் நடமாடுவதைப் பார்க்க முடிகிறது என்றால் அதற்கு நம்பியார்தான் காரணம். அது மட்டுமின்றி சார்லி சாப்ளின் சினிமாப் படம் ஒன்றையும் அவர் கொண்டு வந்திருந்தார். அதைப் பகவானுக்கு நம்பியார் போட்டுக் காட்டியபோது நானும் பகவானுக்கு அருகில் அமர்ந்திருந்தேன்.

அந்தப் படத்தைப் பார்த்து வாய்விட்டுச் சிரித்து மகிழ்ந்த பகவானைப் பார்த்து நானும் சார்லி சாப்ளினின் ரசிகனானேன்.

ஆச்ரமத்தில் அன்னையின் ஸமாதிக் கோயில் எழுப்பப்பட்ட போது முக்கிய பொறுப்புகளை நம்பியார் ஏற்றிருந்தார். பாரம்பரிய முறையில் தேர்ச்சி பெற்ற ஸ்தபதிகள் தான் சாதாரணமாகக் கோயில்கள் கட்டுவார்கள். அன்னையின் கோயில் கட்டுமானப் பணி, வைத்தியநாத ஸ்தபதி என்பவரிடம் ஒப்படைக்கப்பட்டது என்ற போதும் இன்ஜினியரான நம்பியாரையும் உதவி செய்யும் படி சின்னஸ்வாமி கேட்டுக் கொண்டிருந்தார். நம்பியார் பகவானிடம் *இவ்விஷயத்தைக்* கூறி "பகவானே! சின்னஸ்வாமி, கோயில் கட்டுவதற்கு நானும் உதவி செய்யுமாறு கூறுகிறார். எனக்கு *அது பற்றி* ஒன்றும் தெரியாது." என அவர் கூறிய போது, "அதனால் பரவாயில்லை. உதவி செய்யுங்கள்," என்று பகவான் கூறினார். கோயில் கட்டப்பட்டுக் கும்பாபிஷேகமும் நடந்த பிறகு, ஒரு புகைப்படம் எடுப்பவர் அழைத்து வரப்பட்டார். வைத்தியநாத ஸ்தபதியும் நம்பியாரும் சேர்ந்து நிற்பது போன்ற ஒரு புகைப்படம் எடுக்கப்பட்டு பகவானிடம் காட்டப்பட்டது. "பாரம்பரிய இன்ஜினியர் வைத்தியநாத ஸ்தபதியும், நவீன கால ஸ்தபதியான நம்பியாரும் ஒன்றாக இருக்கின்றனர்," என்று பகவான் குறிப்பிட்டு ரசித்தார்.



**மாத்ருபூதேச்வரர் கோயிலுக்கு அருகில் பகவானின் ஸமாதி கோயில்**

1950-ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் பகவானது உடல் நிலை மிகவும் மோசமான போது அவரது உடலை எங்கு அடக்கம் செய்வது, என்பது குறித்து அபிப்ராய பேதங்கள் எழுந்தன. பகவான் அந்தச் சமயத்தில் தனது அபிப்ராயம் என்று எதையும் கூறவில்லை என்றாலும், எந்த இடத்தில் அது அமைய வேண்டுமெனத் தனக்குள் தீர்மானித்திருந்தார் என்பதை வெளிப்படுத்தும் வகையாக, பகவான் மஹா ஸமாதியான அன்று இரவு நம்பியாருக்கு மிகத் தெளிவான ஒரு கனவு ஏற்பட்டது. கனவில் பகவான் நிரஞ்ஜனானந்த ஸ்வாமியுடனும், என் தந்தை வெங்கட்டுவுடனும் தனியாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார். வாயில் கதவு திறந்து இருந்ததால் வெளியில் நின்றிருந்த நம்பியாரின் காதுகளில், "நம்பியாரை உள்ளே கூப்பிடுங்கள்," என பகவான் கூறியது விழுந்தது. பின்னர் பகவான் ஒரு படத்தை வரைந்து காட்டி, அனைவரையும் அழைத்துக் கொண்டு தற்போது பகவானின் ஸமாதி இருக்கும் இடத்திற்குச் செல்வதாகவும் தனது கைத்தடியால், ஸமாதி அமைய வேண்டிய இடத்தை வரைந்து காட்டியதாகவும் நம்பியார் கனவில் கண்டார். ஆனால் அது மற்றவர்கள் தேர்ந்தெடுத்த

இடமன்று என்பதை உணர்ந்தார். விழித்த பின் தன் கனவு பற்றி என் பாட்டனார் சின்ன ஸ்வாமியிடமும் மற்றவர்களிடமும் அதை அவர் எடுத்துரைத்தார். ஆனால் அவர்கள் யாருமே காதில் வாங்கிக் கொள்ளவில்லை என்பதுடன், "நீங்களும் உங்கள் கனவும்! அவற்றுக்கு நாங்கள் மதிப்புத் தரமாட்டோம். நாங்கள் ஏற்கனவே தேர்ந்தெடுத்த இடத்திலேதான் ஸமாதியை அமைப்போம். நீங்கள் இதில் குறுக்கிட வேண்டாம். உங்கள் கனவு பற்றி யாரிடமும் தெரிவிக்கவும் வேண்டாம்." என்று கூறி அவரையும் அவரது கனவுகளையும் பரிகசித்தனர். 'தானாக உருண்டு விழுந்த சோற்று உருண்டையின்' சக்தியை ஊகித்தறிய முடியாததாலேயே அவர்கள் அவ்வாறு நடந்துகொண்டனர். என் பாட்டனாரும் 'என் பிணத்தின் மேல்தான் நீங்கள் குறிப்பிடும் இடத்தில் ஸமாதியை எழுப்ப முடியும்!' என்று நம்பியாரிடம் சவால் விட்டார். அண்ணாமலைப் பிள்ளை என்பவரின் தலைமையில் டவுனில் இருந்து வந்த முக்கியஸ்தர்கள் ஆச்ரமத்திற்கு வந்து, காரணம் ஏதுமின்றி, நம்பியார் கனவில் கண்டு, சுட்டிக் காட்டிய அதே இடத்தைத் தேர்ந்தெடுத்தனர். என் தந்தைக்கும் அதுவே சரியான இடமெனப்பட்டது. சின்னஸ்வாமி உட்பட, மற்ற எல்லோருமே அவர்கள் தேர்வு செய்த இடத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய நிர்பந்தம் உண்டாயிற்று.

நம்பியாருடன் சம்பந்தப்பட்ட எனது ஒரு சொந்த விஷயம் என் நினைவுக்கு வருகிறது. நான் மும்பையில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது எனக்கு விசித்திரமான ஆன்மீக அனுபவம் ஒன்று ஏற்பட்டது. வேலையை ராஜினாமா செய்து விட்டு நான் காசிக்கு ஓடிப் போய்விட்டேன். நான் எங்கு இருக்கிறேன் என்று யாருக்குமே தெரியாது என்பதால், எனக்கு என்னவாயிற்று என்று அறிய எல்லோரும் ஆவலுடன் இருந்தனர். தன் நினைவற்று நான் ஆறு நாட்கள் விழுந்து கிடந்தேன். அச்சமயத்தில் மும்பையில் தனியார் கம்பெனி ஒன்றில் நம்பியார் முக்கிய இன்ஜினியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தபோது, அவருக்கு ஒரு கனவு வந்தது. அதில் பகவான் தோன்றி, நான் குப்புறப் படுத்திருப்பதையும் என் முதுகில் பெரியதொரு கட்டி ஏற்பட்டிருப்பதையும் தனது கையை வைத்துச் சுட்டிக் காட்டி "நம்பியார்! கணேசனைப் பாருங்கள்! இந்தக் கட்டி அவனுக்கு வந்துள்ளது. நான் அவனைக் காப்பாற்றப் போகிறேன்." என்று கூறினார். அவர் கையை எடுத்தவுடன் அந்தப் பெரிய கட்டி மறைந்து போனது. பின்னர் பகவான், "நம்பியார்! கணேசனுக்குக் குணமாகிவிடும் என்று வெங்கட்டுவிடம் கூறி விடுங்கள். நான் அவனைக் காப்பாற்றி விட்டேன்." என்று கூறியதும் கனவு கலைந்தது. உண்மையில் நடந்ததும் இதுதான். பகவானின் திருவருளால்தான், அவரது திருப்பாதங்களைப் போற்றிப் பணிந்து பழைய பக்தர்களின் புகழை என்னால் நினைவு கூற முடிகிறது. நம்பியாருக்கு எனது பணிவான நமஸ்காரத்தை அர்ப்பணிக்கிறேன்.



# 38 பேராசிரியர் G. V. சுப்பராமய்யா



ஒரு கல்லூரியின் முதல்வராக இருந்த G. V. சுப்பராமய்யா, குறிப்பிடத்தக்க சிறப்பு பெற்றவர். ஆன்மீக ஸாதகர்களான நம் அனைவருக்கும் பகவானிடமிருந்து, "நான் எல்லோரையும் காத்து, முக்தி அளிப்பேன்," என்ற உறுதிமொழியைப் பெற்றுத் தந்த சுப்பராமய்யாவிற்கு நாம் எல்லோருமே கடன் பட்டுள்ளோம். 1950-ம் ஆண்டு, ஏப்ரல் பதினான்காம் தேதி பகவான் மஹா ஸமாதியானார். ஏப்ரல் நான்காம் தேதி பேராசிரியரும், சப்-ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயரும் பகவானைக் காணச் சென்ற போது இருவரும் அழுதவாறே பகவானை வணங்கி நின்றனர். சுப்பராமய்யாவிடம் "உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று பகவான் கேட்டபோது, சுப்பராமய்யா 'என்னை காக்க வேண்டும்,' என்று பொருள்படும்படியாக, "அபயம் ஈவாலி" என்று தெலுங்கில் கேட்டார். அவரை நோக்கிய பகவான், "கொடுத்தாகி விட்டது" என்ற பொருளில் தெலுங்கிலேயே "இச்சானு" என்று பதிலுரைத்தார். இவ்வாறு கூறியதன் மூலம் பகவான், காப்பது மட்டுமின்றி முக்தியையும் தருவதாகக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு பகவான் கூறிய போது, அருகிலேயே அழுதுகொண்டு நின்றிருந்த சப்-ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயர், "பகவானே நீங்கள் கூறியது சுப்பராமய்யாவிற்கு மட்டும்தானா?" என்று கேட்க பகவான், அவரைத் திரும்பிப் பார்த்து "எல்லோருக்கும் தான்" என்று விடையளித்தார்.

1960-ம் வருடத்தில் ஓரிரு பக்தர்களே ரமணாச்ரமத்திற்கு வருவார்கள். ஆனால் அவர்களுக்கும் பகவானுடைய உபதேசங்கள் பற்றி எதுவும் தெரியாது. இன்று, பகவானுடைய உபதேசங்கள் எல்லா இடங்களிலும் பரவி வருகிறது. தத்துவரீதியான உபதேசங்கள் மட்டுமல்லாது ஒருவரின் இருப்பைப் பற்றிய உண்மையின் ஸாரமும் இதில் அடங்கும். இதனால் பலருக்கும் ஆன்மீக விழிப்பு ஏற்பட்டுள்ளது. இதுவே பகவான் உறுதியளித்த 'அபயம்'- பயமின்மை; பாதுகாப்பும் முக்தியும் அதுவே ஆகும். "ஒவ்வொரு ஜீவனும் இறுதியில் அருணாசலத்திடம் வந்தே ஆக வேண்டும். ஸ்தூலமான அருணாசலத்திற்கு அன்று. ஆனால் ஸகல ஜீவன்களிலும் "உணர்வாக விளங்கும் அருணாசலத்திடம் வந்தே ஆக வேண்டும்" என்று பகவான் ஒருமுறை கூறியுள்ளார். ஒவ்வொருவரும் 'நான் இருக்கிறேன்' என்ற உபதேசத்தை உணர்ந்தாக வேண்டும். பகவானது 'அபயம்' எப்போதும் உள்ளது. பகவான் மஹாஸமாதியடைவதற்கு ஒரு வாரம் முன்பு, அதை உறுதிமொழியாக நமக்குப் பெற்றுத் தந்த பெருமை பேராசிரியரையே சாரும்.

1930-ம் ஆண்டு தனது இரண்டு வயது மகனை பறிகொடுத்த துயரத்தில் இந்தியா முழுவதும் அலைந்து கொண்டிருந்த பேராசிரியர் சுப்பராமய்யாவிடம் யாரோ ஒருவர், "ரமண மஹர்ஷியைச் சென்று பாருங்கள்." என்று ஆலோசனை வழங்கினார். எதிர்பாராத விதத்தில் மற்றொருவர், அதே நேரத்தில் பகவான் தெலுங்கில் எழுதிய 'உபதேச ஸாரம்' என்னும் நூலை அவரிடம் கொடுத்தார். ஒரு தமிழரால் இத்தனை உயர்ந்த ஆன்மீகத் தெலுங்குப் பாடல்களை எழுத முடிந்தது என்றால் அவர் பெரிய மஹானாகத்தான் இருக்க வேண்டும், என்று அவர் கருதினார். மிகுந்த துயரத்தோடு இருந்த அவர் மஹர்ஷியை வந்து பார்த்தார்

பகவானுடைய முதல் பார்வையே அருள் நிறைந்ததாக இருந்ததால் சுப்பராமய்யாவினுடைய துயரம் அடியோடு மறைந்து விட்டது "என்னைப் பொறுத்தவரை என்னுடைய வாழ்க்கைக்குத் துருவ

நட்சத்திரத்தைப் போன்று வழிகாட்டியாக விளங்கியவர் பகவான் ரமண மஹர்ஷியே. மீளாத்துயரத்தில் நான் இருந்தபோது பகவானிடம் ஈர்க்கப்பட்டேன். அவரது முதல் பார்வையே 'ஆனந்த சாகரத்திலும் அமைதியிலும்' என்னை ஆழ்த்தியது. அன்று முதல் அவரே என் வாழ்க்கையின் ஒளியாகவும், மாதா, பிதா, குருவாகவும் விளங்குகிறார். பகவான் எனக்குச் சொந்தமானவர். எல்லாமே எனக்கு அவர்தான். என்னுடைய அஹங்காரமும் அதன் பிணைப்புகளும் பகவானில் முடிவடைந்தன. ஒரே வார்த்தையில் கூற வேண்டும் என்றால் அவர் 'அருளின் உருவம்'. ஒவ்வொரு நொடியிலும் வாழ்க்கையில் நடைபெறும் சின்னச் சின்ன நிகழ்ச்சிகளிலும் 'ஸ்ரீ ரமணா' என்ற பெயர் பூண்ட தெய்வீக அருளே என்னை வழி நடத்துகிறது என்பதை மேன்மேலும் நான் அதிகப்படியாக உணர்கிறேன்,'' என சுப்பராமய்யா கூறியுள்ளார்.

பகவானின் பார்வைபட்ட பின்னரும் நியாயமான சந்தேகம் ஒன்று சுப்பராமய்யாவைப் பற்றிக் கொண்டது. ''பகவானே! நைந்து போன துணியை எறிந்து விட்டுப் புதிய ஆடைகளை உடுப்பது போன்று, மனிதர்கள் தேய்ந்து போன சரீரத்தை விடுத்து புதிய சரீரத்தை ஏற்பதாக பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளது. புத்தம் புதிய உடம்போடு கூடிய பச்சிளங்குழந்தை விஷயத்தில் இது எவ்வாறு பொருந்தும்?'' என்று அவர் வினவினார். பகவான் கருணையோடு அவரை நோக்கி, "இறந்துபோன குழந்தையின் உடல் தேய்மானம் அடையவில்லை என்று உமக்கு எப்படித் தெரியும்? வெளிப்படையாக அவ்வாறு தோன்றாமல் இருக்கலாம்; சரீரம் தேய்ந்து போகாமல் குழந்தை இறந்து போகாது. இதுவே ஈச்வர நியதி,'' என்று விளக்கிய உடனேயே அவருடைய வேதனையும் துயரமும் மறைந்தது.

மற்றவர்களுடன் சிறப்பாக உரையாடக்கூடிய அவர், ஸம்ஸ்க்ருதம் தெலுங்கு, ஆங்கிலம் இவற்றிலும் பண்டிதராக இருந்தார். பகவானுடைய நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். 'ரமண கீதை'-யின் அவரது ஆங்கில மொழிபெயர்ப்பு இன்றும் பாராட்டப்படுகிறது. ஏற்கனவே ஒரு மஹாத்மா அவருக்கு மந்திர தீக்ஷை கொடுத்திருந்தார். மிகவும் சிரத்தையோடு அவர் அந்த மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருந்தார். பகவானைத் தரிசித்த பிறகு, அவரால் அந்த மந்திர ஜபத்தைத் தொடரமுடியவில்லை. தான் ஏதும் தவறு செய்து விட்டோமோ என்ற குற்ற உணர்வு அவருக்கு இருந்தது. தன்னுடைய பிரச்சனையை பகவானிடம் தெரிவிக்க எண்ணி, "பகவானே! நான் ஜபித்து வந்த மந்திரம் திடீரென்று நின்று போனதால் எனக்கு பயமாக உள்ளது," என்று கூறினார். அதற்கு பகவான், ''நீர் ஏற்கனவே அந்த மந்திரத்தை அதிகமாக ஜபம் செய்து விட்டீர். அதன் பலனாகவே நீர் இங்கு வந்துள்ளீர். பின்னே, ஏன் பயப்பட வேண்டும்?'' என்று வினவினார். வெகுநாட்களுக்கு பிறகு, சுப்பராமய்யா ''மனதில் தொடர்ந்து செய்யப்படும் ஜபத்திற்கும், தியானத்திற்கும் என்ன வேறுபாடு?'' என்று பகவானிடம் கேட்ட போது அவர், "இரண்டுமே ஒன்றுதான். இரண்டிலும் மனம் ஒருமுகமாக குவிக்கப்படுகிறது. செய்யப்படும் ஜபத்தில் அல்லது தியானிக்கப்படும் ஆத்மவஸ்துவில் மனம் ஒருமுகப்படுகிறது. மந்திரம், ஜபம், தியானம், விசாரம் இவை அனைத்துமே பெயரளவில் தான் வேறுபட்டவை. இவற்றை செய்வதற்கு ஏதாவது முயற்சி தேவை இருந்தால் மட்டுமே நாம் இம்மாதிரி பெயர் கொடுக்கிறோம். லட்சியத்தை அடைந்ததும், இவை தாமாகவே நிகழ்கின்றன. முன்பு எது ஸாதனமாக இருந்ததோ அது இப்போது ஸாத்யமாக மாறிவிடுகிறது''.

சில காலத்திற்குப் பிறகு, சுப்பராமய்யாவிற்கு வேறுவிதமான பிரச்சனை எழுந்தது. ஸ்வாமி இராமதீர்த்தர் தமது நூல்களில் கூறியிருந்தபடி, அவர் மூச்சுப்பயிற்சிகளைச் செய்து வந்தார். தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் அதை பழகிக்கொண்டிருந்த அவருக்கு ஒரு நாள் திடீரென்று தனது தலை



பகவான் ஜி.வி. சுப்பராமய்யாவின் கடிதத்தைப் படிக்கும் போது

வெடித்துச் சிதறிவிடும் என்ற உணர்ச்சி தீவிரமாக ஏற்பட்டது. பயிற்சியை நிறுத்திய பின்னரும் குறிப்பிட்ட நேரத்தில் பயங்கரமான அதே உணர்ச்சி தொடர்ந்து கொண்டிருந்தது. பகவான் ஒரு நாள் தனிமையில் இருந்தபோது இந்தப் பிரச்சனையோடு பகவானை அணுகினார். பகவான் சிரித்த படியே "என்ன சொல்கிறீர்? உங்களைப் பிடித்த பயம் இன்னும் விடவில்லையா?" என்று கேட்டார். "நேரடியாக குருவின் மேற்பார்வையில் அல்லாமல் யோகப்பயிற்சி செய்பவர்களுக்கு இம்மாதிரியான அனுபவங்கள் ஏற்படும். ஆனால் நீர்தான் என்னிடம் வந்து விட்டீரே! பின் எதற்கு பயம்?", என்று வினவிய பகவான் தொடர்ந்து மெல்லிய குரலில், "அடுத்த முறை இந்த உணர்ச்சி ஏற்படும்போது என்னை நினைத்துக் கொள்ளுங்கள். எல்லாம் சரியாகி விடும்." என்று கூறினார். பகவானது இந்த வார்த்தைகள் நம் மனதில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை. எவ்விதமான ஸாதனையை கடைப்பிடித்தாலும் எப்போதெல்லாம் வேதனைப் படுகிறோமோ அப்போதெல்லாம் குருவின் நாமத்தை நினைவு கூற வேண்டும். "அதன் பின்னர் எனக்கு அந்த உணர்ச்சி தோன்றவேயில்லை." என்று சுப்பராமய்யா என்னிடம் தெரிவித்தார்.

ஸாதகர்கள் எவ்வாறு பிரார்த்தனை செய்ய வேண்டும் என்பதையும் பகவான் மிகத் தெளிவாகச் சுப்பராமய்யாவிற்கு எடுத்துரைத்துள்ளார். ஒருவர் உலக விஷயங்களுக்காக தனது குருவிடம் பிரார்த்திக்க வேண்டுமா அல்லது ஆன்மீகமாக முக்திக்காக மட்டுமே பிரார்த்திக்க வேண்டுமா என்பது தான் கேள்வி. சுப்பராமய்யாவிற்கு இரண்டு அல்லது மூன்று வயதில் மகள் இருந்தாள். கிராமத்தில் வாழ்ந்து கொண்டிருந்த அவரது மகளுக்கு அடிக்கடி வலிப்பு வருவதுண்டு. ஒருமுறை நினைவை இழந்துவிட்ட அவள் இறந்துவிடுவாளோ என்ற ஐயம் உண்டாயிற்று. உடனே, அவர் விரைவுத்தந்தி மூலம் "பகவானே' எனது குழந்தை இந்திரா உடல் நலமின்றி தவித்துக்

கொண்டிருக்கிறாள். தயவுசெய்து அவளுக்கு உதவி செய்யுங்கள்." என்று தெரிவித்திருந்தார். அத்துடன் சிகிச்சையின் பொருட்டு இரு ஆயுர்வேத மருத்துவர்களையும் அழைத்திருந்தார். அன்றிரவு ஏழு மணிக்கு அடுத்த கிராமத்தில் வாழ்ந்து வந்த அவரது மைத்துனர், முந்தைய ஆண்டு தனக்கு ரமணாச்ரமத்திலிருந்து வந்திருந்த விபூதி பிரசாதத்தை எடுத்து வந்து "இதை குழந்தையின் நெற்றியில் பூசுங்கள்." என்று கொடுத்தார். விபூதியை பூசியவுடன், எல்லோரும் வியக்கத்தக்க வகையில், குழந்தை நலம் பெற்றாள். அந்த சமயத்தில் வந்து சேர்ந்த மருத்துவர்களும் இதை உறுதி செய்தனர். மறுநாள் ஆச்ரமத்திலிருந்து வந்த கடிதத்தில் 'உங்கள் தந்தி கிடைத்தது. பகவான் நேற்றிரவு ஏழு மணிக்கு உங்கள் தந்தியைப் பார்த்தார். எல்லாம் சரியாகி விடும் என்று கூறினார்.' என்பதாக எழுதப்பட்டிருந்தது. சுப்பராமய்யாவைப் பொறுத்தவரை நிகழ்ந்தது ஒரு அற்புதமே. தொடர்ந்து வந்த கிறிஸ்துமஸ் விடுமுறையில் அவர் பகவானை காண வந்தார். எதையும் புத்திபூர்வமாக ஆராய்பவர்களுக்கு இம்மாதிரியான அதிசயங்களை ஏற்பதில் உள்ள பிரச்சனை சுப்பராமய்யாவிற்கும் இருந்தது. அவர் பகவானிடம் "நீங்கள் எனது குழந்தையைக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணினீர்களா?", என்று கேட்ட போது அதைத் தெளிவு செய்யும் விதமாக, "குழந்தையைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைப்பதும் ஒரு ஸங்கல்பமே — ஒரு ஆசையே. ஞானிக்கோ ஆசைகள் ஏதுமில்லை. ஞானி ஒரு விஷயத்தை நோக்கும் போது தெய்வீக சக்தி அங்கு தானாகவே வேலை செய்யத் துவங்குகிறது." என்று பகவான் விளக்கமளித்தார்.

நாம் ஒரு விஷயத்தில் குருவின் அருட்பார்வை விழ வேண்டுமென்று நம்பிக்கையோடு பிரார்த்தித்துக் கொண்டால், தெய்வசக்தி தானாகவே குறுக்கிட்டு வேலை செய்கிறது. ரமணரை, அருணாச்சலத்தை நினைத்துக் கொண்டவுடனே தெய்வீக உதவி கிட்டும். சுப்பராமய்யா ஒவ்வொரு முறை ரமணாச்ரமம் வந்தபோதும் அவரை அதிகாலை இரண்டரை மணிக்கு எழுப்பி, அவரோடு சப்-ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயர், கல்யாணசுந்தரம் இவர்களையும் பகவான் சமையலறைக்கு அழைத்துச் செல்வார். அங்கு அவர்கள் சாம்பாரோ, சட்னியோ தயார் செய்வார்கள். அவர்களுடைய உதவியோடு சமையல் பொறுப்பை பகவானே ஏற்றுக் கொள்வார். அவர் கோடை மற்றும் அடுப்பின் உஷ்ணத்தால் பகவானுக்கு வியர்வை வருவதைக் கண்டு சுப்பராமய்யா விசிறி வீச முற்படுவார். தனக்கென்று விசேஷமாகத் தரப்படும் சலுகைகள் எதையும் விரும்பாத பகவான் நிறுத்துமாறு கூறுவார். ஒரு நாள் பகவான் சமையலில் மும்முரமாக ஈடுபட்டிருந்த போது பின்பக்கமாக வந்து வீசத் தொடங்கினார் சுப்பராமய்யா. அதை கவனித்த பகவான், "திருட்டுத்தனமாகவாவது வீச வேண்டும் என்று எண்ணுகிறீர். ஆனால் அதையும் ஒழுங்காகச் செய்யத் தெரியவில்லை. அருகில் வாரும். எப்படிச் செய்ய வேண்டுமென்று காட்டுகிறேன்." என்று கூறி, அவரது கையைப் பிடித்துக் கொண்டு எப்படி விசிற வேண்டும் என்று செய்து காண்பித்தார். "பகவானுடைய கை என்னைத் தொட்ட அந்த நேரம் தெய்வீகமானது." என்று கூறுவார் சுப்பராமய்யா. பிறகு, சட்னி அரைக்க அடுத்த அறைக்குச் செல்வார்கள். ஆட்டுக்கல் குழவியைச் சரியானபடி சுழற்றத் தெரியாத சுப்பராமய்யாவின் கையை மீண்டும் பற்றி அதை எவ்வாறு செய்வது என்பதை பகவான் காட்டுவார். அந்த நேரங்களிலெல்லாம் சுப்பராமய்யா பரவசத்தில் ஆழ்ந்து விடுவார். சட்னி அரைத்த பின், பகவான் தானும் ருசி பார்த்து, பிறருக்கும் ருசி பார்ப்பதற்கு அளிப்பார். மற்றவர்கள் வேறு வேலையில் ஈடுபட்டிருந்தால் சட்னியைச் சிறு உருண்டையாகச் செய்து, "வாயைத் திற" என்று கூறி வாயினுள்ளே போடுவார். "பகவான் இவ்வாறு செய்யும் போது நான் சொர்க்கத்தில்தான் இருந்தேன்" என்று சுப்பராமய்யா கூறுவார்.

ஒரு நாள், பகவானுக்கே உரிய தனிச்சிறப்பு பற்றி கூறுமாறு நான் சுப்பராமய்யாவிடம் கேட்ட போது, "அவருக்கு நேர்ந்த மரணானுபவம், அந்த நிகழ்வை அவர் விசாரம் செய்து அணுகிய விதம்,

அதனால் பகவானுக்கு ஏற்பட்ட ஆத்ம ஸாக்ஷாத்காரம் இவை அனைத்துமே புதுமை. இவை வேறு யாரையும் பின்பற்றி அவர் செய்தது அல்ல. புத்தகங்களில் இருந்து எல்லாம் மேற்கோள் காட்டவில்லை; அவரிடமிருந்து வெளிப்பட்ட பதில்களும் அவருடைய செயல்களும் முற்றிலும் சுயமானவை. தனித்தன்மை வாய்ந்தவை. கேள்விகளுக்கு அவர் நூலறிவினால் விடைகள் அளிக்கவில்லை. சுற்றி வளைக்காமல் அவர் கூறிய பதில்கள் நேரடியாகவும் எளிமையாகவும் இருந்தன. அவதார புருஷர்களைப் போன்று அவர் அதிகாரபூர்வமாக பேசினார். நேரடியாகப் பெற்ற ஞானத்தால், அந்த ஞான அனுபவத்தால் வெளிப்பட்டவை அவரது சொற்கள்; வெறும் கேள்வி ஞானமோ, புத்தக ஞானமோ அன்று. கேள்விகள் ஒவ்வொன்றின் மூலத்திற்கும் சென்று அதை எளிமையாக்கினார். அவர் பேசும் போது, குழப்பம் உண்டாக்கும் பதங்களை உபயோகிக்கவில்லை. எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய உதாரணங்களைக் கூறி, தான் கூறுவதன் பொருளைத் தெள்ளத்தெளிவாக உணருமாறு செய்வார்," என்று பேராசிரியர் சுப்பராமய்யா தெரிவித்தார்.

பகவானது சொற்களிலுள்ள தெளிவைப்பற்றிக் கூறும்போதெல்லாம் சுப்பராமய்யா எல்லையில்லா ஆனந்தமடைவார். பகவான் ஒருமுறை அவரிடம் 'தன்னை அறிய விரும்புவது யார்?', என்று ஒருவர் விசாரம் செய்யும் போது 'நான்' என்னும் அகந்தை மறைந்து 'தான் இனிமேல்தான் அறிய வேண்டும்' என்ற அஞ்ஞானமும் மறைந்து விடுகிறது. குருவின் அருள் என்பது இதுதான்.

"ஆத்மாவைத் தான் அறியவில்லை என்ற அஞ்ஞானத்தை மட்டுமே குருவால் நீக்க முடியும் : ஆத்மஞானத்தை குருவால் தர முடியாது, ஏன் கடவுளாலும் தர முடியாது. 'ஆத்மஞானத்தை எனக்குத் தாருங்கள்,' என்று குருவிடம் வேண்டுவது, 'எனக்கு என்னைத் தாருங்கள்,' என்று கேட்பதைப் போல உள்ளது. நாம் நமது சரீரத்தோடு நம்மை அடையாளப்படுத்திக் கொள்வதற்குக் காரணம் 'நான் ஒரு தனி வ்யக்தி' என்னும் அஞ்ஞானமே ஆகும். இந்த அஞ்ஞானத்தின் விளைவாக, தனி வ்யக்தியாக, தன்னிலிருந்து அந்நியமாக குரு இருப்பதாக அஞ்ஞானத்தை ஏற்படுத்துகிறது. உண்மையில் குரு, உன்னிலிருந்து அந்நியமானவர் அல்ல." என்று பகவான் விளக்கியதாக சுப்பராமய்யா உரைத்தார்



ஸ்ரீ பகவான் – ஆச்ரம கிணறு அருகில் ('ரமண தீர்த்தம்')

பகவானுடைய இறுதி நாட்களில் சுப்பராமய்யா சில செய்யுட்களை இயற்றி பகவானிடம் ஸமர்ப்பித்தார் அவற்றில் ஒன்று.

ஸாதகர்களாகிய நமக்கெல்லாம் மிகவும் முக்கியமானது. ஏனென்றால் நம் சார்பிலும் பகவானிடம் ஒரு உறுதிமொழியை அவர் அளித்துள்ளார். சுப்பராமய்யா அந்தப் பிரார்த்தனையில் "பகவானே! தங்களது உபதேசங்களை எப்போதும் மனதில் நினைவு கூர்வோம் என்றும், தங்களது ஒவ்வொரு இயக்கத்தையும் மிகுந்த கவனத்துடன் கூர்ந்து நோக்கி, அவற்றிலிருந்து பாடம் கற்றுக் கொண்டு, எங்களது அஹங்காரம் என்னும் அஞ்ஞானத்தை அழிப்போம் என்றும் தாங்கள் ஆத்மாவில் எப்போதும் நிலைத்திருப்பது போன்று நாங்களும் இருப்போம் என்றும் உறுதிமொழி தருகிறோம். என் பேரன்பிற்குரிய ஸத்குரு ரமணா! தங்கள் பக்தர்களாகிய நாங்கள் தங்களுக்குச் செய்யும் கைங்கர்யம் இதுவே." என்று அவர் எழுதியுள்ளார். நமது குருவிற்கு நாம் ஆற்ற வேண்டிய கடமை ஒன்றுள்ளது. 'ரமணரைப் போன்ற சிறந்த குரு வேறு ஒருவரும் இல்லை,' என அறை கூவல் விடுத்தால் மட்டும் போதாது. பொறுப்புணர்வுடன், அவரது உபதேசங்களை எப்போதும் மனதில் கொள்ள வேண்டும். பகவானது இறுதி நிமிடங்களில் மிகுந்த துயரால் கண்ணீருடன் நின்ற சுப்பராமய்யாவிடம் பகவான் கூறிய கடைசி வார்த்தைகள், "கவலைப்பட வேண்டாம். அமைதியாக இருங்கள். எல்லாமே நன்கு அமையும். நமது இயல்பு 'இருப்பாய்' இருப்பதுதான். வருவதும் போவதுமாக உள்ளது மனத்தின் செப்படி வித்தையே. நம்முள் விளங்கும் மௌனத்திலும் அமைதியிலும் நிலைத்து நிற்பது ஒன்றே நம் கடமை" என்ற இவையே பகவான் அவரிடம் கூறிய கடைசி வார்த்தைகள்.

பகவான் ஸாந்நித்தியத்தில் நிகழ்ந்த மேலும் இரண்டு முக்கியமான நிகழ்வுகளையும் சுப்பராமய்யா பகிர்ந்து கொண்டார்.

B. அனந்தாசாரி என்பவர் 'ரமண கீதையை' அச்சிடுவதற்குப் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டார். அவர் செய்த உதவி பற்றி அதன் முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. தன்னுடைய பெயரை அதில் வெளியிட வேண்டாமென அவர் பகவானிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட போது, "எதற்காக அதைப் பற்றிக் கவலைப்படுகிறீர்கள்? பெயரைச் சேர்க்க வேண்டும் என்று விருப்பப்படுவதைப் போன்றே, உங்கள் பெயரைச் சேர்க்க வேண்டாம் என்று நீக்கக் கூறுவதும் அஹங்காரத்தின் வெளிப்பாடே ஆகும். அதனால், அது அப்படியே இருக்கட்டும். எப்படி இருந்தாலும், அனந்தாசாரியைப் பற்றி யாருக்கு தெரியப் போகிறது?" என்று விளக்கினார். விளம்பரத்தைத் தவிர்ப்பதுதான் பணிவு என்பதை நம்மில் பெரும்பாலானவர்களால் புரிந்து கொள்ள முடியும். ஆனால் உள்ளதை உள்ளபடி ஏற்பது தான் பணிவின் சிகரம் என்பதை நாம் புரிந்து கொள்வதே இல்லை.

அலகாபாத் பிரிவில் கமிஷனராகப் பணியாற்றிய பன்னாலால் ICS., ஒரு முறை குடும்பத்தோடு ஆச்ரமத்திற்கு வந்திருந்தார். செல்வம், நல்ல பதவியின் காரணமாகச் செல்வாக்கு, வசதியான வாழ்க்கை அனைத்தும் தனக்கு அமைந்திருந்த போதும் மன நிம்மதி இல்லை, என்று தனது குறையைப் பகவானிடம் அவர் தெரிவித்தார். "எதற்காக அமைதி வேண்டுமென்று கூறுகிறீர்கள்? இப்போது இருப்பது போன்றே இருக்கலாமல்லவா?", என்று பகவான் வினவிய போது பன்னாலால், "மன அமைதி இல்லாத நிலையில் நான் சந்தோஷமாக இல்லை," என்று பதிலளித்தார். அவருக்குப் பதில் கூறும் விதமாக "தலைவலியால் துன்புறும் ஒருவன் சரியான மருந்தைச் சாப்பிட்டுத் தலைவலியிலிருந்து விடுதலை பெற விரும்புவது ஏனென்றால் அவனது உண்மையான அல்லது இயல்பான நிலை ஆரோக்கியமேயன்றி நோய் அன்று. அதேபோன்று அமைதியே நமது உண்மையான நிலை. நாம் அமைதியாகவே இருந்தும் கூட அதை நாம் மறந்துவிட்டு வெளியில் உள்ள பொருட்கள் மூலம் அதைப் பெற முயற்சி செய்கிறோம். நீங்கள் கூறுவதும் இப்படித்தான் உள்ளது இந்த நிறைவேற்ற முடியாத தேடுதலே, இது போன்ற பிரச்சனைகள் எல்லாவற்றையும்

ஏற்படுத்துகிறது. வெளிப் பொருட்களிலிருந்து மனதை விலக்கிக் கொண்டு உண்முகமாக்கும் போது உண்மையான அமைதி தானாக ஏற்படும். சந்தோஷமும் உண்டாகும்." என்று பகவான் அறிவுரை வழங்கினார்.

ஒரு நாள் அதிகாலையில் சுப்பராமய்யா பகவானைக் காண வந்தபோது, 'நாம் தினமும் நமது உண்மை ஸ்வரூபமான இருப்பை எவ்வாறு உணர்கிறோம்', என்பதை பகவான் விளக்கினார். தூக்க நிலைக்கும் விழிப்பு நிலைக்குமிடையே ஸந்தி வேளை ஒன்றுள்ளது. விழிப்பு நிலைக்கு வரும் போது *முதலில் 'நான்'* என்ற எண்ணத்துடனேயே உணர்வு வெளிப்படுகிறது. இந்த எண்ணம் எழுவதற்கு நொடிப் பொழுதிற்கு முன்னர் வேறுபாடுகளற்ற சுத்த உணர்வு மட்டும் விளங்குகிறது.

எனவே, முதலில் எதையும் உணராமல் இருக்கிறது. அதைத் தொடர்ந்து சுத்த உணர்வு விளங்குகிறது. அதற்குப் பின்னரே, 'நான்' என்னும் எண்ணம் எழும்புகிறது. இந்த மூன்றாவது நிலையில்தான் நம்மைச் சுற்றியுள்ள உலகை நாம் உணர்ந்து கொள்கிறோம். மிக அதிகமான கவனத்துடன், விழிப்புடன் இருந்தால் மட்டுமே சுத்த உணர்வை, இருப்பை நாம் உணர முடியும்.

பகவான் காட்டிய பாதை நேரான, இயல்பான, எளிய பாதை என்பதே அதன் சிறப்பு. மிக உயர்ந்த குருவுக்கும் அவரது மூத்த பக்தர்களுக்குமிடையே நிலவிய பவித்ரமான உறவைப்பற்றி படித்தறிந்து கொள்ளும் பேறு பெற்ற நாம் பாக்கியசாலிகள். அதன் காரணமாக நமது உணர்வும் தூய்மையடைகிறது. அப்போதே ஸத்தியத்தை உணரக்கூடிய தகுதி ஏற்படுகிறது. நமது புத்தி, நமது நினைவுகள், நமது ஆசைகள் இவற்றில்தான் பாதுகாப்பு உள்ளது என்று தானாகவே இவற்றில் கவனத்தை செலுத்துகிறோம். ஒருவருக்குப் பரிபூரணமான நம்பிக்கை இருக்க வேண்டும். அருணாசல என்றால் அருண—அசல என்று பொருள்படும். 'அருண' என்றால் இருப்பு, உணர்வு; 'அசல' என்றால் அசைவற்றது என்று பொருள். மனம் சலிக்காமல் இருக்கும் போது, அது ஆத்மாவில் கரைந்தேயாக வேண்டும். "ஒவ்வொரு ஜீவனும் இறுதியில் அருணாசலத்திடம் வந்தேயாக வேண்டும்," என்று பகவான் கூறியதன் பொருள் இதுவே. ஒருவர் மெய்ப்பொருளை உணர வேண்டும் என்றால், அலைந்து கொண்டேயிருக்கும் மனதை அசையாமல் நிறுத்த வேண்டும்.

நான் சுப்பராமய்யாவுடன் நெருங்கிப் பழகியதால் ஒருமுறை அவருடைய சொந்த ஊருக்குச் சென்றேன். அப்போது அவர் வான்விளிம்பைச் (தொடுவானத்தைச்) சுட்டிக்காட்டி "கணேசா! அங்கு அருணாசலம் இருக்கிறது பார். உன்னால் அருணாசலத்தைப் பார்க்க முடிகிறதா?" என்று வினவினார். என்னால் அருணாசலத்தைச் சுலபமாகக் காண முடிந்தது. அதில் ஒரு அதிசயமுமில்லை. மனம் "என்னால் காண முடியவில்லை," என்று கூறும் போது நமது கவனம் மனதின் உடனடித் தோற்றமான 'காண முடியவில்லை' என்பதில் தான் உள்ளது. பொய்யான அந்தத் தோற்றத்தை ஏற்றுக் கொள்ளாதீர்கள். நம்மீது நமக்குள்ள நம்பிக்கையே மெய்ப்பொருள். 400 மைல்களுக்கு அப்பாலிருந்து அவர் அருணாசலத்தை எனக்குக் காட்டியபோதும் என்னால் காண முடிந்தது. 1960-ல் நான் மும்பையில் இருக்கும் போதே எனக்குப் பழக்கப்பட்ட K. K. நம்பியாரும், சுப்பராமய்யாவைப் போன்றே மெய்ப்பொருளில் ஊறிப் போனவர். மிகப் பெரிய கம்பெனி ஒன்றில் டைரக்டராக இருந்த அவர், கடற்கரைக்கு எதிரில் அரண்மனை போன்ற பிரம்மாண்டமான வீட்டில் வாழ்ந்து வந்தார். ஒருநாள் சாப்பிடுவதற்காக என்னை அவரது இல்லத்திற்கு அழைத்திருந்தார். சாதாரணமாக, அவரது வீட்டிற்குள் நுழையவே எனக்குக் கூச்சமாக இருக்கும் என்னை இயல்பான நிலைக்குக் கொண்டு வந்த பின்னர் மாடி வராந்தாவிற்கு அழைத்துச் சென்றார். அங்கு என்னை அணைத்தபடி "கணேசா' அங்கு பார் அருணாசலம் உள்ளது." என்று கடலைச் சுட்டிக் காட்டினார்

அன்றும் கடலின் நீர்பரப்பின் மேல் என்னால் அருணாசலத்தைக் காண முடிந்தது. இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர்தான் நான் அருணாசலத்தில் வந்து தங்கி அதன் ஆன்மீக ஆழத்தை அனுபவித்தேன்.

"எல்லோரும் அருணாசலத்திற்கு வந்தேயாக வேண்டும்," என்பது பகவானுடைய திவ்ய மொழிகள். இம்மொழிகளில் மட்டும் நம்பிக்கை வைத்தால் போதாது. நம் ஆத்மாவிலும் நம்பிக்கை கொள்ள வேண்டும். நாமே உண்மைப்பொருள் என்பதால் நாம் உண்முகப்பட்டு நம்மைக் காண விழைய வேண்டும். மெய்ப்பொருள் எங்கும் நிறைந்து உள்ளது. புத்தியிலோ, மனதிலோ நமது கவனத்தைச் செலுத்தக் கூடாது. அவ்வாறு செய்தால், அவை பொய்யானவற்றைத் தோற்றுவித்து, ஆத்மா போன்ற விஷயங்களெல்லாம் உண்மையன்று என்று நம்புமாறு செய்து, தவறான வழியில் அழைத்துச் சென்றுவிடும். K. K. நம்பியாரும், பேராசிரியர் சுப்பராமய்யாவும் எனக்கு இந்தப் பாடத்தைப் புகட்டினார்கள். எனக்கு அருணாசலத்தை வெளியில் காட்டி, நான் அருணாசலத்தை ஒவ்வொரு நொடியும் என்னுள்ளே அனுபவிக்கும் வகையில் என்னை அகமுகமாக்கினர். இந்தப் பழைய பக்தர்கள் எல்லோருமே அருணாசலமாகிய ரமண பகவானிடமிருந்து வந்தவர்களாதலால் அருணாசலத்தின் அங்கமான பாறைகளும் பாறாங்கற்களுமே ஆவார்கள். அவர்கள் அருணாசலத்துடன் மீண்டும் ஐக்கியமாகி விட்டனர். சிறந்த பக்தரான N. R. கிருஷ்ணமூர்த்தி ஐயர் ஒருமுறை என்னிடம், "கணேசா! நீயும் அருணாசலத்தின் பாறைகளில் ஒன்றுதான். நானும் அப்படித்தான். நீயும் அதனிடம் திரும்பிச் சென்று கொண்டிருக்கிறாய். உணராமல் போகக்கூடாது. அதைப் புரிந்துகொண்டு முழு உணர்வோடு அதனிடம் நாம் மீண்டும் செல்வோம்," என்று கூறினார். உடனே, நான் தூசுக்கு சமமானவன்; சிறிய கல் என்று கூடக் கூற முடியாது. நீங்கள் ஒரு பாறையாக – பெரிய பாறையாகக்கூட இருக்கலாம், என்ற எண்ணம் என் மனதில் உதித்தது. K. K. நம்பியார் ஒரு பாறையாக இருந்தார். ஒரு முறை, மலையில் ஒரு பெரும் பாறையைச் சுட்டிக் காட்டிய படி, "இது நமது முருகனார்" என்று குஞ்சு ஸ்வாமி என்னிடம் கூறினார். கிரிவலம் செல்லும் போது இந்தப் பாறைகளை எல்லாம் பார்த்து ஆனந்தமடைவேன். ஏனென்றால் சீடனுக்கும் குருவுக்கும் இடையே உள்ள உறவு, அவன் அகமுகமாவதற்கு இன்றியமையாததாகும்.

சுப்பராமய்யா என்னிடம் ஒருமுறை, "வெளியே செல்வதற்குக் கதவுகளும், சாலை, வரைபடங்கள் போன்ற பல வழிகாட்டிகளும் நமக்கு உள்ளன. ஆனால் 'பறவை பறப்பதற்கு வழித்தடங்கள் இல்லை; அது எவ்வழியில் பறக்கிறதோ அதுவேதான் அதன் வழி,' என்று உபநிஷதங்கள் கூறுவது போன்று, உண்முகமாகச் செல்வதற்கு வரைபடங்களோ, வழிகாட்டியோ கிடையாது. தண்ணீரில் நீந்தும் மீனுக்கு அது செல்லும் வழிதான் பாதையேயன்றி வேறு குறிப்பிட்ட பாதை எதுவுமில்லை. அதே போன்று நாம் அகமுகமாக மூழ்கி, நமது பாதையை நாமே கண்டு பிடிக்க வேண்டும். எந்த சாஸ்திரங்களாலும் உங்களுக்கு உதவ முடியாது; உங்களுடைய படிப்பறிவு எதுவும் உதவாது. உங்களிடம் நீங்கள் நம்பிக்கை வைப்பதாலேயே இதை சாதிக்க முடியும். நம்மிடம் உள்ள பூரணமான நம்பிக்கையின் மூலமாக மட்டுமே நாம் அதை பெற முடியும்.

பறவையைப் பாருங்கள்! அது எத்துணை அழகாகப் பறக்கிறது! தனது பாதையைப் பற்றி அது கவலைப்படுகிறதா என்ன? மீனுக்கு நீந்துவதற்கு ஏதாவது தயக்கம் உள்ளதா? அப்படிப் பார்க்கும்போது நாம் ஏன் தயங்குகிறோம்? தைரியமாக உள்ளே மூழ்குங்கள்! ஆழ்ந்து மூழ்குங்கள்! தன்னுள்ளே ஆழ்ந்து மூழ்கி, அகமுகமாகி உள்ளே செல்லுங்கள்!", என்று எனது குருநாதர் ரமணர் எப்போதும் கூறுவார். பகவானிடம் பூரண நம்பிக்கை வைத்து தனக்குள்ளே மூழ்கினால் உங்கள்

உள்ளே இருக்கும் குரு விரித்த கரங்களோடு உங்களை வரவேற்கக் காத்திருப்பதை உணர்ந்து கொள்வீர்கள்." என்று கூறினார் சுப்பராமய்யா.

சுப்பராமய்யாவிற்கு லலிதா, இந்திரா என்று இரு பெண் குழந்தைகள் இருந்தனர். வெகு தொலைவிலிருந்து வருவது மிகவும் கஷ்டமென்றாலும், பகவானைக் காண அவர்கள் தவறாமல் வருவது வழக்கம். ஒரு முறை ஆச்ரமத்திற்கு வந்த போது இந்திரா, புதிய தெலுங்குப் பதிப்பான 'உபதேச ஸாரம்' பிரதி ஒன்றைப் பிரித்து அதில் பகவான் எழுதிய நான்கு வரிகளைக் கொண்ட ஸம்ஸ்க்ருத ஸ்லோகம் ஒன்றில் பெரிய எழுத்தில் அச்சிடப்பட்டிருந்த முதல் இரண்டு எழுத்துக்களை ஒவ்வொரு வரியிலிருந்தும் பொறுக்கிப் பின் தேஹம்—நாஹம்—கோஹம்—ஸோஹம் என்று சேர்த்து உரக்கப் படித்தாள். சேர்த்துப் படித்தபோது அதன் அர்த்தம், "உடம்பு—நான் அன்று—நான் யார்?—அவனே நான்" என்றாகியது. இதைக்கேட்ட போது "மிகவும் நன்று! இதுவே போதும். ஸ்லோகத்திலுள்ள மற்ற பகுதிகளை நீ படிக்க வேண்டியதில்லை. நீ படித்தது தான் ஞானத்தின் ஸாரம். அதையே உனது மந்திரமாக எடுத்துக் கொள்," என்று கூறிய பகவான், அவள் ஊருக்குத் திரும்பும் வரை அவளைப் பார்த்த போதெல்லாம் அதைத் திரும்பத் திரும்பக் கூறும்படி சொல்வார். அவளுக்கு அது மனப்பாடமாகி விட்டது. அவர்கள் திரும்பிச் செல்ல வேண்டிய நாள் அன்று, பகவான் வழக்கம் போல் மலை மீது ஏறிச் செல்லத் தயாராக இருந்த சமயத்தில் அவர்கள் விடை பெற வந்தார்கள். பகவானை நெருங்கி, "பகவானே! நாங்கள் வீட்டிற்குப் போக வேண்டும்," என்று கூறிய படி இந்திரா அழ ஆரம்பித்து விட்டாள். அவளை முதுகில் தட்டிச் சமாதானம் செய்து, "நீ உன் இடத்திற்குச் செல். நான் என்னிடத்திற்குப் போகிறேன்," என்று கூறி மலையைச் சுட்டிக் காட்டினார் பகவான். அவர் கூறிய சொற்கள் விசேஷ அர்த்தமுள்ளவையாக ஆனது. அன்று பகவானிடம் இந்திரா இறுதியாக விடை பெற்றது போல் ஆயிற்று. வீடு திரும்பியதும் இரண்டு குழந்தைகளும் சுப்பராமய்யாவிற்குக் கடிதம் எழுதினர். லலிதா பகவானுக்குத் தன் நமஸ்காரத்தைத் தெரிவித்து, தான் தேர்வில் வெற்றி பெற்று அடுத்த வகுப்பிற்குச் செல்வதாக பகவானிடம் கூறும்படி எழுதியிருந்தாள். இந்திரா, தான் மந்திரத்தை இடையறாது ஜபிப்பதாகவும், ஸ்ரீ பகவானைத் தியானிப்பதாகவும் எழுதியிருந்தாள். அந்தக் குழந்தைகளின் கடிதத்தைப் படித்து, பகவான் சந்தோஷப் பட்டார். சிறுமி இந்திரா இதன் பிறகு விரைவிலேயே இறைவனடி சேர்ந்தாள். சுப்பராமய்யா அவளுக்கு ஒரு ஸமாதி அமைத்து அதன் மேல் தேஹம்—நாஹம்—கோஹம்—ஸோஹம் என்ற மந்திரத்தைப் பொறித்தார்.





பால் பிரண்டன் ஸ்ரீ பகவானுக்கு இடப்பக்கம் அமர்ந்திருப்பது

# 39 பால் பிரண்டன்



பகவான் ரமணரின் பழைய பக்தர்களின் வாழ்க்கையைப் பற்றி நாம் படித்து அறிந்து கொள்ளும் போது புத்தர், யேசுநாதர் இவர்களைப் போன்று ஸ்ரீ ரமண மஹர்ஷியும் ஒவ்வொரு கணமும் ஸத்தியத்திலேயே வாழ்ந்தவர் என்பதைக் காண்கிறோம். எவ்வித விதிமுறைகளோ கட்டுப்பாடோ இன்றி, 24 மணி நேரமும் எளிதில் அவரை நெருங்க முடிந்தது. கதவுகள் எப்போதும் திறந்தபடியே இருந்தன. மெய்ப்பொருளே அவருடைய இரு கால்களால் நடப்பதையும், வாயால் பேசுவதையும், கண்களால் காண்பதையும் உடன் வாழ்ந்த பழைய பக்தர்கள் அருகிலிருந்தவாறு கண்கூடாகக் கண்டனர். அத்தகைய பக்தர்களோடு வாழ்ந்து அவர்களும் எவ்வாறு ஸத்தியத்தில் - மெய்ப்பொருளில் தோய்ந்து இருந்தனர் என்பதை நேரில் காணும் பேறு எனக்கும் கிட்டியது. அவர்களைப் பற்றிப் படிக்கும்போது நம்மையும் அறியாமல் அந்த ஸத்தியப்பொருள் நமது இதயத்தினுள்ளும் மெல்லக் கசிந்து நிறைகிறது. அடைய முடியாததாகத் தோன்றும் அந்த ஸத்தியத்தோடு இவ்வாறு தொடர்பு கொள்ள முடிகிறது.

வேதங்கள், உபநிஷதங்கள், தம்மபதம் (Dhammapada), டாவ் டெ ஜிங்க் (Tao Te Ching), பைபிள், தோரா (Torah), குர்ஆன், ஸெண்ட் அவெஸ்தா (Zend Avesta), ஸ்ரீமத் பகவத் கீதை மற்றும் பல ஆன்மீக பரம்பரைகளின் சாஸ்திரங்கள் மூலம் வார்த்தைகளால் பொதியப்பட்டு மறைந்து கிடக்கும் ஆன்மீக ஞானம் நமக்கு தொன்று தொட்டே கிடைத்துள்ளது. ஆனால் வார்த்தைகள் உண்மை ஞானமாகாது. 'தண்ணீர்' என்ற சொல் தண்ணீராகாது. அது நமது தாகத்தைத் தீர்க்காது. ஆனால் சிறிது தண்ணீரை அருந்தும் போது அதிசயம் நிகழ்கிறது. இதே உபமானத்தை ஆன்மீகத்தில் பயன்படுத்திப் பாருங்கள். புத்தக அறிவைக் குறித்து ஒருவர் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஆனால் அது வெறும் 'தண்ணீர்' என்னும் வார்த்தையை மட்டும் பற்றி நிற்பதற்குச் சமம். அவ்வாறென்றால் நாம் எவ்வாறு ஸத்தியத்தை அனுபவிக்க முடியும்? சாஸ்திரங்களின் லட்சியம்தான் என்ன? ஞானிகளும் மஹான்களும் காரணமின்றி அந்தப் புனித சாஸ்திரங்ளை விட்டுச் செல்லவில்லை. வாழ்க்கையில் ஒவ்வொரு நொடியிலும் ஞானி ஒருவர் ஸத்தியத்திலேயே (உண்மையிலேயே) திகழ்கிறார். அவரது உபதேசங்களாலும், ஆத்ம ஸ்வரூபமாய் வாழும் அவரது வாழ்க்கையாலும், உலகெங்கிலும் இருந்து மக்கள் அவரிடம் ஈர்க்கப்படுகிறார்கள். அப்போது அவர்களும் ஸத்தியத்தின் ஸந்நிதியில் வாழ்ந்து உண்முகமாகி ஸத்தியத்தை கிரஹித்து நிஜ ஸ்வரூபத்தை உணர்கிறார்கள். ஏனென்றால் அந்த ஞானியின் சரீரத்தினுள், சாஸ்திரங்கள் விளக்கும் மெய்ப்பொருளை ஸத்தியத்தை அவர்களால் உணர முடிகிறது.

இப்பொழுது, அஞ்ஞானம் என்பது உண்மையன்று என உலகறியப் பறை சாற்றிய பெருமையைப் பெற்ற ரஃப்பேல் ஹர்ஸ்ட் (Raphael Hurst) என்ற பிரசித்தி பெற்ற பக்தரைக் குறித்துக் காண்போம். மேலை நாட்டவரான அவர், பகவான் ரமண மஹர்ஷியின் அருளால் தன்னுள்ளே விளங்கும் ஆத்மப் பிரகாசத்தை உணர்ந்ததாகச் சிறிதும் சந்தேகமின்றிப் பிரகடனம் செய்துள்ளார். சிறந்த எழுத்தாளரான அவரை, பெரும்பாலானவர்கள் பால் பிரண்டன் (Paul Brunton) என்ற பெயராலேயே அறிந்திருந்தனர். ஆன்மீக வாழ்க்கையில் பல வெற்றி, தோல்விகளைச் சந்தித்தவர். பிரண்டனுடைய வாழ்க்கையும் நம்முடையதைப் போன்றே. சில சமயங்களில் ஆன்மீகத்தின்

உச்சியிலும் வேறு சில சமயங்களில் அதல பாதாளத்திலும் இருந்ததென்பதைக் காணும்போது ஆச்சரியப்படுவோம். ஆனால் உன்னதமான தெய்வ சக்தியைச் சார்ந்து வாழ்ந்து அதனிடம் சரணடைந்து விட்டோமென்றால் எப்போதும் தோல்வி என்பதே இல்லை.

பால் பிரண்டன் தனது அனுபவங்களைக் கீழ்க்கண்டவாறு எடுத்துரைத்துள்ளார். "1963-ல் நான் ஆத்மானுபவத்தைப் பெற்றேன். உணர்வு என்னுள் தானாகவே வெடித்துச் சிதறி. ஒளிபரப்பியதாகத் தென்பட்டது. அந்தத் தெய்வீக சக்தி என்னுள், எப்போதும் என்னுடன் இருந்திருக்கிறது என்பதை நான் உணர்ந்தேன். 'நான்' என்ற சொல் என்னுள்ளே, மிகத்தெளிவாக, குறிப்பிடத்தக்க வகையில் பிரகாசித்தது. அது மட்டுமே உண்மை என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. 'நான் இருக்கிறேன்' என்ற உண்மையை அடித்தளமாகக் கொண்டே இவ்வுலகின் இருப்பு உள்ளதென்பதை உணர்ந்தேன். நான் என்னுள் மிக ஆழமாக மூழ்கி காலத்தைக் கடந்த நிலையை அனுபவித்த அதே சமயத்தில் மேலெழுந்தவாரியாக எனது இருப்பையும் காலத்தையும் உணர முடிந்தது. இவ்விரு நிலைகளையும் ஒரே சமயத்தில் அனுபவித்தபோது எனது உடலும் பிறர் சரீரங்களும் வெறும் கூடுகளாகத் தோற்றமளித்தன. நான் விருப்பு, வெறுப்புகளற்ற ஒரு சுதந்திரப் பறவையைப் போலானேன். பற்றுக்களனைத்தும் என்னை விட்டகன்றன. உடம்பு நானன்று என்பதையும், நான் அதனிடமிருந்து பூரணமாக விடுதலை பெற்று விட்டேன் என்பதையும் சந்தேகமின்றி உணர்ந்து கொண்டபோது, எனக்கு மரணம் என்ற ஒன்று வரமுடியாது என்பதை நான் அறிந்து கொண்டேன். அழிவற்ற 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வே இறைவன் என்பதால் அந்த உணர்வில் என்னால் நிரந்தரமாக வாழ முடியுமென்பதைப் புரிந்து கொண்டேன். எனது ஆழ்மனதில் இதயத்தில் நிரந்தரமான நிகழ்காலத்திலேயே வாழ்கிறேன்," என்று மிகத் தெளிவாகவும், சந்தேகத்துக்கு இடமின்றியும், ஊக்குவிக்கும் விதத்திலும், நிறைவாகவும் பால் பிரண்டன் எத்துணை அழகாக எடுத்துரைத்துள்ளார்! ஆத்ம விசாரத்தின் மூலம் நாமும் ஆத்மானுபூதியைப் பெற முடியுமென்பதை அவருடைய வாழ்க்கை நமக்கு மிகத் தெளிவாக நிரூபித்துள்ளது.

எப்போதெல்லாம் பால் பிரண்டன் தனது ஆன்மீக வாழ்க்கையில் வழுக்கி விழுந்தாரோ அப்போதெல்லாம் மேன்மையான தெய்வீக சக்தி எவ்வாறு அவரைக் கைதூக்கி விட்டதென்பதையும் அவர் போராட்டங்களை எதிர்கொண்ட போதெல்லாம் எவ்வாறு வழி நடத்தியது என்பதையும் நாம் கண்ணுற்றால், அது ஒவ்வொரு ஸாதகருக்கும் ஊக்கமளிப்பதாகவும், செல்ல வேண்டிய திசையைக் காட்டுவதாகவும் அமையும் என்பது நிச்சயம். ஒவ்வொருவரது இதயத்திலும் 'நான் இருக்கிறேன்' என்ற உயிர்த் துடிப்பாக விளங்கும் அந்த உன்னத சக்தியிடம் சரணடைந்தால் அந்த சக்தி ஸாதகனை வழிநடத்தும் என்பது திண்ணம். மேற்கூறிய கருத்தை முழுவதுமாகப் பின்பற்றி, அதன்படி தீவிரமாகச் செயல்பட்டதால் அவர் நிறைநிலையை அடைந்தார். 1963-ல் பிரண்டன் பெற்ற நிறைவைப் பற்றி முதன்முதலாக நான் படித்த போது "இது சாத்தியமானதே." என்று நானும் உறுதியாக உணர்ந்தேன். நமது அத்யாத்ம வாழ்க்கையில், இந்த திட நம்பிக்கையால் வரும் மிக வலுவான சக்தியை நாம் கிரஹித்துக் கொள்வது மிகவும் அவசியம்.

பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போது, அவரது பூகோள ஆசிரியர் இந்தியாவின் பெயரை உச்சரித்த போதெல்லாம் பிரண்டனுக்கு மெய்சிலிர்த்தது. பின்னர் உலக வரைபடத்தில் அதைத் தேடிக் கண்டுகொண்ட போதும் அதே மெய்சிலிர்ப்பு அவருக்கு ஏற்பட்டது. இந்தியா என்ற அந்த ஒலியும், அதை வரை படத்தில் தேடிக் கண்டுபிடித்த அனுபவமுமே அவரது ஆன்மீகத் தேடலின் ஆரம்பமாக அமைந்தன. இளம் வயதில் இந்தியாவிற்குச் செல்ல வேண்டும் என்னும் வலுவான உந்துதல்

ஏற்பட்டதைச் சாதாரணமாக வந்து போகக் கூடிய எண்ணம் என்று சொல்ல முடியாது. உன்னதமான சக்தியின் வழிகாட்டுதலே அது.

பிரண்டன் தனது இளமைப் பருவத்தில் தனக்கும் தனது சுற்றுச் சூழலுக்கும் ஏற்கனவே இருந்த வேறுபாடு மேலும் மேலும் அதிகரிப்பதாக உணர்ந்தார். அதன் காரணமாகத் தன்னுயிரை மாய்த்துக் கொள்ளவும் எண்ணினார். இந்த எண்ணம் எழுந்த உடன், மரணம் என்பது என்ன? என்றும் அதன் பின்னர் என்ன நிகழும்? என அறிவதில் அவருக்குள் தீவிர ஆர்வம் எழும்பிற்று. உன்னதமான தெய்வீக சக்தியிடமிருந்து அல்லாது இத்தகைய நாட்டம் வேறு எங்கிருந்து வந்திருக்க முடியும்?! 'பிரிட்டீஷ் அருங்காட்சியகத்தின் (British Museum Library) நூலகத்திலிருந்து மரணத்தைப் பற்றிய கருத்துக்களைக் கூறும் நூல்களையெல்லாம் அவர் படித்துத் தெரிந்து கொண்டார். ஸித்திகள், யோகங்கள், நேரில் கண்டறிய இயலாத ஆன்மீக உண்மைகள் பற்றிய நூல்கள், புத்த மதம் இவற்றையும் ஆராய்ச்சி நூல்களையும் ஆழ்ந்து படித்தார். மேற்கூறிய விஷயங்களை அறிந்து கொள்வதில் மிகுந்த ஆர்வமிருந்ததால், அவர் 'பிரம்ம ஞான ஸபை'-யில் (Theosophical Society) சேர்ந்தார். இரண்டாண்டுகளில் அவர்களின் கருத்துக்கள் மேல் நம்பிக்கை இழந்தார். இருந்தாலும் மேலை கீழை நாடுகளின் ஆன்மீக உண்மைகளை அறிந்து கொள்ளும் தீவிர ஆர்வத்தைத் 'தியோஸாஃபி' அவருள் எழுப்பியது.

எதிர்பாராத விதத்தில், ஸித்திகள் மீதும், விளக்கமுடியாத ஆன்மீக உண்மைகள் மீதும் அவருக்கு இருந்த ஈடுபாடு ஏனோ பத்திரிகைக் கலையின் மீது திரும்பியது. அவர் ஒரு சிறந்த எழுத்தாளராக உருவாக வேண்டும் என்பதற்காக, உன்னதமான அந்த திவ்ய சக்தியேதான் அவருக்கு இந்த வழியைக் காட்டியது. பண்டிதர்களையும் பாமரர்களையும் ஒருங்கே ஈர்க்கவல்ல சக்தி வாய்ந்த கருத்துகளை அவர் பத்திரிகைகளில் எழுத ஆரம்பித்தார். உதாரணமாக, "திருட்டுத்தனமாகச் சுவரை ஏறிக் குதித்து இறைவனின் ஆனந்த ராஜ்யத்திற்குள் (Kingdom Of Heaven) நுழைய முயற்சி செய்தவர்களை யேசுநாதர் ஏன் கடிந்து கொண்டார்?" என்ற கேள்வியை எழுப்பி, "அவர்கள் தங்கள் ஆணவத்தை அழிக்காமல், அதன் ஆதிக்கத்திலிருந்து விடுபடாமல், அங்கு நுழைய முயற்சித்ததால் தான்." என்று பதிலையும் கூறினார். யார் இந்தத் திருடர்கள் என்ற கேள்விக்கு "ஸித்திகளை நாடுபவர்களே அவர்கள்." என்ற பதிலையும் கொடுத்தார்.

மிகக் கூர்மையான வார்த்தைகளால் அழுத்தமாகக் கூறி வாசகர்களைத் தட்டி எழுப்பவல்ல அவரது திறமையின் மூலம் பிரண்டன் புகழடைந்த போதிலும், அவரது மனதில், "பத்திரிகைத் தொழிலில் தொடர்ந்து ஈடுபட்டு பெயரும் புகழும் சம்பாதிக்க வேண்டுமா? அல்லது ஆன்மீக ஸாதனைகளில் ஈடுபட வேண்டுமா?" என்ற ஒரு போராட்டம் அவ்வப்போது நிகழ்ந்தது. ஆலன் பென்னட் (Allan Bennett), தர்ஸ்டன் (Thurston) என்ற இரு ஆசிரியர்களை அவர் சந்தித்தார். அவர்கள் இருவருமே சரியான பாதையைக் காட்ட முயன்றார்கள் என்ற போதும், தலைப்பாகை அணிந்த ஒரு இந்தியரே அவரை வசீகரித்து, இந்திய யோகாவைக் குறித்து ஆராய்ச்சி செய்யுமாறு கூறி, ஊக்குவித்தார்.

அவருடைய வாழ்க்கையில் மற்றொரு மாற்றமும் நிகழ்ந்தது. அவர் திருமணம் செய்து கொண்டு கென்னத் ஹர்ஸ்ட் (Kenneth Hurst) என்ற ஒரு மகனுக்குத் தந்தையானார். (நான் அவரது மகனை சந்தித்ததோடு பிரண்டனுடைய வெளியிடப்படாத கையெழுத்துப் பிரதிகள் சிலவற்றை அவரிடமிருந்து பெறும் பேறும் பெற்றேன். அவை Conscious Immortality [உணர்வோடு கூடிய

மரணமில்லாப் பெருவாழ்வு என்ற தலைப்பில் பின்னர் வெளியிடப்பட்டன. பிரண்டனின் மறைவிற்குப் பின், அவரது 16 நூல்களைக் கென்னத் வெளியிட்டார்.)

1930-ம் ஆண்டு, அவரது முப்பத்து இரண்டாம் வயதில் பிரண்டனின் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க திருப்பம் ஒன்று ஏற்பட்டது. இந்திய யோகாவைப் பற்றி ஆராய்ந்தறிய வேண்டும் என்ற தீவிர நாட்டம் அவருக்குள் எழுந்ததால், இந்திய ஞானிகள், ஸாதுக்கள், துறவிகள் முதலியோர் தொன்று தொட்டு அளித்து வந்த மிகப் பழமையான ஞானத்தின் பெருமையை அறிந்து கொள்ளத் தீர்மானித்து மும்பைக்குக் கடல் வழியாக வந்தார். பிரண்டன் இந்தியா முழுவதும் பிரயாணம் செய்து ஞானிகள், ஸாதுக்கள், மஹான்கள், ஜோதிடர்கள் இவர்களைச் சந்தித்துக் கேள்விகள் கேட்டதோடு அவர்களின் அக்கருத்துக்களை கவனத்தோடு உள்வாங்கியதின் விளைவாக 'A Search In Secret India' என்ற வியக்கத் தக்க புத்தகம் வெளி வந்தது.

இந்தச் சுற்றுப் பயணத்தில், சென்னைக்கு வந்தபோது மௌனத்தில் ஆழ்ந்திருந்த ஒரு ஞானியின் ஆச்ரமத்தில், சுப்ரமண்யம் என்பவர் பிரண்டனை அணுகினார். பிரண்டனை, ஆன்மீக ஒளி பரப்பும் திருவண்ணாமலையில் வாழும் தனது குருவை நிச்சயமாகக் காண வேண்டும் என்று வற்புறுத்தினார். பிரண்டன் மறுத்த போதும், அவர் அதைப் பொருட்படுத்தாமல் மறுநாள் மாலை பிரண்டனைக் காண வருவதாகக் கூறிச் சென்றார். தான் தங்கியிருந்த விடுதிக்கு வந்த பிறகு மற்றொரு எழுத்தாளரான வேங்கடரமணி என்பவரைக் காண, அறிமுகக் கடிதத்தோடு பிரண்டன் சென்றார். மறுதினம் காலையில் அவரை வேங்கடரமணி தனது குருவான காஞ்சி காமகோடி பீடாதிபதியும், தென்னிந்தியாவில் உள்ள பெரும்பாலான இந்துக்களின் குருவுமான சங்கராச்சாரியாரைக் காண அழைத்துச் சென்றார். தான் சந்திக்க வேண்டிய ஆன்மீக குரு யாராவது இருக்கிறாரா என்று பிரண்டன் அவரிடம் வினவியபோது, சங்கராச்சாரியார், "எது எப்படியானாலும் திருவண்ணாமலைக்கு நிச்சயமாகச் சென்று ரமண மஹர்ஷியைச் சந்திப்பேன்," என்ற உறுதிமொழியை அவரிடமிருந்து பெற்றுக் கொண்டார். பிரண்டன் மீண்டும் தனது அறைக்குத் திரும்பிய பின்னர், ஏற்கனவே கூறியபடி திருவண்ணாமலைக்கு அவரை அழைத்துச் செல்வதற்காக இருந்த சுப்ரமண்யம், அங்கு காத்திருந்ததைக் கண்டார்.

ஸ்ரீ பகவானுடன் பிரண்டனுக்கு ஏற்பட்ட முதல் சந்திப்பைப் பற்றிப் படிக்கும் பொழுது, நாம் மெய்மறந்து போவோம். இதற்குப் புத்தி பூர்வமான விளக்கம் எதுவும் தரமுடியாது. தெய்வீகச் சக்தியே அந்த சந்திப்பை ஏற்பாடு செய்ததாகத்தான் கொள்ள முடியும். அன்றும் இன்றும் என்றும் ஆன்மீக அற்புதமாக விளங்கும் ஸ்ரீ ரமண மஹர்ஷியின் பெருமையை உலகம் அறிய வேண்டும் என்ற தெய்வ ஸங்கல்பத்தினாலேயே பிரண்டன் இந்தியாவிற்கு வந்தார் என்றுதான் கூற வேண்டும். மெய்ப்பொருளை மறைக்கும் அஞ்ஞான இருளில் மூழ்கிக்கிடந்த உலக ஸாதகர்கள் அனைவருக்கும் சக்தி வாய்ந்த தனது எழுத்துக்களின் மூலம் அந்த ஒளியைக் காட்டித் தரும் பொறுப்பை பிரண்டனுக்கு இறைசக்தி அளித்திருந்தது.

சிறந்த அறிவாளியாகவும் பத்திரிகையாளராகவும் இருந்த பால் பிரண்டன் 1930-ம் வருடம் மஹர்ஷியைக் காண வந்தபோது, 32 பக்கங்களில் கேள்விகளை எழுதித் தயாராக எடுத்து வந்திருந்தார் நுணுக்கமான ஆன்மீக உண்மைகளை அவர் ஆழமாகப் படித்திருந்ததால் பிரண்டன் கேட்க எண்ணிய வினாக்கள், ஆராய்ந்து எழுதப்பட்டவையாக இருந்தன மஹர்ஷியும் அவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்ட போது, புரிந்து கொள்ள முடியாத, மிக ஆழமான மௌனத்திற்கு பிரண்டன் இழுத்துச் செல்லப்பட்டார் அவருடைய வாயிலிருந்தோ மனதிலிருந்தோ

ஒரு வார்த்தை கூட வெளி வரவில்லை. இதுவரை என்றுமே அனுபவித்திராத சாந்தியும் அமைதியும் அவருள் நிறைந்தன. இரும்பை ஈர்க்கும் காந்தத்தின் சக்தியைப் போன்று என்னுடைய கவனத்தை ஈர்க்கும் ஏதோ ஒரு சக்தி இவரிடம் உள்ளது, என்று உணர்ந்த நான் அவர் மீது வைத்த கண் நீங்காமல் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தேன்." என பிரண்டன் குறிப்பிட்டுள்ளார். பின்னர் மஹர்ஷியின் அமைதியான திவ்ய ஸாந்நித்தியத்தைப் பற்றி எழுதும் போது பால் பிரண்டன், "என் மனதில் அமைதியும், தவிர்க்க முடியாத மாற்றமும் ஏற்படுவதை நான் உணர்ந்தேன். இரயிலில் நான் மிகவும் கவனத்தோடு தயாரித்த அந்த வினாக்கள் ஒன்றன்பின் ஒன்றாக மறைந்தன. ஏனென்றால் எனக்குத் தொந்திரவு கொடுத்த பிரச்சனைகளுக்குத் தீர்வு காண வேண்டிய அவசியம் இப்போது இல்லாது போய்விட்டது. என்னருகே, தொடர்ந்த அமைதியின் ஓட்டம் இருப்பதையும், ஆழ்ந்த அமைதி என் உள்ளே ஊடுருவுவதையும், எண்ணங்களால் துன்புறுத்தப்பட்ட புத்தி மெதுவாக அமைதியை நோக்கிச் சென்று ஓய்வு கொள்ள முற்படுவதையும் உணர்ந்தேன்," என்று கூறுகிறார்.

ஆன்மீகக் குருமார்களைத் தேடி, பிரண்டன் வட இந்தியாவிற்கு விரைவிலேயே திரும்பிச் சென்றார். அவர் சந்தித்த மஹான்களில் சஞ்சரித்துக் கொண்டேயிருந்த யோகியான சண்டிதாஸ் என்பவரும் ஒருவர். பிரண்டனின் எதிர் கால வாழ்க்கையில் நிகழப் போகும் மூன்று விஷயங்களை, பார்த்த மாத்திரத்திலேயே அவர் கூறினார். அவை அவர் கூறியவாறே நிகழ்ந்தன. மூன்றாவதாக அவர் கூறிய விஷயம், மிகவும் முக்கியத்துவம் பெற்றது. 'நீங்கள் மேலும் இரு முறை இந்தியாவிற்கு வருவீர்கள்' என்றும் 'உங்களுக்காகக் காத்திருக்கும் ஒரு ஞானிக்கும் உங்களுக்கும் வினைப் பயனால் ஏற்பட்டுள்ள தொடர்பை நிறைவு செய்வீர்கள்' என்றும் பிரண்டனிடம் அவர் கூறியிருந்தார். பிரண்டனுக்காகக் காத்திருந்த ஞானி வேறு யாருமல்ல, பகவான் ரமணரே.

ஓயாத பிரயாணங்கள், அவருடைய ஆரோக்யத்தைக் கடுமையாகப் பாதித்தது. நோய்வாய்ப்பட்ட போது பிரண்டன் மிகவும் நலிந்து போனார். உடல் நலம் குறைந்ததால் வேதனை தாளாமல் உடனே இங்கிலாந்திற்குத் திரும்ப விரும்பினார். நல்ல வேளையாக அவரது மனதில் 'இங்கிலாந்திற்கு திரும்பிச் செல்ல வேண்டும்' என்று எழுந்த வலிய எண்ணத்திற்கும் அவர் சந்தித்திருந்த மஹான்கள், ஸாதுக்கள், ஞானிகள் இவர்களைப் பற்றிய எண்ணத்திற்கும் இடையே ஒரு போராட்டம் நடந்தது. நோயினால் அவர் துன்பத்தை அனுபவித்த சமயத்திலும் பிரண்டனின் மனதில் மஹான்கள், ஞானியர் இவர்களைப் பற்றிய நினைவு நிழலாட்டமாக ஓடிய வண்ணமிருந்தது. ரமண மஹர்ஷியின் உருவமே அவரை மிகவும் பலமாகக் கவர்ந்து இழுத்தது.

இந்த அற்புதமான நிகழ்வைப் பாருங்கள்! பிரண்டன் இங்கிலாந்துக்குச் செல்வதெனத் தீர்மானித்திருந்த அந்தச் சமயத்தில் யதேச்சையாக அவரது இதயத்தில் நிகழ்ந்த நிழலாட்டம், அவரைத் தன் தீர்மானத்தை மாற்றிக் கொள்ளச் செய்து, மஹர்ஷியிடம் திரும்பி வரத் தூண்டியது. இதைத் தொடர்ந்து ரமண பகவானின் வரலாற்றை எழுதிய B. V. நரஸிம்ம ஸ்வாமி அருணாசலத்திலுள்ள குருவிடம் மீண்டும் வருமாறு அவருக்கு ஒரு கடிதம் எழுதினார். இது மட்டுமின்றி, மும்பையிலிருந்து சென்னை வந்த பிரண்டனை, எழுத்தாளர் வேங்கடரமணி சந்தித்துத் தன்னிடம் சங்கராச்சாரியார் கூறியதாக ஒரு விஷயத்தைத் தெரிவித்தார். "உனது நண்பர் இந்தியா முழுவதும் சுற்றுப் பயணம் மேற்கொண்டு பல யோகிகளையும் மஹான்களையும் சந்தித்து உபதேசங்களைப் பெறுவார். இறுதியில் அவர் ரமண மஹர்ஷியிடம்தான் வந்தாக வேண்டும்." எனக் கூறியதாகத் தெரிவித்துள்ளார். எத்துணை தீர்க்க தரிசனத்துடன் அவர் இதைக் கூறியுள்ளார்! இதனால்தான் ரமண மஹர்ஷியின் ஸமாதிக்குப் பிறகு, தனது நண்பர்களை இந்தியாவிற்கு

அனுப்பும்போது, "காமகோடி மடத்தில் மெய்ப்பொருள், சங்கராச்சாரியார் என்ற மனித உருவில் வாழ்வதைக் கண்டு வாருங்கள், என்று கூறுவதோடு திருவண்ணாமலைக்குக் கட்டாயம் சென்று வாருங்கள் என்றும் கூறுவார். உருவில் இல்லையென்றாலும் மாபெரும் ஞானியான ரமண மஹர்ஷியின் காண்பதற்கரிய சக்தியை அனுபவித்து வாருங்கள்," என்று சொல்லியனுப்புவார்.

இரண்டாவது முறை பிரண்டன் மஹர்ஷியைக் காண வந்தது, நமக்கெல்லாம் நன்மை பயக்கக் கூடியதாக அமைந்தது. இல்லையென்றால் பகவானின் அருட்பார்வையைப் பெற்ற விஷயம் அவரோடு மறைந்து போயிருக்கக் கூடும். உலகம் முழுவதும் பகவானை அறிந்து கொள்வதுடன், 'நான் இருக்கிறேன்' என்ற அவரது உபதேசத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்பது இறைவனின் திட்டமாக இருந்ததால், அந்த உயர்ந்த சக்தியே பிரண்டனை மீண்டும் பகவானிடம் வரச் செய்தது. இம்முறை ஸத்தியப் பொருளை அனுபவித்து விட வேண்டுமென்ற தீர்மானத்துடனேயே அவர் திரும்பி வந்தார். முதலில் மஹான்கள், ஸாதுக்கள், ஞானிகள் இவர்கள் மூலம் மெய்ப்பொருள் பற்றிக் கேட்டு அறிந்து கொண்ட அவர், இப்போது அதை அனுபவிக்க விரும்பினார். உறுதியான இந்தத் தீர்மானத்துடன் அருணாசலத்தை அடைந்த பிரண்டனுக்கு B. V. நரஸிம்ம ஸ்வாமியும் மற்ற பக்தர்களும் ரமணாச்ரமத்திற்கு அடுத்துள்ள பலாக்கொத்தில் ஒரு குடிசை கட்டிக் கொள்ள உதவி செய்தனர். பிரண்டன், ரமண மஹர்ஷியின் காலடியில் அனைத்தையும் ஸமர்ப்பித்து ஸத்தியத்தை உணர தீவிரமாக இருந்தார். அவருடைய விடாமுயற்சி, உறுதி, பூரண நம்பிக்கை ஆகிய குணங்களை நாமெல்லோரும் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

பலமுறை ரமண மஹர்ஷியிடம் பெரிதும் சிறிதுமான உரையாடல்களை அவர் மேற்கொண்டார். எப்போதுமே நோட்டுப் புத்தகமும் பென்சிலும் கையுமாக அவர் பகவானைத் பின் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தார். மஹர்ஷியை எளிதில் விடாமல் அவரது நேரடி உபதேசமான ஆத்ம விசாரத்தை முழுமையாகப் புரிந்து கொள்ளும் வரை, அவரிடம் ஆழமான கேள்விகளைக் கேட்டுக்கொண்டே இருந்தார். இந்த உபதேசம் உலகம் முழுவதும் பரவ வேண்டி இருந்ததால், தான் கூற வேண்டியது அனைத்தையும் பிரண்டனுக்கு உபதேசிப்பது என்று பகவானும் தீர்மானித்து அதில் உறுதியாக இருந்தார். பிரண்டன் அந்த உபதேசங்களை ஆழமாகப் புரிந்து கொண்ட பின்னர், தான் எழுதிய, 'A Search In Secret India' என்ற புத்தகத்தில் அவற்றையும் சேர்த்தார்.

அதன் மூலம், உலகில் முதன்முதலாக ஒரு மேலை நாட்டவரின் எழுத்தின் வாயிலாக தன்னாட்டம் குறித்த வழிமுறை வெளிப்பட்டது. பைபிளில் கூறப்பட்ட, "'I AM THAT I AM' மற்றும் 'The kingdom of God is within you (இறைவனது ஸாம்ராஜ்யம் உனக்குள்ளேயே இருக்கிறது)' என்ற இந்தச் சொற்கள் புலப்படுத்தும் உண்மைக்கும், பகவானது உபதேசத்திற்கும் வேறுபாடு ஏதும் இல்லை. 'ஒவ்வொருவரும் அகமுகமாகும் போது உள்ளிருக்கும் ஆத்ம ஜோதி, வருங்காலத்தில் அல்லாமல் அந்தக் கணத்திலேயே அவர்களால் உணர முடியும் என்னும் செய்தியைத் தனது சக்தி வாய்ந்த எழுத்துக்கள் மூலம் பிரண்டனால் பிறருக்கு எடுத்துரைக்க முடிந்தது.

பிரண்டனின் தெளிவான கட்டுரைகள், பல மேல் நாட்டவர்களை மட்டுமல்லாமல் அநேக இந்திய அறிஞர்களையும் மஹர்ஷியிடம் ஈர்த்தன. மேஜர் சாட்விக் (Major Chadwick), எஸ் எஸ் கோஹென் (S. S. Cohen), மோரிஸ் ஃப்ரீட்மன் (Maurice Frydman), டாக்டர் ஹாஃபிஸ் சையத் (Dr. Hafiz Syed), திலீப் குமார் ராய் இவர்களும் மற்றும் பலரும் பால் பிரண்டனின் புத்தகத்தைப் படித்த பின்னரே ரமண மஹர்ஷியிடம் வந்தனர். பல இந்திய சமய நிறுவனங்களின் தலைவர்களும் கூட, 'A Search In Secret India (அறியப்படாமல் இருக்கும் இந்தியாவில் ஒரு தேடல்)' என்ற புத்தகத்தைப்

படித்த பின்னரே. மஹர்ஷியைப் பற்றி அறிந்து கொண்டனர். மஹர்ஷி 'நவமணிமாலை' என்ற தனது செய்யுளில் 'நான் இருக்கிறேன்' என்ற உண்மையை உலகம் முழுவதும் பரப்பும் பணியை அருணாசலம் தனக்கு அளித்ததாக வெளிப்படுத்தியுள்ளார். அருணாசலத்தை விட்டுச் சிறிது கூட அவர் நகராத போது இது எவ்வாறு சாத்தியமாகும்? அதனால் உலகிற்கு இந்தச் செய்தியை அளிக்க பால் பிரண்டன் வந்தே ஆக வேண்டும் என்று ஆயிற்று. உலகெங்கிலும் தவித்திருந்த உண்மையான ஸாதகர்களுக்கு. பிரண்டனின் புத்தகத்தின் மூலம் ஒரு சிறு நம்பிக்கைக் கீற்றுத் தெரிந்ததால். மிக விரைவிலேயே பிரண்டன் பிரபலமானார். தனிப்பட்ட முறையில் ஒவ்வொருவரும் அகமுகமாகி கவனத்தை இருப்பை நோக்கித் திருப்புவது என்ற அவரது செய்தியிலிருந்த அழுத்தம் பண்டிதர்களையும் பாமரர்களையும் ஒருங்கே வசீகரித்தது.



"அருணாசலத்தில் வாழும் இந்த ஞானியின் சொற்கள். எனது நினைவில் இப்போதும் வழிகாட்டும் ஒளியாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன." என்று பிரண்டன் கூறியுள்ளார். மேலும். "'மனிதர்களோடு ஏற்படும் சந்திப்புகளில் நான் தங்கப்-பழங்களைப் போன்ற விலைமதிக்க முடியாத செய்திகளைப் பெறுவேன்' என்று ராய் எமர்ஸன் எழுதியுள்ளார். ஆனால் எனக்கோ மஹர்ஷியுடன் பேசியதால் அவை கூடை கூடையாய் கிடைத்தது என்பது நிச்சயம். ஐரோப்பா-விலுள்ள மிகச்சிறந்த தத்துவ ஞானிகளும் கூட அவர் முன்னால் நிற்க முடியாது. ஞானத்தைக் குறிப்பால் உணர்த்தும் அவருடைய அர்த்தமுள்ள. அமைதியான. அழகான புன்சிரிப்பை ஒருவராலும் மறக்க இயலாது. நான் இதுவரை பார்த்தவர்களில் பிறரது நிலைப்பாட்டை முழுமையாகப் புரிந்து கொள்வதில் அவருக்கு ஈடு இணை யாருமில்லை. உங்களது ஆழமான உணர்ச்சிகள் ஏற்கனவே உங்களுக்கு எதை உணர்த்தியதோ. அதைத் தெளிவு செய்து உங்களது பாதையை எளிதாக்கக் கூடிய வார்த்தைகளை அவர் கூறுவார் என்பதைத் திடமாக நம்பலாம்." என்று கூறியுள்ளார்.

பால் பிரண்டனின் நினைவாக. அவர் புத்தகத்திலிருந்து. பகவானுடன் அவர் நடத்திய ஸம்பாஷணைகளில் சிலவற்றை எடுத்துக்காட்டாக இங்கே பார்க்கலாம்.

பிரண்டன் நீங்கள் கூறும் 'நான் இருக்கிறேன்'— ஆத்மா — என்பது உண்மையில் என்ன? நீங்கள் கூறுவது உ ண்மையாக இருந்தால் மற்றொரு 'நான்' மனிதனிடம் இருக்க வேண்டுமல்லவா?

பகவான் : ஒரு மனிதனிடம் இரு தனித்துவங்கள், 'நான் (SELF)' இருக்க முடியுமா? இந்த விஷயத்தைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால், முதலில் அவன் தன்னையே ஆராய வேண்டும். பிறர் அவனை யாராகக் கருதுகிறார்களோ, அதுவாகவே தன்னைக் கருதி பழக்கப்பட்ட அவன், தன்னையே யார் என்று எதிர்கொண்டதில்லை. தனது உடம்போடும், புத்தியோடும் வெகு நீண்ட காலமாகத் தன்னை ஐக்கியப் படுத்திக் கொண்டு பழகி விட்டான். அதனால்தான் 'நான் யார்?' என்ற விசாரத்தைச் செய்ய வேண்டும் என்று நான் கூறுகிறேன். உண்மையான 'நான்' எது என்று விளக்குமாறு நீங்கள் கேட்டீர்கள். அதைப் பற்றி என்ன சொல்ல முடியும்? எதிலிருந்து 'நான் தனித்துவன்' என்ற உணர்வு எழுந்து மீண்டும் ஒடுங்குகிறதோ, அதுவே உண்மையான 'நான்' என்னும் மெய்ப்பொருள்.

பிரண்டன் : ஒடுங்குவதா? எப்படி ஒருவன் தன்னுடைய தனித்துவ பாவத்தை இழக்க முடியும்?

பகவான் : எல்லோரிலும் முதலில் தோன்றும் எண்ணம் 'நான்' எனும் எண்ணமே. இந்த எண்ணம் எழுந்த பின்னர்தான் மற்ற எண்ணங்கள் எழ முடியும். இதுவே ஏனைய எண்ணங்களுக்கு மூலமானது. 'நான்' என்னும் தன்மை எழுந்த பிறகுதான் 'நீ' என்ற முன்னிலை தோன்ற முடியும். இந்த 'நான்' எங்கிருந்து எழும்பியதோ, அந்த இடத்திலேயே கொண்டு போய் விடும் வரை மனதால், நூலிழை போன்ற 'நான்' எனும் எண்ணம் வந்த வழியையே பின்பற்றி இருத்தல் வேண்டும். இந்த நோக்குதலால், எப்படி இந்த 'நான்' எனும் எண்ணம் முதலாவதாக எழுகிறதோ, அது போல இதுவே கடைசி எண்ணமாய் ஒடுங்கும் என்பதைக் கண்டு முழுமையாக உணர முடியும்.

பிரண்டன் : ஒருவரது 'நானை'ப் பற்றி மனதால் இவ்வாறு ஆராய்ச்சி செய்ய முடியும் என்றா நீங்கள் கூறுகிறீர்கள்?

பகவான் : நிச்சயமாக முடியும். உண்முகமாகச் சென்று கடைசி எண்ணமாக 'நான்' என்னும் எண்ணம் மறையும் வரை.

பிரண்டன் : எந்தப் பாதை உகந்தது என நீங்கள் உபதேசிக்கிறீர்கள்? எங்களுக்கு உங்களது அருள் தேவை.

பகவான் : எந்த எண்ணத்திற்கும் இடம் கொடாமல் அசலமாக இருந்து 'நான் இருக்கிறேன்' என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

பிரண்டன் : நான் தியானிக்கும் போது கண்கள் திறந்தவாறு இருக்க வேண்டுமா அல்லது மூடி இருக்க வேண்டுமா?

பகவான் : உங்கள் சௌகர்யம் போல் கண்கள் திறந்தோ, மூடியோ இருக்கலாம். அது அவரவரைப் பொறுத்து மாறுபடலாம். கண்கள் மூலமாக மனம் பார்க்கும் போதுதான் 'காண்பது' என்ற செயல் நிகழ்கிறது. உண்முகமாக மனம் குவிந்து விட்டால் கண்கள் திறந்திருந்தாலும் 'பார்த்தல்' என்பது நிகழாது. சப்தங்களைக் கேட்பதும், இது போலத்தான் உங்களது கவனம் அதில் இருந்தால் மட்டுமே சப்தங்களை காது கேட்கும் தொடர்ந்து கவனம் 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வில் குவிந்தால், சப்தம் காதில் விழாது. ஆசனங்களும் இவற்றைப் போன்றுதான். ஞான மார்க்கத்தில் ஆசனங்களுக்கும் முக்கியத்துவம் இல்லை. உண்மையில் ஆசனம் என்பது ஆத்மாவில் நிலைத்து நிற்றல் என்றே பொருள்படும். அது உள்ளே இருக்கும் விஷயம். 'நான் இருக்கிறேன்' என்பதில் நிலைத்திருப்பதே எல்லாவற்றிலும் சிறந்த ஆசனமாகும்.

பிரண்டன் : நாங்கள் முயற்சி செய்வது அவசியமா?

பகவான் : முயற்சியின்றி ஒருவரும் வெற்றி பெற முடியாது. மனம் அடங்கி இருப்பது ஒருவரின் பிறப்புரிமை இல்லை. வெற்றி பெறுபவர்கள் தங்களது விடாமுயற்சியால் மட்டுமே அதை அடைகிறார்கள். கவனம் பொருட்களிலும் புத்தியின் மீதும் செலுத்தப்படும் போது, மனம் அவற்றை மட்டுமே உணரும். நமது தற்போதைய துயரமான நிலைக்கு இதுதான் காரணம். ஆனால் கவனம் உள்ளே இருக்கும் 'நான்' என்பதில் திரும்பிவிட்டால் நாம் அதை மட்டுமே உணர்வோம். ஆகையால் இது கவனத்தைப் பொறுத்த விஷயம். "

பிரண்டன் : நாங்கள் எவ்வாறு தியானிக்க வேண்டும்?

பகவான் : நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் கண்ணை மூடியபடி அகமுகமாவதுதான். நீங்கள் தேடும் அந்தப் பொருள் உங்களுக்குள்ளேயே இருக்கிறது.

பிரண்டன் : 'நான் கடவுள்' என்ற எண்ணம் உதவியாக இருக்குமா?

பகவான் : "'நான் இருக்கிறேன்' (I AM) என்பதே கடவுள். அது ஒரு எண்ணம் அன்று. 'நான் இருக்கிறேன்' (I AM) என்று எண்ணாமல் அந்த இருப்பை உணர வேண்டும். 'I AM THAT I AM', என்றால், 'நான்' என்ற இருப்பிலேயே இருப்பது. ஒருவர் 'நான்' ஆக மட்டுமே தான் இருக்கிறார். வேறெதுவாகவும் இல்லை." என்று அவர் கூறி முடித்த சமயத்தில் பகவானது சோபாவிலிருந்து அவர் செல்லமாக வளர்க்கும் அணில் வெளியே ஓட முயற்சி செய்தது. பகவான் அதைப் பிடித்துக் கொண்டு, "எல்லோருமே வெளியே ஓடுவதற்கு, அதிலும் வேகமாக ஓடுவதற்குத் தான் விரும்புகின்றனர். அதற்கு ஒரு எல்லையே இல்லாமல் போய்விட்டது. ஆனந்தம் உள்ளே இருக்கிறதே தவிர வெளியில் இல்லை." என்று கூறினார்.

பிரண்டன் லண்டனில் அமைதியான ஒரு கிராமத்தில் இருந்தபோது பகவான் அவருக்குத் தெய்வீக தரிசனம் அளித்து 'The Secret Path (இரகசியப் பாதை)' என்ற அவருடைய இரண்டாவது புத்தகத்தை எழுதுமாறு கூறினார். பகவானது அருளால் அதைத் தொடர்ந்து மடை திறந்த வெள்ளமாக அவரது ஒன்பது புத்தகங்கள் வெளிவந்தன. அவற்றில் 'The Quest For The Overself (ஆத்மாவைத் தேடல்)' என்ற நூல் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. பகவானது ஸாந்நித்தியத்தில் தான் அனுபவித்தவற்றையும், ஸாதகர்களுக்கு வழிகாட்டக்கூடியதும், ஸாதனைக்கேற்ற விளக்கங்களுடன் கூடியதுமான பல விஷயங்களை பிரண்டன் அதில் எடுத்துரைத்துள்ளார்.

1938 அல்லது 1939-ம் ஆண்டில் பிரண்டனுக்கும் ரமணாச்ரம நிர்வாகத்திற்குமிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டதால் பகவானின் ஹாலில் அவரால் குறிப்புக்கள் எடுக்க முடியாமல் போயிற்று. இது அவருக்கு கடுங்கோபத்தை ஏற்படுத்தியதால், ரமணாச்ரமத்திற்கு அருகில் கூட எங்கும் அவரால் வசிக்க முடியாமல் போனது. அதனால் திருவண்ணாமலையை விட்டுச் சென்றபோதும் மைசூர் மகாராஜாவின் ஆதரவோடு 1947-ம் ஆண்டு வரை இந்தியாவிலேயே தங்கியிருந்தார். மைசூரில் இருந்தாலும், பகவானுடன் இருந்த தொடர்பு ஒருபோதும் முறியவில்லை. பகவானிடம் பூரண பக்தியுடன் முழுமையாக சரணடைந்திருந்தார். தெய்வீகப் பரவசமூட்டும் கடிதங்கள் மூலம் பகவானுடன் இடைவிடாத தொடர்பு கொண்டிருந்தார் பிரண்டன்.

"எனது இதய ஆகாசத்தில் 'நான்' எனும் இருப்புணர்வாக விளங்கும் ரமண பகவானை, நான் எப்போதும் சந்தித்த வண்ணமாக உள்ளேன்" என்று ஒரு கடிதத்தில் அவர் எழுதியிருந்தார். பகவானும் அவரிடம் மிகுந்த ஆதரவோடு பழகினார். ஒரு நாள் அவரது ஹாலில் பகவான் வெளிப்படையாக, "பால் பிரண்டனைப் பற்றிய எண்ணம் என் மனதில் தோன்றியவாறே உள்ளது.



அவரும் பகவானை நினைத்துக் கொண்டு இருப்பார் என்பது நிச்சயம்." என்று கூறினார். அந்தச் சமயத்தில் உலகத்தின் மறு பாதியிலிருந்த பிரண்டன், தனது சொற்பொழிவைத் துவங்குவதற்கு முன் பகவானை மனதால் நமஸ்கரித்துக் கொண்டிருந்தார்.

ஒரு முறை, பகவான் ஹாலில் இருந்த சமயத்தில், பிரண்டன் கூறியிருந்த ஒரு கருத்தை மேற்கோளாகக் காட்டியிருந்த துண்டுப் பிரசுரம் ஒன்று தபாலில் வந்தது. அதில் பிரண்டன், "நான் ஆழ்ந்த அமைதியோடு, 'நான் யார்' என்பதை அறிந்துள்ளேன். 'நான்' என்பது இப்போதும் உள்ளது. ஆனால் அது ஆத்மவஸ்துவாக ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது. முக்கியத்துவம் ஏதுமற்ற என் தனிப்பட்ட 'நானை' விட மிக உன்னதமான ஒன்று எழும்பி எனது உணர்வாகி, நானாக இருக்கிறது. பேரொளியாக விளங்கும் அந்தக் கடலில் நான் மூழ்கி இருக்கிறேன். திவ்ய ஆனந்தத்தின் மடியில் அமர்ந்திருக்கிறேன். பூரண சரணாகதியுடன் பிரார்த்திக்கப்படும் போதுதான் தெய்வீக அருள் செயல்படத் துவங்குகிறது. எல்லா உயிரினங்களிடத்தும் இறைவன் உறைகிறான் என்பதால் அந்த சக்தி நம்முள்ளிருந்தே செயல்படுகிறது. முழுமையான சரணாகதி, பிரார்த்தனை இவற்றால் தூய்மையான மனதினால் மட்டுமே அதன் இரகசியக் குரலைக் கேட்க முடியும். பகுத்தறிவாளர்கள் எள்ளி நகையாடினாலும், நாஸ்திகர்கள் அதை இகழ்ந்து பேசினாலும், அது இருப்பது உண்மை. ஒரு ஜீவனின் உணர்வில் இறைவன் இறங்கி வரும் செயலே அது. அந்தச் சக்தி எப்போது இறங்கி வரும், எவ்வாறு செயல்படும் என்றெல்லாம் யாராலும் கணிக்க இயலாது. அண்டத்தின் மௌனத்திலிருந்து வெளிப்படும் வார்த்தைகளே அவை. அதற்கே உரித்தான விதிமுறைகளின்படி உண்மையான அற்புதங்களை நிகழ்த்த வல்ல பிரபஞ்சத்தின், அதாவது—இறை சக்தியின், ஸங்கல்பமே அது." என்று அந்தப் பிரசுரத்தில் எழுதப்பட்டிருந்ததை, பகவான், "பால் பிரண்டன் இவ்வாறு கூறியுள்ளார்", என்று அனைவரும் கேட்கப் படித்துக் காட்டினார். இந்த நிகழ்ச்சி 'Day By Day With Bhagavan' என்ற புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பகவானது மகா ஸமாதிக்குப் பின்னர் 1952-ல் பிரண்டன் ரமணாச்ரமத்திற்கு வந்தார். தேகத்தில் பகவான் இல்லாதபோதும், அங்கு எவ்வித மாற்றத்தையும் அவர் உணரவில்லை. பகவான் வாழ்ந்த காலத்தில் பிரண்டன் வந்த போதெல்லாம் குருவுடைய ஆன்மீக ஸாந்நித்தியத்தில் ஊறிப் போய் விடுவார். குருவின் சரீரம் மறைந்ததால், எங்களிடையே இருந்த உறவிற்கு முடிவும்

தொடர்புக்கு எவ்விதத் தடையும். ஏற்படவில்லை. உடல் இல்லாதபோதும் மறுக்க முடியாத வலிய சக்தியாக அவர் என்னுள் வாழ்ந்தார் என்பது தெளிவு." என்றுரைத்த பிரண்டன். தொடர்ந்து "உன்னதமான சக்தி பாய்ந்து தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் ஒரு தூய வடிகால் போன்று பகவான் திகழ்ந்தார்." என்று அவரைப் போற்றி வணங்கினார்.

இளம் ஸாதகர்களுக்கு செய்தி அளிக்க வேண்டுமென பிரண்டனிடம் கேட்டுக் கொண்டபோது அவர் "'நான் யார்' என்னும் விசாரத்தைச் சிறிதும் தளர்வின்றிப் பழகுங்கள். உங்களது தனித்தன்மை என்னவென முழுமையாக ஆராய முற்படுங்கள். 'நான்' என்ற எண்ணம் எங்கிருந்து எழுகிறது என்று தேடுவதில் முனைந்து ஈடுபடுங்கள். தொடர்ந்து தியானம் பழகுங்கள். உங்கள் கவனம் எப்போதும் அகமுகமாகவே இருக்கட்டும். என்றாவது ஒரு நாள் எண்ணங்கள் என்ற சக்கரத்தின் சுழற்சி வேகம் குறைந்து உள்ளுணர்வு. மர்மமான முறையில் எழும். எண்ணுவதை நிறுத்தி விட்டு உள்ளுணர்வைத் தொடருங்கள். இறுதியில் அது சந்தேகத்துக்கிடமின்றி நிரந்தரமாக உங்கள் குறிக்கோளான 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வில் உங்களைக் கொண்டு சேர்த்து விடும்." என்று அறிவுரை வழங்கியுள்ளார்.

1963-ல் பிரண்டன் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை அடைந்த பின்னர் மென்மையான. ஆனால் சக்தியுடன் ஈர்க்கவல்ல பேரமைதியின் பொக்கிஷமாக விளங்கினார். பிரகாசமாக விளங்கிய அவரது உள்ளொளி. பல ஸாதகர்களை அவரிடம் ஈர்த்தது. வெகுகாலம் அவர் உண்மையான ஆன்மீக அனுபவத்தைத் தேடுவதில் தீவிரமாக இருந்தார். அதைச் சற்றே ஆராய்ந்து பார்த்தால். அவருடைய விடாமுயற்சியையும். தளர்வின்மையையும் நம்மால் அறிந்து கொள்ள இயலும். பகவானின் ஸன்னிதியில் முதன்முறையாக ஆத்மானுபவத்தை அனுபவித்த போதும். அது பல ஆண்டுகள் அவருக்குள்ளே அடங்கிய நிலையில் இருந்தது. ஆன்மீக வாழ்க்கைக்குரிய கரடுமுரடான பாதைகளில் நடந்த பின்னரே. அந்த உயர்ந்த அனுபவத்தைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ள அவரால் முடிந்தது. புதிய ஸாதகர்களைச் சந்தித்தபோதெல்லாம் பகவானின் உபதேசங்களைச் சிறிதும் பிசகாமல் கடைப்பிடித்து முழு மனதுடன் ஆன்மீகத் தேடலைத் தொடர வேண்டுமென அவர் வலியுறுத்துவார். "மனிதனுக்கு இயல்பாக உள்ள குறைகளனைத்தும் என்னிடம் இருந்தன. எனது ஆன்மீகப் பாதையில் பலமுறை ஆங்காங்கே விழுந்து விட்டேன் என்பதை மறுக்க முடியாது. ஆயினும் தளர்ச்சியடையாமல் ஒவ்வொரு முறையும் உறுதியுடன் எழுந்து பயணத்தைத் தொடர்ந்து இறுதியில் இலக்கை அடைந்தேன் என்பதே உண்மை." என்று அவர் கூறியுள்ளார்.

1970களில் அபா பந்த் (Apa Pant) என்பவர் இந்தியாவின் தூதராக இங்கிலாந்தில் இருந்தார். மோரிஸ் ஃப்ரீட்மன் (Maurice Frydman) என்ற பக்தரோடு இருந்த இணக்கத்தால். அவர் ரமண பகவானிடம் பக்தியுடையவராக இருந்தார். தனது நன்றியை பகவானுக்குத் தெரிவிக்கும் விதமாக. லண்டனில் இருந்த பாரதீய வித்யா பவனில். பகவானுடைய உருவப்படத்தை வைத்துத் திறப்பு விழா நடத்த ஏற்பாடு செய்திருந்தார். மக்கள் திரண்டு வருவார்கள் என எதிர் பார்க்கப்பட்டது. ஏற்பாடு செய்தவர்கள் துவக்கத்தில் இருந்தே என்னைக் கலந்தாலோசித்தனர். அந்நிகழ்ச்சியில் கலந்து கொண்டு முக்கிய சொற்பொழிவாற்றும்படி கோரி. பால் பிரண்டனுக்கு அழைப்பு விடுக்குமாறு ஆலோசனை அளித்தேன். விழாவில் கலந்து கொள்ளாமல். பிரண்டன். விழாவை ஒட்டி வெளியிடப்பட்ட விழா மலருக்கு ஒரு கட்டுரை எழுதியனுப்பி இருந்தார். அதில் மிகுந்த அன்போடும் மரியாதையோடும் ஆழ்ந்த பக்தியுடனும் தனது குரு ரமண பகவானைப் பற்றி எழுதியிருந்தார். பின்னர் ஆச்ரம பத்திரிகையான 'தி மௌண்டன் பாத்தில்' ('THE MOUNTAIN PATH') நான்

அதைப் பிரசுரித்தேன். "மஹர்ஷி வாழ்ந்த இடத்தில் நான் நடமாடியும் ஒரு சோபாவில் அமராமலும் படுக்காமலும் சாய்ந்து அவர் வீற்றிருந்ததை நான் நேரில் பார்த்தும் நாற்பது ஆண்டுகள் சென்று விட்டன. சாதாரணமாக இத்துணை நீண்ட காலம் கடந்து போனால் பெரும்பாலான பழைய நினைவுகள் மங்கிப் போய்விடும் அல்லது முழுமையாக மறைந்தே கூடப் போய்விடும். ஆனால் பகவானது விஷயத்தில் அது போன்று எதுவும் நிகழவில்லை என என்னால் உறுதியாகக் கூறமுடியும். மாறாக, அவரது முகம் உருவம் சுற்றுச்சூழல் இவையனைத்தும், அன்றுபோல் இன்றும் மிகத் தெளிவாக இருக்கின்றன. எனக்கு இதைவிட முக்கியமானது தியானம் செய்யும் நேரத்தில், முதன்முதலில் அவரை சந்தித்தபோது நான் அனுபவித்த ஒளி பொருந்திய ஸாந்நித்தியத்தை, இருப்பை அன்று போல் இன்றும் உண்மையாகவும் தெளிவாகவும் உணர்கிறேன்." என்று அதில் குறிப்பிட்டுள்ளார். குறிப்பிடத்தக்க பக்தரான பிரண்டன் இவ்வாறு, தனது குருவின் சிறப்பைப் புகழ்ந்து போற்றியுள்ளார்!

1960-ல் ரமணாச்ரமத்திற்கு வரும் விருந்தினர்களைக் கவனித்துக் கொள்வதுடன் எல்லா இடங்களையும் சுற்றிக்காட்டும் பொறுப்பும் எனக்கிருந்தது. எப்போதாவதுதான் மேல்நாட்டவர் வருவர். ஸாதகர்கள் மத்தியில் இருப்பது எனக்குப் பிடித்த விஷயமென்பதால் நான் அவர்களை நேசித்தேன். பழைய பக்தர்களுக்குத் தொண்டு செய்வதில் ஆர்வம் இருந்தது போன்றே, பகவானையும் அவரது உபதேசங்களையும் நாடிவரும் இளம் ஸாதர்களுடன் பொழுதைக் கழிப்பதில் எனக்கு மிகுந்த உற்சாகம். அவர்களில் பலரும் தங்களுக்கு இங்கு வர பால் பிரண்டனே வழிகாட்டினார் என்று கூறியுள்ளனர். பிரண்டன் பலருக்கும் கொடுத்த உபதேசம் "நடமாடும் தெய்வமான காஞ்சி சங்கராச்சாரியரிடம் செல்லுங்கள். அதை விட முக்கியமாக ரமணாச்ரமத்திற்குச் சென்று வாருங்கள். அங்கு உருவின்றி இருக்கும் மெய்ப்பொருளை உணர்வீர்கள். நீங்கள் உணர வேண்டியது அதுவே." என்பது தான்.

பகவானை உலகம் முழுவதும் அறிந்து கொள்ளும்படி செய்த ஒரு பக்தரின் வழி காட்டுதல் எனக்குத் தேவைப்பட்டதால், நான் பிரண்டனோடு தொடர்பு வைத்திருந்தேன். ஆச்ரமத்தில் வந்து தங்குமாறு அழைத்து அவருக்குப் பல கடிதங்களை நான் எழுதிய போதும், அவரிடமிருந்து பதில் வரவில்லை. இருந்தும், இந்தியாவிற்கு வந்த அவரது நண்பர்கள் மூலம் நான் விடாமல் அவருக்குக் கடிதங்கள் அனுப்பி வந்தேன். அவரிடம் நான் ஒரு கடிதத்தில் : "பிரண்டன்! நீங்கள் கர்மத்தையும் ஞானத்தையும் குறித்து பகவானிடம் கேட்டீர்கள். அவரிடம் 'நீங்கள் காட்டிற்குள் ஒரு ஆச்ரமத்தில் இருக்கிறீர்கள். ஆனால் நான் உலகத்துள் மீண்டும் சென்று, வாழ்வதற்காக வேலை செய்ய வேண்டியுள்ளது. நான் எவ்வாறு வாழ்வது?' என்று கேட்ட போது 'கர்மத்திற்கும் ஞானத்திற்கும் வேறுபாடே இல்லை' என பகவான் கூறினார். இரண்டிற்கும் முரண்பாடு ஏதுமில்லை என்று பகவானே உங்களுக்கு நேரிடையாகக் கூறியதால் அந்த விஷயத்தில் உங்களுக்கு நல்ல தெளிவு இருக்கும் அதை என்னுடன் பகிர்ந்து கொள்ளுங்கள்." என நான் எழுதிய அக்கடிதத்திற்குச் சுருக்கமான அழகான பதிலைத் தனது நண்பர் மூலம் அனுப்பி வைத்தார். "உங்களுக்குப் பல விஷயங்கள் நடக்கின்றன அல்லவா? அவையனைத்தும் உங்களால் செய்யப்படுவதாக இப்போது நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். அது தவறு. உண்மையில் அவை உங்கள் மூலமாகச் செய்யபபடுகின்றன உங்கள் மனப்போக்கை மாற்றி 'என்னால் செய்யப்படுகிறது' என்று எண்ணாமல் 'என் மூலம் செய்யப்படுகிறது' என்ற எண்ணத்தை வளர்த்துக் கொள்ளுங்கள் உன்னதமான அந்த சக்தி மஹர்ஷியிடம் வெளிப்பட்டது. அனைத்து ஞானிகளும், மஹான்களும், ஆன்மீகப் பெரியோர்களும அந்த உயர்ந்த தெய்வீக சக்தி தன்னை வெளிப்படுத்திக் கொள்ளத் தகுந்த

கருவிகளாக இருந்தனர். நாமும் அதுவாகத்தான் இருக்கிறோம். மஹான்களைப் போன்று, இறை சக்தி பாயத்தகுந்த கருவிகளாக நாமும் இருந்தால், கர்மத்திற்கும் ஞானத்திற்கும் வேறுபாடு இருக்காது. உங்கள் மூலம் செயல்கள் நிகழ்கின்றன என்பதை நீங்கள் உணரும் *அடுத்த நொடியில்*, எல்லாமே எளிதாகி விடுவதை உணர்வீர்கள். "உங்களுக்கு நீங்களே ஒளியாக இருங்கள்" என்று யேசுநாதர் கூறியுள்ளார். லேசாக — பளுவில்லாமல் இருங்கள்! உங்களிடம் இருக்கும் பளு யாது? — நான் செய்கிறேன் என்ற எண்ணமும், இறந்தகால நினைவுகளும், எதிர்காலம் குறித்த எண்ணங்களுமே. அவற்றையெல்லாம் தவிர்த்து உயர்ந்த சக்தியை ஏற்றுக் கொண்டு *அதனிடம்* சரணடையுங்கள். உங்கள் சுமைகள் மறைந்து, வியக்கத்தக்க விதத்தில் நீங்கள் பளுவற்றாகிவிடுவீர்கள்.

ஆச்ரமத்திற்கு வருமாறு நான் விடுத்த பல அழைப்புக்களையும் பிரண்டன் ஏற்காதபோதும், அவர் உடலை நீத்து ஒரு மாதத்திற்குப் பின் அவரது காரியதரிசி எழுதிய கடிதத்தில், "மன்னிக்க வேண்டும் கணேசன்! பல விஷயங்களைக் கவனிக்க வேண்டியிருந்ததால் கடிதம் எழுதத் தாமதமாகிவிட்டது. மிஸ்டர் பிரண்டன் தன் உடலை உகுப்பதற்குச் சில மணி நேரத்திற்கு முன் என்னை அழைத்து 'தயவுசெய்து எனது நன்றியைத் தெரிவித்துக் கணேசனுக்கு ஒரு கடிதம் எழுதிவிடுங்கள்' என்று கூறினார்" எனக் குறிப்பிட்டிருந்தார்.

சிறிது காலத்திற்குப் பின் நியூயார்க்கிலிருந்த பிரண்டனின் ஸ்தாபனமான 'Wisdom's Golden Rock (ஞானத்தின் பொற்குன்று)' என்ற இடத்திற்குச் செல்லும் பேறு பெற்றேன். அவருடைய பெயரையே ஸ்தாபனத்துக்கு வைக்க அவர்கள் விரும்பிய போதும், பிரண்டன் அதற்கு இசையவில்லை. தமியானி (Damiani) என்ற இந்தியர் அந்த இடத்தில் பிரண்டனின் சொற்பொழிவு ஒன்றிற்கு ஏற்பாடு செய்ததுடன், அவருடைய பெரிய போட்டோ ஒன்றை முக்கியமான இடத்தில் மாட்டி வைத்திருந்தார். தான் சொற்பொழிவாற்றப் போகுமிடங்களில் ஏற்பாடுகள் சரியாக உள்ளனவா என்பதைக் கண்காணிக்க முந்தைய தினம் மாலையில் பிரண்டன் அங்கு செல்வது வழக்கம். தனது படத்தை அங்கு பார்த்த பிரண்டன் "அதை எடுத்துவிட்டு எனது குருநாதரின் படத்தை வையுங்கள்" என்று கூறினார். உலகெங்கிலுமுள்ள ஆன்மீக ஸாதகர்கள் பால் பிரண்டனுக்கு நன்றிக் கடன் பட்டுள்ளனர். வேதகாலம் தொட்டு 'உள்ளே பாருங்கள். நீங்கள் அதுவாகத்தான் இருக்கிறீர்கள்' என்று கூறப்பட்டிருந்த போதும், நம்மில் யாருக்கும் அதற்கான வழி தெரியவில்லை. 'இறைவனின் ஸாம்ராஜ்யம் உனக்குள்ளே இருக்கிறது' என இயேசுநாதர் கூறியதையும் சிலர் மட்டுமே புரிந்து கொண்டனர். இப்போது பால் பிரண்டன் மூலம் பகவானின் உபதேசமாக "அகமுகமாகி அமைதியில் நிலைத்து 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வே இறைவன் என்பதை அறிந்து கொள்" என்ற செய்தி கிடைத்துள்ளது.

